அனைத்திந்திய நூல் வரிசை

# முதலில்லாததும் முடிவில்லாததும்

(கன்னட நாவல்)

ஸ்ரீரங்க

தமிழாக்கம் :

ஹேமா ஆனந்ததீர்த்தன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஊக்குவிப்பாளர் விற்பனையாளர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41 - பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 600 098.

1991 ( சக 1913 )



ரூ. 33.00

Original Title : Anadi Anantha (Kannada)
Tamil Title : Mudalillathathum Mudivillathathum

வெளியீடு : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
ஏ-5, கிரீன் பார்க், புது டில்லி 110 016.

# முன்னுரை

"ஸ்ரீரங்க" என்றே இலக்கிய வாசகர்களுக்கும் நாடகாபிமானிகளுக்கும் அறிமுகமாகியிருக்கும் ஆத்ய ரங்காச்சார்யா அவர்கள், சுமார் ஐம்பது வருடங்களாக இலக்கிய சிருஷ்டிகளைப் படைத்துக் கொண்டிருக்கிறார். சுமார் 35 பெரிய நாடகங்களையும் 50 ஓரங்க நாடகங்களையும் அவர் எழுதியிருக்கிறார். புது முயற்சிகளைக் கைக்கொள்வதில் துணிச்சல் கொண்ட அவர், நாடகம் என்கிற கருவியைப் புதுப்புது இலட்சியங்களோடு பொருத்துவதற்கு முயன்று கொண்டே இருக்கிறார். அவருடைய உத்தி புத்தம் புதிதாக இருப்பதோடல்லாமல், புது எண்ணங்களைத் தூண்டுவதாகவும் இருக்கிறது. 1963-ல் சங்கீத நாடக அகாடமியின் பரிசு அவருக்கு வழங்கப்பட்டது.

நாடக உலகில் "ஸ்ரீரங்க" புகழ் ஈட்டியது நியாயமே என்றாலும், ஒரு வகையில் இதனால் அவருக்கு அநியாயமும் உண்டாயிற்று. இதுவரையில் அவர் பன்னிரண்டு நாவல்களையும் எழுதியிருக்கிறார். நாடகாசிரியராக அவருக்கு முதலில் புகழ் தேடித்தந்த "ஹரிஜன்வார" 1930-ல் இயற்றப்பட்டதென்றால், அவருடைய முதல் நாவலான "விசுவாமித்ரன சிருஷ்டி" 1933-ல் பிரசுரமாயிற்று. கன்னட நாவல் உலகில் இது ஒரு புது முயற்சி. ஆனால், இந்த நாவலோ அல்லது அவருடைய மற்ற நாவல்களோ போதுமான அளவு விமரிசகர்களின் கவனத்திற்கு வரவில்லை.

கன்னட மொழியில் முதல் நாவல் எது என்கிற கேள்வி, சமீபகாலத்தில் விமரிசகர்களின் கவனத்தைக் கவர்ந்தது. சுமார் 1805-ல் இயற்றப்பட்ட "கலாவதி பரிணய" (ஆசிரியர் : யாதவ) 1821-ல் இயற்றப்பட்ட "சௌகந்திகா பரிணய" (ஆசிரியர்: மும்மடி கிருஷ்ணராஜ உடையார்) இவை முத்ரா மஞ்சூஷாவுக்கு முன்பு இயற்றப்பட்டவை. டாக்டர் ஸ்ரீனிவாச ஹாவனூர் அவர்கள் சமீபத்தில் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டதுபோல, இவை இரண்டும் "ரொமான்ஸ்" வகுப்பைச் சேர்ந்த நூல்கள் எனலாம். கெம்பு நாராயணனி "முத்ரா மஞ்சூஷா" 1823 கன்னடத்தில் முதலாவது சரித்திர நாவலாயிற்று. 1842-ல் பன்யனின் "தி பில்க்ரிம்ஸ் ப்ரோக்ரஸ்", "யாத்ரிகன சஞ்சார" என்ற பெயரில் வெளியாயிற்று. 1857-ல் எஸ்.பி.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

அவர்கள் டேனியல் டெஃபோவின் "ராபின்ஸன் க்ரூஸோ"வைக் கன்னடத்தில் மொழிபெயர்த்தார்.

1895-ல் பி.வெங்கடாசார்யா அவர்கள் பங்கிம் சந்திரரின் "துர்கேச நந்தினி"யைக் கன்னடத்தில் மொழிபெயர்த்தார். அதன் பிறகு அவர் பல நாவல்களை, வங்காளியிலிருந்து கன்னடத்திற்குக் கொண்டுவந்தார். வெங்கடாசார்யா அவர்களின் மொழி பெயர்ப்புகள் வாசகர்களின் பிரியத்தைப் பெற்றன. இவ்வாறு வங்காளி நாவலின் ஆதிக்கம், கன்னட நாவல் உலகில் ஆரம்பமாயிற்று. இன்னோர் ஆச்சரியமான விஷயம் என்ன என்றால், "துர்கேச நந்தினி"க்கு வெங்கடாசார்யா அவர்கள் ஆங்கிலத்தில் முன்னுரை எழுதி, "நாவல்" என்ற வார்த்தையை உபயோகித்து அதற்கு விளக்கம் கொடுத்திருக்கிறார். "சமூகத்தின் மற்றும் சமூகத்தின் அங்கமான மனிதனின் சரித்திரம், நடத்தைகளில் காணப்படும் துர்நடவடிக்கை முதலியவைகளை உதாரணங்களுடன் சித்திரித்து, ஒவ்வொருவனும் நல்லெண்ணத் துடன் நடந்து கொள்வதைக் காட்டக்கூடியதாக இருக்கிறது."

குலவாடி வெங்கடராயரின் "இந்திரா பாய்" கன்னடத்தின் முதல் சொந்த சமூக நாவல். இதற்கு மற்றொரு பெயர் "சத்தர்ம விஜயவு". (இதை அன்றைய ஜில்லா அதிகாரி காஜ்ஸன் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தான்) இந்த இரண்டாவது தலைப்பு, நாவலின் நோக்கத்தைத் தெளிவாகக் காட்டுகிறது. பி. வெங்கடாசார்யா அவர்கள் நாவலை விவரிக்கும்போது, அதன் பிரசார அம்சத்துக்கும், வாசகர்களின் சுபாவத்தைத் திருத்தும் சக்திக்கும் முக்கியத்துவம் அளித்தார். இந்த நாவல் அதே நோக்கத்தைக் கொண்டிருக்கிறது. அந்தக் கால்த்திய சமூக மடமைகள், சம்பிரதாயக் கட்டுப்பாடுகள் இவை அதில் வேண்டிய அளவு விமரிசனத்திற்கு ஆளாக்கப்பட்டிருக்கின்றன. "சத்தியம், உள்ளத் தூய்மை இந்த இரண்டுமே நமக்கு இகத்திலும் பரத்திலும் பயன்தரக்கூடியவையாக இருக்கின்றன. இவைகளை விட்டு மற்ற முயற்சிகளெல்லாம் பயனற்றவையே" என்று தமது நோக்கத்தை ஆசிரியர் ஸ்பஷ்டமாகத் தெரிவித்திருக்கிறார். 1905-ல் வெளிவந்த "வாக்தேவி" (போளார பாபுராவ் எழுதியது) இதுபோன்ற போதனை நோக்கம் இல்லாமல் கதையிலும், மனித சுபாவத்திலும் அக்கறை காட்டிய சிருஷ்டி என்பது கவனிக்கத்தக்கது.

கன்னடத்தில் நாவல் ஓர் இலக்கிய வகையாக ஸ்பஷ்டமாக உருக்கொண்டது 1915-ல்– எம். எஸ். புட்டண்ணா அவர்களின்

"மாடித்துண்ணோ மஹாராயா"வில். ஆசிரியரின் நோக்கம் மற்றவர்களுக்கு மேல்மட்டத்தில் வைக்கப்படக்கூடிய பாத்திரங்களைப் படைப்பதாக இருந்தபோதிலும், மனித சுபாவத்தில் உள்ள அக்கறை இந்த நாவலுக்குப் புதியதோர் உற்சாகத்தைக் கொடுத்தது. செத்துப்போனாள் என்று எண்ணப்பட்ட பெண், எழுந்து வருகிறாள். மந்திரம், மாயம் முதலியவை இருக்கின்றன. ஆனால், இதில் காணும் பாத்திரப் படைப்பின் பல வகைகள் பிரமிப்பூட்டுவதாக இருக்கின்றன. பாத்திரங்கள் ஒன்றின்மீது ஒன்று செலுத்தும் ஆதிக்கம், வாழ்க்கையின் அனுபவங்களிலிருந்து பாத்திரங்களின் சுபாவத்தில் ஏற்படும் மாறுதல் இவைகளையும் இந்த நாவல் காட்டுகிறது. புட்டண்ணா அவர்கள் பக்குவமான நடையையும் கையாண்டார். நாவலாசிரியன் உருவாக்கிய கற்பனை நிகழ்ச்சிகள் நிறைந்த உலகமாயினும், அவ்வுலகத்தில் யதார்த்தத்தின் சாயல் விரவியிருக்குமாறு சம்பவங்களின் பாதை என்கிற வகையில் கன்னடத்தின் முதல் நாவல் "மாடித்துண்ணோ மகாராயா"

குறுநாவல் என்று சொல்லக்கூடிய "சுப்பண்ணா" 1926-ல் பிரசுரமாயிற்று. "ஸ்ரீனிவாச"அவர்கள் (டாக்டர் மாஸ்தி வெங்கடேச அய்யங்கார்), ஒரு மனிதன் வாழ்க்கைப் போராட்டத்தில் சிக்கி, படிப்படியாகப் பக்குவமடைந்ததைச் சித்திரித்தார். "சுப்பண்ணா" - சங்கீத வித்துவான் ஆகவேண்டுமென்கிற ஆசை இருந்தும், பெற்றோர்களுடன் மனத்தாங்கல் ஏற்பட்டதனால், அவர்களைவிட்டு மைசூரிலிருந்து தொலைவிலுள்ள கல்கத்தாவுக்குச் சென்று, மனைவி, மக்களை இழந்து, சங்கீதத்தின் மூலமாகவே மனச் சாந்தியையும், வாழ்க்கையை எதிர்க்கும் துணிவையும் அடைந்த சுப்பண்ணா என்பவனுடைய கதை. தனி ஒரு மனிதனின் தன்மை பழுத்துப் பக்குவமடைவதே இதிலே செயல். இந்த நாவலில் நாடகத் தன்மை டிராமாடிக் என்று சொல்லும்படியான சம்பவங்களே இல்லை. "சுப்பண்ணா" கன்னட நாவலின் கண்களை, மனிதனின் உள்ளிருக்கும் உலகத்தை நோக்கித் திருப்பியது.

1932-ல் "விநாயக" அவர்கள் (விநாயக கிருஷ்ண கோகாக்) "இஜ்ஜோடு" என்கிற 172 பக்கங்கள் கொண்ட நாவலைப் பிரசுரித்தார். அழகியும், நல்ல உள்ளம் படைத்தவளுமான ஒரு

பெண் முரடனும், முட்டாளுமான கணவனின் கையில் அகப்பட்டு மடிவதுதான் கதையின் சாரம். அதற்கடுத்த வருடம் "ஆனந்தகந்த" அவர்கள் (பெடகேரி கிருஷ்ண சர்மா), "சுதர்ஸன" என்கிற நாவலை எழுதினார். "சுதர்ஸன"வை ஒரு சமூக நாவல் என்று அழைத்திருந்த போதிலும், ஓர் இலட்சியம், முழுமையான ஒரு மனிதன் இவைகளைச் சித்திரிப்பது இதன் நோக்கம். காந்தியுகத்தின் முதல் கன்னட நாவல் இது என்று சொல்லலாம். "எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையும்" என்கிற இலட்சியத்தின் வடிவமே இதன் கதாநாயகன். ஆச்சரியமான விஷயம் என்ன என்றால், விநாயக அவர்களின் "இஜ்ஜோடு" இருபத்திரண்டு வருடங்கள் வளர்ந்து (1953-ல் ஆறாவது பாகம் வெளியாயிற்று) மற்றோர் இலட்சியத்தின் உருவமாயிற்று. ஆனால், "விநாயக" அவர்களின் நரஹரி பலதரப்பட்ட இழுப்பு களில் சிக்குண்டு, வாழ்க்கையின் ஏற்றத் தாழ்வுகளை அனுபவித்து, சிறிது சிறிதாக உருக்கொள்வது நமது கண் முன்னாலேயே நடக்கிறது. "குவெம்பு" (டாக்டர் கே. வி. புட்டப்பா) அவர்களின் "கானூரு சுப்பம்ம ஹெக்கடிதி" (1936), அ. ந. கிரு. (டாக்டர் அ. ந. கிருஷ்ணராவ்) அவர்களின் பல நாவல்கள், இவை நாவலாசிரியர்கள் கண்ட இலட்சிய வாழ்க்கையைச் சித்திரிக்கும் சாதனங்களாயின.

1933-ல் ஒரு சிறந்த நாவல் பிரசுரமாயிற்று - சிவராமகாரந்த அவர்களின் "சோமனதுடி" (காரந்த அவர்கள் ஏற்கனவே ஐந்து நாவல்களை எழுதியிருந்தார். நையாண்டியை நாவலில் கையாண்டிருந்தார்) ஹரிஜனங்களின் பிரச்சினை, பின்னர் கன்னட நாவல்களில் மறுபடியும் மறுபடியும் வந்திருக்கிறது. ஆனால், நாற்பது வருடங்களுக்கு முன்னரே, காரந்த அவர்கள் ஒரு பிரமாதமான சூழ்நிலையைச் சிருஷ்டித்து விட்டிருந்தார். தீண்டத்தகாதவர்களின் வாழ்க்கையின் பரிதாபம் இங்கே கலையுணர்ச்சியோடு உருப்பெற்றது. சீர்திருத்தத்தின் ஆர்வத்தைவிட, உள்ளத்தின் உணர்வே நாவலை நடத்திச் செல்கிறது. ஏழை சோமன், அவனை மிதிக்கக் காலைத் தூக்கிக் கொண்டிருக்கும் சுற்றிலுமுள்ள ஆட்கள், அவர்களுடைய உலகம், இவை நூறு விளக்குகளை ஏற்றி வைத்தாற்போல நமது கண் முன்னால் நிற்கின்றன. "சென்டிமென்டாலிடி"க்கு இடம்

கொடுக்காத காரந்த அவர்களின் படைப்பு, இன்றைக்கும் பிரமிப்பையூட்டுகிறது. இன்றைக்கும் காரந்த அவர்கள், கன்னட உலகின் அற்புதப் படைப்பாளிகளில் ஒருவராக இருக்கிறார்.

1934-ல் "ஸ்ரீரங்க" அவர்களின் "விசுவாமித்ரன சிருஷ்டி" பிரசுரமானபோது, கன்னடமொழி அவ்வளவொன்றும் செழிப்பான பயிரைக் கண்டிருக்கவில்லை என்பது இதனால் தெளிவு. நாவல் தர்மோபதேசம் செய்யும் நிலையிலிருந்து மாறியிருந்தது; வாழ்க்கையின் பல் வகை உந்துதல்களினால் உருவாக்கப்பட்ட பாத்திரங்களைப் படைத்திருந்தது; மனிதனின் உள்ளத்தின் மகத்துவத்தைப் புரிந்து கொண்டிருந்தது; சமூகத்தை விமர்சிக்க முற்பட்டிருந்தது. இலட்சியங்களை நோக்கிக் கண்ணாடியைப் பிடித்திருந்தது; பேசும் மொழியைப் பயன்படத்தக்க விதமாக உபயோகப்படுத்திக் கொண்டிருந்தது. எம். எஸ். புட்டண்ணாவும், ஸ்ரீனிவாச அவர்களும் நாவலின் நடைக்குக் கூர்மையைம், அழகையும், ஓட்டத்தையும் அளித்திருந்தார்கள். ஆனால வெளிவந்திருந்த நாவல்களின் எண்ணிக்கைதான் குறைவு. (1945 வரை சுமார் நூற்றிருபது நாவல்கள் வெளிவந்திருந்தன. பின்னர் வாசகர்களின் பெரும் பிரியத்துக்குப் பாத்திரமான அ. ந. கிரு அவர்களின் முதல் நாவலான "ஜீவன யாத்ரெ"யும் "உதயராக"வும் 1934-ல் பிரசுரமாயின.) பெரும்பாலும் வாசகர்களின் கைகளில் இருந்தவை பி. வெங்கடாசார்யா அவர்களுடையவும், களகநாத அவர்களுடையவும், வீர தீர சுதாநாயகர்களின் மயிர்க்கூச்செரியும் சம்பவங்களைக் கொண்ட நாவல்கள். மற்ற நாவலாசிரியர்கள் பெரும்பாலும் ஆளுக்கு ஒன்றோ இரண்டோ நாவல்கள்தான் எழுதியிருந்தார்கள்.

இந்தக் காலகட்டத்தில் 1934-ல் "ஸ்ரீரங்க" அவர்களின் "விசுவாமித்ரன சிருஷ்டி" பிரசுரமாயிற்று.

இந்த நாவலின் மையப் பாத்திரம், நாராயண என்கிற இளைஞன் தான். விரும்பாத கல்யாணத்தை ஏற்றுக்கொள்ள முடியாமல் ஓடிப்போகிறான். ரயிலேறுகிறான். இந்த ரயிலில் பரந்த உலகத்தோடு அவனுக்குத் தொடர்பு ஏற்படுகிறது. அவன் இளைஞன் கல்லூரியில் படித்தவன், அறிவுஜீவி, சுற்றிலுமுள்ள உலகம் முழுமையானதாக இருக்கவேண்டும் என்பது அவனுடைய அவா. தன்னுடைய விவாக விஷயத்தில் ஏற்பட்ட அதிருப்தி, ரயிலிலும், ரஸ்தாக்களிலும், சாயாக் கடைகளிலும், கிராமத்தில் பல வகுப்பைச் சேர்ந்த மக்களுடன் பழகியதிலும்,

வளர்ந்துகொண்டு போகிறது. ஜனங்களின் அறியாமையைக் கண்டு கனிவும், அவர்களை முன்னேற்ற வேண்டுமென்கிற துடிப்பும் அவனில் வளர்கிறது. தானே கல்லூரியில் கற்ற நாராயணனுக்கு சீர்திருத்தத்திற்குத் தோன்றிய ஒரே வழி: கல்வி. கிராமத்தின் கணக்குப்பிள்ளை ஜனங்களின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டே வாழ்கிறவன். அந்தக் கணக்குப்பிள்ளையின் ஆதரவிலேயே பள்ளிக்கூடத்தைத் தொடங்குகிறான் நாராயண. எந்த அறியாமையைப் போக்கு வதற்காக நாரயண வரிந்து கட்டிக் கோண்டு நின்றானோ, அதே அறியாமை நாராயணனை ஒரு மகான் என்கிற நிலைக்குத் தூக்கி வைக்கிறது. மழையைக்கூட வரவழைக்க அவனால் முடியும் என்று அந்த அறியாமை நம்பவைக்கிறது. கடைசியில் பள்ளிக் கூடத்திலேயே பாடம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே இறந்து விடுகிறான் நாராயணன்.

ஸ்ரீரங்க அவர்களின் நாவல் பிரசுரமானபோது, அது காலத்திற்கு எவ்வளவு முற்பட்டதாக இருந்தது என்பது, அநேக வருடங்கள் அது விமரிசகர்களின் கவனத்தை இழக்காததிலிருந்து தெளிவாகிறது. நாவலின் மையப் பாத்திரத்துடன் நாவலாசிரியர் ஒன்றிவிடும் வழக்கத்திற்குப் பழக்கப்பட்டிருந்த வாசகர்களுக்கு, "விசுவாமித்ரன சிருஷ்டி" பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. நாவலின் பல பகுதிகளில் நாவலாசிரியர் கதாபாத்திரங்களை விட்டுவிலகி நின்று, தம்முடைய பரிவைப் பெற்ற பாத்திரங்களையும் உணர்ச்சி வசப்படாமல் பார்க்கமுடிகிறது. கடைசிப் பகுதியை விட்டு மற்ற இடங்களில் நாவலின் சம்பவங்களை நையாண்டி சூழ்ந்து கொண்டிருக்கிறது. இது சுலபமான ஆழமற்ற பரிகாசமல்ல. நாராயண அறிவாளி. இலட்சியத்தில் பற்றுக் கொண்டவன். ஆனால், அவனுடைய நினைவாற்றலுக்கு நிஜவாழ்க்கையின் உணர்வோ, அனுபவத்தின் முதலோ (Capital) இல்லை. இந்த ஊருக்குத்தான் போகவேண்டு மென்கிற தீர்மானமில்லாமல் அவன் புகைவண்டி நிலையத்திற்குச் செல்வது, அவனுடைய வாழ்க்கைமுறைக்கு அடையாளமாக இருக்கிறது. போகவேண்டுமென்கிற ஆசை இருக்கிறது. எங்கே - எப்படி என்பது தெளிவாகவில்லை. மூன்றாம் வகுப்புப் பெட்டியில் தொடங்கி, நெடுகிலும் அவனுக்கும் அவன் சீர்திருத்தவேண்டும் என்று விரும்பும் ஜனங்களுக்கும் இடையில் ஆழமான இருட்டு இருக்கிறது. இந்த இருட்டின் தன்மையின் உணர்வு

நாராயணனுக்கு இருக்கவில்லை என்பது தெளிவாகிக் கொண்டே போகிறது. நாவலில் இரண்டு விதமான கேலிகள் சேர்ந்து, ஒரு புதுச் சிக்கலை உண்டாக்குகின்றன. சுற்றிலுமுள்ள ஜனங்கள் அவனைப் புரிந்து கொள்ளக்கூடாது, அவர்களுக்கும் அவனுக்கும் இடையில் இருள் சூழ்ந்திருக்கிறது. அதைப்பற்றிய உணர்வு அவனுக்கு இல்லை என்பது ஒரு வகைக் கேலி. தன்னுடைய அனுபவமின்மையைப் பற்றிய அறிவும் அவனுக்கு இல்லை என்பது மற்றொன்று. தன்னைச் சுற்றிலுமுள்ள ஜனங்களின் அறியாமையைக் குறித்து அவனுக்கு ஆழமான பரிதாபம்: "இந்த ஜனங்களைக் கண்டு அவர்கள் விஷயத்தில் நாராயணனுக்கு மிகுந்த வெறுப்பு ஏற்பட்டது.... ஐயோ, எந்த வகையில் இவர்களைத் திருத்துவது?... நாராயணனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது.... இவர்களுக்குக் கல்வி புகட்டவேண்டும்... இவர்களுக்கு கல்வி என்னவோ தேவைதான். ஆனால் தனக்கும் வாழ்க்கைப் பாடசாலையில் இன்னும் கற்கவேண்டிய தேவை இருக்கிறது என்பது, நாராயணனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

இந்த நாவலில் ஸ்ரீரங்க அவர்கள் நினைவோட்டம் என்கிற உத்தியையும் கையாண்டுள்ளார். கன்னடத்தில் இந்த உத்தி உபயோகப்படுத்தப்பட்டது முதன்முதலாக இந்த நாவலில் தான். (இரண்டாவது முறையாக உபயோகப்படுத்தப்பட்டது த.ரா.சு. அவர்களின் "பிடுங்கடைய பேடி"யில் இருக்கலாம்.) ஸ்ரீரங்க அவர்கள் சிறிது காலம் இங்கிலாந்தில் இருந்ததினால், அவருடைய படைப்புகளில் ஆங்கில இலக்கியத்தின் ஆதிக்கம் இருப்பதைச் சுட்டிக்காட்டுவது பழக்கமாக இருக்கிறது. இருந்தபோதிலும் நினைவோட்டம் என்கிற உத்தியின் உபயோகத்தில் ஸ்ரீரங்க காண்பித்துள்ள அவருடையதே ஆன தன்மையையும் கவனிக்க வேண்டும். நாராயணனைச் சுற்றி நடக்கும் சம்பவங்களை அவனுடைய கண்களாலேயே நாம் பார்க்கிறோம். அவனுடைய மனத்தின் நடவடிக்கைகளைக் கண்ணாடியில் பார்ப்பதுபோலப் பார்க்கிறோம். ஆனால் ஜேம்ஸ் ஜாய்ஸில் இல்லாத கேலி இங்கே இருப்பதனால், இங்கே கதாநாயகனின் மனத்தைப் பிட்டுபிட்டுப் பார்க்கிற முயற்சி இல்லை.

இந்த நாவலில் கையாளப்பட்டிருக்கும் பாஷையும் சிறப்புடையதாக இருக்கிறது. பல வகைப்பட்ட பாத்திரங்களின் சமூக வகுப்புக்கு மாத்திரமல்லாமல் மனத்தின் பக்குவத்திற்கும் பொருந்துகிறாற்போல பாஷை உரையாடல்களில் உபயோகப்

படுத்தியிருப்பதனால், சுலபமாகக் கண்டு கொள்ளக்கூடிய வகுப்பு, பாஷைகளின் வித்தியாசங்கள் - எந்தச் சாமானிய எழுத்தாளனும் உபயோகப்படுத்தக்கூடிய குறிகள் - காணப்படுவது மட்டுமல்லாமல் அவைகளின் இடையே நிலவும் பார்வைகளின் வேற்றுமைகளையும் சுட்டிக்காட்டுகிற "இன்டிகேட்டர்ஸ்"களும் காணப்படுகின்றன..

இவ்வாறு விசேஷமான ஒரு படைப்பின் மூலமாக நாவல் உலகில் கால் வைத்த "ஸ்ரீரங்க" அவர்கள் நாவலுக்கு நாவல் தம்முடைய சாதனைக்குப் புது மெருகைக் கொடுத்துக் கொண்டு வந்திருக்கிறார். கடந்த நாற்பது வருடங்களில் கன்னட நாவல் ஏராளமான விளைச்சலை மட்டுமல்ல, புஷ்டியான விளைச்சலையும் கண்டுள்ளது. 1945- க்குள்ளாக சிவராம காரந்த, அ. ந. கிருஷ்ணராவ், தேவுடு இவர்கள் சிறப்பான படைப்புகளை வழங்கியிருந்தார்கள். அதன் பிறகு சிவராம காரந்த அவர்கள், தம்முடையதே ஆன பாணியில் இணையற்ற சாதனையைச் செய்திருக்கிறார். நிறைந்த அனுபவம், ஆழ்ந்த வாழ்க்கை ஈடுபாடு, இவை "மரளி மண்ணிகெ"யிலிருந்து "மூகஜ்ஜிய கனசுகளு" வரையில் வஸ்து - பார்வைகளின் நிர்பந்தத்திற்கேற்ற உத்திகளால் உருக் கொண்ட பல முதல் தரமான நாவல்களை அளித்தன. கன்னட நாவல் உலகில் பல வாத-விவாதங்கள் தோன்றியபோதும், பல 'தியரி'கள் நடைபோட்டபோதும், எந்த விமரிசகக் கூட்டமும் அலட்சியப்படுத்த இயலாத படைப்புகளைக் கொடுத்துக் கொண்டே வந்திருக்கிறார் காரந்த அவர்கள். அவருடைய எண்ணத்தை அவரே வெளியிட்டுள்ளார். "இன்று இலக்கிய உலகில் பலவையான முயற்சிகள் நடைபெற்று வருவது உண்மை. உயிருள்ள இலக்கியத்தின் லட்சணம் அது. ஆனால் உத்தி, நடை, உருவம் இவைகளின் பயன் அவைகளின் செயலில். அவை இலக்கிய கர்த்தாவின் கற்பனை, பாவனை, ஆவேசம் இவைகளை வாசகனின் இதயத்தையும் மனத்தையும் தொடுவதற்கு வேண்டிய சக்தியைப் பெற்றிருப்பதில்."

ஆனந்தகந்த, விநாயக இவர்களின் நாவல்களிலிருந்து ஆரம்பமான பரம்பரை (சிறுகதை உலகில் அதற்கு இணையாக "ஸ்ரீனிவாஸ" அவர்களின் பரம்பரையோடு) கன்னடத்தில் வளர்ந்து கொண்டு வந்திருக்கிறது. இதில் இலட்சியக் காதல், வாழ்க்கை ஆத்மாவின் ஜ்வாலை என்கிற நம்பிக்கை, தியாகம், மனஉறுதி இவைகளுக்குக் கௌரவம் இருந்தது. அநேக நாவலாசிரியர்கள்

இந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். ஆச்சரியப்படத்தக்க விஷயம் என்னவெனில், 1945-லிருந்து சுமார் பத்து வருடகாலம் எழுந்த முன்னேற்ற இலக்கிய வாதத்தின் பேராசிரியரான அ. ந. கிரு அவர்களின் ஆரம்ப கால நாவல்களும், இந்த வாதத்தின் புழுதி அடங்கிய பிறகு, அவர் எழுதிய நாவல்களும் உண்மையில் இந்தப் பரம்பரையைச் சேர்ந்தவையே. அவருடைய முதலாவதான குறிப்பிடத்தக்க நாவல் "சந்தியா ராக" இந்த வகைப்பட்ட நாவலே. முன்னேற்ற இலக்கிய இயக்கம், அகில இந்தியப் பரிமாணத்தை அடைந்தது. இலக்கியம் சமூகத்தில் உள்ள அழுக்குகளையும், அவலங்களையும் படம் பிடித்துக் காட்டி, கண்டித்து, வாழ்க்கையைத் தூய்மையாக்கும் தீவிர சக்தியாக வேண்டும் என்கிற கருத்தை, முன்னேற்றவாதிகள் பிரசாரம் செய்தார்கள். இந்தக் காலத்தில் அ. ந. கிரு தவிர, த.ரா.சு. (த. ரா. சுப்பராவ்) பஸவராஜ கட்டிமனி முதலியவர்கள் பொதுமக்களின் விருப்பத்தைச் சம்பாதித்த நாவல்களை எழுதினார்கள். இந்தக் கட்சியினரின் இலக்கிய சிருஷ்டிகளில் கலையம்சம் பின்தங்கி, ஆவேசமும் பிரசாரமுமே தலைவிரித்தாடின என்கிற விமரிசனத்தில் உண்மை இருக்கிறது. ஆனால், "பிடுகடெயபேடி" "ஜ்வாலா முகிய மேலே" முதலிய உயிரோட்டமுள்ள கதைகளை இந்தக் கட்சி அளித்தது. நாவலின் விஷயங்களின் எல்லையை விரிவடையச் செய்து, அந்நாவசியமான குறுகிய மனப்பான்மையை அகற்றி, வாசக வட்டத்தையும் விரிவாக்கியது.

சென்ற இருபது வருடங்களாக, புதுப்பாணி எழுத்தாளர்கள் கன்னடத்தில் கணிசமான அளவு ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கிறார்கள். ஆச்சரியப்படத்தக்க விஷயம் என்ன வென்றால், இந்தப் புதுப்பாணிக்காரர்கள் படைத்துள்ள சிருஷ்டி களின் எண்ணிக்கை (காவியங்களைத் தவிர்த்து) மிகவும் குறைவு. ஆனால் இலக்கியத்தைக் குறித்த தீவிரமான, சூட்சுமமான - எவ்வளவோ சந்தர்ப்பங்களில் முரட்டுத்தனமான- பரந்த சர்ச்சைகளினால் இந்தப் பாணி தன் ஆதிக்கத்தை நிலைநாட்டி யிருக்கிறது. இதுவும் ஒரு வகையில் அகில இந்தியப் பரிமாணத்தை எய்திய ஓர் அறிவாளிகளின் இயக்கம் என்பது உண்மை. வெளிநாடுகளுக்குப் போய்வரும் ஆண், பெண் இளைஞர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. சர்வகலாசாலைக் கல்லூரிகளில் ஆங்கில இலக்கிய போதனையின் க்ஷேத்திரம் விரிவடைந்து நவீன இலக்கியங்களுக்கும் நியாயமான முக்கியத்துவம் கிடைத்தது. புத்தகங்கள், பத்திரிகைகளின் அமோகமான வளர்ச்சி,

இவைகளெல்லாம் இந்த இயக்கம் வளரக் காரணமாயின என்று கூறலாம். இது அகில இந்தியாவுக்கும் பொருந்தக்கூடியது. இதனால் காஃப்கா, காமூ, பெக்கெட், ஐயனெஸ்கோ ப்ரெக்(ஷ்)ட், ஸார்தர், முதலிய மேற்கத்திய எழுத்தாளர்களின் ஆதிக்கம், இந்தியாவின் எல்லா இலக்கியங்களின் மேலும் ஏற்பட்டதென்று தோன்றுகிறது. கன்னடத்தைப் பொறுத்தமட்டில் சொல்லுவ தானால், நாவலாசிரியன் எந்தத் தத்துவங்களை ஆகட்டும், சர்வ சம்மதம் என்று பாவிக்காமல், வாழ்க்கையின் அனுபவங்களை உண்மையான நிஷ்டையோடு ஆராய வேண்டும்; அனுபவங்களையே யாகட்டும், பாத்திரத்தின் தன்மையையே யாகட்டும், நேராக, தயாராக இருக்கும் அச்சுக்குத் தக்காற் போலச் சொல்லிவிடக்கூடாது. ஒரே பாதையில் செல்வதைத் தவிர்த்து, உண்மையோடு அனுபவத்தை எழுத்தில் வடிக்க முற் படும் போது மொழியின் லாகவம் சிறப்படைகிறது. மொழியை விசேடமான, பிரத்தியேகமான நோக்கத்திற்காக உபயோகப் படுத்தும்போது அதனுடன் போராடியாக வேண்டும். படைப்பின் தேவைக்குத் தக்கவாறு அதைக் குனியவைக்க வேண்டும், அடிக்க வேண்டும்- இது புதுப்பாணி எழுத்தாளர்களின் எண்ணத்தின் அடிப்படை.

எந்தப் பாணியிலும் சேராமல், தம்முடைய சொந்த வழியிலேயே போகும் பல நாவலாசிரியர்கள் இருக்கிறார்கள். காரந்த அவர்களின் பெயர் ஏற்கனவே பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது. "கிராமாயணம்" எழுதிய ராவ்பகதூர் அவர்களும், "மலெகளல்லி மதுமகளு"வை எழுதிய குவெம்புவும் இந்த மாதிரி நாவலாசிரியர்கள். தம்முடைய "கங்கவ்வா-கங்காமாயி" புதுமை யானதல்ல என்று சங்கர மோகாஷி மணீக் அவர்கள் சொல்லி யிருந்த போதிலும், அதில் புது நாவலின் ஆரம்பத்தைச் சில விமரிசகர்கள் கண்டுள்ளார்கள் சமீபகாலத்தில் பிரபலமடைந் துள்ள டாக்டர் எஸ். எல். பைரப்பா அவர்கள் "வம்ஸவ்ருக்ஷா" "நாயிநெரளு" "க்ருஹபங்க" போன்ற நாவல்களில் காரந்த அவர்களைப்போல, கனமான அனுபவம் என்கிற பாறையின் மீது படைப்புகளை நிர்மாணித்துள்ளார். இதேபோல எந்த பந்தாவிலும் பாணியிலும் சேராத மற்றொரு நாவலாசிரியர் ஸ்ரீரங்க அவர்கள்.

ஸ்ரீரங்க அவர்களின் ஒவ்வொரு நாவலும் ஒவ்வொரு புதுமுயற்சியாகும் என்று சொன்னால், அதனுடைய முக்கியத்

துவம் வெறும் புதுமுயற்சி என்பதோடு நின்றுவிடக்கூடிய வாய்ப்பு உண்டு. "விசுவாமித்ரன சிருஷ்டி"யைப்போல ஸ்ரீரங்க அவர்களின் நாவல்கள் ஒரே சமயத்தில் புதுமுயற்சிகளாகவும் வெற்றிகரமான சாதனைகளாகவும் இருக்கின்றன என்று அழுத்தமாகக் கூறிவிட வேண்டும். பெரும்பான்மையான வாசகர்களின் கொள்கைகளை, மத்தியதர வகுப்பினரின் குடும்ப வாழ்க்கையிலுள்ள அக்கறையையும், இலட்சியங்களிலுள்ள ஈடுபாட்டையும் பிரதிபலித்துக் காட்டியதனாஃதான் அ.ந.கிரு பெரும்பான்மையான வாசகர்களின் பிரியத்திற்குப் பாத்திரரானார். ஸ்ரீரங்க அவர்களின் படைப்புகளில் அறிவின் அம்சத்திற்கு முக்கியத்துவம். எளிதில் எடுக்கப்படும் முடிவுகளும், உணர்ச்சிவசப்பட்ட அபிப்ராயங்களும் அவருக்குப் பிடிக்காதவை. (இதனால் அவர் நாவலாசிரியராகவும், நாடகராசிரியராகவும், கருணையில்லாதவர் என்கிற குற்றச் சாட்டுக்கும் ஆளாகியிருக்கிறார்) சுற்றிலுமுள்ள உலகில் தமது ஆர்வத்தைக் கவர்ந்த ஒரு விஷயத்தை அலசிப் பார்த்த பிறகு, அவருடைய ஆர்வம் மற்றொரு விஷயத்திற்குத் தாவுகிறது. அதனால்தான் அவருடைய ஒரு நாவலில் கண்ட சூழ்நிலையையோ, பாத்திரங்களையோ இன்னொரு நாவலில் காணமுடிவதில்லை. இந்த வகையில் அவர் தம்முடைய சமகாலத்து ஜனப்பிரிய நாவலாசிரியர்கள் பலரிடமிருந்தும் வேறுபட்டு நிற்கிறார்.

ஸ்ரீரங்க அவர்களின் ஒவ்வொரு நாவலும் ஒவ்வொரு சிறப்பைக் காண்பிக்கிறது. "ப்ரக்ருதி"யில் அவர் மூன்று தலைமுறைகளைச் சித்திரித்தார். இந்த மூன்று தலைமுறைகளில் சமூகத்தின் வெவ்வேறு வர்க்கங்களுக்கிடையிலுள்ள சம்பந்தம் எப்படி மாறுகிறது என்பதைக் காட்டுகிற இப் படைப்பு ஓர் எண்ணத்தின் அல்லது அபிப்ராயத்தின் வர்ணனையாக இல்லாமல், வாழ்க்கை முறைகளின் அனுபவமாக இருக்கிறது. உத்தியே உருவம் என்பதன் உண்மையை இங்கே காணலாம். நிகழ்காலத்தில் ஆரம்பிக்கும் வரலாறு, இறந்த காலத்திற்குத் திரும்பி, மறுபடியும் நிகழ்காலத்திற்கு வருவது அர்த்தபுஷ்டியோடு இருக்கிறது. 1947 ஆகஸ்டு 15ஆம் நாள் "ஸ்ரீரங்க" அவர்களின் "புருஷார்த்த" என்கிற நாவல் பிரசுரமாயிற்று. லோகமான்ய திலகரின் இறுதி யாத்திரையிலிருந்து தொடங்குகிற நாவல் (1-8-1920) சுதந்திரம் உதயமானதோடு முடிவடைகிறது. சுதந்திரம் பெறுவதற்கே தங்களை அர்ப்பணித்துக் கொண்டுள்ளதாகச் சொல்லும் நான்கு

நண்பர்கள், சுதந்திர நாளன்று மறுபடியும் ஒன்று கூடுகிறார்கள். மூன்று பேர் தாங்கள் தேர்ந்தெடுத்துக் கொண்ட இலட்சியத்தை விட்டு விலகி, வேறு வழிகளில் சென்று தத்தம் "புருஷார்த் தங்களைச் சாதித்துக் கொண்டவர்கள். கடைசிவரையில் சுதந்திரத்திற்காகப் பாடுபட்டவன் மாது. நான்கு பேர்களில் இலட்சியத்தை உண்மையோடு பேணிய மாதுவே எல்லா வற்றையும் பலி கொடுத்தவன். நான்கு பேருடைய நினைவுகளும் விரியும்போது, நான்கு புருஷார்த்தங்கள் உருப்பெறுகின்றன. அவருடைய சமீபத்திய நாவல் "விஷசக்ரவ்யூக" த்தின் வஸ்து காந்தியுகம். இங்கே இரண்டு தலைமுறைகளின் இடைவெளி தந்தை-மக்கள் இவர்களிடையே உருவெடுத்துள்ளது. ஸ்ரீரங்க அவர்களுக்கு எப்போதுமே மொழியில் விசேடமான ஈடுபாடு. இங்கே இரண்டு தலைமுறைகளின் இடைவெளி வார்த்தைகளின் பொருள் நிறைவில் மேலுக்குமேல் பிரதிபலிக்கப்பட்டுக் கொண்டு செல்கிறது. "கமாண்டர்" "சொன்னபடி கேட்பது" "லீடர்" "சுகம்" "சார்த்தகம்" என்கிற ஒவ்வொரு வார்த்தையும் இரண்டு தலைமுறைகளுக்கும் வெவ்வேறு பொருளையே தருகின்றன. கடைசியில் மகன் தந்தையிடம் சொல்லுகிறான். "என்னமோ! ஹீம், காந்தியிடத்தில் என்னத்தைக் கண்டார்களோ! எங்களுக்கு மட்டும் ஒன்றும் புரியவே இல்லை."

முதலில்லாதது- முடிவில்லாதது" ஸ்ரீரங்க அவர்களின் இரண்டாவது நாவல் (1959). முதல் பாகம் "முதலில்லாதது"வில் காணப்படும் சம்பவங்களுக்கும், இரண்டாவது பாகம் "முடிவில் லாதது"வில் காணப்படும் சம்பவங்களுக்கும் இடையேயுள்ள இடைவெளி பத்து வருடங்கள். "முதலில்லாதது"வில் மூன்று பாத்திரங்கள். அவைகளில் ஒன்று இறந்துபோன சரளாவின் பாத்திரம். ஆனால் மற்ற இரண்டு பாத்திரங்களான ராமண்ணா, குமுதா இவர்களின் நினைவுத்தொடரில், சரளா அவர்களைப் போலவே உயிருள்ள பாத்திரமாக விளங்குகிறாள். உண்மை யாகிறாள். அல்லாமல், அவளுடைய பேச்சிலும் செயல்களிலும் ஒரு வகையான மறைபொருள் இருந்து கொண்டு, ராமண்ணா, குமுதா இவர்களின் மனப்போராட்டங்களையும், அவர்களிடையேயுள்ள உறவில் தோன்றும் மாறுதல்களையும் அவள் எதுவரையில் புரிந்து கொண்டிருக்கிறாள், எதுவரையில் தானே அவற்றை உருவாக்கிக் கொண்டிருக்கிறாள் என்பதும் ஒரு பிரச்சினையாகி, அவளுடைய குணசித்திரம் வியப்பூட்டுவதாக இருக்கிறது. நாவலின் விஷயம்

ஆண்-பெண் உறவு. (உடலுறவு என்று சொன்னால் அநியாயமாக விஷயத்தின் பரப்பை அலட்சியப் படுத்தியதாகிவிடும். ஆணும் பெண்ணும் ஒருவர் இன்னொருவருடைய மனத்தையும் வாழ்க்கையையும் நிறைத்துக்கொள்ளும் முறையே, இங்கே எடுத்தாளப்பட்டிருக்கும் வஸ்து) இந்த விஷயம் மலர்ந்து கொண்டு வரும்போதே, இன்னும் பல விஷயங்கள் குறிப்பிடப்பட்டு, முதலிலிருந்தே நாவல் கனமாகிக் கொண்டு வருகிறது. பாத்திரத்திற்கும் பாத்திரத்திற்கும் இடையேயுள்ள உறவின் பிரச்சினை, மொழியின் வெற்றி-தோல்வி, இறந்தகாலமும் நிகழ்காலமும் பிணைந்து கொண்டிருக்கும் முறை, உடலுக்கும் உள்ளத்திற்கும் உள்ள சம்பந்தம் இவையெல்லாம் முதல் ஆறு பகுதிகளில் (முப்பத்து மூன்று பக்கங்களில்) வந்துவிடுவது ஆச்சரியப்படத்தக்க விஷயம். முதல் பாகத்தில் குமுதாவும் ராமண்ணாவும் *parallel* கோடுகளின் மீது நடக்கிறார்கள்; அப்படி நடக்கும் போதும் இறந்த காலத்தில் ஒரு அடியும், நிகழ்காலத்தில் ஒரு அடியும்; ஆண்-பெண் கவர்ச்சி, மோகம், இந்த மோகத்தின் பல முகங்கள், நேசத்திற்குள் அடங்கியிருக்கும் துவேஷம், துவேஷத்தில் தோன்றிய நேசம், இவை அவர்கள் இருவரையும் தவிர்க்க முடியாத விவாகத்திற்கு இழுத்துச் செல்லுதல் நடந்துகொண்டிருக்கும் போதே, ஆண்-பெண் உறவின் மற்றொரு முகமான சரளாவின் வாழ்க்கை, பின்னணியில் இருந்து கொண்டு இந்தச் சம்பவங்களுக்குப் புதியதொரு பரிமாணத்தை அளிக்கிறது.

இரண்டாவது பாகத்தில் மறுபடியும் மூன்று பாத்திரங்கள்- காணுகிற இரண்டும், காணாத ஒன்றும். முதல் பாகத்தில் குமுதா, ராமண்ணா இவர்களை அருகில் கொண்டுவந்த சரளா கண்ணுக்குக் காணாத, மனத்திற்குக் காணப்பட்ட பாத்திரம்; அதுபோல, அவர்களுடைய சேர்க்கையின் பலனான மோகன் இங்கே கண்களுக்குக் காணாத, மனத்திற்குக் காணப்படுகிற பாத்திரம். சரளாவைப் போல இவனும் மரணத்தின் வாயில் நிற்பவனே. மேலும் இங்கே ஸ்ரீரங்க அவர்கள் "கால"த்தை வெகு சிறப்பான முறையில் பயன்படுத்துகிறார். சம்பவம் முழுவதுமே ஒரு மணிநேரத்தில் நடைபெறுகிறது. ஆனால் கடந்த பத்து வருடங்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் மட்டுமல்லாமல் குமுதா-ராமண்ணா இவர்களிடையில் ஏற்பட்ட மோதல்கள் மனஸ்தாபங்களும் உருவாகின்றன. உடல், உள்ளம் இவைகளின் சம்பந்தம் (குமுதாவின் உடலே ராமண்ணாவின் உடலின்

மூலமாக, அவனுடைய விருப்பம் இல்லாமலே அவள் அவனை நேசிக்கிறாள் என்று காட்டுகிறது. தான் அவனுடைய உடலோடு ஒட்டிக்கொண்டுவிட்ட ஒரு பழக்கம் என்று அவள் சொல்லியிருக்கிறாள் எண்ணிக்கொண்டிருக்கிறாள்) பேச்சு, எண்ணம் இவைகளின் சம்பந்தம் முதலிய விஷயங்களும் மீண்டும் இங்கே பிணைந்து கொண்டிருக்கின்றன. "கணவன்-மனைவியரை ஒன்று சேர்க்கும் முடிச்சு குழந்தை" என்கிற பவபூதியின் வாக்கு இங்கே பின்னணியில் இருந்து கொண்டு, ராமண்ணா-குமுதா இவர்களின் பிணைப்புக்குப் புது பரிமாணம், கனம் கொடுத்து மோகனின் வாழ்வு - சாவு இரண்டுக்கும் பொருளைத் தருகிறது. இங்கே வந்து போகும் அத்தைக் கிழவி இறந்த- நிகழ்காலங்களை மீண்டும் மீண்டும் ஒன்றாக்கி குமுதாவின் பத்துவருட அனுபவத்திற்குக் காலவரையறையற்ற அனுபவத்தைச் சேர்க்கிறாள்.

"முதலில்லாதது- முடிவில்லாதது" இதிலுள்ள சில பகுதிகள் (ராமண்ணா, சரளாவின் படத்தின் முன்னால் நின்று கொண்டு பேசுவது, நண்பன் வீட்டிற்குச் சாப்பிடப்போனது, கால் தடுக்கியது. இந்தச் சந்தர்ப்பங்களில் குமுதாவின் மனதிலேற்பட்ட எண்ணங்கள் முதலியன) நமக்கு அதிருப்தியை அளிக்கலாம். இந்தக் கட்டங்கள் நாடகபாணியாகி விட்டதாகத் தோன்றலாம். ஆங்காங்கே எண்ணப்போக்கு சென்றிருக்கும் முறை, மூளையின் உழைப்பின் பலன் என்றும் தோன்றலாம். ஆனால், மொத்தத்தில் இது ஆண்-பெண் உறவின் சிக்கலை வார்த்தைகளில் கட்டிச் சமைத்துள்ள படைப்பு என்பதில் ஐயமில்லை. நினைவுகளின் மூலமாகவே பதினோரு, பன்னிரண்டு வருடங்களின் கடந்தகால நிகழ்ச்சிகளையும், அந்தரங்கத்தின் உலகையும் திறந்து வைக்கும் உத்தி சிறப்பானது. இந்த நாவலில் கடந்தகால நிகழ்ச்சிகள், மனத்தின் தன்மை இவைகளை வேறுபடுத்த முடியாதவாறு பிணைத்திருப்பது விசேஷமான சாதனை.

எழுபதாவது வயதில், ஸ்ரீரங்க அவர்கள் இன்னும் புதுப்புது முயற்சிகளைச் செய்து கொண்டே இருக்கிறார். அவருடைய முயற்சிகள் வெற்றி பெறாவிட்டாலும் ஆர்வத்தைத் தோற்றுவிக்கின்றன; தோல்வியின் காரணங்களை ஆராயத் தூண்டுகின்றன.

எம். எஸ். சேஷகிரி ராவ்

# 1

"சினிமாவுக்குப் போவோமா?"

"ஊம் - ?"

"சினிமாவுக்கு - இல்லாவிட்டால் - எங்கேயாவது வெளியே போவோமா?"

பதிலில்லை.

"அதாவது - வெளியே சுற்றிவிட்டு வந்தால் கொஞ்சம் - அதாவது வீட்டுக்குள்ளே உட்கார்ந்து கொண்டு உனக்கும் அலுப்புத்தட்டியிருந்தால் - அதனால் -"

உள்ளங்கையால் வாயை மூடியவண்ணம் விட்ட கொட்டாவி தான் பதில்.

"அப்படின்னா, எங்கேயும் போகவேண்டாம் என்கிறாயா? உனக்காகத்தான் கேட்டேன். ஏனென்றால், அப்படிப் பார்த்தால், எனக்கும் எழுதுகிற வேலை இருக்கிறது.— போவதாக இருந்தால் சொல். நான் ராத்திரியில் எழுதிக் கொள்கிறேன். ஹூம் வேண்டாம்கறியா? சரி, சும்மா உட்கார்ந்து கொண்டு என்ன செய்வது? நான் உட்கார்ந்து எழுதுகிறேன். ஏதாவது வேலையிருந் தால் மட்டும் வந்து சொல்."

இவ்வாறு சொல்லிக் கொண்டே, கையில் வைத்திருந்த தினப்பத்திரிகையை வீசி எறிந்துவிட்டு, அலுப்புடன் நெடுமூச் செறிந்தபடி ராமண்ணா நாற்காலியிலிருந்து எழுந்திருந்தான். பகல் பன்னிரண்டு மணிநேரத்தில் இது நூறாவதோ, ஆயிரமாவதோ - எப்படியோ ராமண்ணாவின் கடைசி முயற்சி - குமுதாவைப் பேச வைப்பதற்கு இது முதல் நாளல்ல. இந்த ஒத்துழையாமைச் சூழ்நிலை நிலவ ஆரம்பித்து இன்றைக்கு நான்கு மாதங்களாகின்றன. பார்க்கப் போனால், இந்த சகித்துக் கொள்ள முடியாத சூழ்நிலையைப் பொறுத்துக்கொள்ள வேண்டிய தேவை ராமண்ணாவுக்கு இருக்கவில்லை. குமுதா யார்? தனக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்? தான் ஏன் அவளுக்காக வீட்டில் மயானத்தின் பயங்கர அமைதியைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்? குமுதாவுக்கு ஏதாவது சம்பந்தம் உண்டென்றால், அது தன் மனைவியான சரளாவுடன். பாவம்! சரளாவின் சுபாவம் எல்லோரையும் நம்பக்கூடிய சுபாவம், மனிதர்களோடு ஒட்டிக் கொள்கிற சுபாவம். குமுதா தன் அத்தையின் மகள் என்று சரளா சொன்னாள். எந்த தேசத்திலிருந்தாளோ இந்த அத்தை?

ஏனென்றால், அன்று வரையில் தனக்கு ஓர் அத்தை இருப்பதாகச் சொன்னதே இல்லை. திடீரென்று ஒரு நாள், தன் அண்ணனின் வீட்டிலிருந்து வரும்பொழுது குமுதாவைக் கூட்டிக் கொண்டு வந்தாள், அத்தையின் மகள் என்று சொல்லி, வீட்டோடு வைத்துக் கொண்டு விட்டாள். அத்தை என்று ஒருத்தி இருக்கிறாளா என்று கேட்கக்கூட நேரமிருக்கவில்லை. ஏனென்றால், அத்தை இறந்து போனாள் என்ற முகவுரையுடனேதான் குமுதாவின் அரங்கேற்றம் ஆரம்பித்தது. இவையெல்லாம் நடந்தது ஆறு வருடங்களுக்கு முன்னால். இப்பொழுது குமுதாவுக்கு அந்த சம்பந்தமும் இல்லாமற் போய்விட்டது. ஏனென்றால், இப்போது சரளாவே இறந்து போய் நான்கு மாதங்களாகிவிட்டன. ஆறு வருடங்களின் சலுகையும் சகவாசமும் இருக்கத்தான் இருக்கின்றன. ஆனால் இதுபோன்ற நடத்தையைப் பொறுத்துக் கொள்வது இன்னும் எவ்வளவு நாட்களுக்கு முடியும்? இனிமேல் தன்னால் முடியாது என்பதை வாயால் சொல்ல முடியாததனால், கையிலிருந்த தினப் பத்திரிகையால் நாற்காலியின் மீது ஓங்கி அறைந்துவிட்டு, ராமண்ணா எழுந்து கொண்டான். "ஏதாவது வேண்டியிருந்தால் மட்டும் வந்து சொல்ல மறக்காதே" என்று எச்சரித்துவிட்டு ராமண்ணா தன் அறைக்குச் சென்றான்.

## 2

ராமண்ணாவின் அறைக்கதவு மூடிய சப்தத்தைக் கேட்டதுமே, குமுதாவால் விம்மலை அடக்க முடியவில்லை. அவன் மனம் புண்பட்டு விட்டதே? அவன் மனம் புண்பட வேண்டுமென்பதல்ல தன் விருப்பம். ஊஹூம், ராமண்ணாவின் மனத்தைப் புண்படுத்த வேண்டுமென்று தான் விரும்புவது, இந்த ஜன்மத்தில் நடவாத காரியம். வேண்டுமானால் அவனுக்காகத் தான் சாவையும்கூட அணைத்துக்கொள்ளத் தயாராக இருந்தாள். ஆனால் என்ன செய்வது? இதயம் ஒன்றை நினைத்தால் மனம் வேறொன்றையே நினைக்கிறது. இதயம் ராமண்ணாவின் அருகாமையை விரும்பினால், மனத்திற்கு அவனது நகைச்சுவைப் பேச்சுக்கள்கூடப் பிடிக்கவில்லை. ஏன் இப்படியாயிற்றென்று குமுதாவுக்கு விளங்கவில்லை. அப்படியாகிவிட்டது மட்டும் உண்மை என்பதை அவளது மனத்தின் கலவரமே, அவளுக்கே தினமும் உணர்த்திக் கொண்டிருந்தது. சரளக்காவின் மரணத்தால் ஒரு விதமான அடிபட்டிருக்குமோ? பன்னிரண்டு வயதுப் பெண்ணான, அநாதையான தன்னைக் கூட்டிக் கொண்டுவந்து வளர்த்து, சுகமும்

சௌகரியங்களும் அளித்து. தாய்க்குச் சமமாக இருந்துவந்த சரளக்காவின் மரணத்தினால், தன் மனத்திற்கு ஒரு பெரிய அடி விழுந்திருக்கக்கூடும் என்று, எவ்வளவோமுறை அவளுக்குத் தோன்றியதுண்டு. ஆனால், ராமண்ணாவின் நிலை தன் நிலையைப் போல ஆகவில்லையே? அன்புக்குரிய மனைவியை இழந்த கணவனுக்கு ஏற்படாத அதிர்ச்சி தனக்கு ஏற்பட முடியுமா? இது இயற்கையா? என்றும் சில சமயங்களில் ஐயப்படத் தொடங்கினாள். ராமண்ணா எதிரே உட்கார்ந்து பேசும்போது, ஒரு வகையில் வெறுப்பாக இருந்தாலும், ராமண்ணா மறைந்த உடன் அவளுக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிடும். அதனால்தான் அறைக்கதவு மூடப்பட்ட சப்தம் கேட்டவுடனேயே, விம்மல் இடிபோல முழங்கிக் கொண்டு பொங்கிய போதும், அடுத்த நாழிகையில் முகத்தில் சிரிப்பு மின்னல் பளிச்சிட்டது. உள்ளத்தின் மர்மம் அது. விண்வெளியில் முதலில் இடி முழக்கம் கேட்டு, பிறகு மின்னல் பளிச்சிடுவதில்லையா? மூடியிருந்த கதவைப் பார்த்துப் புன்முறுவல் புரிந்தாள். பார்த்தபடியே அந்த இன்பத்தின் அனுபவத்தை ஜீரணித்துக் கொள்வதற்காக, கண்களை மூடிக்கொண்டாள். வெயிலில் விழுகின்ற மழைத் துளிகளைப்போல, புன்முறுவல் பூத்த முகத்தில், மூடிய கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது. இது சுகமா? துக்கமா? என்பதையறியாத அல்லது அந்த எண்ணத்தையே மீறி ஒரு பேரின்பத்தைக் காண்பவள்போல அவள் முகம் வசீகரமாக இருந்தது. கண்களை மூடிக்கொண்டபோது குமுதா ஒரு பேரின்பத்தையே அனுபவித்தாள் என்று சொல்லலாம். இன்று கண்மூடிக் கொண்ட குமுதாவுக்கு, பிந்திய நாட்களின் நினைவு இன்றியமையாத தாயிற்று. அன்றும் இதேபோல ராமண்ணாவின் அறைக்கதவு மூடியிருந்தது. தான் அப்பொழுது பன்னிரண்டு வயதுப் பெண்; சரளக்காவுடன் வந்திருந்தாள். புகை வண்டியில் பிரயாணம் செய்து வந்தது கூட அவளுக்குப் புதிது. ஜன்னலருகில் உட்கார்ந்து வேகமாகப் பின்னால் பாய்ந்து ஓடும் உலகத்தைப் பார்த்தபோது, "ராஜா பார், ராணி பார்" படத்தைப் பார்ப்பது போலிருந்தது. அந்தச் சித்திரங்களைப் பார்க்க வேண்டுமென்று அவளுக்கு ஆசை. ஆனால் சரளக்கா ஏதோ விடாமல் பேசிக் கொண்டே இருந்தாள். நடுநடுவே, "தெரிஞ்சுதா, குமுதா?" என்று வேறு கேட்கிறாள். ஆகையால் அவள் சொல்வதைக் கேட்டே ஆகவேண்டியிருந்தது. அப்படி அவள் பேசிக்கொண்டு வந்ததுதான் என்ன? வழி நெடுக

ராமண்ணாவின் புகழ்தான். பேச்சுக்குப் பேச்சு, "அவர் இப்படிச் சொல்லுகிறார்" என்று பல்லவி. "அவருக்கு எழுதும் பைத்தியம். அவர் சுபாவம் விசித்திரமானது. உன்னைக் கேலி கிண்டல் செய்தால் அழுதுவிடாதே!" என சரளக்கா எவ்வளவு கம்பீரமாக, எவ்வளவு நெகிழ்ச்சியோடு சொன்னாள். இப்போதும் அவளுடைய முகம் நினைவுக்கு வந்தால் சிரிப்பு வருகிறது. "அப்புறம் அவர் கிண்டல் பண்றாரேங்கறதுக்காக, நீயும் அவரைக் கேலி செய்துவிடப் போகிறாய்? பொசுக்குன்னு திட்டிவிடுவார்! ஏனென்றால், எந்த வேளையில் அவர் மனம் என்ன நிலையில் இருக்குமென்று சொல்ல முடியாது." என்று எச்சரிக்கை செய்திருந்தாள். அதையெல்லாம் கேட்டு, ராமண்ணாவைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் குமுதாவுக்கு அதிகரித்திருந்தது. தானும் சரளக்காவும் வீட்டுக்கு வந்தோம், ஸ்டேஷனிலிருந்து; கதவு திறந்திருந்தது. உள்ளே யாரும் இருந்தது போலத் தெரியவில்லை. ஆனாலும் சரளக்கா மெல்லிய குரலிலேயே பேசத்தொடங்கினாள். "ஏய், கை கால் அலம்பிக்கொள். நான் டீ போடுகிறேன். அறைக்கதவு சாத்தியிருப்பதனாலே, அவர் உள்ளே உட்கார்ந்து எழுதிக் கொண்டிருக்கவேண்டும். சத்தம் பண்ணாதே. டீ தயாரானதுக்கப்புறம் பார்க்கலாம்" என்று சொன்னாள். குமுதா மேலும் ஆவலுடன் அறைக்கதவையே வெறித்துப் பார்த்தபடி நின்றாள். எவ்வளவுநேரம் அப்படியே நின்றிருந்தாளோ! திடீரென்று அறைக்குள்ளிலிருந்து 'சரளா' என்கிற அழைப்பு, தடாலென்று கதவு திறக்கப்படும் ஓசை, எதிரே ராமண்ணனின் உருவம்! என்ன செய்யவேண்டுமென்று தெரியாதவளாகி, குமுதா கற்சிலைபோல அசையாமல் நின்றுவிட்டாள். "சாரி. சரளா கொஞ்சம்தான் பாக்கியிருந்தது. முடித்தாக வேண்டியிருந்தது" என்று சொல்லிக் கொண்டே தன் அருகில் வந்து இரண்டு கைகளையும் தன் தோள்மீது வைத்தபடி, "சரளா, இந்தப் புத்தகத்தினால் என் வாழ்க்கையே மாறப் போகிறது பார், நீ படித்துப் பார்த்தாயானால் உனக்கும் விளங்கும். ஷேக் ஹான்ட்ஸ் சரளா. உன் கணவன் இன்றையிலிருந்து பிரசித்த இலக்கிய கர்த்தா." என்று தன் புஜங்களைப் பிடித்துக் கொண்டு பலமாக அழுத்தத் தொடங்கினான். அப்போது சரளக்கா உள்ளேயிருந்து வந்து "முடிஞ்சுதா எழுதி" என்று கேட்டபோது, பாவம்! ராமண்ணா திடுக்கிட்டுப் பின்வாங்கி, தன்னைப் பார்த்து, "அட இந்தப் பெண் யார்? ஹஹ... எனக்கும் சந்தேகம் வந்தது. சரளா எப்படி இவ்வளவு சின்னவளாகிப் போய் விட்டாள் என்று.

யாருக்குத் தெரியும்? அண்ணன் வீட்டில் சாப்பாடு சரியாகக் கிடைக்காமல் இளைத்து இளைத்து இப்படி வாடிப்போய் விட்டாளோ என்னமோ என்று நினைத்துக் கொண்டேன். ஹஹ்ஹா.." என்று தனக்கு ஏற்பட்ட குழப்பத்தைக் கண்டு தானே சிரிக்க முற்பட்டான் ராமண்ணா. ஆனால் நடந்த சங்கதியைவிட, அவள் அடைந்த அநுபவம் ஒன்றைக் குமுதாவல் மறக்க முடியவில்லை. அது - ராமண்ணனுடைய கைகள் தன் தோள்களைத் தொட்ட அநுபவம். அதேனோ - உடல் நடுங்கினாலும், மனம்மட்டும் வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டுத் தூங்குபவனைப் போல, கரைகாணாத சுகத்தில் இலயித்தது. இந்த ஆறு வருடங்களில் எவ்வளவு முறைகள் அந்த மூடிய கதவைப் பார்த்திருப்பாளோ, அவ்வளவு முறைகள் குமுதா, அந்தக் கரைகாணா இன்பத்தை நினைத்து கண்களை மூடிக் கொள்வாள். இப்பொழுதும்கூடக் கண்களை மூடியபோது, முதலில் ஒரு நிமிடம் அதே சுகத்தின் உதயகிரணங்கள் போல, அவள் முகத்தில் இளங்காலை வெயிலின் பிரகாசம் மின்னும். கண்களில் நீர் வழியும். ஆனால் இப்பொழுது மட்டும் கண்ணீரின் காரணம் சுகமா துக்கமா என்று அவளுக்குத் தெரியவில்லை. சட்டென்று எழுந்து முகம் கழுவிக் கொண்டு கண்திறந்து பயத்துடன் நாலுபுறமும் பார்த்துவிட்டு, கதவு இன்னும் மூடியிருக்கிறது என்பதனால் சமாதானமடைந்தவளாக, நெடுமூச்செறிந்த வண்ணம், கையில் வைத்துக் கொண்டிருந்த புத்தகத்தைப் படிக்க முயற்சித்தாள்.

## 3

சாப்பாடு சீக்கிரம் முடிந்தது. சினிமா போவதும் இல்லையென்றாயிற்று. எழுதுகிறோம் என்று சொல்லி, கதவை மூடிக் கொண்டு உட்கார்ந்துவிட்டதனால் வெளியே போகிறாற்போலுமில்லை. வேட்டை நாய்களிடமிருந்து தப்புவதற்காகப் புதரில் ஒளிந்து கொண்ட முயலைப் போல, மேஜை நாற்காலிகளிடையே அகப்பட்டுக் கொண்டோமே என்று நினைத்து, ராமண்ணா தன் அறையில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான். கடைசியாக, மேஜையின் மீது கைகளை ஊன்றிக் கொண்டு, தலையைக் கைகளால் கெட்டியாய் பிடித்துக்கொண்டு, வானத்தைப் பார்க்க விழைபவன் போல, எதிரேயிருந்த 'சுவற்றைப் பார்த்தான். அவனுக்குத் தெரிந்தது சுவற்றில் மாட்டப்பட்டிருந்த சரளாவின் புகைப்படம். தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவன் போல மற்றொருமுறை மனைவியின் படத்தை வெறித்துப் பார்த்தான். இதென்ன? சரளாவின் உதடுகள் பிரிந்தனவா? தான் எழுதாமல்

அவஸ்தைப்படுவதைக் கண்டு அவள் முறுவலிக்கிறாளா? "நான் எப்படி எழுதுவேன் சரளா, உனக்குத் தெரிந்திருந்தும் சிரிக்கிறாயே?" என்று அடம் பிடிக்கும் சிறுவனின் குரலில் இழுத்தான்.

ராமண்ணா மனைவியின் படத்தைப் பார்த்து, அவ்வாறு கூறியதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. தன்னுடைய எழுத்துப் பணியின் தந்திரங்களெல்லாம் சரளாவுக்குத் தெரிந்திருந்தன. அவ்வளவேன், சரளாவே அந்தத் தந்திரங்களில் ஒரு பாகமாக இருந்தாள்.

"சரளா, எனக்கு எழுத வேண்டியிருக்கிறது" என்பான் ராமண்ணா.

கதையா, நாவலா, நாடகமா, என்ன எழுதப்போகிறீர்கள் என்று சரளா எப்போதும் கேட்பாள்.

"ஹஹ்ஹா– அப்படியென்றா? எழுதுகிறேன் என்றால் குமாஸ்தாவைப் போல கணக்கோ, ரிப்போர்ட்டோ எழுதப் போகிறேன் என்று நினைத்தாயா?" என்று வெகுள்வான் ராமண்ணா.

"இல்லே, நேற்று என்னன்னமோ சொன்னீர்கள் – அதைத்தான் கதையாக எழுதப்போகிறீர்களா, நாடகமாக எழுதப் போகிறீர்களா என்று கேட்டேன்" என்று பதிலளிப்பாள் சரளா.

அப்பொழுது ராமண்ணாவுக்கு நினைவு வரும், தான் எழுத வேண்டிய விஷயம் என்ன என்பது. ஆனால் மனைவியின் முன்னால் அதை ஒத்துக்கொள்வது எப்படி? ஆகவே சிறிது கோபத்துடனேயே சொல்வான்: "பைத்தியக்காரி, நாடகம்தான் எழுதப் போகிறேன் என்று நான் சொல்லவில்லை?" என்று.

"பின்னே, நாடகம் எழுதினால் எவ்வளவோ விஷயங்களைக் காட்ட முடிவதில்லை, சொல்ல முடிவதில்லை என்று சொன்னீர்கள். அதனால் நாவல் எழுதுகிறீர்களோ என்பதற்காகக் கேட்டேன்" என்பாள் சரளா.

என்ன வேடிக்கை! தான் நாடகம் எழுதப்போவதாகச் சொல்லியிருக்கவில்லை. அது தன்னுடைய பொய். நாடகத்தில் சிலவற்றைக் காட்ட முடியாது என்று தான் சொன்னதாகச் சரளா சொல்வது பொய். ஆனாலும் இதுபோன்ற பொய்களைப் பொருட்படுத்தாமல், "அதனால்தான் நேற்று ஆரமபிக்கவில்லை. நாவல் எழுதவேண்டுமென்று நேற்றே நிச்சயித்தேன். அதைத்தான் இன்றிலிருந்து எழுதப்போகிறேன் என்று சொன்னேன்" என்று சாதிப்பான்.

"ஹையா! நாவலே எழுதுகிறீர்களா!" என்று சரளா முகமும் கண்களும் மலரச் சொல்வாள். அவளுக்கேற்பட்ட அந்த ஆனந்தத்தையும் அபிமானத்தையும் கண்டு, அதற்காகவாவது தான் நாவலே எழுதவேண்டுமென்று நிச்சயிப்பான்.

"சரளா, நீ எனக்குக் கற்பனை பிறக்கக் காரணமாக இருந்தாய்" என்று ராமண்ணா புகைப்படத்திலுள்ள சரளாவின் முன் ஒத்துக்கொண்டான்.

ஒன்றா, இரண்டா, எவ்வளவு வகைகளில் சரளாவின் ஒத்தாசை கிடைத்துவந்தது? எழுதாத பகுதியை எழுதியதுபோல அவளிடம் சொன்னபோது, ஒவ்வொரு சமயங்களில் அவளுக்குத் திருப்தி ஏற்படாது. கொஞ்சம் கொஞ்சமாக அவள் அபிப்ராயபடியே கதையின் திசையைத் திருப்பிவிடுவான். புத்தகத்தை எழுதி முடிக்கும்போது அவளுடையதே கடைசி முடிவு. கடைசிவரையில் தான் கதையைச் சொல்ல முற்படும்போது அவள் திடீரென்று, "போறும், அப்புறம் சொல்லாதீர்கள். கடைசியில் இப்படித்தானே முடிகிறது!" என்று சிறு குழந்தைதனைப் போலக் கைதட்டிக் கொண்டு துள்ளுவாள். "பலே என்னோடு சேர்ந்து நீயும் இலக்கிய கர்த்தா ஆகிவிட்டாய்?" என்று அவள் முதுகில் தட்டிக்கொடுத்துவிட்டுத் தன் அறைக்குச் சென்று, அவள் அபிப்ராயப்படியே - ஆனால் அதை ஒப்புக்கொள்வது மட்டும் கிடையாது - கதையை எழுதி முடிப்பான். தேநீர் சாப்பிடும் பொழுதோ அல்லது இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகோ அதைக்கொண்டுவந்து, "அப்போ நீ சொன்னாயே? இங்கே பார், நானும் கதையை அப்படியேதான் எழுதி முடித்திருக்கிறேன்" என்று கர்வமாகப் படித்துக் காண்பிப்பான்.

"சரளா, அது மோசமல்ல. விளையாட்டுப் புத்தி. இப்போது அந்த விளையாட்டுக்குத் துணையாக யாரும் இல்லை. நான் எப்படி எழுதுவேன்?" என்று அந்தப் புகைப்படத்தின் முன்னால் மறுபடியும் முறையிட்டுக் கொண்டான்.

உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துப் போய்விட்டது ராமண்ணாவுக்கு. தான் ஒருவனே சினிமாவுக்குப் போனால் என்ன? அப்பப்பா அது முடியாத காரியம். அதெல்லாமில்லை, இந்தப் பெண்ணோடு முடிச்சுப் போட்டுக்கொண்டது தவறு. என்ன செய்வது? வெளியில் அனுப்பிவிடலாமா? அவள் எங்கே போவாள்? அது மட்டுமல்ல, நான்கு பேர் பேசாமலிருப்பார்களா? "பெண்டாட்டி இறந்ததுமே பாவம் அநாதைப் பெண்ணை

விட்டைவிட்டுத் துரத்திவிட்டுவிட்டான் ராமண்ணா" என்று சொல்லமாட்டார்களா? எல்லாவற்றைவிடப் பெரிய தடை சாகும் வரையில் குமுதாவின் சகவாசத்தைத் தவிர்க்க முடியாது என்பது. ஏனென்றால் குமுதாவின் கல்யாணம் நடக்கப்போவது சாத்திய மில்லை என்பதை. ராமண்ணா நன்றாக அறிந்திருந்தான். சரளா படுக்கையில் விழுந்த அன்றிலிருந்தே ஊரார் பேச ஆரம்பித்து விட்டார்கள். அது ராமண்ணாவின் காதுகளிலும் விழத்தான் செய்தது. குமுதாவையும் தன்னையும் இணைத்துத் தோன்றிய சந்தேகம் வளர்ந்தது. ஜனங்களுக்கு சந்தோஷமாக இருந்தது; ராமண்ணவுக்கு அநுபவமாக இருந்தது. " சரளா, இதுவும் உன்னுடைய தவறு தான்" என்று ராமண்ணா புகைப்படத்திற்கு அழைப்பு விடுப்பது போலச் சொன்னான். திடீரென்று அவன் உடல் நடுங்கியது. "குமுதாவை நீங்கள் ஏன் கல்யாணம் செய்து கொள்ளவில்லை?" என்று அந்தப் புகைப்படத்திலிருந்த உதடுகள் கேட்பது போலத் தோன்றியது. சே, இந்த எண்ணம் ஏன் வந்தது இன்றைக்கு. குமுதாவைக் கல்யாணம் செய்துகொள்வதா? முடியவே முடியாது. "சரளா உனக்கே தெரியும். உனக்கும் எனக்கும் இடையேயுள்ள சகவாசத்தால், நாம் ஒருவர் போலாகிவிட்டோம். இன்று நீ உடலால் வேறுபட்டு இல்லாமற் போனாய். அதனாலென்ன? என் உடலுள் ஐக்கியமாகிவிட்டிடுக்கிறாய். நான் பிழைத்திருக்கும் வரையில் என்னுள் நீ இருப்பாய். அவ்வாறு நீ அங்கே இருக்கும்போது, இன்னொருத்திக்கு அங்கே எப்படி இடம் கிடைக்கும்? முடியாது. சரளா, குமுதாவுடன் கல்யாணம் என்பது நடக்காத காரியம். அவ்வளவேன்? இன்னொரு கல்யாணம் என்பதே நடக்காத காரியம்" என்ற எண்ணங்களின் தீவிரத்தால், ராமண்ணாவின் கண்களில் நீர் பெருகியது. "ஆனால் இதெல்லாம் உன்னுடைய தவறுதான்" என்று தன் உணர்ச்சி வேகத்தைக் கட்டுப்படுத்துவதற்காக அவளைக் குறைகூறினான்.

அமைதியான மனநிலையில் இருக்கும்போது, தான் இப்படிப் பேசியிருக்கமாட்டோம் என்று ராமண்ணாவுக்குத் தெரியும். ஏனென்றால், இன்னொருவர் மீது குற்றம் சுமத்துவது பலவீனத்தின் அறிகுறியல்லவா? அப்படிப் பார்த்தால் இந்த விஷயத்தில் தப்பு யாருடையது? யாருடையதும் அல்ல, தன்னிஷ்டம் போலத் தானாகவே நடைபெறுவது-அநுகூலமாக இருந்தால் சரி, இல்லாவிட்டால் தவறு! ப்ராமயன் சர்வ பூதானி

யந்த்ராரூடானி மாயயா- என்று கீதையில் சொல்லப்பட வில்லையா? அங்கே கடவுள் உள்ளில் இருக்கிறார், அவர் பிராணிகளைக் காண்பிக்கிறார் என்று இருக்கிறது; இங்கே கடவுள் என்ற பேச்சில்லை, ஆனால் இதுவும் உள்ளுக்குள் இருக்கும் ஒரு சக்தியே. 'ப்ரவால சோபா இவ பாதபானாம் சிருங்கார சேஷ்டா விவிதா பபூவு:' என்று காளிதாசன் சொன்னது இன்னும் சிறிது அதிகப் பொருத்தமாக இருக்கிறது. செடிக்குத் துளிர் வருவது எவ்வளவு இயற்கையோ, அதே போலப் பிராணிகளுக்குக் காதல் விளையாட்டுகள் இயற்கையானவை- சே இதெல்லாம் தன்னைத்தானே மூடி வைத்துக்கொள்கிற சமாதானம். இதுவும் பலவீனத்தின் அறிகுறிதான் என்று ராமண்ணா அந்த வழியையும் விட்டுக் கொடுத்தான். ஆனாலும் ஒரு கோணத்தில் தவறு சரளாவுடையதுதான் என்று மறுபடியும் புகைப்படத்தைப் பார்த்து யோசிக்கத் தொடங்கினான். அன்றையத் தினம் நடந்தது பெரிய காரியம் அல்ல, அது நடந்திருக்கவேண்டியதில்லை, நடந்ததும் எதிர்பாராத வகையில். சுமார் இரண்டு, இரண்டரை வருடங்களுக்கு முந்திய விஷயம். சரளா அப்பொழுதுதான் படுத்த படுக்கையாகி யிருந்தாள். பாவம்! மூன்று வருடங்கள் படுத்த படுக்கையாக இருந்து, தேய்ந்து இறந்துபோன மனைவியின் மீது தவற்றைச் சுமத்தலாமா? தவற்றைச் சுமத்துவதல்ல, சம்பவத்தைப் புரிந்து கொள்வது என்று சமாதானம் செய்து கொண்டான். அன்று சரளா படுக்கையில் சாய்ந்து கொண்டிருநதாள்; குமுதா அருகே உட்கார்ந்திருந்தாள். ராமண்ணா வெளியிலிருந்து வந்தான், வந்தவன் சரளாவின் அருகே ஓடிச்சென்று, படுக்கையின் இன்னொரு புறத்தில் உட்கார்ந்து கொண்டு, "இன்றைக்கு ஜுரம் வந்திருந்ததா" என்று கேட்டான். சரளா புன்முறுவலுடன் தலையாட்டினாள். ஆனாலும் ராமண்ணாவுக்கு மனச் சமாதானம் இல்லை. "இப்போது ஜுரம் இல்லையே?" என்று கேட்டபடியே போர்வையின் கீழே கையைவிட்டு, சரளாவின் உடம்பைத் தொட்டுப்பார்க்க, கையை நீட்டினான். அதே சமயத்தில் குமுதாவும் அதே வேலையில் ஈடுபட்டிருந்தாள் போலிருக்கிறது. அகஸ்மாத்தமாக இருவருடைய கைகளும் தொட்டுக்கொண்டன. ஒரு விநாடி ராமண்ணா திகைத்துப் போனான். தன்னைத் தொட்ட கை உடனே வியர்ப்பதையறிந்தான். முகத்தை உயர்த்தி, குமுதாவைப் பார்த்தான். அவளும் களையிழந்த முகத்துடன்

இவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். "இல்லே-வியர்வை..." என்று கூறவந்தவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "அப்படின்னா வேர்வைவிட்டு ஜுரம் இறங்கித்தா, ஜுரமே வரவில்லையா" என்று சரளாவைக் கேட்டான். அவள் முகம் புன்னகையால் மலர்ந்திருந்தது. முறுவலித்தபடியே அவள், "இல்லையென்று அப்போவே சொன்னேனே?" என்றாள். அவள் பேசியவிதம், அந்தப் புன்னகை இவைகளினால் ராமண்ணாவுக்குச் சந்தேகம் வந்தது. சரளாவுக்குத் தெரிந்துவிட்டிருக்குமோ. கண் இமைக்கும் நேரத்தில் இருவரையும் பைத்தியமாக்கிய, சிறிதும் எதிர்பாரா விதத்தில் நடந்துவிட்ட அந்த நிகழ்ச்சி அதன் விளைவு சரளாவுக்குப் புரிந்துவிட்டதோ? புரிந்திருக்கவேண்டும். அதனாலேயே அவள் அதன் பிறகு ஜாக்கிரதையாக இருந்திருக்கவேண்டும். ஆனால் அப்படி அவள் செய்யவில்லை. என்னையும் எச்சரிக்கவில்லை. ஆகையால் இன்றைய நிலைக்கு அவளது அந்தத் தவறே காரணம் - "தெரிந்ததா? நீ ஒரு பேச்சு சொல்லியிருந்தால் இப்படி ஆகியிருக்காது." என்று புகைப்படத்திற்குப் புத்தி சொன்னான்.

வெளியே போகிறாற்போல இல்லை, எழுதப்போவதும் இல்லை, கண்முன்னால் புகைப்படம் இருந்ததால், சரளாவைப் பற்றி நினைக்காமல் இருக்கமுடியாது. என்னதான் செய்வது - என்று சிறிது எரிச்சலுடனேயே ராமண்ணா நாற்காலியிலிருந்து எழுந்திருந்தான். கடியாரத்தைப் பார்த்துக்கொண்டான். இன்னும் மணி எட்டரைதான். படுக்கப்போகும் நேரமும் அல்ல. படுக்கும் யோசனை வந்ததுமே மறுபடியும் திரும்பி நின்று, "எல்லாம் உன் தவறுதான், ஆமாம்" என்று புகைப்படத்தின் எதிரே தாழ்ந்த குரலில் முணுமுணுத்தவாறு, மறுபடியும் நாற்காலியில் 'பொத்' தென்று விழுந்தான்.

## 4

குமுதா பெருமூச்செறிந்தாள். புத்தகம் எங்கே, மனம் எங்கே? என்ன செய்வது? எங்கே போவது? சமீப காலமாக எங்கே போவதற்கும் அவளுக்கு விருப்பமே இருக்கவில்லை. தான் போனதுமே அங்கே கூடியிருந்த பெண்கள் சட்டென்று பேச்சை நிறுத்தி, பொய்யாகப் புன்முறுவல் பூத்தபடி தன்னை வரவேற்பார்கள். அதுவரையில் அவர்கள் தன்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பார்கள் என்பது குமுதாவுக்குத் தெரியாமல்

இருக்க முடியாது. ஆனால் என்ன செய்யமுடியும்? செய்யவேண்டும். ஆனால் செய்ததைப்பற்றி மற்றவர்கள் பேசக்கூடாது என்று சொன்னால், செய்த காரியம் வீட்டுச் சொத்தா? எப்படியோ இருக்கட்டும். போவதற்கு மனம் அவ்வளவாக ஆசைப்படவில்லை. இவ்வளவுக்கும் இப்போது இரவு எட்டரை மணி. போகவேண்டுமென்றாலும் முடியாது. சாப்பிட்டாயிற்று. இனி படுப்பது ஒன்றுதான் பாக்கி. "படுப்பது" என்று நினைத்தவுடனே குமுதாவின் உடல் நடுங்கியது. முகம் வியர்த்தது. இன்றைக்கு இரண்டு வருடங்களாயிற்று- குமுதாவும் ராமண்ணாவும் ஒரே படுக்கையில் படுக்கத் தொடங்கி. எத்தகைய மோசம்! பாவம்! சரளாக்கா படுக்கையில் கிடக்கும் ஜீவன். அவளுக்குத் தெரியவே முடியாது. அப்படியும் இப்படியும் - ஒரு நாள் ராமண்ணாவின் கையோடு தன் கைக்கு ஸ்பர்ஸம் ஏற்பட்டதிலிருந்து - இருவருக்கும் தெரியாமல் இந்தச் சம்பவம் நடந்துவிட்டது. முதல் முதலில் குமுதாவுக்கு, இதென்ன இப்படி நடந்துவிட்டதே என்கிற உணர்வுகூட இருக்கவில்லை. அவ்வளவுக்கு இன்பத்தின் இனிய கனவுகளில் தன்னை மறந்திருந்தாள். கையோடுகை உராய்ந்த பொழுது, மறைந்துபோன நியாய உணர்வு நேற்றுவரை திரும்பியிருக்கவில்லை. மீண்டும் உடல் நடுங்கியது. அப்பொழுது; ராமண்ணாவின் வரவை எதிர்நோக்கி, தூங்குவதுபோல் நடித்தபடி படுத்துக்கொண்டிருந்த சுகம் எங்கே? இப்போது ராமண்ணா அருகில் வந்து படுத்தால், எப்பொழுது விடியும் என்றும், அது வரையில் தூங்காமல் எப்படி இருப்பதென்றும் நினைக்கும் துக்கம் எங்கே? ஆனால் இன்றைய துக்கத்திலும் அன்றைய சுகத்தின் இனிய நினைவுகள் குமுதாவை விட்டகலவில்லை. பகலில்கூட அந்த அநுபவத்தை நினைத்தால், அவள் உடல் புளகித்தது. கைக்கும் கைக்கும் ஸ்பர்ஸம் ஏற்பட்ட அந்த முதல் அநுபவம்! - அந்த அநுபவத்தை அடைந்த கணமே தான் உயிர் விட்டிருந்தாலும், தன் ஜன்மம் கடைத்தேறியிருக்கும் என்று குமுதாவுக்குத் தோன்றிக் கொண்டிருந்தது. சாவு - வாழ்வு! ஒரு கணம் தான் உயிருடன் இருக்கிறோமா, இல்லையா என்கிற நினைவு கூட அவளுக்கு இருக்கவில்லை. உடல் புளகித்தது; தொடைகள் நடுங்கின, இதயம் பூரித்து உன்மத்தம் அடைந்தாற்போல, குதித்தெழுந்து பறப்பது போல இருந்தது. உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. நாக்கு உலர்ந்தாற்போல

இருந்தபோதிலும், வாயில் நீர் சுரந்தாற்போல இருந்தது; எல்லாவற்றையும்விட புதிய அநுபவம் என்னவென்றால், எவை தனக்கு மிகவும் கூச்சத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தனவோ அந்த அங்கங்களின் விசேஷ அங்கமான இரண்டு 'மார்பு'களிலும் மின்னிய ஒரு சுகமான வேதனை. அன்றிலிருந்து தான் ராமண்ணாவின் சொத்தாகிவிட்டோம், உடலால் அல்ல, இதயத்தால், கைவிரல்களின் ஸ்பர்ஸத்தால் மட்டுமே உடல் முழுவதற்கும் புதிய ஜீவனை ஊட்டியவனுக்கு, உடல் முழுவதையும் அர்ப்பணிப்பது கடினமாக இருக்கவில்லை.

சில சமயங்களில் குமுதாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. இவையெல்லாம் நடந்தது எப்படி? சரளக்கா படுத்த படுக்கையாகி, ஏதும் செய்ய முடியாத நிலையில் இருந்ததனாலா? அல்லது இந்த வீட்டில் தங்குவதற்காக வந்ததனாலா? அல்லது வெறும் கையோடு கை தொட்டதால் முளைத்ததா? ஆனால் ஏதோ எதிர்பாராத வகையில் தான் சரளக்காவின் வீட்டில் தங்க வந்தது, அதேபோல எதிர்பாராதபடி சரளக்காவை படுக்கையை விட்டகலாத நோயாளியானது, கையோடு கை தொட்ட அகஸ்மாத்தமான சம்பவம் - இவையெல்லாம் அகஸ்மாத்தாக நடந்தவையானாலும், ஒரு குறிப்பிட்ட இலக்கை நோக்கிக் குறிப்பிட்ட பாதையில் நடந்தனவே? ராமண்ணா சொன்ன துஷ்யந்தன்-சகுந்தலை கதையைப்போலத் தன்னுடைய கதையும் என்று குமுதா நம்பிக்கொண்டிருந்தாள். தலைநகரத்து அரசனெங்கே, காட்டில் வசிக்கும் கன்னி எங்கே? கன்வ ரிஷி ஆசிரமத்தில் இல்லாத அன்றைக்கே, அந்த அரசன் அங்கே ஏன் வரவேண்டும்? இவைகளையெல்லாம் பார்த்தால், துஷ்யந்தனும் சகுந்தலையும் சந்திக்கவேண்டுமென்பது கடவுளின் விருப்பமாக இருந்தது என்றே சொல்லவேண்டும். யாரும் திக்கில்லாத அநாதையான தன்னுடைய இந்த வாழ்க்கையும் ஏன் தெய்வ சங்கல்பமாக இருக்கக்கூடாது? தனக்கும் ராமண்ணாவுக்கும் இடையில் பரஸ்பரம் சகஜமான காதல் ஏன் எற்படக்கூடாது? 15 - 16 வயதான குமுதாவுக்கு இது விடைகாண முடியாத பிரச்சினையாக இருந்தது. ஆனால் உள்ளத்தைக் கலக்கும் பிரச்சினையாக இருந்தது. காலம் செல்லச்செல்ல தம்மிருவரிடையே அத்தகைய காதல் ஸ்திரப்பட்டிருந்தது என்கிற ஆசை நம்பிக்கையாயிற்று, நம்பிக்கையினால் ஆசை மேலும் சுடர்விட்டது. குமுதாவின் உடல்

நாளுக்கு நாள் வாடத்தொடங்கிற்று. அவள் முகத்தில் எப்போதும் அலட்சியமான கவலையின் களை காணப்பட்டது.

"பாவம், என்னோடு உட்கார்ந்து உட்கார்ந்து இந்தப் பெண்ணுக்குப் போதும் போதும் என்றாகியிருக்கும். மூஞ்சியில் களையே போய்விட்டது. என்றைக்காவது ஒரு தடவையாவது, வெளியே அழைத்துக்கோண்டுபோய்விட்டு வாருங்களேன்" என்று சரளக்கா ராமண்ணாவிடம் சொன்னபோது, குமுதா நாணத்தால் தலையைக் கவிழ்த்துக்கொண்டாள். கீழே உட்கார்ந்து விட்டாள். ராமண்ணா அதற்குப் பதில் சொல்வதற்கு எந்த விதமான ஆவலையும் காட்டாததைக் கண்டு, தரையில் உட்கார்ந்தவள் நிலத்தின் உள்ளேயே இறங்குவதைப் போல உணர்ந்தாள். கடைசியாக, "பார்க்கலாம்" என்று சொன்னான் ராமண்ணா.

முதல்முறை ராமண்ணாவோடுகூட வெளியில் உலாவச் சென்றுவிட்டு வந்ததை மறக்கமுடியாது. அதற்காகத்தான் எவ்வளவு உற்சாகத்தோடு இருந்தாள்! ஆனால் வீட்டைவிட்டுப் புறப்பட்டதிலிருந்து திரும்பி வீடு வந்து சேரும் வரையில், தான் உதட்டை அசைக்கவேயில்லை. "சரளா, இந்தப் பெண் ஊமையா அல்லது செவிடா? உனக்குத் தெரிந்திருக்க வேணுமே?" என்று ராமண்ணா சொன்னபோது மட்டும்தான் அங்கிருந்து நழுவிச் சென்று, தன் அறையில் உட்கார்ந்து கொண்டதும், உட்கார்ந் ததுமே அடக்கமுடியாமல் விம்மிவிம்மி அழுதது பெரிய கதை. "அவளுக்கு அலுப்பு போகட்டும் என்று வெளியே அழைத்துக் கொண்டுபோகச் சொன்னால், அந்தப் பெண்ணை இப்படியா அழவைப்பது? நன்றாயிருக்கிறது உங்கள் காரியம்!" என்று சரளக்கா கோபித்துக்கொண்டபோது வருத்தப்பட்ட ராமண்ணா தன் அறைக்கு வந்தான். தன் முகத்தைப் பார்த்ததும், "அடடே, நிஜமாகவே அழறியா?" என்று கேட்டான். தன்னைச் சமாதானப்படுத்துவதற்காக முதுகைத் தடவிக்கொடுத்தான். எந்தத் துக்கத்தின் சுமையையும் சுமப்பேன் என்று என் முதுகு புளகித்தது. ஆனால் கண்களிலிருந்து நீர் முத்துக்கள் மட்டும் சொட்டிக்கொன்டிருந்தன. அப்போது ராமண்ணா, "கீழே போகலாம் வா, கண்ணைத் துடைத்துக் கொள்" என்று கூறிக் கண்ணீரைத் துடைப்பதற்காகத் தான் - குமுதாவின் - புடவைத் தலைப்பை எடுக்கக் கை நீட்டியபோது, தான் வெட்கத்துடன் அகன்றபோது அவன் கை மறுபடியும் பட்டது - இந்த முறை தன் மார்பகத்தின் மீது! அப்பொழுது அவள் கால்களில் சக்தியே

இல்லாமற் போய்விட்டது போலிருந்தது. கடைசியில் என்னவா யிற்றோ? மூர்ச்சை அடைந்தோமோ, அடைவதுபோல ஆயிற்றோ? தெரியவில்லை. விழிப்புற்றபோது ராமண்ணா தன்னைக் கட்டிலின் மீது உட்கார வைத்து, தானும் அருகில் உட்கார்ந்து கொண்டு, கையில் தண்ணீர்ப் பாத்திரத்தை வைத்துக் கொண்டிருந்தான்.

பாவம் சரளக்காவின் தவறு என்ன? குமுதாவின் உடல்நிலை சரியாக இல்லை என்கிற ஒரு காரணத்திற்காக, அவள் குமுதாவை ராமண்ணாவோடு கூட வெளியே போய்விட்டுவரவும், சினிமா பார்க்கவும், புத்தகங்கள் படிக்கவும் ஊக்கமூட்டினாள். "நான் ஒருத்தி படுக்கையில் கிடக்கிறேன் என்பதற்காக நீ ஏன் வீட்டு மூலையில் உட்கார்ந்துகொண்டு முகம் வெளிறிப் போகவேண்டும்? ஒரு மணி நேரம் இப்படி உலவிவிட்டு வந்தால் போச்சு. நான் ஒன்றும் இப்போதைக்கு சாகத் தயராக இல்லை." என்று சரளக்கா அடிக்கடி சொல்வாள். எப்படியோ குமுதாவுக்கு ராமண்ணாவின் சகவாசம் கிடைத்தது. ஆனால் அதன் லாபம் மட்டும் கிடைக்கவில்லை. இளவயதினளான குமுதாவுக்கு ஏதோ ஒரு வேதனை இருந்தது. முதலிலெல்லாம் ராமண்ணா அருகில் இல்லாமல் இருந்தால் ஏற்பட்டுக் கொண்டிருந்த கலக்கம், இப்போது ராமண்ணா அருகில் இருப்பதனாலேயே அதிகமாக எற்படத் தொடங்கியது. சில சமயங்களில் சட்டென்று எழுந்து சென்று, அவனுடைய இரண்டு கன்னங்களையும் பிடித்துக் கொள்ளவேண்டும் என்று தோன்றும்; சில சமயங்களில் தாறுமாறாக வளர்ந்திருக்கும் அவனது தலைமயிரைக் கோதிவிட வேண்டும் என்று தோன்றும்; எவ்வளவோ சமயங்களில் எழுதிக் கொண்டிருக்கும் அவன் கையைப் பிடித்துத் தூக்கி அந்தக் கையினால் தன் கன்னத்தில் பலமாக அடி வாங்கிக் கொள்ளவேண்டும் என்று தோன்றும்; இப்படியெல்லாம் தோன்றும்போது, மிகுந்த வேதனையுடன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வாள். சில வேளைகளில் அத்தகைய முயற்சிகளால் அவளுக்கு ஆறாத் துயரம் பொங்கும்.

ஒரு நாள் தானும் ராமண்ணாவும் சரளக்காவுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தோம். சிறிது நேரத்திற்குப் பிறகு சரளக்கா தூங்கிவிட்டாள். அப்போது ராமண்ணா ரகசியம் பேசுகிற குரலில், "சத்தம் போடாமல் நம்ம அறைக்குப் போகலாம், வா" என்றான். சரளக்காவின் தூக்கம் கலையக்கூடாது என்பதற்காகத்

தான் அவன் அப்படி ரகசியக் குரலில் பேசினான் என்றாலும், அதைக்கேட்டு அன்று தன் உடல் 'ஜூம்' என்றாகிவிட்டது. எழுந்து, அவ்வாறே அவன் பின்னால் நடந்தாள். தன் நினைவே இல்லாமல் தானும் ராமண்ணாவின் அறைக்கே போய்விட்டாள்!

ராமண்ணாவுக்கு ஆச்சரியமாக இருந்திருக்கவேண்டும்.

"படிப்பதற்கு ஏதாவது புத்தகம் வேணுமா?" என்று கேட்டான்.

"ஹும்" என்று தான் பதிலளித்தாள்

"எது வேணுமோ, பார்த்து எடுத்துக் கொள்" என்றான்.

புத்தக அலமாரியைத் திறந்து குமுதா பார்க்கத் தொடங்கினாள். பார்ப்பது வைத்துவிடுவது, மறுபடியும் எடுப்பது, வைப்பது - குமுதாவால் எதையுமே தீர்மானம் பண்ண முடியாமல் போய்விட்டது

"ஏன் ஒன்றும் கிடைக்கவில்லையா?" என்று கேட்டான் ராமண்ணா.

"எது? என்ன?" பைத்தியக்காரியைப் போலக் குமுதா பேசினாள்.

ராமண்ணா சிரித்தான். "அப்படியானால் நானே பார்த்து எடுத்துக் கொடுக்கிறேன்" என்று ராமண்ணா அலமாரியின் அருகில் வந்தான். அலமாரியின் இரண்டு கதவுகளுக்கு இடையில் நின்றுகொண்டிருந்த தான், ராமண்ணாவுக்கு இடம் கொடுப்பதற்காக நகரவேண்டுமே? அதற்குள்ளாக அவன் அருகில் வந்துவிட்டதால் அவள் கால்களில் வலு குன்றினாற்போல ஆய்விட்டது. பக்கவாட்டில் நகர்ந்து கொள்ளமுடியவில்லை. பின்னால் திரும்பிப் பார்க்கவும் முடியவில்லை. ஆனாலும் ராமண்ணாவின் உஷ்ணமான மூச்சு அவள் புஜங்களின் மீது படுவதையும், அவன் தன் பின்னாலேயே நிற்பதையும் அவள் உணர்ந்தாள். மிகவும் அருகில் இருக்கிறானோ, கொஞ்சம் பக்கவாட்டில் நிற்கின்றானோ? எதிரே திறந்த கண்களுக்கு ஒன்றும் புலப்படவில்லை. பின்புறம் உஷ்ணமான மூச்சு தன் தோள்களை - அல்ல இதயத்தை - சுட்டுக்கொண்டிருக்கிறது. அவளால் பொருக்கமுடியவில்லை. மூச்சடைப்பது போல இருந்தது. நீரில் மூழ்கியவன் மேலே வந்து சுவாசிப்பதற்காகப் பரபரப்பதுபோல, தானும் தன் முகத்தைப் புத்தகங்களிலிருந்து திருப்பினாள்.

"இது வேணுமா?" என்றான் ராமண்ணா.

வாயைத் திறந்தாலும் தன் நாக்கிலிருந்து யாதொரு சப்தமும் வரவில்லை. ராமண்ணாவையே வெறித்துப் பார்த்தபடி நின்று

விட்டாள்! ராமண்ணா திடுக்கிட்டானோ, பயப்பட்டானோ! அவனது முகபாவமும் மாறிவிட்டது. அது ஆச்சரியமுமல்ல, பயமுமல்ல என்று குமுதாவுக்குத் தெரிவதற்குத் தாமதமாக வில்லை. ஏனென்றால் அதற்குள்ளாக ராமண்ணாவின் கைகள் தன்னைச் சுற்றி இறுகின, முகம் தன் முகத்தை முத்தமிட்டுக் கொண்டிருந்தது. இதுவரையில் மூச்சடைப்பது போல இருந்த தனக்கு, இப்போது மூச்சு முட்டக்கூடிய காரணம் இருந்தும், குமுதாவுக்குப் புத்துயிர் பெற்றது போல இருந்தது.

5

எழுதுகிறாற்போலுமில்லை, படுக்கிறாற் போலுமில்லை. அவ்வளவேன்? அவையிரண்டையும் நினைக்கிறாற்போலவே இல்லை. என்றோ- என்றோ அதெல்லாம் பழைய கதையாகிவிட்டாற்போல இருக்கிறது. உண்மையில் பார்க்கப் போனால், மூன்றே வருடங்களுக்கு முன்பு ஏற்பட்ட அநுபவம். அப்பொழுதெல்லாம் எழுதுவதென்றால் வெறும் மனத்தின் கற்பனை மட்டுமே விஷயமாக இருக்கவில்லை. ஒரு புதுப் பயிற்சியே ஆனமாதிரி இருந்தது. எவ்வளவோ முறை, பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதும் போது (ஏனென்றால் அதற்கும் உள்ளின் கற்பனைக்கும் சம்பந்தம் கிடையாது) அப்படிப்பட்டவைகளை எழுதுவதற்குக் கூட அவனுக்கு உற்சாகம் இருந்தது. ஏனென்று சொல்லவேண்டுமா? எழுதி எழுதி உடலும் மூளையும் களைத்துச் சோர்வுற்ற போது, சரளாவின் அருகில் சென்று படுக்கப்போகும் சுகத்தின் ஆசை இருந்தது. தின்பண்டங் களின் ஆசை காட்டிச் சிறுவர்களிடம் வேலை வாங்குவதுபோல, இந்த ஆசைக்காக அவன் வேண்டியதை எழுத முடிந்தது. எழுதி முடித்து, நாற்காலியிலிருந்து எழுந்து, இரவும் களைப்பும் ஏறியிருப்பதனால் சிறிது தத்தளித்து, ஒரே மூச்சாக எழுத்து வேலையில் ஈடுபட்டதற்காக சூன்ய மனத்தினனாகி, பித்தனைப் போல ஒரு கையை மெதுவாகப் படுக்கையில் நீட்ட வேண்டு மென்று நினைத்தபோது (பாவம்! சரளா எப்பொழுதோ தூங்கிவிட்டிருக்கவேண்டும், இல்லையா?)

"எழுதி முடிச்சாச்சா?" என்று அரைத் தூக்கத்தின் மதுரமான குரலில் சரளா கேட்பாள். அப்பொழுது அவனுடைய களைப்

பெல்லாம் பறந்து விட்டாற்போல இருக்கும். கண்களைக் கவிந்திருந்த தூக்கம் நழுவிப்போவது போன்ற சுகம் தோன்றும்.

"எழுதி முடிச்சாச்சா?" தனக்கு இடம் விடுவதற்காக, படுத்தபடியே கொஞ்சம் நகர்ந்து கொண்டு, சரளா மறுபடியும் கேட்பாள்.

"ஹீம்" என்று தான் குரலிழுப்பான்.

"போதை ரொம்பவும் ஏறியிருக்கா?"

"ஆங்?"

"நான் கேட்கறது புரியல்லையா? இன்னும் இந்த உலகத்திற்கே திரும்பி வரவில்லையா?"

"புரிந்தது, முடிஞ்சது என்பதற்காகத்தான் ஹீம் என்று சொன்னேனே?" என்று தானும் காலை நீட்டியபடி கூறுவான்.

"கதை நல்ல சூடு பிடித்திருக்கிறதா?"

"கதை இல்லை, பத்திரிகைக்குக் கட்டுரை"

"அய்யே, அதை எழுதுவதற்குக்கூட இப்படி நடுஜாமம் வரையில் உங்களுக்குப் போதை ஏறித்தா?"

"அப்படியென்றால்? அதுதான் உண்மையான எழுத்து. உடனே பணம் கிடைக்கும்."

"ஹீம் பணம் யாருக்கு வேண்டியிருக்கிறது?"

"யாருக்குன்னா? எனக்கு"

"அம்மாடி! இந்த புத்தி என்னிக்கிருந்து வந்தது?"

"எனக்கு என்றால், என் பெண்டாட்டி பிள்ளைகளுக்கு தெரிஞ்சதா?"

"அவர்களுக்கு வேண்டுமென்று உங்களுக்கு யார் சொன்னது?"

"யாராவது சொல்லணுமா என்ன? பெண்டாட்டி பிள்ளை களுக்கு சுகம் கிடைக்காவிட்டால், ஒருவன் எதற்காக எழுத வேண்டும். உண்டா இல்லையா, என்ன சொல்கிறாய்?"

"ஐய, அப்படி எழுதுவது உங்கள் கையிலா இருக்கிறது? அதைக் கடவுளே எழுதியனுப்பியிருப்பார் – பிறக்கும்போதே, நெற்றியில்."

"அப்படியென்றால் இப்போது நீ சுகமாக இருக்கிறாய் என்று சொல் ஹீம்?"

"ஏன் இருக்கக்கூடாது? எழுதுவதனால் உங்களுக்கு சுகம் கிடைக்கிறது. உங்கள் சுகம் எங்களின் சுகமும்கூட"

"பலே! ஆமா-கிருஷ்ணன் அர்ஜீனனுக்கு கீதையைச் சொல்லும் போது, நீ ஏதாவது தேருக்குக் கீழே ஒளிந்து கொண்டிருந்தாயா என்ன? ஆங்? ஹஹ்ஹ.."

இந்த பேச்சு வரும்போது சரளா கொட்டாவி விடுவாள்.

"போதும் தூக்கம் வருகிறது. படுங்க இனி" என்று கூறி அவள் புரண்டு கொடுக்கும்போதே, ராமண்ணா குறட்டைவிடத் தொடங்கி விடுவான். "அய்யே, ராத்திரி நான் பேசிக் கொண்டே இருக்கிறேன். இவர் தூங்கியாயிற்று. எப்பவோ, என்னவோ, தூங்கிக் கொண்டிருப்பவர்களின் தூக்கத்தைக் கெடுப்பது, அப்புறம் தான் மட்டும் நான்றாகப் படுத்துத் தூங்குவது" என்று மறுநாள் சரளா பொய்கோபம் காட்டிப் பேசும்போதுதான் ராமண்ணாவுக்கு தன் சுகத்தின் அருமை புரியும். எவ்வளவோ முறை சரளா தன்னைக் கேலி செய்யும்போது, தானும் அவளைச் சீண்டுவான். "உனக்குப் பழக்கம் பண்ணுகிறேன்" என்பான். அதற்கு சரளா "என்ன பழக்கம்?" என்று கேட்டால், "நாளைக்குக் குழந்தைகள் பிறந்தால்? இப்பொழுதிலிருந்தே தூக்கம் இல்லாமல்..." இதுபோன்ற பேச்சு சாதாரணமாக முடிவுறாது. சரளா சட்டென்று வந்து பொய்க் கோபத்துடன், தன் வாயை அவள் கையால் பலமாகப் பொத்துவாள். வாயை மூடினால் என்ன? பேச்சைவிடக் காரியம்தான் முக்கியம் என்பவனைப் போல, ராமண்ணா இரண்டு கைகளாலும் அவளை இழுத்து அணைத்துக் கொள்வான்.

ஒரு முறை சரளாவே, இலக்கியத்தில் தனக்கேற்பட்டிருந்த ஒரு சங்கடத்தை நிவர்த்தி செய்தாள். அப்போதுதான் ஒரு நாடகம் எழுதிக் கொண்டிருந்தான். ஊஹூம் - நாடகமல்ல - அந்தத் தடவை - என்ன அது? "ஆதிமாயை" என்கிற நாவலை எழுதிக் கொண்டிருந்தான்; மூன்று பேர் அண்ணன் தம்பிகள். பக்கத்து வீட்டுப் பெண்; எல்லோரும் ஒன்றாகவே வளர்ந்தவர்கள். பிறகு கதை, நவீன துரௌபதியின் கதையாக உருவாகிறது. சமூகத்தில் பெரும் வாதப்பிரதிவாதங்களை எழுப்பப் போகிறது என்று சிறிது அதைரியத்துடனும், சிறிது கர்வத்துடனும் சரளாவிடம் கதையைச் சொன்னான்.

"அப்படின்னா, எழுதவாவது ஆரம்பியுங்கள் பார்க்கலாம்" என்றாள்.

"பார்க்கிறதென்ன? என்னுடைய life ஐ insure செய்துவிட்டுத் தான் கதையைப் பிரசுரிக்க வேண்டும்" என்றுதான் விளையாட்டாகச் சொன்னான்.

"அப்படி என்ன இருக்கிறது அதில்?"

"அப்படி என்ன என்றால்? அவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் யாருடைய வாரிசு?"

"ஆங்? அய்யே! விடுங்க! நீங்கள் என்ன கதை எழுதப் போகிறீர்களா, க்ளப்பில் அரட்டை அடிக்கப் போகிறீர்களா?" என்றாள்.

அந்தப் பேச்சு அத்துடன் முடிந்து, நாவல் எழுத ஆரம்பித்தாயிற்று. ராமண்ணா தான் முதலில் நினைத்திருந்த படியே, கதையை வளர்த்துக் கொண்டு போனான். ஆனால் கடைசி கடைசியாக அவனுக்குச் சமாதானம் ஏற்படவில்லை. மூன்று பேர்களின் மீதும் காதல் கொண்டுள்ள பெண்ணின் கதி நமது சமூகத்தில் என்னவாகும்? ஒரு சமயம் கடைசியில் அவள் தற்கொலை செய்துகொண்டால், துரௌபதியோடு ஒப்பிட்டது அர்த்தமில்லாமற் போகும். தற்கொலை செய்து கொள்ளாமல் பிழைத்திருந்தால், சமுதாயத்தில் கௌரவமான ஸ்தானம் கிடைக்காது. இவ்வாறு கதையை எப்படி முடிப்பது என்பது தெரியாமல் ராமண்ணா திகைத்தான். கடைசிப் பக்கங்களை எழுத முற்பட்டபோது எந்தவிதமான எண்ணங்களும் தோன்றவில்லை. மூன்று நான்கு மணிநேரம் தலையைச் சொரிந்து கொண்டு, இரவு இரண்டு மணி சுமாருக்கு வேறுவழி இல்லாமல், சலிப்புடன் படுக்க ஆயத்தமானான்.

"முடிஞ்சதா எழுதி?"

எப்பொழுதும் மனத்திற்குச் சமாதானத்தை உண்டாக்கும் சாளாவின் இந்தக் கேள்வி, அன்று அவனுக்குக் கோபத்தை உண்டாக்கியது.

"ஊம். முடியப் போகிறது! இதையும் சமையல்னு நினைத்துக் கொண்டாயா, இத்தனை நேரம் வேக வைத்தால் முடிந்தது என்று சொல்வதற்கு?"

"அய்யே, எனக்கென்ன தெரியும்? கடைசி கொஞ்சம்தான் பாக்கி இருக்கிறது, அதை முடிக்கப் போகிறேன் என்று சொன்னீர்கள், அதற்காகத்தான் கேட்டேன்" என்றாள் சாளா.

"கடைசி கொஞ்சம் என்றால் என்ன? எல்லா சாமர்த்தியத்தையும் அந்தக் கடைசிப் பக்கங்களில்தான் காட்டவேண்டும்.

அதற்கு ரொம்பவும் ஆலோசித்து எழுதவேண்டும். ஹீம் நேரம் ரொம்ப ஆகிவிட்டது. இனி படுப்போம்."

சரளா கொட்டாவி விட்டபடியே பேசினாள், "எனக்கும் கண்களில் தூக்கம்தான். ஆனாலும் உங்கள் கதையில் வருகிற பெண் கடைசியில் என்ன செய்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல். நீங்களும் முடித்துவிட்டீர் களென்று நினைத்தேன். கேட்டேன்."

ராமண்ணாவால் அதற்கு மேலும் பொறுக்க முடியவில்லை. "அதைக் கேட்டால்தான் உனக்குத் தூக்கம் வருமா? அப்படி யானால் கேள். கடைசியில் அவள் விஷம் தின்று செத்துப் போகிறாள்" என்றான்.

"ஆங்? ஐயே, ஒரு நல்ல ஜீவன் அநியாயமாய்ப் போய்விட்டதே!"

ராமண்ணாவுக்கு ஆச்சரியம். சரளாவின் குரலிலிருந்து அழுகை அவள் கண்களுக்கு வெகுதூரத்திலில்லை என்று அவனுக்குத் தோன்றியது.

"கதையில் வரும் ஒரு பெண். இருந்தால் என்ன? போனால் என்ன?" என்று பேச்சை முடிக்கும் வகையில் சிரித்தான்.

"கதையில் வரும் பெண்ணாக இருந்தால் என்ன? சும்மாவாவது ஏன் சாகவேண்டும்? ஒரு நோயில்லை, நொடியில்லை – "

ராமண்ணா கொட்டாவி விட்டான். பிறகு சிறிது அலுப்புடன்கூடிய குரலிலேயே சொன்னான், "பாவம் செய்தாள், அதனால் செத்தாள்" என்றான்.

"பாவம் செய்தாளா? எனக்கென்ன தெரியும்? நீங்கள் எனக்குக் கதை சொல்லும்போது அவள் பாவம் செய்ததைச் சொல்லவில்லை."

ராமண்ணாவுக்குத் தூக்கம் போய்விட்டது. எழுந்து உட்கார்ந்தான். சிறிது எரிச்சலுடனேயே கேட்டான், "மூன்று பேரைக் காதலிப்பது பாவமில்லையா?"

"என்ன சொல்கிறீர்கள்? காதலுக்காகப் பிறந்த பெண், காதலித்தால் பாவமா?"

"அப்படியென்றால் என்ன? ஒருவனோடானால் கல்யாணம், ஒன்றுக்கு மேற்பட்டால் விபசாரம் இல்லையா?" மனைவியின் அறியாமைக்காக ராமண்ணா வெறுப்புக் கலந்த குரலில் பேசினான்.

"அப்படியானால் என்ன? விபசாரம் செய்யாமல் காதலிக்க முடியாது என்கிறீர்களா?"

"உனக்கென்ன தெரியப்போகிறது இதெல்லாம். விடு."

"புருஷர்களுக்குக் காதலும் ஒன்றே, விபசாரமும் ஒன்றே என்று தோன்றுவதானால், என்னைப் போன்ற பெண்களுக்கு அது எப்படித் தெரியும்?" என்றாள்.

ராமண்ணாவுக்கு கோபமும் வந்தது. தூக்கமும் வந்து கொண்டிருந்தது. பெரியதொரு கொட்டாவியின் மூலமாகத் தன் ஒத்துழையாமையைத் தெரியப்படுத்திவிட்டுப் பேசாமல் படுத்துக் கொண்டுவிட்டான்.

ஆனால், அன்று இரவு தூக்கம் வரவில்லை; காதல் வேறு, விபசாரம் வேறு என்கிற வார்த்தைகளில் ஏதோ பெரிய தத்துவம் அடங்கியிருப்பது போல அவனுக்குத் தோன்றத் தொடங்கியது. தன்னுடைய கதையில் அந்தத் தத்துவத்தை நுழைத்துப் பார்க்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. விடியும் வரையில் யோசித்துக் கொண்டே இருந்தான். எழுந்தவுடன் டீ சாப்பிட்டு விட்டு, சரளாவுடன் பேசாமல் தன் அறைக்குச் சென்று எழுத ஆரம்பித்தான், கொஞ்சம் கொஞ்சமாகக் கதையையே மாற்றிவிட்டான். ஆனால் எட்டு நாட்கள் வரையில் சரளாவோடு அதிகம் பேசவில்லை. அவளும் சிறிது மனம் நொந்து கொண்டாற்போல இருந்தது. ஒருவாறாக மாற்றியமைத்த நாவல் கடைசியில் முடிவுற்றது. முடிந்ததும் சரளாவிடம் வந்தான்.

"இந்த நாவல் முடிந்துவிட்டது பார், சரளா" என்றான்.

அவள் பேசவில்லை.

"எப்படி முடிகிறதென்று பார்க்கவேண்டுமென்கிற ஆவல் இருப்பதாகச் சொன்னாயே என்று, அதை முடித்தவுடனே சொல்ல வந்தால் -" என்று தவறு செய்யாதபோது தண்டிக்கப் பட்ட சிறுவனைப் போலக் குரலை இழுத்தான்.

"எனக்கென்ன வந்தது? காலேஜ் வாசற்படியை மிதிக்காத பெண் நான். இப்படிப்பட்ட பெரிய புத்தகங்களின் விஷயமெல்லாம் எனக்கு என்ன விளங்கப் போகிறது?"

"அப்படியென்றால்? நான் என்ன நாவல் பூராவையும் உனக்குப் படித்துக் காட்டுவதற்காக வந்திருக்கிறேன் என்று நினைத்துக் கொண்டாயா?"

"இல்லாவிட்டால் எதற்காக என்னிடம் சொல்ல வந்தீர்கள்?"

"நாவல் முடிந்திருக்கிறது. அது உனக்குத் தெரிவதே இல்லை-" கேலியாகச் சிரித்தபடியே, "நானும் அதை உனக்குப் படித்துக்

காட்டப் போவதில்லை. முன்னுரை எழுதியிருக்கிறேன், அதைக் கேள் என்றேன்."

"முன்னுரை? அதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?"

"அதைத்தான் கேள் என்றேன்" என்று படிக்க ஆரம்பித்தான். வழக்கமான நன்றியுரைகளுக்குப் பிறகு முன்னுரையின் முடிவில் இவ்வாறு எழுதியிருந்தான்: "இந்தக் கதை பிரசுரமாகிற வடிவத்தின் பெருமையெல்லாம் இன்னொருவருக்குரியது. முதலில் வேறுவிதமாக எழுதி, முடிக்க முடியாமற் போனபோது அந்த இன்னொருவர் என்னிடம் இந்த விதத்தில் மாற்றியமைத்து எழுதும்படி சொன்னார். அவ்வாறு எழுதியிருக்கிறேன். எனக்கென்னவோ திருப்தியாக இருக்கிறது. ஆகவே கடைசியாக அவளுக்கு- அதாவது எனது சுகதுக்கங்களில் பங்கு கொள்பவளும், எனது குற்றங்குறைகளைப் பொறுமையுடன் சரிப்படுத்தி, என்னைச் சரியான பாதையில் நடத்துவதற்காகவே என் கை பிடித்தாளோ என்று நினைக்கும்படியான எனது இல்லக்கிழத்தியாகிய -"

நன்றியைத் தெரிவித்துக் கொண்டு எழுதியிருந்த வார்த்தைகளைப் படிக்க, சரளா அவகாசம் கொடுக்கவே இல்லை. "எங்கே அதைக் கொடுங்கள் இப்படி. இதென்ன பைத்தியக்காரத்தனம்!" என்று அந்தக் காகிதத்தைப் பிடுங்க முயற்சித்த போது, அந்தக் கையையே பற்றிக் கொண்ட ராமண்ணா அவளை இழுத்து அணைத்துக் கொண்டான்.

இந்தப் பழைய நினைவுகளெல்லாம் ஒன்றையொன்று முந்திக் கொண்டு, அவன் முன்னே காட்சியளித்தன. ஏனோ? ராமண்ணா சரளாவின் புகைப்படத்தை உற்றுப் பார்க்கிறான், அவளிடமிருந்து பதில் கிடைக்குமோ என்கிறாற்போல. அப்படி உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஏதோ எண்ணம் தோன்றி, புன்முறுவலால் அவன் முகம் மெதுவாக மலர்கிறது. புகைப் படத்தைப் பார்க்கும் போது, சரளாவுக்குப் புகைப்படம் எடுத்துக் கொள்வதென்றால் பிராண சங்கடம் என்கிற நினைவு வருகிறது. எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருந்தாலும், எதிரே காமிராவைக் கண்டால் பயத்தினால் சரளாவின் முகபாவம் விகாரமாகிவிடும். அந்த பயத்தைக் காண்பித்துக் கொள்ளக்கூடாது என்பதற்காகப் பிடிவாதமாக முகத்தில் கம்பீரக் களையைக் கொண்டுவர முயற்சிப்பாள். இயற்கையாகத் தோன்றிய பயக்களை, முயற்சித்தும் சாத்தியமாகாத போலியான

தைரியக்களை இவையிரண்டின கலப்பினால், வேறொரு களையே அவள் முகத்தில் தோன்றும். அதை இப்பொழுது படத்தில் பார்க்கும்போது ராமண்ணாவுக்குச் சிரிப்பு வராமல் இருக்கவில்லை. அந்த முகக்களையினால் சரளா ஒரு குழந்தையைப் போல அப்பாவியாகக் காணப்படுவாள். ஆனாலும் சரளாவின் முகத்தின் உண்மையான ஒளி, ராமண்ணாவின் நினைவுக்கு வராமற் போகவில்லை. அந்தப் பிரகாசத்தினால் அவள்-சர்வாங்க சுந்தரியல்லாவிட்டாலும்-அழகாகக் காணப்படுவாள். பேசும் போது உதடுகளைச் சிறிதே முன்னுக்கு நீட்டும் வழக்கம் இருந்தது. "எப்போதும் உலை முன்னால் உட்கார்ந்து கொண்டு, ஊதி ஊதி உன் உதடுகளுக்கு அந்த வடிவமே நிரந்தரமாக அமைந்துவிட்டது போலிருக்கிறது!" என்று ராமண்ணா அவளைப் பல முறைகள் கேலி செய்திருக்கிறான். அப்படிக் கேலி செய்தாலும் கூட, அவளுடைய அந்த அழகிய முகபாவம் - பேசும் பொழுது - இன்னும் அதிக வசீகரமாக இருப்பதுபோலத் தோன்றும். இரவு படுத்துக் கொண்டு பேசும்பொழுதுகூட இருட்டாக இருந்த போதிலும், அந்த முகச்சித்திரமே அவன் கண்களினெதிரே நிற்கும். அதனாலே கூட அவள் பேச்சுக்களினால் அவனுக்கு மனச் சமாதானம் கிடைத்து வந்ததோ என்னவோ! ராமண்ணா நெட்டுயிர்த்தான். எவ்வளவு நினைவுகளை வரவழைத்துக் கொள்வது? இல்லை, அவைகளைத் தான் அழைக்கவில்லை, அவைகளாகவே வருகின்றன. எந்தப் பேச்செடுத்தாலும் அவள் நினைவைத் தவிர்க்க முடியாது. அவளது பேச்சு, கோபம், முகபாவம், சிரிப்பு - இவையெல்லாம் - ராமண்ணா யோசித்தான். அவன் உள்ளம் லேசாகி விட்டாற்போலிருந்தது. ஏதோ ஓர் எண்ணம் தோன்றியது, இல்லை - தோன்றிக் கொண்டிருக்கிறது. சீக்கிரம் தோன்றினாலாவது எழுதுவதற்காவது மனம் வரும், அலுப்பு நீங்கும் என்று யோசித்து, அந்த எண்ணத்தைத் தேடி வெளியே கொண்டுவருவது போல, ஒரு நிமிடம் கண்களை மூடிக்கொண்டான். உடனே திறந்தான். எண்ணம் பளிச்சிட்டது. ஆச்சரியத்தை விளைவிக்கும் எண்ணம். சரளாவின் நினைவுகள் என்றால் அவளது பேச்சு, அவளது கோபம், அவளது முகபாவம், அவளுடைய சிரிப்பு - இவைகளின் நினைவுகளே. ஆறு வருடங்கள் அவளோடு இனிமையான தாம்பத்ய வாழ்வை நடத்தியிருந்த போதிலும், ஒருமுறைகூட அந்த நாட்களின் நினைவு வரவில்லையே? ஆனாலும் வந்த நினைவுகளினால் தனக்குச் சமாதானம்தான் உண்டாகிறது. ஆனால் தனக்குக் குமுதாவின்

நினைவு வந்தால் வேறு சந்தர்ப்பங்களின் நினைவே இல்லை. சரளா தனக்கு மன உற்சாகத்தை ஊட்டக்கூடிய பெண்ணானால், குமுதா தன் இன்ப சுகத்திற்குக் கருவியான பெண்ணாக இருக்கிறாளா? சே! இதென்ன எண்ணங்கள்! இது உண்மையாக இல்லாவிட்டால் - உண்மையாக இல்லாவிட்டால் என்பது வெறும் அர்த்தமில்லாத பேச்சு என்று உடனே ராமண்ணாவுக்குத் தோன்றியது. மூன்று வருடங்களாக நடந்துவரும் ஒரு விஷயத்தை உண்மையல்ல என்று கூறுவது பைத்தியக்காரத்தனமாகும். அது உண்மை. அப்படியானால் சரளாவுக்குத் தான் துரோகியா? சரளாவின் பேரில் தனக்குக் காதல் இருக்கவில்லையா? புகைப்படத்தைப் பார்த்தான். "காதல் வேறு, விபசாரம் வேறு" என்று சரளா சொன்னது போல இருந்தது. ஆம், அவள் உதடுகள் கூட உருண்டையாக முன்னுக்கு வந்தாற்போலத் தோன்றியது. "சரளா, என் கதைகளின் சிக்கல்களை விடுவிக்க வேண்டுமென்பதற்காக எனக்கு இந்தச் சமாதான வார்த்தையைச் சொல்லுகிறாயா?" என்று புகைப்படத்தைக் கேட்டு, பதிலை எதிர்பார்ப்பவன் போல அதையே உற்றுப்பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தான்.

## 6

உண்மையைச் சொல்வதென்றால், இன்று இரவு சினிமாவுக்குப் போகவேண்டுமென்றுதான் குமுதாவின் மனத்தில் இருந்தது. இரண்டு ந¬ட்களாகவே இந்த வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். இரண்டு நாட்களுக்கு முன்னரே போக வேண்டுமென்ற ஆசை தோன்றியது, வாய்விட்டு ராமண்ணாவிடம் சொல்லவும் சொல்லியிருந்தாள். ஆனால் அவன் "போகலாம்" என்று சொல்லாமல் "பார்க்கலாம்" என்று சொன்னான். மனம் சிறிது புண்பட்டிருந்தது. ஆனாலும் சரளக்கா இறந்து போய் இன்னும் மூன்று மாதங்கள்தான் ஆகின்றன, ராமண்ணாவுக்கும் கூச்சமாக இருக்கக்கூடும் என்று நினைத்து வற்புறுத்தவில்லை. இன்று மாலை சீக்கிரம் சமையல், சாப்பாடு முதலியவைகளை முடித்துக் கொண்டதும் அதே காரணத்தினால் தான். ஆனால் ராமண்ணாவின் வாயிலிருந்து அதைப் பற்றிய வார்த்தையே வரவில்லை. அப்படியானால் தானே கேட்க வேண்டுமா? தினமும் இப்படி வாய்விட்டுப் பேசுவது நல்லதா? ஆனால் மனம் கேட்கவில்லை. சுற்றி வளைத்து எதையெதையோ

பேசினாள். ராமண்ணா கவனிக்காதவனைப் போல நடித்தான். கடைசியாக அலுப்புடன் பெருமூச்சு விட்டாள். அப்பொழுது தான் ராமண்ணா, "சினிமாவுக்குப் போகலாமா?" என்று கேட்டான். ஆனால் அவன் கேட்ட முறை; அவன் பேச்சின் குரல், முகபாவம், சலிப்புடன் கூடிய பெருமூச்சு இவைகளையெல்லாம் கண்டு தனக்குப் பொறுக்கவில்லை. தானும் உற்சாகத்தைக் காட்டிக் கொள்ளாமலும், நிராசைக்கு இடமளிக்காமலும் "ஹீம்" என்று முனகினாள். அப்பொழுது ராமண்ணா, "அப்படியானால் புறப்படு" என்று மட்டும் சொல்லியிருந்தால் தான் எல்லா வற்றையும் முழுங்கிக் கொண்டு குதித்தெழுந்திருப்பாள். ஆனால் நடந்ததென்ன? "சினிமாவுக்கு வேண்டாம் என்றால்-எங்கேயாவது வெளியே போகலாமா?" என்று கேட்டான்! தன்னுடைய தொந்தரவிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக மட்டுமே, ராமண்ணா வீட்டை விட்டுப் புறப்படத் தயாராக இருக்கிறான் என்று அப்பொழுது தனக்குத் தெளிவாகத் தெரிந்தது. பிறகு தனக்கும் கோபம் - நிராசை - அவமானம் எல்லாம் ஏற்பட்டது சிறிது வெறுப்பும் தோன்றியது. வாய் கொடுத்தால் இவையெல்லாம் வெளிப்பட்டுவிடுமோ என்றஞ்சி, தான் பதிலே சொல்லவில்லை. பிறகு ராமண்ணா ஏதேதோ பேசினான். ஆனால் அந்தப் பேச்சின் பக்கம் தான் கவனமே செலுத்தவில்லை. கடைசியில் பொறுக்க முடியாமல் தன் அபிப்ராயத்தைக் கொட்டாவியின் மூலமாகத் தெரிவித்து விட்டாள்! அவனுக்கும் தெரியட்டும், எந்த விளையாட்டானாலும் இருவராலும் அதை விளையாட முடியுமென்பதை - என்று நினைத்துக் கொண்டாள். கடைசியில் ராமண்ணாவும் எழுதுவதாகச் சாக்கு சொல்லி நழுவிக் கொண்டான். குமுதா ஒரு நிமிடம் மனத்தை உறுதிப்படுத்திக் கொள்ளவோ என்னவோ, கண்களை மூடிக் கொண்டாள். இதுவரையில் ராமண்ணாவின் அருகாமை, சகவாசம் இவை களினாலேயே மனவளர்ச்சி பெற்ற குமுதாவுக்கு - மனத்தில் என்ன எண்ணங்கள் இருந்தாலும் - எதிரே ராமண்ணா இல்லாவிட்டால், வெயிலைக் காணாத செடி வாடிவிடுவதைப்போல அவள் இதயமும் வாடிவிடும். ராமண்ணா தன் அறைக்குப் புறப்பட்ட துமே, அவனது உருவம் தன் கண்களிலிருந்து மறைந்துவிடும் என்று நினைத்ததுமே, பீதியடைந்த அவள் இதயம், அவன் பின்னாலேயே

ஓடியது; ஓடி, அவன் கால்களைப் பிடித்துக் கொண்டு, அவன் அங்கிருந்து மேலே நகராமல் செய்யவேண்டும், அவசியமானால் தன் தவற்றை (தான் செய்த தவறென்ன? - இருந்தாலும்) ஒத்துக்கொள்ள வேண்டும். அவனைச் சமாதானப்படுத்தி, மனத்தைச் சந்தோஷப்படுத்தி, சினிமாவுக்குப் போக வேண்டும், அங்கே இருட்டிலும் கண்ணை மூடியபடி, அவனது ஸ்பர்சசுகத்தை அநுபவித்தபடி தூங்கவேண்டும் என்று தோன்றியது. ஆனால் அது ஒரு கணம் மட்டும். மறுகணம் அந்த இதயத்தைப் பிடித்திழுத்தாள்; அறிவு கலகம் விளைவித்தது. அப்படிச் செய்வது ஆத்ம துரோகமாகும் என்று அறிவு வாதித்தது. பாவம்! சுக துக்கங்களின் இழுப்பில் சிக்குண்டு, பலவீனமாகிப் போயிருந்த இதயம் அறிவின் எதிரே தோற்க வேண்டியதாயிற்று. "அப்படி யாவது என்ன சினிமா வேண்டியிருக்கிறது?" என்று நினைத்துக் கொண்டாள் குமுதா.

இவையெல்லாம் ஒருமணி - அரை மணி நேரத்திற்கு முந்தைய போராட்டம். இப்போது குமுதாவின் இதயமும் அறிவும் சமநிலையில் இருந்தன. எனவே அவள் இப்போது அமைதியான மனத்துடன் யோசிக்கமுடியும். மனித ஜீவனின் உள் அறிவு எத்தகையது என்கிற அறிவு அவளுக்கு இருக்கவில்லை. ஆனால் அந்த உலகத்தின் ஒவ்வொரு அநுபவத்தையும் மட்டும், அந்த மட்டுக்கு அவள் தெரிந்துகொள்ளச் சக்தி உடையவளாயிருந்தாள். சில சமயம் இரண்டு பரஸ்பரம் விரோதமான அநுபவங்களைக் கண்டு ஆச்சரியப்படுவாள். இன்று தனக்குத் தோன்றியது, தான் நடந்துகொண்டது, இப்பொழுது எண்ணிப்பார்த்தால் மிகவும் ஆச்சரியமாகத் தோன்றியது குமுதாவிற்கு. "சினிமாவுக்குப் போகலாமா?" என்கிற ராமண்ணாவின் கேள்விக்கு ஒரு காலத்தில் என்ன பொருள் இருந்தது? அர்த்தமே இருக்கவில்லை என்று கூறலாம். எந்த வார்த்தைகளாக இருந்தாலும் சரி. எந்த வார்த்தையாக இருந்தாலும் சரி, ராமண்ணாவின் வாயிலிருந்து வந்தவை என்ற மாத்திரத்தில் தான் மெய் மறந்து போவாள். வார்த்தைகள் என்ன அவைகளின் உள்ள நோக்கம் என்ன, அவைகளைப் பற்றி பேசிய குரல் எத்தகையது, அந்தக் குரலோடு கூடிய முகபாவம் எத்தகையது-இது போன்ற எண்ணங்கள் தொலைவிலேயே நின்றுவிடும், தான் முழுவதும் கேட்கக்கூட

மாட்டாள். அந்தக் காலத்தில் "சினிமாவுக்கு வா" என்றால் எவ்வளவு உற்சாகமாகப் புறப்படுவாளோ அதே உற்சாகத்தோடு "உயிரைக் கொடு" என்று கேட்டாலும் சாகத் தயாராக இருந்தாள். காலக் கணக்கில பார்த்தால் இரண்டு அல்லது மூன்று வருடங்கள் இருக்கலாம்; ஆனால் மனநிலையின் கோணத்திலிருந்து பார்த்தால், என்னவோ ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முந்திய விஷயம் என்று தோன்றும்.

ஆயிரக்கணக்கான வருடங்கள் இருக்கட்டும், ஆயிரம் நாட்களுக்கு முந்தியது கூட இல்லை விஷயம். இன்னும் மூன்று வருடங்கள் முடியவில்லை என்றால், நாட்கள் ஆயிரம் என்கிற எண்ணிக்கையைத் தொடவில்லையே. தனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. ஒரு நாள் மாலை படுப்பதற்கு முன்னால், தான் ராமண்ணாவின் அறைக்குச் சென்றது. அவமாரியின் எதிரே நின்று புத்தகங்களைத் தேடியது. அப்பொழுது எப்படியோ, என்னவோ - ராமண்ணா தன்னைக் கட்டியணைத்து முத்தமிட்டது. பிறகு விழிப்புற்று, உடலெல்லாம் வியர்க்க, நாணத்தால் செயலற்று, அந்த அறையினின்று ஓடிப்போனது. ஆம் - அதே இரவு தன் அறைக்கு வந்ததும் பயம், சுகம் ஆகிய இரண்டு உணர்ச்சிகளின் இழுப்பில் சிக்கிக்கொண்டாள். அவளுக்கு அந்த விஷயம் தெரிந்ததோ இல்லையோ, - ஆனால் அணைத்து முத்தமிட்டதை நினைத்தபோது பயத்தால் அவள் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது; அந்த நினைவை அசைபோடும் போது மனம் சுகத்தால் மலரும். ஓடி வந்து படுக்கையின் மீது உட்கார்ந்தவள் அப்படியே சாய்ந்தாள். விளக்கைக்கூட அணைக்கவில்லை பயம் - ராமண்ணா வந்தால் என்ன செய்வது என்று. கூடவே மற்றொரு பயம், விளக்கு இல்லாததைக் கண்டு தான் படுத்து விட்டிருக்கவேண்டும் என்று நினைத்து, ராமண்ணா வராமல் இருந்துவிட்டால் - என்று. வந்தால் என்ன-என்று பயம்; சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் வருவதற்கான அறிகுறிகளையே காணோம் என்று நிராசை. மெதுவாக அடியெடுத்து வைத்து வாசல் வரை வந்தாள். வெளியே தலை நீட்டிப் பார்க்கும் தைரியம் மட்டும் வரவில்லை. திரும்பிப் படுக்கையை நோக்கி நடந்தாள். அப்படி நடக்கும் போது ஒரு முறை திரும்பிப் பார்த்தாள், கதவு திறந்த சப்தம் கேட்டதோ என்று நினைத்து. மனமும் உடலும் ஊஞ்சலைப் போல ஊசலாடிக் களைத்துப்போய் தான் படுத்ததே தனக்கு நினைக்கவில்லை.

காலையில் விழிப்படைந்ததும் மட்டும் பயந்துபோய் சுற்றும் முற்றும் பார்த்தாள் எல்லாம் இருந்தபடி இருந்தன. ராமண்ணா வந்து போனதன் அடையாளங்கள் ஒன்றும் காணப்படவில்லை.

ராமண்ணாவின் சந்திப்பு, அதுபற்றிய சிந்தனை, அதற்குத் தகுந்த அநுபவம் - இவை ஒன்றைப் பற்றியும் நிச்சயமான கற்பனை இல்லாததால், குமுதாவை மறுநாள் வெகுநேரம் இரவில் அநுபவத்தின் நினைவுகள் பீடிக்கவில்லை. ஆனால் ஒரு சங்கதி மட்டும் இன்றும் அவள் கண்ணில் கட்டினாற் போல் உள்ளது. அன்று காலையிலிருந்து மாலை வரை வீட்டுவேலையில் தான் காட்டிய உற்சாகமாகட்டும், பட்ட சிரமத்தையாவது, அதற்கு முன்பு என்றும் கண்டிருக்கவில்லை. மேலும் வேலை செய்யச் செய்ய உற்சாகம் அதிகரித்ததே தவிர, களைப்பு ஏற்படவில்லை. சரளக்கா படுக்கையில் விழுந்தது முதற்கொண்டு சமையலறையின் முழுப்பொறுப்பும் குமுதாவுடையதாகியிருந்தது. மற்ற வேலைகளுக்காக ஒரு வேலைக்காரனும், கூட்டிமெழுகிப் பத்துப் பாத்திரம் தேய்க்க ஒரு வேலைக்காரியும் இருந்தார்கள். ஆனால் அன்று சமையல்–சாப்பாடு வேலை அல்லாமல் குமுதா இன்னும் எவ்வளவோ செய்யவேண்டிய வேலைகளைத் தேடி எடுத்துக் கொண்டாள்.

"ஏன் குமுதா, பேசாமல் இங்கே என் பக்கத்தில் உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொள்ள்க்கூடாதா?" என்று கேட்டாள் சரளக்கா.

"யாராவது பார்த்தால் என்ன சொல்வார்கள்?" என்றாள் தான்.

"பார்ப்பவர்கள் யார்? எதற்காக அவர்கள் எதுவும் சொல்லவேண்டும்?"என்று சரளக்கா குமுதாவின் நிலையைப் புரிந்து கொள்ளாமல் கேட்டாள்.

"பார்ப்பவர்கள் யாரென்றால்? மனைவி படுக்கையில் விழுந்தது முதற்கொண்டு ஓர் அறையாவது சுத்தமாக இல்லை, ஒருதுணி மணி நேர்த்தியாக இல்லை - இப்படியிருந்தா எப்படி அக்கா?" என்று சிரித்தபடியே கேட்டாள்.

"போறும் விடு. உன்னை உழைப்பதற்காகவா இந்த வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வந்தது?"

"அய்யே, இதென்ன அக்கா? உழைப்பதற்குக் கொண்டுவந்ததாகச் சொல்லவில்லை. நீ ஓடி ஆடிக் கொணடிருந்தபோது, வீடு எப்படி இருந்ததென்பதை நான் பார்த்திருக்கிறேனே? எனக்கு இங்கே சாப்பாடு போட்டு

உட்காரவைத்து விட்டால், தங்கைக்கு ஒரு வேலையும் கற்றுக் கொடுக்கவில்லை என்று நாலு பேர் உன்னைச் சொல்லுவார்கள். வீடு இப்படிக் கந்தரகோளமாய்க் கிடந்தால் சொல்லாமல் விடுவார்களா?" என்று - இது வரையில் யோசித்திராவிட்டாலும் - குமுதாவின் வாயிலிருந்து வார்த்தைகள் வந்தன.

சரளக்காவுக்கு அப்போது எவ்வளவு சந்தோஷம் உண்டாயிற்று! அடக்கும் சக்தி இல்லாததினால் கண்களில் நீர் நிறைந்து, பேசமுடியாமல் அவள் தொண்டை அடைத்துக் கொண்டது. கை ஜாடைகாட்டி படுக்கையருகில் வரும்படி சொன்னாள். அப்பொழுது தான் அங்கே போய் உட்கார்ந்திருந்தால் தன்னாலும் அழுகையை அடக்க முடிந்திருக்காது. எனவே, "வந்துவிட்டேன். இன்னும் கொஞ்சம் பாக்கியிருக்கிறது. அப்புறம் சாயங்காலம் வரைக்கும் உன்னோட பக்கத்திலேயே உட்கார்ந்துக்கறேன், பேசிண்டே" என்று கூறி மறுபடியும் வேலையில் ஈடுபட்டாள்.

அன்று எல்லா அறைகளிலுமிருந்த பொருட்களை எடுத்து, தூசி துடைத்து நேர்த்தியாக அடுக்கிவைத்தாள். முக்கியமாக ராமண்ணாவின் அறையிலிருந்த புத்தகங்களையும் துணிமணிக ளையும் ஒழுங்காக ஜோடித்து வைத்தாள். சமையலறையிலிருந்த பாத்திரங்களையும் வரிசையாக ஒழுங்குபடுத்தி வைத்தாள். விளக்குகளின் 'ஷேட்'களைத் துடைத்தாள். கட்டில்களின் மீதிருந்த படுக்கைகளை எடுத்துவைத்து விட்டு, கட்டில்களைத் துடைத்த பிறகு, படுக்கைகளை மறுபடியும் சுருக்கமில்லாமல் விரித்துவைத் தாள். ஒரு வேலை முடித்தவுடனே, இன்னொன்றைத் தொடங் குவது, வேலை இல்லாமல் உட்கார்ந்து கொண்டால் என்ன ஆகிவிடுமோ என்று பயந்தவளைப் போல. சில சமயங்களில் செய்த வேலை சரியாக வராவிட்டாலோ அல்லது சரியாக வரவில்லை என்கிற சந்தேகம் அவளுக்கு வந்தாலோ, மறுபடியும் முதலிலிருந்து செய்வது. எப்படியோ மாலை வரையில் உழைத்து உழைத்து சோர்ந்து போகாமல், சந்தோஷத்தால் பூரித்து உடலில் சக்தி அதிகரித்ததைப் போன்ற அநுபவம் ஏற்பட்டது. கடைசியில் எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு சரளக்காவின் அருகே சென்றபோது, அவள் தன்னுடைய கைகளையும் உடம்பையும் தொட்டுத் தொட்டுப் பார்த்தாள்.

"ஏன் அக்கா? ஜன்மத்தில் ஒரு நாள் உழைத்ததனால் என் கைகள் உடைந்து போய் விட்டன என்று பயப்படுகிறாயா?" என்று சிரித்தபடியே கேட்டாள்.

சரளக்கா உடனே பதில் சொல்லவில்லை. கையினால் தன்னைத் தொட்டுக் கொண்டிருந்த போதிலும் அவள் மனம் வேறெங்கோ இருந்தாற்போலிருந்தது. கடைசியாக பெருமூச்செறிந்தாள். குமுதாவுக்குப் பயம் தோன்றியது. அக்காவின் மனத்தில் என்ன எண்ணம் இருக்ககூடும்? தன் மனத்தின் எண்ணத்திற்கு பதில் அளிப்பதுபோல சரளக்கா சொன்னாள், "என்னைவிட நீ இன்னும் நன்றாக வீட்டைப் பார்த்துக் கொள்வாய் குமுதா வேண்டுமானால் பார்" என்று.

"போ அக்கா என்னமாவது ஒன்றை சொல்லதே."

"என்னமாவது ஒண்ணு ஏன்? ஒரு நாள் கூட நான் இவ்வளவு ஓடியாடி வேலை செய்தது எனக்கு நினைவில்லையே!"

"எப்போதுமே வீட்டை ஒழுங்காக வைத்துக்கொள்பவர்களுக்கு இப்படி ஓடியாடி வேலை செய்யவேண்டிய தேவையில்லை. என்னைப் போன்றவர்கள்தான் ஒரு பண்டிகை, கார்த்திகை என்றால் வீட்டையெல்லாம் ஒழுங்குபடுத்த ஓடியாடவேண்டும்." என்றாள் குமுதா.

"இருக்கட்டும், உனக்காவது இந்த வீட்டு வேலை பழக்கமாகிறதே, ஆகட்டும்."

"ஒரு நாள் ஒரு நாலு நாலு சாமான்களை இங்கேயிருந்து அங்கே எடுத்து வைத்ததை எவ்வளவு பிரமாதப் படுத்துகிறாய் அக்கா?"

"அதுதான் சொன்னேனே, நல்லதாயிற்று என்று? இனி நான் உடம்பு தேறி எழுந்திருப்பது அவ்வளவுதான். வீட்டைப் பார்த்துக் கொள்ள -"

குமுதா பட்டென்று சரளக்காவின் வாயை மூடியவண்ணம், "இருக்கட்டும் விடு அக்கா. என்னவாவது வாய்க்குவந்தபடி அச்சானியமாகப் பேசாதே" என்றாள்.

"வாயால் சொல்லாவிட்டால் மறைத்துவிடமுடியுமா? எனக்கு வந்திருப்பது குணமாகக்கூடிய வியாதி அல்ல."

"நீ இப்படியெல்லாம் பேசுவதனால் நான் எழுந்து போகிறேன் பார், அக்கா" என்று தான் கோபத்தோடு பதில் சொன்னாள்.

"கோவிச்சுக்காதே அம்மா, கோபிச்சுக்காதே. நீ விட்டுவிட்டுப் போனால், இந்த வீட்டைப் பார்த்து கொள்ளப் போகிறவர்கள்

யார்? - நான் போனதற்குப்பறம்?" என்று கூறி, சரளக்கா சட்டென்று பக்கவாட்டில் திரும்பி முகத்தை மூடிக்கொண்டாள்

இந்தப் பேச்சினால் குமுதாவுக்குச் சிறிது கலக்கம் ஏற்பட்டிருந்தது. பக்கவாட்டில் திரும்பி முகத்தை மூடிக்கொண்ட சரளக்கா, எவ்வளவு நேரமாகியும் தன்னோடு பேசவில்லை என்பதனால் குமுதாவுக்குப் பயமும் தோன்றியது. இதுவரையில் வீட்டை ஒழுங்குபடுத்தியதனால் ஏற்பட்ட உற்சாகம் மங்கிப்போனாற் போலாகிவிட்டது. சரளக்கா எதற்காக இப்படிப் பேசினாள்? தான் செய்தது அவளுக்குப் பிடிக்கவில்லையா? அல்லது - ? குமுதா பயந்து போய்விட்டாள். இதுவரையில் தான்கூட எண்ணிப் பார்க்கவில்லை. இப்போது மாலை வேளை நீங்க நீங்க, ராமண்ணா வெளியிலிருந்து திரும்புகிற வேளை நெருங்க நெருங்க, வேண்டாமென்று பிடித்திழுத்தாலும் கழுத்தை நீட்டி, நீட்டி - கள்ளத்தனமாக எட்டிப் பார்க்க முயற்சிக்கிறதோ என்னும்படி தன் இதயம் பரபரக்க, ஏதோ ஓர் ஆசை பசியைப்போல உள்ளில் துன்புறுத்திக் கொண்டிருக்க - அப்போது குமுதாவுக்குச் சந்தேகம் தோன்றியது. பயம் பிறந்தது. முதல் நாளிரவின் நினைவு அழுத்திப் பிடித்த பந்து, பிடியை விட்டவுடன் பாய்வதைப் போலச் சீறிக்கொண்டு மேலெழுந்தது. இதென்ன? நாள் முழுவதும் தான் உழைத்தது நேற்று இரவு ஏற்பட்ட அநுபவத்தினால் தூண்டப் பெற்றா? தான் உழைக்கவேண்டும், அதைப் பார்த்து ராமண்ணா பாராட்டவேண்டும் என்பதற்காகவா? இல்லாவிட்டால் அவன் வரவைத் தான் எதிர்ப்பார்ப்பது எதற்காக? கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கி வருபவனின் காலடிச் சத்தம் போலத் தன் இதயத்தின் படபடப்பின் ஒலி, மேலும் மேலும் தெளிவாகக் கேட்கத் தொடங்கியது. தன் விஷயம் அப்படி இருக்கட்டும், சரளக்காவுக்கு அதுபோன்ற சந்தேகம் வந்திருக்குமோ? இல்லாவிட்டால் தன் சாவைப் பற்றியும், தனக்குப் பிறகு வீட்டைப் பார்த்துக் கொள்கிற விஷயத்தைப் பற்றியும் பேச்சு வருவானேன்? ஆம், தன் நடத்தைக்கு என்ன காரணம் வேண்டுமானாலும் இருக்கட்டும், சரளக்காவுக்கு மட்டும் அப்படிப்பட்ட சந்தேகம் வந்துதான் இருக்கவேண்டும். முகத்தை மூடிக்கொண்டு படுத்தவள், இன்னும் முக்காட்டை எடுக்கவில்லை; தன்னைப் பார்க்கவில்லை. குமுதா நிஜமாகவே அச்சமடைந்தாள். தனது எண்ணம் ராமண்ணாவுக்காகத் தன் இதயத்தில் நடந்த போராட்டம் - இவையெல்லாம் சரியா, தவறா என்கிற

பிரச்னையே அவளுக்கிருக்கவில்லை. அந்தக் கோணத்திலிருந்து அல்லது சமுதாயத்தின் தர்ம வாழ்க்கையின் கோணத்திலிருந்து யோசித்துப் பார்க்கும் தகுதியே அவளுக்கிருக்கவில்லை. மேலும், கீழ்த் தளத்திலிருந்து பற்றி எரிந்து கொண்டிருக்கும்போது கீழே குதித்தால் பிழைப்பேனா, இறந்து போவேனா என்று மேல்மாடியில் இருப்பவன் யோசிப்பதில்லை. கீழே வீடு எரிந்துக் கொண்டிருக்கிறது, பக்கத்தில் ஜன்னல் இருக்கிறது, இவையிரண்டையும் கண்டவுடன், இயற்கை குணங்களினால் உந்தப்பட்டு, அவன் கீழே குதிக்கத்தான் செய்வான். எல்லாவற்றையும் மீறிய உயிர்த் தத்துவ சக்தி அது. குமுதாவுக்கு இது தெரிந்திருக்கமுடியாது. தெரிந்திருந்தாலும் அவளால் ஒன்றும் செய்திருக்க முடியாது. குமுதாவைத் துன்புறுத்திக் கொண்டிருந்தது இந்த தத்துவ விசாரமல்ல. அநாதையான தன்னைக் கொண்டுவந்து வைத்துக்கொண்டு, உயிரூட்டி வளர்க்கும் சரளக்கா தன்மீது கோபம் கொண்டால் எப்படி - என்பதொன்றே பயம். அந்த பயத்தினால் அவள் இப்போது ராமண்ணாவின் வருகைக்காகப் பரிதவித்தாள். ராமண்ணா வந்த பிறகு, சரளக்கா ஒரேயடியாக எல்லாவற்றையும் சொல்லிவிட்டால்? தன் மேலுள்ள கோபத்தைப் பேச்சில் காட்டிவிட்டால்? கடைசியாக, அந்த சந்தர்ப்பத்தைத் தவிர்ப்பது தன் கையில் இல்லாவிட்டாலும், அதை எதிர்கொள்ளாமலாவது இருக்கலாமென்று நினைத்து, மெல்ல அங்கிருந்து தன் அறைக்குச் சென்றாள். ஆனாலும் ராமண்ணாவின் சப்தம் கேட்டபிறகு, அவளால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஓரிரண்டு நிமிடங்கள் எப்படியோ பல்லைக் கடித்துக் கொண்டு காத்திருந்தாள் - ஏதாவது ஆர்ப்பாட்டம் நடக்கப்போகிறதென்று எதிர்ப்பார்த்து, ஆனால் அதற்கு மாறாக ராமண்ணா பலமாகச் சிரிப்பது கேட்டது. குமுதாவுக்கு ஆச்சரியம். பேச்சைக் கேட்க ஆவல்; வெளியே வருவதற்குப் பயம். மேலும், ராமண்ணா அவ்வாறு சத்தம் போட்டுச் சிரிப்பதற்கு என்ன காரணம் என்றும் அவளால் ஊகிக்க முடியவில்லை.

கடைசியாக சரளக்கா கூப்பிடுவதாக ராமண்ணா தன்னைக் கூப்பிட்டபோதுதான், தான் போயே ஆக வேண்டியிருந்தது. போய் சரளக்காவின் எதிரே நிற்கும்வரையில் கால்கள் பூமியில் மாட்டிக் கொண்டதுபோல பாரமாகி, தூக்கமுடியாமற் போய்விட்டன. நடக்க நடக்க தான் பூமிக்குள்ளே போய்க் கொண்டிருப்பது போல அவளுக்குத் தோன்றியது.

குமுதா 'ஹூம்' என்று குரல் கொடுத்து கண்களை மலர்த்திப் பார்த்தாள் கையிலே புத்தகம். நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாள். நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டது அவளிடமிருந்து. பழைய நினைவுகள். அதை அநுபவித்துக் கொண்டிருந்த கண்களுக்குத் தூக்கக் கலக்கம் தட்டியிருந்தது! கடியாரத்தைப் பார்த்தாள். இரவு ஒன்பதரை மணி ஆகியிருந்தது. எப்படியோ படுக்கப்போகும் வேளை வந்து விட்டதே என்று நெட்டுயிர்த்தபடி எழுந்திருந்தாள். தான் சினிமாவுக்குப் போகவேண்டுமென்று நினைத்திருந்தாளல்லவா? சரியாகப் போயிற்று. பழைய நினைவுகளின் சினிமாப் படத்தைப் பார்த்தது போலாயிற்றே என்று வருத்தத்துடன் உதடுகளைக் கடித்தபடி தனதறைக்குச் சென்றாள்.

## 7

சேற்றில் கால்மாட்டிக் கொண்டவனைப் போலாயிற்று ராமண்ணாவின் நிலை. மனைவியின் படத்திற்கெதிரே உட்கார்ந்து கொண்டு, பழைய நினைவுகளைத் தடுக்கச் சக்தியற்றவனானான். ஒரு நினைவு மற்றொன்றை நோக்கி இழுத்தது. சரளா இறந்ததிலிருந்து, தன்னுடைய வாழ்க்கையில் ஏதோ ஒரு சிக்கல் ஏற்பட்டிருக்கிறது என்கிற எண்ணம் மட்டும் அவனுக்கு இருந்தது. ஆனால் இதுதான் அந்தச் சிக்கல் என்று இதுவரையில் அவனுக்குத் தெளிவாகப் புரியவில்லை. இதுவரையில் அவன் வாய் திறந்து அதைப பற்றிப் பேசியும் இருக்கவில்லை. ஆனால் எண்ணங்களின் வேகத்தில், "எனது வாழ்க்கைச் சிக்கலை விடுவிப்பதற்கென்றே, இந்தச் சமாதான வார்த்தைகளைச் சொல்கிறாயா?" என்று சரளாவின் படத்திற்கு முன்னால் சொன்ன பிறகு, அந்த வார்த்தைகள் சாவகாசமாக அவனது மூளையை எட்டியபோது, அவனுக்கு முதல் முறையாகப் புரிந்தது. க்ளோரோஃபார்மின் மயக்கத்திலிருந்து விழித்தவனைப் போல இருந்தது. குமுதா தனக்கு ஓர் இடைஞ்சலாக இருக்கிறாள் என்று, இதுவரையில் அவனுக்குத் தோன்றியிருக்கவில்லை. பல வருடங்களாக வீட்டிலிருந்துவரும் அந்தப் பெண் அவனுக்குப் பழகியவளாகி விட்டாள். முதலில் அவள் தன் வீட்டிற்கு வந்தபோது சிறுமியாகக் காட்சியளித்தாளல்லவா? அதே உருவம்தான் அவன் மனத்தில் பதிந்திருந்தது. வளரும் வயதுக்கு வந்த குமுதா, வெகு சீக்கிரத்தில் பெண்ணின் சக்திகளைச்

சேர்த்துக் கொண்டு வளர்ந்து விட்டாளென்றாலும், சரளாவின் சகவாசம் கிடைத்திருந்த அந்த வளர்ச்சி தென்பட்டிருக்க வில்லையோ என்னவோ? அவ்வப்பொழுது அவள் இன்னும் தன்னைப் பொறுத்தமட்டில் சிறுமிதான் என்கிறாற்போல, அவன் அவளோடு சிரித்துப் பேசுவான். அதுவுமல்லாமல் அவன் அவளை அதிகமாகப் பார்ப்பதும் சரளாவுக்கருகில் இருவரும் அமர்ந் திருக்கும்போதுதான். இந்தக் காரணங்களினால் குமுதாவைப் பற்றி அவனுக்கு எந்த விதமான ஆவலும் ஏற்பட்டிருக்கவில்லை. இந்த நிலையில் அத்தகையதொரு சம்பவம் அகஸ்மாத்தாக நடந்துவிட்டதால் அவன் திடுக்கிட்டான். அதை ஒப்புக் கொள்ள மனமில்லாவிட்டாலும், அவன் சிறிது அச்சமுற்றான். அந்த நாளையும் அந்தச் சம்பவத்தையும் என்றுமே அவனால் மறக்க முடியாது. உண்மையாகப் பார்க்கப் போனால், அந்த நாட்களுக்கும் மற்றைய நாட்களுக்கும் வித்தியாசம் இருக்கவில்லை. குமுதா பலமுறைகள் தன் அறைக்கு வந்திருக்கிறாள், எவ்வளவோ முறை தான் எழுதும்போது தன் அருகில் வந்து நின்று பேசிக் கொண்டிருந்திருக்கிறாள், புத்தகங்கள் கேட்டு வாங்கிக் கொண்டு போயிருக்கிறாள், புத்தகம் சிறிது கடினமாக இருந்தால், முன்னதாகவே கதையைக் கேட்டுக் கொண்டு போவாள்; எவ்வளவோ முறை தானாகவே அவளுக்கு ராமாயணம் - மகாபாரதங்களிலிருந்து கதைகளைச் சொல்லியிருக்கிறான். இவையெல்லாம் உண்மை. ஆனால் உண்மை என்று சொல்லுவது எப்படி? ஒரே ஒருமுறை அகஸ்மாத்தாகக் கையைக் கைதொட்டு, உடனே பார்வையோடு பார்வை கலந்து, அவையெல்லாம் கனவின் கதையாக மறந்து போயிற்று. அந்தக் கணத்திலிருந்து குமுதா தனக்கு வேறாகவே காட்சியளித்தாள். வயதாலும், அறிவாலும், அநுபவத்தாலும் பெரியவனான தன் முன்னால் குமுதா எப்படிக் காட்சியளித்தாலும், சிறுமிதான் என்று மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டான். ஆனால்? அன்று இரவு என்றும்போல புத்தகம் எடுத்துக்கொண்டு போவதற்காக வந்திருந்தபோது, அலமாரியின் எதிரே தான் ஒரு மிருகத்தைப் போலல்லவா நடந்து கொண்டான்? இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு இன்று மனநிலை வேறாகி, அந்த அநுபவத்தைப் பற்றி நினைத்தாலும் ராமண்ணாவுக்கு அது தெளிவாகவில்லை. அன்று தான் அவளைச் சட்டென்று அணைத்து முத்தமிட்டது ஏன்? அறிவு

பக்குவமடைந்திருக்கிறது. மனம் பண்பட்டிருக்கிறது. ஆனால் உடலின் மீது மட்டும் மனிதன் தன் கட்டுப்பாட்டைச் செலுத்த என்றைக்குமே சாத்தியமில்லை என்று ராமண்ணாவுக்குத் தோன்றியது. மனமென்னும் குரங்கை அடக்க முடியவில்லையே ஆண்டவனே என்று பாடிய சித்தர்களுக்கு, இந்த ரகசியம் புரிந்திருக்கவில்லையோ என்னவோ? மனத்தை அடக்குவது சாத்தியம், அறிவுள்ளவனுக்குக் கற்றுக் கொடுப்பது சாத்திய மாவது போல. ஆனால் உடலை அடக்குவது எப்படி? ஜ்நாநலவ துர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்சயதி - என்கிற வாக்குப் பொய்யல்ல. உடல் மூடனைப் போன்றது. சொன்னால் புரிந்து கொள்ள முடியாது. உடல் மிருகத்தைப் போன்றது. இயற்கை யையே பின்பற்றி நடப்பதனால், உடல் செடி - கொடியைப் போன்றது. பிறந்தது முதற்கொண்டு வளர்ந்தே தீருவேன் என்கிற பிடிவாதம். இப்படிப்பட்ட உடலின் சக்தி அன்று தனது அறிவு - மனம் இவைகளை வெற்றி கொண்டிருக்கவேண்டும். பிறந்த ஜீவன் மற்றொரு ஜீவனைப் பிறப்பித்தே ஆகவேண்டும். அதனால்தான் மரம் தன் விதைகளைச் சிந்திவிட்டு மடிந்து போகிறது. பிறந்த உடல் இன்னொரு உடலைப் பிறப்பித்தே ஆக வேண்டும். உடலின் பிறவிக் குணம் அது. தன் உடலும் அது போலவே நடந்து கொண்டது அன்று இரவு. சரளா படுக்கையில் விழுந்த அன்றுமுதல், தனது உடற்பசி அதிகரித்திருந்ததோ! சரளாவின் அருகில் உட்காருவது, அவள் கையைத் தொடுவது, அவளுடன் பேசுவது இது போன்ற சகவாசத்தால் அந்தப் பசி மறந்து போயிருக்கலாம். ஆனால் மறைந்து போயிருக்க முடியாது. இல்லாவிட்டால் முதல் முதலாக உணவு கண்பார்வையில் பட்டதுமே, கழுகைப் போலப் பாய்ந்து அதை விழுங்கியிருக்க முடியாது. அன்று முதல் முறையாகக் குமுதாவை இறுக அணைத்துக் கொண்டபோது தன் நடத்தையைக் கண்டு தானே ஆச்சரியமடைந்தான். அவளைக் கட்டிப்பிடித்து அவளது நெற்றி, உதடுகள், இமைகள், கன்னங்கள், மோவாய், புஜங்கள், மார்பகங்கள் இவைகளை இடைவிடாமல் முத்தமிட்டபோது, தான் ஓர் அரக்கன் போல அவளுக்குத் தோன்றியிருக்கலா மல்லவா? அதனால் தான் அவள் பயந்துபோய் ஓடிவிட்டாளோ என்று தோன்றியது.

குமுதா தன் தோள்களின் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு ஓடிப்போன பிறகு, ராமண்ணாவுக்கு விழிப்பு வந்தாற் போலாயிற்று. முதலில் தான் என்ன செய்தோம் என்கிற அறிவே அவனுக்கு இருக்கவில்லை. உடல் வியர்த்தபோது, ஜீரம் விட்டது போலாகி விழிப்பு ஏற்பட்டது. தான் செய்தது தவறு என்று தோன்றியது. ஒரு பக்கம் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாத சரளாவுக்கு துரோகம், மற்றொரு பக்கம் புகலிடம் கொடுத்ததற்கு விலைகேட்டு வாங்கிக் கொண்டது போல, குமுதாவுக்கு அநியாயம்! இந்த எண்ணம் தோன்றிய உடனே, ராமண்ணாவின் முகத்தில் வெறுப்பின் சிரிப்புத் தோன்றியது. மனிதனின் பண்பாடு என்பது எப்படிப்பட்ட ஆத்ம வஞ்சனை! உண்மையை மறைத்து வைப்பதே கெட்டிக்காரத்தனம் என்பதற்கு எப்பேர்பட்ட உதாரணம்! "துரோகம் - அநியாயம்" என்கிற பதங்களைத் தான் உபயோகித்தான். அவை வெறும் வார்த்தைகள் மட்டுமே. கற்பனைகளைத் தோற்றுவிக்கும் வெறும் சாதனம். அந்த வார்த்தைகளினால் தனது பண்பட்ட அறிவு, சமாதானமடைந்த தென்னவோ உண்மை. ஆனால் சத்தியம் அந்தக் கற்பனைகளில் இல்லை. சத்தியம் தன் உடலில் தோன்றிய புளகத்திலும், தனது சமாதானத்தின் அறிகுறியான வியர்வைத் துளிகளிலும், நினைவினால் கடிந்துக் கொள்ளும் தன் உதடுகளிலும், அந்தத் திரண்ட மார்பகங்களின் ஸ்பர்சத்தினால் உயிர்பெற்ற தனது மார்பிலும், அந்த மிருதுவான தோள்களைக் கட்டியணைத்து, திருப்தியுற்று, போதும் என்று கீழே தொங்கிய தனது கைகளிலும் இருக்கிறது! இப்பொழுது ராமண்ணா நிஜமாகவே பயந்தான். செய்த காரியம் தவறென்று தெரிந்தும் மனத்திற்குச் சமாதானம் ஏற்படுவதென்றால் - அது எதனுடைய லட்சணம்? தாமஸ சமாதானம் அது - சீ! மறுபடியும் வெறும் வார்த்தைகள் - போகட்டும் என்று சொல்லிக் கொண்டான். ஏன்? ஒரு தடவை என்னமோ நடந்துவிட்டது. இன்னொரு முறை அப்படி நடக்காமல் பார்த்துக் கொண்டால் போயிற்று. இதொன்றும் தினமும் நடைபெறக்கூடிய அநுபவமல்ல. புத்திபூர்வமாகச் செய்ததல்ல. ஏன் இந்தப் பாழும் நினைவுகள், என்று எல்லாவற்றையும் மறக்கத் தீர்மானித்துத் தன் வேலையில் இறங்கினான்.

ஆனால் மறப்பது சாத்தியமாகவில்லை. மனம் மற்றொரு வேலையில் ஈடுபடத் தயாராக இருக்கவில்லை. எவ்வளவு முயன்றாலும் குமுதாவைக் கட்டியணைத்த அநுபவத்தை அசைபோடுவதிலிருந்து, மனதை இழுத்துப் பிடிக்கமுடியவில்லை. கடைசியில் கோபம் வந்தது. தன்னைத் தானே திட்டிக் கொண்டான். அதனால் ஒரு பிரயோஜனமும் ஏற்படவில்லை. தனது தவற்றை வெளிப்படையாக ஒப்புக் கொண்டால், மனம் சரியான வழிக்கு வரும் என நினைத்து, குமுதாவிடம் மன்னிப்புக்கேட்க முடிவு செய்தான். அவள் அறையை நோக்கிப் புறப்பட்டான். மறுபடியும் தயங்கினான். மன்னிப்புக் கேட்கவா? உடற்பசியைத் தணித்துக் கொள்வதற்காகவா? எந்த எண்ணத்துடன் தான் அவள் அறைக்குச் செல்லப் புறப்பட்டோம் என்பதுபற்றி அவனுக்கே ஐயம் தோன்றியது - தயங்கினான். பாவம்! எவ்வளவானாலும் நாடி வந்தவள், வயதில் சிறியவள், தன்னிடத்தில் மதிப்பும் மரியாதையும் வைத்திருப்பவள். நம்பிக்கை வைத்திருப்பவள். எவ்வளவு பயந்து விட்டாளோ? என்ன நினைத்துக் கொண்டிருப்பாள்? அவளைச் சமாதானப் படுத்துவது தனது கடமை என நினைத்து, மறுபடியும் முன்னால் அடிஎடுத்து வைத்தான். ஆனால் "சமாதானப் படுத்துவது" என்பதற்குப் பதிலாக, தனது கைககள் அவள் உடலைத் தீண்ட இப்பொழுதே, தயாராக இருக்கின்றன என்பது கவனத்திற்கு வரவே, மறுபடியும் கால்கள் பின்னடைந்தன. நிராசையடைந்தான், கோபம் கொண்டான், இது தனக்கு அவமானம் என்று உள்ளுக்குள்ளேயே குமுறினான். தான், தனது படிப்பு, தனது பண்பாடு, தனது தொழில் – இவையெல்லாம் எங்கே, மனத்திற்குள் தாண்டவமிடும் எண்ணங்கள் எங்கே? ஒரு சமயம் படுக்கயில் கிடக்கும் சரளாவே இதற்குப் பொறுப்பாளி என்று சொல்லிக் கொண்டான். ஆனால் இன்றுவரையில் இதுபோன்ற எண்ணத்திற்கு இடமே இருக்கவில்லை. இந்தக் குமுதாவின் வரவினால்தான் இப்படி நடந்தது; ஆகையால் அவள்தான் இதற்குப் பொறுப்பு என்று வாதித்தான். காம வாழ்க்கை தன்னைக் கேலிக்கு ஆளாக்கிவிட்டதே என்று தவித்தான். ஆனால், எப்படியோ அந்தக் கதை அந்த வகையில் முடிந்தது போலாயிற்று. முடிந்தது போலாயிற்றே ஒழிய, முடியவில்லை என்பதை இரண்டு மூன்று

வருடங்கள் கழிந்த பிறகு இன்றுகூட அவன் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. எப்படியோ தவித்தபடி படுக்கையின் மீது சாய்ந்தபோது, மற்றொரு எண்ணம் தோன்றியது. சட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டு - இதென்ன சிக்கல்? இதுவரையில் தோன்றவே இல்லையே! குமுதா இங்கிருந்து எங்கே ஓடிப் போனாள்? தன் அறைக்கா அல்லது சரளாவிடமா? குமுதா பயந்து போய்விட்டாள் என்பதைப் பற்றி அவனுக்கு சந்தேகம் இருக்கவில்லை. பயந்துவிட்டவள் சரளாவிடம் ஓடிப்போயிருந் தால்? நடந்ததையெல்லாம் அவளிடம் சொல்லியிருந்தால்? ராமண்ணா இப்போது உட்கார்ந்த இடத்திலேயே குளிர் ஜுரம் வந்தவனைப் போலக் கடகடவென்று நடுங்கினான். போய்ப் பார்த்துவிட்டு வரலாமா? - என்று எழுந்து மெதுவாக அறையை விட்டு வெளியே வந்தான். ஒரு நிமிடம் தயங்கினான். குமுதா அறையில் இருக்கிறாளா இல்லையா என்பதைப் பார்த்து விட்டால் ஆயிற்று என்கிற எண்ணம் தோன்றியது. உடனே பேய்க்குப் பயந்தவன் போல, சரளாவின் அறையை நோக்கிப் பாய்ந்தான். குமுதாவின் அறைக்குப் போனால், தான் எப்படி நடந்து கொள்வான் என்கிற நம்பிக்கை அவனுக்கே இல்லாமலிருந்ததால், அவன் அவ்வளவு பயந்துபோய் சரளாவின் அறைக்கு செல்லத் துணிச்சல் கொண்டான். வீட்டில் பேய் காணப்பட்டது என்னும்போது பயந்தாங்கொள்ளியும்கூட வெளியே இருட்டில் ஓடத் துணிச்சல் கொள்ளமாட்டானோ? சரளாவின் அறையில் எந்த சப்தமும் இருக்கவில்லை. யாருக்குத் தெரியும்? தனக்குப் பயந்து, இன்று குமுதா இங்கேயே படுத்திருந்தால்? பார்த்தே விடுவோம் என்று மெதுவாகக் கதவைத் திறந்தான்.

"யார்?"

சரளாவின் குரலைக்கேட்டு திடுக்கிட்டான். இப்பொழுது யார் பேசினாலும், தன்னை "சீ" என்பவர்கள்தான் என்கிற எண்ணம், உள்மனத்தின் பின்னிலையில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது போலும். அதனால்தான் திருடும்போது பிடிபட்ட கள்ளனைப் போலத் திகைப்படைந்தான்.

"யார்? ஆங்? இல்லை-யாருமில்லை-நான்தான்" என்று உளற வேண்டியதாயிற்று அவனுக்கு.

"ஏன்? இன்றைக்கு எழுத மனசு வரவில்லையா?"

காயத்தின் மீது உப்பை இறைத்தாற் போலாயிற்று ராமண்ணாவுக்கு.

"இல்லை, எழுதிக்கொண்டுதான் உட்கார்ந்திருந்தேன். உன் குரல் கேட்ட மாதிரி இருந்தது. ஏதாவது வேணுமோ என்று பார்க்க வந்தேன்."

"அட, எனக்கும் ஏதோ சப்தம் கேட்ட மாதிரி இருந்தது.. குமுதாவும் இன்னும் படுக்கவில்லையோ என்னமோ?"

"நான் பார்க்கவில்லை. எழுதிக்கொண்டிருந்தேன். கூப்பிடட்டுமா அவளை?"

அந்தக் கடைசி வாக்கியத்தைச் சொன்னதுமே, தன் நாக்கைத் துண்டித்து விடவேண்டும் போல இருந்தது அவனுக்கு.

"ஐயோ, அதை ஏன் கூப்பிடவேண்டும் பாவம்! சின்னப் பெண் படுத்துக்கொள்ளட்டும், விடுங்கள்."

"இல்லை, உனக்கேதாவது வேணுமாயிருந்தால்? அதுக்காக."

சரளா அதற்கு ஒரு புன்முறுவலைத்தான் பதிலாக அளித்தாள். "எனக்கென்ன வேண்டியிருக்கப் போகிறது? நீங்கள் இருக்கிறீர்கள், குமுதா இருக்கிறாள். நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து வீட்டை நடத்திக் கொண்டு போவீர்கள். எனக்கு வேறு கவலை ஒன்றும் இல்லை. இப்போது நான் கண்ணை மூடினால் போதும்" என்றாள்.

இடி - இல்லை, தன் இதயம் அடித்துக் கொள்ளும் சப்தம்! சரளாவின் அந்த வார்த்தைகளினால் ராமண்ணாவின் நெஞ்சு உடைந்து, தூள் தூளாகப் போனாற் போலாகிவிட்டது. ஏன் இந்த பேச்சு? இதன் பொருள் என்ன? சரளாவுக்குத் தெரிந்து விட்டிருக்குமோ? தன்மேல் சந்தேகம் தோன்றியிருக்குமோ? ராமண்ணா மனைவியின் குழந்தைத் தனமான, பரிதாபகரமான முகத்தைப் பார்த்தான். ஏதோ குழப்பம் ஏற்பட்டிருப்பது போலத் தோன்றியது. சரளாவின் அருகில் வந்து, அவள் நெற்றியின் மீது கை வைத்தான்.

"பைத்தியம், நீ ஒரு பைத்தியம் என்கிறேன். வெயில் இருந்தால்தான் செடி கொடிகள் உயிர் வாழும். அதுபோல உனது திறந்த கண்களின் வெயில்படுகிற மட்டும்தான் நாங்கள் வாழ்வது, நடமாடுவது எல்லாம்" என்றான்.

சரளா அப்போது தன் கையினால், கணவனின் கையை லேசாகத் தட்டியபடி, "இவ்வளவு பிரபலமான எழுத்தாளருக்கு,

இவ்வளவு இனிமையாகப் பேசுவது கஷ்டமா என்ன?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"இனிமையான பேச்சா? இனிமை என் பேச்சில் இல்லை" என்றான்.

"பின் எதில் இருக்கிறது?" என்று கேட்டாள்.

சட்டென்று குனிந்து அவள் நெற்றியில் முத்தமிட்டான்.

"இனிமை எங்கே இருக்கிறது என்பது, அங்கே உட்கார்ந்து அநுபவிக்கும் வண்டுக்குத்தான் தெரியும். தாமரைக்கு என்ன தெரியும்?" என்று கூறி அவள் போர்வையைச் சரிப்படுத்திவிட்டுப் புறப்பட்டான்.

"சாவு இப்போது வரக்கூடாதா? எப்படிப்பட்ட மறக்கமுடியாத தலைஎழுத்து எனக்குக் கிடைத்திருக்கிறது?"

"என்ன, தலையெழுத்தா?"

சிரித்தபடியே தான் முத்தமிட்ட நெற்றிப் பகுதியைக் காட்டினாள் சரளா. அப்போது தன் அறைக்குச் சென்று படுத்த ராமண்ணாவுக்கு ஆழ்ந்த தூக்கம் வந்தது.

இந்த நினைவுகளையெல்லாம் அநுபவித்தபடி ராமண்ணா மறுபடியும் படத்தைப் பார்த்தான். "சரளா, உன் தலையெழுத்து அவ்வளவு நல்லதென்று அன்று சொன்னாய், பிறகு மறைந்து போய்விட்டாய்! ஆனால் இன்றும் உயிரோடிருந்துகொண்டு, அதை நினைத்துப்பார்க்கும் என் தலையெழுத்தைப் பற்றிய கற்பனை உனக்கிருக்கிறதா?" 'என்று மனத்திற்குள்ளாகவே இறந்துபோன தன் மனைவியைக் கேள்வி கேட்டான். நல்ல மனத்திளான சரளாவின் பேச்சினால் தனது கலங்கிய உள்ளம் சாந்தமடைந்து, லேசாகி, தான் அன்று இரவு ஆழ்ந்து உறங்கியிருந்த போதிலும், மறுநாள் விழித்தெழுந்தபோது ராமண்ணாவின் நெஞ்சில் மீண்டும் அச்சம் தோன்றியது. இப்பொழுது அந்த விஷயங்களையெல்லாம் ஒப்புக்கொள்வதில் என்ன தடை? அவ்வாறு ஒப்புக்கொள்வதும் தன் இதய சாட்சியாக. சரளாவைப் பற்றி சந்தேகம் நீங்கி, பயமில்லாம லிருந்த போதிலும், மறுநாள் வேறொரு பயம் அவனைப் பற்றிக்கொண்டது. குமுதாவைச் சந்திப்பது எப்படி? இரவில் அவ்வாறு அரக்கனைப்போல நடந்து கொண்டுவிட்டு இப்பொழுது எப்படி முகத்தைக் காட்டுவது? அவள் காணாமல் தன் முகத்தை மறைத்துக் கொள்வது எப்படி? காலையில் தேநீர்

முதற்கொண்டு இரவுச் சாப்பாடு வரையில், எல்லாவற்றையும் அவளேதான் கவனித்துக் கொள்கிறாள். கடைசியாக ராமண்ணா சரளாவிடமே சரண்புகுந்தான். எழுந்தவுடன் அறையைவிட்டு வெளியே வந்தவன், சரளாவின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டான். அங்கேயே தேநீர் பருகினான். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக ராமண்ணா முட்டாளானான். தான் குமுதாவுக்குப் பயப்பட்டான் அல்லவா? ஆனால் அவள் நடந்து கொள்வதைப் பார்த்தால், தன் பயத்திற்குக் காரணமே இருக்கவில்லை என்று அவனுக்குத் தோன்றியது. குமுதாவின் முகத்தில் அடக்கிப் பிடித்த திருப்தியின் களை! ராமண்ணாவுக்கு சந்தேகம் தோன்றியது. தனக்குத்தான் குமுதா வேறு மாதிரி காணப்படுகிறாளா? அல்லது நிஜமாகவே அந்தக் களை இருக்கிறதா? சிறிது தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அவளை உற்றுப் பார்த்தான். அப்பொழுது அவள் வெட்கப்பட்ட போதிலும், புன்முறுவல் காட்டி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

ராமண்ணா தலையைக் குலுக்கிக் கொண்டான். நினைவுகளின் அழுக்கலைப் பொறுக்க முடியவில்லையோ என்னவோ! நாற்காலியிலிருந்து எழுந்திருந்து அப்படியும் இப்படியும் நடைபோட்டான். "புன்முறுவல் காட்டி முகத்தைத் திருப்பிக் கொண்டாள் என்றேன்" என்று உரக்கச் சொன்னான். அவ்வளவு நாட்களுக்குப் பிறகும், அவனுக்கு அந்தச் சித்திரம் மறந்து போகவில்லை. அதே குமுதாவை இன்று தான் சினிமாவுக்கு அழைத்துப் போகத் தயாராக இருக்கவில்லை! காலச்சக்கரம் எப்படி உருண்டிருக்கிறது? அன்று சரளா மனத்திற்கு ஒருதடையாக சாட்சாத்தாகக் கண்ணெதிரில் இருந்தாள். அவ்வாறிருந்தும் தான் குமுதாவை வேட்டை ஆடினான். இன்று "இதென்ன?" என்று கேட்கக்கூடிய சரளா உயிரோடு இல்லை. ஆனாலும் துரத்திக் கொண்டு வருபவர்களிடமிருந்து தப்பி ஓடும் மிருகத்தைப் போலத் தான் ஆகிவிட்டான்! காலச்சக்கரமா? அன்று மட்டும் குமுதாவின் நாணமும் புன்முறுவலும் கலந்த முக முத்திரையைப் பார்த்த போது, "இயற்கையின் ஜாலம்" என்று நினைத்துக் கொண்டான். இன்றைக்குப் போல காலச்சக்கரத்தைப் பற்றிய எண்ணமோ நினைவோ வந்திருக்கவில்லை. இது ஒரு இயற்கையின் ஜாலம் என்று நினைத்து கொண்டான். வெயிலின் தாகம் கொடியின் உயிருக்கு ஆபத்து. ஆணின் ஆக்கிரமணம் பெண்ணின் உயிருக்கு ஆபத்து. இது ஒரு இயற்கையின் ஜாலம் என்று நினைத்துக்

கொண்டான். அதெப்படியோ இருக்கட்டும், குமுதாவினால் எந்த பயமும் இல்லை என்று மனம் லேசாகி, அன்று முழுவதையும் உல்லாசமாகக் கழித்தான். மாலையில் வீட்டுக்குத் திரும்பியபோது, இன்னொரு விநோதம் காத்துக் கொண்டிருந்தது. 'விநோதம்' என்று அப்போது தோன்றியது. இப்போது அதுவும் ஒரு சிக்கல் என்பது பளிச்சிட்டது அவனுக்கு. அன்று மாலை வீட்டுக்கு வந்தபோது, வீட்டின் உருவமே மாறிப் போயிருந்தது! பார்க்குமிடமெல்லாம் தூய்மை, ஒழுங்கு, நேர்த்தி. "அட, இதென்ன? இன்றைக்கு வீடு வண்ணானுக்குப் போட்டு வந்திருக்கிறதா என்ன?" என்று சரளாவிடம் கேட்டான்.

"ஏன்? வண்ணானின் நினைப்பு ஏன் வந்தது இப்போ? நீங்களும் ராமனைப் போல, வண்ணானுக்காக மனைவியை விட்டுவிடப் போகிறீர்களா என்ன?" என்று சரளாவும் வேடிக்கையாகக் கேட்டாள்.

ஒரு நிமிடம் ராமண்ணா திகிலுற்றான். ஆனால் அதற்குள்ளாக சரளாவே பேச்சைத் தொடர்ந்தாள்.

"ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்? வீட்டை ஒழுங்கு படுத்தி வைத்தது வேறொரு ஆள். அந்த சாமார்த்தியம் நீங்கள் கைபிடித்த மனைவிக்கு இல்லை. அதனால்தான் சொன்னேன் - கையாலாகாத மனைவியை விட்டுவிட்டு - "

சரளாவின் பேச்சு முடியவில்லை. ஏனென்றால் அதற்குள்ளாக தான் எல்லாவற்றையும் புரிந்துகொண்டு வாய்விட்டுச் சிரித்துவிட்டான். இதையெல்லாம் செய்தவள் குமுதாதான் என்று அவனுக்குப் புரிந்துவிட்டது. ஆனால் அன்று தான் சிரித்தது சரளாவின் வேடிக்கைப் பேச்சுக்காகவா? அல்லது குமுதா விஷயமாக ஏற்பட்ட நம்பிக்கைக்காகவா? இன்றும் ராமண்ணாவுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. அறையில் குறுக்கும் நெடுக்கும் உலவுவதை நிறுத்தினான். கடியாரத்தைப் பார்த்தான். மணி ஒன்பதரை. பெருமூச்செறிந்தான். இனி சினிமா பயம் இல்லை. இந்தப் பாழான பழைய கதை போதும், எதையாவது படிக்கலாம் என்று நினைத்து புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு, மறுபடியும் நாற்காலியில் அமர்ந்தான். மனம் சமாதானம் அடையவில்லை போலிருக்கிறது. இரண்டு கால்களையும் தூக்கி மேஜையின் மீது வைத்துக் கொண்டு, நாற்காலியின் முதுகில் சாய்ந்து கொண்டு படிக்கத் தொடங்கினான்.

# 8

மனத்தில் குதிபோட்டுக் கொண்டிருந்த வாழ்க்கையின் நினைவுகளே, இன்று தன் பங்கிற்கு சினிமா என்று நினைத்துக் கொண்ட குமுதாவுக்கு அப்படி நினைத்ததும் தவறோ என்று தோன்றியது. ஏனென்றால் அந்த நினைவுகளை மறக்க வேண்டு மென்பதற்காக இப்போது தன் அறைக்கு வந்து படுக்கையின் மீது உட்கார்ந்த போது, சினிமா விஷயம் நினைவிற்கு வந்தது. ஒருமுறை தான் சரளக்காவிடம் சொன்னாள், "சினிமாவில் நடிப்பது நன்றாக இருக்கிறது" என்று. அன்று என்றைக்கு அது? - ஆங் - தான் ஒருநாள், முந்தின இரவு 'என்னமோ' நடந்து விட்டது என்பதற்காகப் பூரித்து, உடலொடிய உழைத்தாளே? அப்போது சரளக்கா என்னென்னவோ பேசினாள் என்பதற்காகத் தான் தன் அறைக்கு ஓடிப்போனாள். பிறகு ராமண்ணா வந்தான். யார் என்ன சொல்வார்களோ என்றுதான் பயந்துபோய் உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது ராமண்ணா சிரித்தான். ஆங் - அன்றைக்கே தான் ராத்திரி சாப்பாட்டின் போது என்னென்ன வோ பேச்சுக்கள் நடந்தன. சாப்பாடு வேளைக்கு அல்ல, இப்போது நினைவு வருகிறது. ராமண்ணா சாப்படை முடித்துக் கொண்டு சரளக்காவின் அருகில் அமர்ந்திருந்தான். சமையலறையில் தானொருத்தியே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். அப்போது வெளியே கணவன் - மனைவி பேசுவது தனக்குக் கேட்டது. அப்படிப்பட்ட பேச்சு நடக்கும் பொழுது, தான் எப்போதும் வேண்டுமென்று ஏதாவது வேலையில் ஈடுபட்டு அந்தப் பேச்சை லட்சியம் செய்யமாட்டாள். புருஷன் - மனைவியருடைய பேச்சைக் கேட்கக் கூடாது என்கிற நல்லெண்ணத்தினால். அன்று மட்டும் ஏனோ சிறிது ஆவல் தோன்றியது. மேலும், சாப்பிட உட்கார்ந்திருந்ததால் வேறு வேலையைச் செய்யும்படியாகவும் இல்லை. அல்லது தன் விஷயமாகவே பேசிக்கொண்டிருந்தால்? எப்படியோ அன்று உண்ணும் கவளத்தின் சப்தத்தைக்கூட அடக்கி, அவர்களிருவரும் பேசுவதைக் கவனத்துடன் கேட்கலானாள்.

"இன்னிக்கு வீட்டை எப்படி ஒழுங்கு பண்ணியிருக்கா குமுதா, பார்த்தீர்களா?" சரளக்காவின் குரல்.

"ஏன்? நீ சொல்லியிருந்தியா?" ராமண்ணாவின் கேள்வி.

"போறும், சும்மாயிருங்கோ, கண்டபடி வேலை சொல்றதுக்கு எனக்கு பைத்தியமா பிடிச்சிருக்கு?"

"அப்படியானால்? இந்தச் சுறுசுறுப்பு இன்றைக்கே வருவதற்குக் காரணம்?"

"சுறுசுறுப்பு என்ன? அவளுக்கு நம் வீட்டில் பொழுதே போவதில்லை. நான் ஒருத்தி படுக்கையும் அதுவுமாகக் கிடக்கிறேன். என்னைச் சுற்றி ஓடியாட வேண்டியது. வெளியே போவதற்குக்கூட அவளுக்குப் பொழுது கிடைப்பதில்லை. நீங்களோ, உங்களுக்கு உங்கள் வேலையே சரியாயிருக்கிறது !"

"அப்படின்னா? என்னை என்ன பண்ணச் சொல்கிறாய்? அவளோட விளையாடச் சொல்றியா?" ராமண்ணா சிரித்தபடியே சொன்னதைக் கேட்டு குமுதாவின் உடல் 'ஜும்' மென்றது.

"என்னமாவது பேசாதீர்கள். மற்றவர்களுடன் ஒட்டுதலாக இருக்க வேண்டுமென்பதே உங்களுக்குக் கிடையாது. உங்கள் தம்பி, தங்கை வந்திருந்தால், அவர்களை இப்படி அவர்கள் இஷ்டத்திற்கு விட்டுவிட்டு நீங்கள் போய்க் கொண்டிருப்பீர்களா?"

"இல்லை சரளா... அப்படின்னா... நான் என்ன பண்ணனும்கறே சொல்லேன்?"

"இப்படிக்கேட்டால்? இவ்வளவு நாள் ஆச்சு அவள் நம் வீட்டிற்குள் வந்து. அவள் என்ன வேற்று மனுஷியா? அல்லது அவளுக்குத்தான் வேறு யாராவது இருக்கிறார்களா? நீங்களே பட்டுக்கொள்ளாமல் இருந்தால்-"

ராமண்ணா இடையில் புகுந்து கேட்டான்: "பட்டுக்கறது, ஒட்டிக்கறது அப்படின்னா என்ன? போகிற இடத்திற்கும் வருகிற இடத்திற்கும் அவளை சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு போகச் சொல்லுகிறாயா?"

"நான் ஒன்றும் உங்களைப் போலப் புத்தகங்கள் எழுது பவளில்லை. உங்களைப் போல அழகான வார்த்தைகளைப் போட்டுப் பேச எனக்குத் தெரியாது. ஒட்டுதல்னு நாலு பேர் சொல்லுகிறபடி நானும் சொல்கிறேன். சட்டைப்பையில் எதற் காகப் போட்டுக் கொள்ள வேண்டும்?- எனக்குத் தெரியும்! உங்கள் கவனம் எப்போதும் உங்கள் சட்டைப் பையின் மீதுதான்!"

"சரிதான்- எங்கேயிருந்து எங்கே பாய்கிறாய்? உன் தங்கைக்குப் பரிந்து பேச்சை ஆரம்பித்து, இப்போ என் சட்டைப் பைக்கு வந்து விட்டாயே! ஆங்? ஹஹ்ஹ..ஹஹ்ஹஹா-"

அதைக் கேட்டுத் தனக்கும் சிரிப்பு வந்ததென்பதை நினைத்தபோது, குமுதாவின் முகத்தில் இப்போது அந்த

நினைவினால் புன்முறுவல் முகிழ்த்தது. சரளக்கா தான் பேச்சில் எவ்வளவு கெட்டிக்காரியாக இருந்தாள்.

"ஆமாம், நீங்கள் யாருக்காகவும் ஒரு காசு செலவழிக்க மாட்டீர்கள்" என்றாள்.

"இப்போ எதற்குக் காசு?"

"எனக்கெதற்கு? படுத்துப்படுத்து அலுத்துப்போய்க் கடைசியில் ஒருநாள் விஷம் வாங்குவதற்கு வேண்டுமானால் வேண்டியிருக் கலாம்."

குமுதாவுக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டு கவளம் இறங்காதாயிற்று - சரளாவின் அந்தப் பேச்சைக் கேட்டு.

"இதோ பார், சரளா. இப்படிச் சுற்றி வளைத்துப் பேசுவதனால் உனக்கு களைப்பு அதிகமாகிறது. உடைத்துச் சொல்லேன். உனக்காகக் காசு, பணம் செலவழிப்பதற்கு நான் என்றைக்காவது முன்னே-பின்னே பார்த்ததுண்டா?"

"எனக்கென்ன ஆக வேண்டியிருக்கிறது? மறுபடியும் எனக்காக என்கிறீர்களே? குமுதாவின் விஷயம் சொல்லுகிறேன். நாள் முழுவதும் உழைக்கவேண்டும்! பொழுது போகாவிட்டால் இன்னும் சிறிது உழைக்க வேண்டும்? ஒரு சினிமாவா, ஒரு வெளியிலே போறதா... வீட்டில் குழந்தைகளாவது இருந்தால், அவளுக்குத் துணையாவது இருக்கும்-"

"சீ! பைத்தியமே! பேசினால் களைப்புத்தோணும் என்று சொன்னால் நீ அழுகிறாயா? அவள் சினிமாவுக்குப் போக வேண்டு மென்கிறாளா? வேண்டுமென்கிறபோது போகட்டும், அதற் கென்ன? சே, நான் என்னமோ பெரிய விஷயம் என்று நினைத்துப் பயந்திருந்தேன். இந்தச் சின்ன விஷயத்துக்கா அழுகிறாய்?"

பிறகு சரளா "ஸ்ஸ்.. அதென்ன விடுங்கோ" என்று சொன்னது மட்டும் கேட்டது. அதன் பிறகு இரண்டு பேரும் ஏதோ கிசுகிசுவென்று பேசிக்கொண்டார்கள். கடைசியாக, தான் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வருவதற்குள், ராமண்ணா தன் அறைக்குப் போய் விட்டிருந்தான். மறுநாள் தான் ராமண்ணா வுடன் சினிமாவுக்குப் போவதாகத் தீர்மானம் ஆகியிருப்பதாக சரளக்கா சொன்னாள்.

"அவருக்கும் ஒருவரே உட்கார்ந்து கொண்டு பார்ப்பதற்கு பேஜாராக இருக்கும். நான் சொன்னேன் உன்னை அழைத்துக் கொண்டு போவதற்கு ஆட்சேபனை இல்லை என்று" என்று

சரளக்கா சொன்னபோது, குமுதாவுக்கு அக்காவின் நல்ல குணத்தைப் பற்றி நினைத்து முகத்தில் புன்முறுவல் தோன்றியது. மறுநாள் மாலை சினிமா பார்த்து விட்டு வந்ததும், குமுதா சரளக்காவிடம் ஓடி வந்தாள்.

"பார்த்துட்டு வந்தியா?"

"பார்த்துட்டு வந்தேன் அக்கா. இங்லீஷ் படம். ரொம்ப நன்றாக இருந்தது என்று உற்சாகம் மேலிடத் தான் சொன்னாள்.

"இங்லீஷ் படமா? கதை எல்லாம் புரிந்ததா?"

"சொன்னார்"

"ஹூம் என்ன கதை?"

இல்வாழ்க்கையின் ஒரு காட்சி படத்தின் கதை. கணவன் - மனைவி பரஸ்பரம் ஆழ்ந்த காதல். ஒரு சமயம் கணவன் ஒரு தளுக்குக்காரியின் வலையில் விழுகிறான். அன்றிலிருந்து மனைவியைக் கண்டால் வெறுப்பு. எட்டு வயதில் ஒரு மகன். மனைவியையும் மகனையும் வீட்டைவிட்டு விரட்டுகிறான். பலர் மனைவிக்கு உபதேசம் செய்கிறார்கள். இப்படிப்பட்ட கணவனை விட்டுவிடும்படி. ஆனால் மனைவி சம்மதிப்பதில்லை. கணவனின் உண்மையான அன்பு இன்னும் தன்மீது தான் இருப்பதாக உறுதியாக நம்புகிறாள். இன்றில்லாவிட்டால் நாளை அந்தத் தளுக்குக்காரி தன் கணவனைத் தவிக்க விட்டுவிட்டுப் போய்விடுவாள் என்கிற பயத்தினால், எப்போதும் அவனைக் காப்பதற்கு வேண்டிய தயாரிலேயே இருக்கிறாள். ஆனால் கணவனுக்கோ மனைவியின் பேரில் சிறிது கூடக் கருணையில்லை. மகனுக்கும் மனைவிக்கும் உண்ண உணவும், ' உடுக்க உடையும் இல்லாமற் போன போதுகூட அவனுக்குப் புத்தி வருவதில்லை. எப்படியோ கடைசியில் அந்த மோசக்காரி அவனுடைய பணத்தையெல்லாம் செலவழித்துவிட்டு, மிகுந்ததைச் சுருட்டிக் கொண்டு ஓடிப்போகிறாள். அவன் நிராசையடைகிறான். இனி போவதெங்கே? வாழ்க்கையை ஓட்டுவது எப்படி? மனைவியின் முகத்தைப் பார்க்கவும் அவனுக்கு வெட்கம். கடைசியில் வெறுப்புற்று தற்கொலை செய்துகொள்ள முனையும் போது, மனைவி வருகிறாள். பிறகு எல்லோரும் சௌக்கியமாக இருக்கிறார்கள்.

"கடைசி கடைசியில் கண்ணீரை அடக்கவே முடியவில்லை, அக்கா! மனைவியாக நடிப்பவள் எவ்வளவு நன்றாகச் செய்திருக்கிறாள் என்கிறாய்! எனக்குத் தோன்றுகிறது. அவள் உண்மையிலேயே அப்படிப்பட்ட ஸ்திரீயாக இருக்கவேண்டும் என்று!"

"போடி பைத்தியமே!" என்று சரளக்கா சிரித்தாள்.

"இல்லாவிட்டால் அவ்வளவு இயற்கையாக நடிக்க எப்படிவரும்?" என்றுதான் திகைப்புடன் கேட்டாள்.

"எப்படி என்றால்? அந்தப் பெண்கள் அப்படிப்பட்டவர்கள். அவர்களுக்குச் சினிமாவில் நடிக்கும்போது அல்லாமல் மற்றச் சமயங்களில் நல்லவர்களாக இருக்கவே தெரியாது."

"அப்படியானா அக்கா, இந்த மனைவி வேடம் போடுகிறவளுக்கு – "

"எவ்வளவு கல்யாணம் ஆகியிருக்கிறதோ என்னவோ?" என்று சரளக்கா சொன்னபோது, தனக்குப் பைத்தியம் பிடித்தது போலாகியிருக்க வேண்டும், ஏனென்றால் சரளக்கா தன் முகத்தைப் பார்த்துவிட்டு சிரிக்கத் தொடங்கினாள்.

"ஏன் இவ்வளவு பயந்துவிட்டாய் குமுதா? நான் சொல்வது பொய்யல்ல. வேண்டுமானால் இவரைக்கேள். அவர்களெல்லாம் எவ்வளவு தடவை கல்யாணம் பண்ணிக் கொள்வார்கள், செய்து கொண்ட கல்யாணத்தை எவ்வளவு தடவை ரத்து செய்வார்கள், என்று"

"அய்யே, அப்படியா?" தான் மிகுந்த ஏமாற்றத்துடன் கேட்டிருக்க வேண்டும். ஏனென்றால், அந்தப் பேச்சுக்கு, "உனக்கு ஏன் இவ்வளவு வருத்தம் அதில்?" என்று சரளக்கா கேட்டாள்.

அப்பொழுது குமுதா, தன் வெகுளித்தனத்தைத் தன் பேச்சில் காண்பித்தாள். சினிமாக் கதை அவளில் ஏற்படுத்திய மனநிலையால் சினிமாவில் நடிப்பது மிகவும் நல்லவேலை என்று அவளுக்குத் தோன்றியது.

"அப்படியிருந்தால் அதையே படமாக எடுக்கலாமே. கல்யாணம் செய்து கொண்டு, காதல் வாழ்க்கை வாழ்பவர்களே நல்லவர்கள் என்கிற மாதிரி கதையை எடுப்பானேன்?" என்று சரளக்கா கேட்டபொழுது தன்னுடைய பிரமை நீங்கியது.

சரளக்கா அத்தோடு விடவில்லை. தான் பார்த்து வந்த படக்கதையிலிருந்தே தேடி எடுத்தது போலப் பல நல்ல விஷயங்களை எடுத்துச் சொன்னாள்.

"பார், குமுதா, நீ பார்த்துவிட்டு வந்த படக்கதையில் காட்டியது போல, பெண்களுக்குக் கணவன், குழந்தைகளைத் தவிர வேறு சுகம் இல்லை. பெண்ணின் இதயம் எப்போதும் தாயின் இதயம். நீ பார்த்தியோ இல்லியோ, அவ்வளவு தூரம் தன்னைக் கஷ்டப்படுத்தியிருந்த போதிலும், அந்த மனைவி தன் கணவனைக் கடைசியில் காப்பாற்றுகிறாள். கணவன் என்று எவ்வளவு

அதிகாரத்தோடு திரிந்தாலும், கஷ்டம் வரும்போது கைப்பிடித்து சமாதானப் படுத்துபவள் மனைவிதான். இவர் இவ்வளவு கதை எழுதுகிறாரே? ஒன்றிலாவது ஒரு பெண்ணாவது சுகப்பட்டாள் என்று படித்திருக்கிறாயா? நான் ஒரு தடவை அவரைக் கேட்டேன், பெண்களை ஏன் இப்படி அழ வைக்கிறீர்கள், என்று. 'ஏன் என்று கேட்டால்? அவர்கள் செய்ததை அவர்கள் அநுபவிக்கிறார்கள்' என்றார். செய்வதாவது, அநுபவிப்பதாவது. எல்லாம் கட்டுக்கதை! பெண்ணுக்கு வேண்டியது என்ன என்பதையே புரிந்து கொள்ளாமல் எழுதினால் குறுக்கு வழியில் போன மாதிரிதான். எழுதுபவரே குறுக்குவழியில் போன பிறகு, அவர் கதையில் வரும் பாத்திரங்களும் குறுக்குவழியில் தானே போகவேண்டும்? இல்லையா, சொல். 'உனக்கென்ன தெரியும்? இன்றையக் காலத்தில் நீ பழைய சம்பிரதாயத்து மனுஷி' என்று கூறிச் சிரித்தார். நான் சொன்னேன், 'பழசென்ன, புதுசென்ன? பெண் என்றால் பெண். புதிய காலம் என்பதனால், பெண்ணுக்கு மீசை முளைத்து விடுகிறதா என்ன?' என்று, சரளக்காவின் பேச்சைக் கேட்டுக் குமுதா விழுந்து விழுந்து சிரித்தாள். ஆனால் அன்று நகைச்சுவை என்று தோன்றிய அதே வார்த்தைகள், இன்று தத்துவ சிந்தனைகளாகக் குமுதாவுக்குத் தோன்றின. ஆனால் யாரிடம் சொல்வது? சுகதுக்கங்கள் நிறைந்த இந்த உலகை விட்டே சரளக்கா போய்விட்டாள். குமுதா வெறுப்புடன் சிரித்தாள். 'உலகைவிட்டே போய்விட்டாள்' அவள் பிழைத்திருந்தால் மட்டும் அவளிடம் என் சொல்வது? எப்படிச் சொல்வது? "உன் கணவனிடம் என் மனம் ஈடுபட்டிருக்கிறது" என்று சொல்வதா? "உன் கணவன் என்னை நேசிக்கிறான். நான் மனம் வைத்தால் எனக்குக் கணவன்-குழந்தைகளின் சுகம் கிட்டும். உன் உபதேசத்தை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன் அக்கா" என்று சொல்வதா? கணவன்-குழந்தைகள் இரண்டையும் சொல்லியிருந்தாளல்லவா சரளக்கா? விவாகம் செய்துகொண்ட கணவன் இல்லாமல் குழந்தைகள் இருந்தால் சுகமில்லை. குழந்தைகளில்லாமல் கணவன் இருந்தாலும் சுகம் இல்லை. குழந்தைகள், கணவன் இரண்டும் இருந்தும், விவாகம் என்ற பந்தம் இல்லாவிட்டால் சுகம் இல்லை! பெண்ணின் வாழ்க்கை எவ்வளவு பராதீனமானது! சிக்கல் நிறைந்ததும் கூட சரளக்காவின் அந்தப் பேச்சுக்களை நினைக்கும்போது. குழந்தைகளில்லாததால் அவளுக்கும் சுகம் இருக்கவில்லை என்பது குமுதாவுக்கும் புரிந்தது. அதனால்தான் இன்று சினிமாவில் சேரவேண்டுமென்ற பழைய பேச்சு

நினைவிற்கு வந்ததோ என்னவோ! எதைக் கொண்டும் சுகம் கிடைக்கும் என்ற நம்பிக்கை ஒரு பெண்ணுக்கு இல்லாமல் போய்விட்டால், சினிமாத் தொழிலில் ஈடுபடுவது நல்லதல்லவா? குறைந்த பட்சம் தகுதி இருந்தால், முயற்சி செய்தால், பணம் கிடைக்கலாம், பேரும்புகழும் சம்பாதிக்கலாம்.

யோசிக்கும் மும்முரத்தில் தான் படுக்கையை விட்டு எழுந்திருந்து, மேஜையின் மேலிருக்கும் கண்ணாடிக்கெதிரே வந்து நின்றிருப்பதைக் குமுதா உணர்ந்தாள். ஒரு நிமிடம் எதிரே தன் பிரதிபிம்பம் இருக்கிறதென்பதை மறந்து, யாரோ வந்திருப்பதாக நினைத்துத் திடுக்கிட்டாள். மறுநிமிடம் தெரியவந்தது. தன்னிடம் வருபவர்கள் யார்? ஜனங்கள் என்றையிலிருந்தோ பேச ஆரம்பித்து விட்டார்கள். அக்கம்பக்கத்துப் பெண்கள் தன்னைக் கண்டால் தீட்டு என்பது போல எழுந்து போய்விடுகிறார்கள். தனக்கு யாரும் இல்லை! ராமண்ணாவும் தன்னுடையவனல்ல. எப்படிப்பட்ட பைத்தியம் தான்! ஒரு காலத்தில் ராமண்ணா தன்னுடையவன் என்றே நினைத்திருந்தாள். ராமண்ணாவின் பேரில் தனக்கு மோகம் இருப்பதைப் போலவே, அவனுக்கும் தன் பேரில் மோகம் இருக்கிறதென்று உறுதியாக நம்பியிருந்தாள். அவ்வளவேன்? ஏதேதோ கனவுக் கோட்டைகளைக் கட்டிக் கொண்டிருந்தாள்.

மறுபடியும் கண்ணாடியில் பார்த்தாள். யாருடைய முகம் இது? இந்த வாடிய முகம், தொங்கிய மூஞ்சி தன்னுடையதல்ல. "குமுதா என்னுடைய திருஷ்டியே உனக்குப் பட்டுவிடப் போகிறது. ஜாக்கிரதை" என்று சரளக்கா எவ்வளவு முறை சொல்லியிருக்கிறாள்! சாவதற்கு ஒரு மாதத்திற்கு முன்னால், சரளக்கா அதே வார்த்தையைச் சொல்லியிருந்தாள். இன்றைக்கு நான்கே மாதங்கள். அதற்குள் எவ்வளவு மாறுதல்! செத்துப்போன சரளக்காவின் திருஷ்டியே பட்டுவிட்டதா? அல்லது சரளக்காவுக்குச் செய்த துரோகத்திற்காகத் தனக்குக் கிடைத்த சாபமா?

தன் நடத்தையில் ஏதோ தவறு இருப்பதாக இப்பொழுதெல்லாம், அதுவும் சரளக்கா இறந்த பிறகு, குமுதாவை ஓர் எண்ணம் துன்புறுத்திக் கொண்டிருக்கிறது. படுத்த படுக்கையாகி விட்ட ஒருத்தியின் கணவனை, அதுவும் தன்னைப் போற்றி வளர்த்த சரளக்காவின் கணவனை, இவ்வாறு தன்பால் அணைத்துக் கொள்வது - துரோகம் என்கிற எண்ணம் அவளுக்கு வராவிட்டாலும், அதொரு - பாவம் என்று தோன்றியது

குமுதாவுக்கு தான் செய்தது பாவம். "நீ செய்தது பாவம். உன் முகத்தைப் பார்க்கூடாது" என்று பிரதிபிம்பத்தைப் பார்த்துக் கோபத்துடன் கூறிவிட்டு, மறுபடியும் வந்து படுக்கையின் மீது அமர்ந்து கொண்டாள். தான் செய்தது - இல்லை, தான் என்ன செய்து விட்டாள்? அது எப்படிப் பாவம்? தன் தவறு என்ன? அப்படிப் பார்த்தால் தன்னுடையது ஒரு தவறும் இல்லை. இப்பொழுதும் தனக்கு நினைவிருக்கிறது. எதைத்தான் பாவம் என்று சொல்லுகிறாளோ அதன் ஆரம்பம் எப்படி ஆயிற்று. யாரால் ஆயிற்று என்பது இன்றைக்கும் அவள் கண்களில் நிறைந்திருக்கிறது. அந்த எண்ணமே வேண்டாம் என்று தோன்றியது. ஆனாலும் அந்த நினைவுக்காக இதயம் ஏங்கிக் கொண்டிருந்தது.

சினிமா பார்த்துவிட்டு வந்ததற்கு மறுநாள் நடந்த சங்கதி. சினிமா பார்த்ததனாலோ, ராமண்ணாவுக்கருகில் ஜோடியாக உட்கார்ந்திருந்தனாலோ - என்ன காரணத்தினாலோ மறுநாள் குமுதா ஒரே உற்சாகமாக இருந்தாள். அந்த உற்சாகம் இன்னும் அதிகமாகத் துளிர்விட மற்றொரு காரணம் இருந்தது. வேண்டா மென்றாலும் முடியாமல், எப்பொழுதாவது ராமண்ணாவின் பார்வையும் தன் பார்வையும் கலந்தபோது, அவன் சிரித்த முகத்துடன் தன்னைப் பார்ப்பதைக் கண்டிருந்தாள். அதனால் நாணி முகத்தைத் திருப்பிக் கொண்டு அவன் பார்வையிலிருந்து தப்ப முயற்சித்தாலும், மறுபடியும் யாரோ பலமாகப் பிடித்திழுப்பது போல உணர்ந்து, வெட்கம் காரணமாக முகத்தைக் குனிந்தபடியே கீழ்ப் பார்வையால் அவனைப் பார்த்தால், அப்பொழுதும் அதே சிரித்த முகம்! அன்று முழுவதும் அவளுக்கு நிலத்தின் மீது நடப்பதைப் போலவே இருக்கவில்லை! எப்பொழுதும் போலத்தான் நடந்தாளென்றாலும் தனக்கு மட்டும் தன்னுடைய ஒவ்வோர் அடியும் ஒரு நடனத்தின் அடிபோலவே தோன்றியது. இவ்வளவு தூரம் நாள் முழுவதும் வெயில் காய்ந்த பிறகு, மேகம் சூழ்ந்து கொண்டால் வியப்பென்ன? அப்படியொரு மேகம் கவிந்து வரத்தான் செய்தது. முந்தியநாளின் தனது பேச்சை நினைத்துக் கொண்டு சரளக்கா ராமண்ணாவுடன் பேசிக் கொண்டிருந்தாள். ராமண்ணா மாலை உணவை முடித்துக் கொண்டு, வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது பேசிக்கொண்டே, "நம்ம குமுதா சினிமாவிலே ஆக்ட் பண்ணனும் கிறாள்" என்றாள். அதற்கு ராமண்ணா என்ன பதிலைக்

கொடுத்தான்?— ஆங்? இல்லை.. என்னமோ பதிலைக் கொடுத்தான். அது வேடிக்கைப் பேச்சாக இருந்தாலும், மனத்தைப் புண்படுத்துவதாக இருந்தது. என்ன சொன்னான் அப்படி?—(நாசமாய்ப் போகட்டும். வேண்டுமென்பது முயன் றாலும் நினைவுக்கு வருவதில்லை. வேண்டாத நினைவுகள் ரம்பம் போல அறுத்துக் கொண்டே இருக்கும்)— போகட்டும். அந்தப் பேச்சு முக்கியமல்ல. அந்தப் பேச்சைக் கேட்டு சரளக்கா சிரித்ததும், தன் மனது மேலும் புண்பட்டதும் முக்கியம். சொல்லிவிட்டு ராமண்ணா போய்விட்டான். தன் சாப்பாட்டுக்கு வேண்டிய தயாரிப்பில் ஈடுபட்ட குமுதாவுக்குச் சாப்பாடு வேண்டாம் என்று தோன்றியது. மற்ற வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினாள். வெளியிலிருந்து சரளக்கா சிரித்தபடியே, "கேட்டியா குமுதா?" என்றாள். தான் அதற்குப் பதிலளிக்கவில்லை. வேலையை முடித்துக் கொண்டு வெளியே வந்து,

"உனக்கு ஏதாவது வேணுமா, சரளக்கா?" என்றாள்.

"அட, இதென்ன, அதற்குள் சாப்பாடு ஆகிவிட்டதா?" என்று சரளக்கா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"இல்லை, எனக்குப் பசிக்கவில்லை."

"ஏன் பசிக்கவில்லை?"

"என்னமோ! எனக்குத் தலைவலி."

"தலைவலியா? தலைவலி வருவதற்கு என்ன ஆயிற்று? என்னமாவது ஒன்றைச் சொல்லாதே. இவ்வளவு நேரம் நன்றாகப் பேசிக் கொண்டிருந்தாய், சிரித்துக் கொண்டிருந்தாய்—"

"இல்லை, நிஜமாகவே எனக்குத் தலைவலி வந்திருக்கிறது." என்று பிடிவாதமாக தான் பதிலளித்தாள். சரளக்கா ஒரு நிமிடம் தன்னை உற்றுப் பார்த்துவிட்டு," அவர் சொன்னதுக்காகக் கோபமா?" என்றாள்.

"யார்?"

தன் குரலிலுள்ள வேறுபாடு சரளாவுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

"சரிதாண்டி, எல்லாம் எனக்குத் தெரியும்" என்றாள்.

"இல்லை, நிஜமாகவே எனக்கு - "

"பைத்தியக்காரி! இவ்வளவு நாட்கள் இந்த வீட்டிலிருந்தும் அவர் சுபாவம் தெரியவில்லையா? வெறும் விநோதமான பேச்சு. மனத்தில் ஒன்றும் இருப்பதில்லை.

"இல்லை அக்கா. நீ என்ன சொல்லுகிறாய்? எனக்கு ஒன்றும் புரியவில்லை."

"அட, என்னிடமே காது குத்துகிறாயா? எனக்கெல்லாம் தெரியும். அவர் சொன்னதற்காகத்தான் நீ கோபித்துக் கொண்டிருக்கிறாய்! ஐயோ, பைத்தியக்காரி! அவர் பேசியது அவருக்கே தெரியாது. அவர் மனத்தில் ஏதாவது உற்சாகம் இருந்தால், ஏதாவது புதிதாக எழுதத் தோன்றியிருந்தால், அதைத் தொடங்கும் வரையில் சிக்கியவர்களிடம் என்னத்தையாவது வேடிக்கையாகப் பேசுவார். அப்படித்தான் இப்போதும் பேசினார். இன்றில்லாவிட்டால் நாளைக்கு உனக்கும் அவர் சுபாவம் புரியும்." என்று சிரித்தபடியே கூறிவிட்டு, "போ, உன் தட்டை இங்கேயே கொண்டு வா. என்னோடு பேசிக் கொண்டே சாப்பிடு வியாம். எப்படிப் பசிக்கலை என்று பார்க்கிறேன்" என்றாள்.

ஆனால் தனக்கு மட்டும் மனம் வரவில்லை. உள்ளில் அழுத்தும் வேதனையினால் அங்கே வெகுநேரம் நிற்க முடியவில்லை. "இல்லை, எனக்கு ரொம்பவும் தலை வலிக்கிறது. ஏதாவது வேண்டுமானால் கூப்பிடு, வருகிறேன்" என்று கூறிவிட்டுத் தன் அறைக்குச் சென்று விட்டாள்.

அறையில் மனம் ஒரு நிலையில் நிற்கவில்லை. இருட்டாக இருந்த போதிலும், அறையில் விளக்கை ஏற்றாமல் அப்படியே படுக்கையின் மீது விழுந்து கிடந்தாள். அவள் கவனமெல்லாம் வெளிக்கதவின் ஓசை மீதே. கடைசியாக அந்த ஓசை கேட்டது. மெதுவாக எழுந்திருந்தாள். சப்தம் செய்யாமல் சரளக்காவின் அறைக்கு வெளியே பதுங்கி நின்று கொண்டாள். உள்ளே என்னென்னவோ பேச்சுக்கள். சரியாகக் கேட்கவில்லை. கடைசியில், "சே! சே! இதென்ன? மனம் புண்பட்டிருந்தால் தவறு நேர்ந்து விட்டது என்று சொல்கிறேன். ஹூம் அழைத்துக் கொண்டே வருகிறேன்" என்று ராமண்ணா சொல்வது கேட்டது. அவன் குரல் சிறிதுசிறிதாகச் சமீபத்தில் நெருங்குவதையறிந்து, ராமண்ணா தன்னைப் பார்க்கப் புறப்பட்டிருக்கிறான் என்பதை யறிந்து, பயந்து குதிக்கால்களின் மீது தன் அறைக்கு ஓடிச்சென்று படுக்கையில் விழுந்து கொண்டாள்.

காலம் முடிவற்றது என்பது குமுதாவுக்கு அப்போது தெரிந்திருக்கவேண்டும். ஓரிரு நிமிடங்களிலேயே ராமண்ணா அவள் அறைக்கு வந்த போதிலும், அநாதிகாலந்தொட்டு அவள் அவனுக்காக வழிபார்த்தது போல அவளுக்குத் தோன்றியது.

பயத்தாலும் அவசரமாகவும் ஓடி வந்ததனால், அவள் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. அந்த சப்தம் ராமண்ணாவுக்குக் கேட்டு விடக்கூடாதே என்பதற்காகத் தன் நெஞ்சின் மீது கைகளை வைத்துக் கொண்டிருந்தாள். ராமண்ணா வந்தான். அறையில் விளக்கில்லாததைக் கண்டு பயந்தானோ என்னவோ! ஏனென்றால் மெல்லிய குரலில், "குமுதா-கு-மு-தா!" என்று கூப்பிட்டான். தான் பதில் கொடுக்கவில்லை என்னவென்று பதிலளிப்பது? பயமாக இருந்தது. பதில் கொடுத்தால், அவன் வாசலிலேயே நின்று பேசுவான், உள்ளே வரமாட்டான் என்று தோன்றியது. தன் இதயப் படபடப்பைக் கவனித்தபடி பேசாமல் படுத்திருந்தாள். ராமண்ணா உள்ளே வந்து மறுபடியும் தன்பெயரைச் சொல்லிக் கூப்பிட்டான். "எங்கே இருக்கிறாய், குமுதா? படுத்துக் கொண்டு விட்டாயா என்ன?" என்று கூறியபடி, படுக்கையின் ஓரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான். "தலைவலியா உனக்கு?" என்று கேட்டபடி தனது இரண்டு நெற்றிப் பொட்டுக்களையும் விரல்களால் அமுக்கிவிட்டான். (மோட்சம் என்றால் சுகம்-துக்கம்-காலம்- தேசம் முதலிய வேறுபாடுகளை மீறிய ஒரு நித்தியசாத்வீக சுகம் என்பது, குமுதாவுக்குத் தெரிந்திருந்தால், அந்தக் கணத்தில் தனக்கு மோட்சம் கிடைத்து விட்டது என்று அவள் உணர்ந்திருக்கக்கூடும். ஆனால் அவளுக்கு அது தெரியாததால்) குமுதா உயிர்பிழைத்திருக்கும்போதே அமரளாகி விட்டது போன்று மெய்மறந்தாள்.

"உனக்குத் தலைவலியா? பைத்தியமே! தலைவலி வரவேண்டுமென்றால் முதலில் மூளை இருக்கவேண்டும். மூளை இருந்திருந்தால் நான் சொன்ன பேச்சின் அர்த்தம் உனக்குப் புரிந்திருக்கும். உண்டா இல்லையா? ஹூம்? எழுந்திரு, சாப்பிட வா. . பாவம்! சரளா எவ்வளவு மன வருத்தமடைந்திருக்கிறாள் தெரியுமா?"

அவன் சொன்னதைக் கேட்டுச் சிரிப்பு வந்தது. சரளாவின் நிலையைக் கேட்டுப் பச்சாத்தாபம் ஏற்பட்டது. இருந்தாலும் தான் எழுந்திருக்கவில்லை. ராமண்ணா தன்னைக் குஷிப் படுத்துகிற குரலில் பேசியபடி, கடைசியாகத் தன்கையைப் பிடித்து எழுப்ப முன்வந்தான். அவள் உடலெங்கும் ஒரு மின்னல் போன்ற உணர்ச்சி, நெஞ்சை விட்டுக் கைகளை எடுத்து விட்டதனால் இதயம் பூரித்தது. ராமண்ணா திருப்தியடைந்தவனாக விரல்களை மடக்கி, முஷ்டியை இறுக்கியபடி.. ஒருகணம், அல்ல

யுகம்- "சரளாவுக்காகவாவது சாப்பிடவா. வேண்டுமானால் என் தவறுக்காக நான் பிறகு மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்" என்று கூறி, ராமண்ணா தன்னை அறையிலிருந்து வெளியே அழைத்துக் கொண்டு சென்றான்.

அன்று இரவு சாப்பிட நினைவே இல்லை. "நல்லதாப் போச்சு, குமுதா. வயிறு நிறைய சாப்பிட்டியே" என்று சரளக்கா சொன்ன போதுதான், தான் சாப்பிட்டு முடித்திருந்தது நினைவுக்கு வந்தது. "இப்போ தலைவலி இல்லையே? ரொம்பப் பசி என்பது தெரியாமல், தலைவலி என்று நினைத்துக் கொண்டு விட்டதோ என்னமோ இந்தப் பெண்!" என்று கூறிச் சரளக்கா சிரித்தபோது, தான் கவனமில்லாமல் அளவுக்கு மிஞ்சிச் சாப்பிட்டு விட்டேனோ என்று பயந்தாள். "வயிறு நிறையச் சாப்பிட்டால் யார் என்ன சொன்னாலும் உறைக்காது பார்" என்று வேறு சரளக்கா தன்னைச் சீண்டினாள். எப்படியோ சாப்பாடு என்கிற பொறுப்பையும் நிறைவேற்றி, சரளக்காவின் மனத்திலிருந்த குறையையும் போக்கிவிட்டுத் தன் அறைக்கு வந்தாள். வந்தவள் மிகவும் களைத்துப் போனவள் போல, ஏதோ ஆபத்திலிருந்து தப்பித்தவள் போல, நெடுமூச்செறிந்து படுக்கையில் அப்படியே விழுந்தாள். விளக்கை ஏற்றினால் எங்கே மனத்திலிருக்கும் எண்ணம் ஓடிப்போய்விடுமோ என்கிற சந்தேகத்தில் விளக்கை ஏற்றவில்லை. உள்ளுக்குள் ஒரே ஓர் எண்ணம். "பிறகு நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்" என்று சொல்லியிருந்தான் ராமண்ணா. அப்படியானால் மறுபடியும் அறைக்குள் வருவானா? விளக்கை ஏற்றி வைப்பது நல்லது என்று தோன்றிற்று. ஆனால் வெளிச்சத்தில் தன்னுடைய நாணிய முகத்தை ராமண்ணா காணக்கூடும், அதனால் விளக்கு வேண்டாம் என்று நினைத்தாள். இருட்டிலேயே கதவை உற்றுப் பார்த்தபடி படுத்திருந்தாள். ராமண்ணா நிஜமாகவே வந்தால்? வந்தால்? மன்னிப்புக் கேட்டால்? தான் என்ன சொல்லவேண்டும்? சீ! இது என்ன பைத்தியக்கார எண்ணம்! ராமண்ணாவைப் போன்றவன் தன்னிடத்தில் மன்னிப்புக் கேட்பதாவது? அதற்கு முன்னர் தவறு தன்னுடையதே என்று தானே சொல்லிவிட வேண்டும். எவ்வளவு வேடிக்கையான மனிதன் ராமண்ணா! தனக்கு மூளை இல்லை என்று சொல்லும் போது, தன் தலையைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

"குமுதா!"

திடுக்கிட்டாள். ராமண்ணாவின் குரல்! அடடா வந்தே விட்டார் என்று எழுந்திருக்க முயன்றபோது, கால்கள் அவள் இச்சையை நிறைவேற்ற மறுத்தன. எழுந்திருக்க வேண்டும், எழுந்திருந்து தானே மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று நினைத் திருந்த குமுதாவுக்கு வாயையே திறக்க முடியவில்லை. அறையில் நிறைந்திருந்த இருட்டே அவளுக்குத் தைரியம் ஊட்டியது - தன் நிலையை யாரும் கண்டு கொள்ளமாட்டார்களென்று. ராமண்ணாவுக்கு மட்டும் தான் எழுந்திருக்க முடியாமலிருப்பது புரிந்ததோ என்னவோ! நேரே வந்து படுக்கையின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"தலைவலி எப்படி இருக்கிறது? ஊம்?"

என்ன பதிலளிப்பது? நெற்றியில் படிந்திருந்த தனது கூந்தல்களை ராமண்ணா தன் கையால் பின்னுக்குத் தள்ளிவிட்டுக் கொண்டிருக்கிறான். அவள் அதில் தன்னை மறந்தாள். என்ன பதில் கொடுப்பது?

"உன்னிடம் மன்னிப்புக் கேட்க வந்திருக்கிறேன், குமுதா. நீ வாய் திறந்து ஊம் என்று சொன்னாலொழிய இங்கிருந்து வெளியே போகப் போவதில்லை" என்றான் ராமண்ணா.

அப்படியானால் தான் ஹூம் என்றாவது சொல்ல வேண்டியிருந்தது? அந்த ஒரு வார்த்தையின் மீதே தன்னுடைய எதிர்காலம் நிலைக்க வேண்டுமா? ஆனால் அவளால் வாயைத் திறக்க முடியவில்லை.

"நான் போகமாட்டேனென்றால் போகமாட்டேன்" என்று கூறி ராமண்ணா கால்களை நீட்டிப் படுக்கையில் படுத்துவிட்டான்.

குமுதாவின் உடல் தரதரவென்று நடுங்கியது. அது ராமண்ணாவுக்குத் தெரியாமல் இல்லை. "அட, நிஜமாகவே ஜீரம் கிரம் வரப்போகிறதா, இல்லையே?" என்று கூறியபடி, தனது புறங்கையைக் குமுதாவின் வயிற்றின் மீது வைத்துத் தொட்டுப் பார்த்தான். தன் உடல் நடுக்கம் நின்று விட்டிருந்தது.

"நீ 'ஊம்' என்று கூட சொல்லமாட்டாய்? எவ்வளவு பிடிவாதம் உனக்கு?" என்று காதுகளில் கிசுகிசுத்தான். ராமண்ணாவின் முகம் இப்போது தன் முகத்திற்கு அருகில் இருந்தது. "சொல், நடுங்குவது போல், நடிக்காதே" என்று இடது பக்கம் திரும்பி, வலக்கையால் தன்னைப் பிடித்தணைத்தான். குமுதாவின் வாய்க்கு என்ன வந்திருந்ததோ! அரை திறந்திருந்த அந்த வாயிலிருந்து ஒரு

வார்த்தையும் வெளிவரவில்லை! "நீ வாயை மூடிக் கொண்டாலும் நானும் வாயை மூடிக்கொள்கிறேன்" என்று, கூறி வாயோடு வாயை வைத்து வலது கையால் தன்னை இன்னும் இறுக அணைத்துக் கொண்டான்.

அன்று இரவு குமுதாவுக்கு ஏதோ இனமறியாத பயமுண்டாயிற்று. இயற்கை பெண்ணுக்கு விதித்திருந்த தர்மத்தின் கற்பனை அவளுக்கு இருக்கவில்லை, அறிவும் முழுமையாக இருக்கவில்லை. ஆனால் அந்த தர்மத்தின் பாதை சுலபமானதல்ல என்று அவ்வப்போது தோன்றியது. எது உண்மை? உடலுக்கேற்பட்ட பாதையா? மனதிற்கேற்பட்ட ஆனந்தமா? ஒவ்வொரு சமயம் பாதையே ஆனந்தமாகத் தோன்றி ஒன்றும் விளங்காமல் இருந்தது. ராமண்ணாவின் கைகள் தன் மார்பகத்தைத் தொட்ட போது, அந்தக் கைகளில் எத்தகைய சக்தி இருக்கிறதென்பதைக் கண்டபோது, அதென்ன சுகமா, துக்கமா? அவளுக்குப் புரியவில்லை. தன் உதடுகளோடு பொருந்திய ராமண்ணாவின் உதடுகள், அப்போது அவன் தன் கீழுதட்டைக் கடித்தபோது, ரத்தத்தோடு சுகமும் கசிந்ததோ என்று தோன்றியது. ஒருமுறை ஏதோ பொறுக்க முடியாத வேதனை ஏற்பட்டாற்போல இருந்தது; ஆனால் அது வேதனையல்ல என்பதுபோலத் தன் வாயிலிருந்து மிகவும் திருப்தியோடு கூடிய ஒரு முனகல் வெளிப்பட்டது. வேண்டாம், வேண்டாம் என்று சொல்லும்போதே வேண்டும் என்கிற பாவம் தன் தொடை மீதுள்ள குழந்தையைப் போலச் சிரித்தது. "குமுதா, குமுதா" என்று ராமண்ணா ஆழ்ந்த, ஆனால் அடங்கிய குரலில் கூப்பிட்டபோது, அந்தத் தன் பெயர் நேரே இதயத்தில் புகுந்து அதைத் தட்டி எழுப்பிவிட்டதோ என்னவோ! அவ்வாறு அவன் தன் பெயர் சொல்லி அழைத்ததுமே, குமுதா தனது இரண்டு கைகளாலும் அவனை இறுக இழுத்து அணைத்துக்கொண்டாள். அப்போது, ராமண்ணாவின் உடலை தனது கைகளால் கட்டித் தழுவித் தூள்தூளாக்கித் தன்னுள்ளே அடக்கிக் கொண்டுவிட வேண்டும் என்பது போல் ஒரு குரூரமான காதல் வெறி தன்னுள் மூண்டிருந்தது.

"காதல்" குமுதா கனவிலிருந்து விழித்துக் கொண்டவள் போல, இந்தப் பழைய நினைவுகளை உதறிவிடுவதற்காகத் தலையை அசைத்தாள். பெருமூச்சுவிட்டாள், காதல! இரண்டு வருடங் களாகத்தான் அந்த வார்த்தைக்குப் பலியாகியிருக்கிறாள். அன்று

"குமுதா, குமுதா" என்று, இருட்டில் தன் இதயத்தையே திறந்து தன்னை அழைத்த ராமண்ணா, இன்று - போகட்டும் என்று சொல்லிக் கொண்டாள். இனி அந்தப் பேச்சு எதற்கு? அந்த முதல் இரவின் தவறு தன்னுடையதல்ல, ராமண்ணா அவ்வாறு நடந்து கொண்டிருக்காவிட்டால், தனக்குத் துணிவே இருந்திருக்காது. தவறு தன்னுடையதல்ல; தான் மனத்தால் எண்ணிப் பார்த்துப் பாவம் செய்ய முற்படவில்லை என்று நினைத்தாள். ஆகிப்போன தெல்லாம் பொய், நடந்தவை மட்டுமே நிஜம் என்று சொல்லியபடி, நெட்டுயிர்த்தவாறு படுக்கையிலிருந்து எழுந்திருந்தாள். இனியும் விழித்துக் கொண்டிருந்தால் இந்த நினைவுகளிலிருந்து தப்ப முடியாது என்று நினைத்து, தூங்கப் போவதற்கான ஏற்பாடுகளில் முனைந்தாள். அப்பொழுது என்ன ஞாபகம் வந்ததோ என்னவோ! படுக்கையின் மேலிருந்த போர்வையை எடுக்க வேண்டுமென்று போனவள், அதைப் பாதியில் அப்படியே விட்டுவிட்டு, சித்திரப்பாவை போல நின்றுவிட்டாள்.

## 9

சுலபமாகக் கிடைக்கும் பொருளின் மீது முதலில் அளவு கடந்து ஆசை; பிறகு இவ்வளவு சுலபமாகக் கிடைத்துவிட்டதனால் அதன் பேரில் வெறுப்பு, ராமண்ணா திடுக்கிட்டான். எதைப்பற்றி இந்த எண்ணம் தன் மனத்தில் எழுந்தது. தன் கையில் இருந்தது புத்தகம் அதைப்படிக்கத் தொடங்கினான். அந்தப் புத்தகத்தைப் பற்றி இந்த எண்ணம் தோன்றியிருக்க முடியாது. அப்படியானால் தான் எழுதப்போகிற புத்தகங்களைப் பற்றியா? ஏனென்றால், பலமுறை அவனுக்கு அது போன்ற அநுபவங்கள் ஏற்பட்டிருந்தன. ஒரு விஷயம் மிகவும் முக்கியமானதென்று தோன்றி, எப்போது அதைப்பற்றி புஸ்தகம் எழுதப் போகிறேன் என்று ஒரே ஆதுரம். பிறகு எழுத ஆரம்பித்து சில நாட்களில் எழுதி முடிந்ததும், அதன் மீது வெறுப்பு. ஏன்? சில நாட்களில் எழுதி முடிக்கக்கூடிய புத்தகம், எப்படி முக்கியமானதாக இருக்கமுடியும் என்று. ஆனால் அந்த எண்ணம்தான் இப்போது ஏன் வரவேண்டும்? தன் கையில் புத்தகம் இருப்பதனாலா? ஆங் - தெரிந்தது. 'கையில் புத்தகம்' புத்தகம் என்பதை விட "கையில்" என்பதையே தன் உள்மனம் அழுத்தமாகக் காட்டுகிறது. இதுவரையில் பழைய நினைவு களையே நினைத்துக் கொண்டிருந்த அந்த ஓட்டத்தில் இரண்டு, இரண்டரை வருடங்களுக்குமுன் குமுதா தன் "கையில்" கிடைத் தாள் என்று அடிமனம் தானாகவே நினைத்துக் கொண்டிருக்கிறது. இப்போது தனக்குக் குமுதா விஷயத்தில் ஒருவகை வெறுப்பு

இருப்பது உண்மையானதால், அந்த வெறுப்புக்குச் சமாதானம் தேடியிருக்கிறது உள்மனம். அது வெளிமனத்திற்குத் தெரிந்திருக்க வேண்டும்! அதனால் தான் தனக்கு அந்த எண்ணம் தோன்றியிருக்கவேண்டும். "சுலபமாகக் கிடைக்கும் பொருளுக்காக முதலில் அதிக ஆசை", உண்மை. தான் மற்றும் குமுதா இவர்களைப் பொறுத்தமட்டில், இது வார்த்தைக்கு வார்த்தை உண்மை. எப்படியோ என்னமோ - அன்று அலமாரிக்கெதிரே அவளை இறுக அணைத்துக் கொண்டபோது, அவள் முகபாவத்தைப் பார்த்து, ராமண்ணாவுக்கு உள்ளுக்குள்ளே ஒரு ஆசை முளைவிட்டது. அதற்கு முன்பாகவே அவள் தன்னை விரும்பியிருக்கிறாள் என்றும் தோன்றியது. இருந்தாலும் தன் மனத்தின் இந்த சாட்சியத்தின் பேரில் ராமண்ணா முழு நம்பிக்கை வைக்கவில்லை. யாருக்குத் தெரியும்? ஒரு வேளை சரளாவிடம் சொனனால் - என்று பயந்தான். அதற்காக - இப்பொழுதும் ராமண்ணாவின் முகத்தில் அந்த நினைவுக்காக புன்முறுவல் தோன்றுகிறது - மறுநாள் தான் அநேகமாகச் சரளாவின் பக்கத்திலேயே நடமாடிக் கொண்டிருந்தான். நாள் முழுவதும் வெளியிலே சுற்றியலைந்தான். ஆனால் ஒருதடவை அகஸ்மாத்தாக குமுதாவின் பக்கம் பார்த்தபோது, அந்தக் கண்களிலே பயம் இருக்கவில்லை, கோபம் இருக்கவில்லை, அந்தப் புருவங்கள் நல்வரவு கமானைப் போலத் தோன்றின ராமண்ணாவுக்கு. உள்ளில் இருந்த ஆசையைத் தூண்டிவிட்டாற்போல ஆயிற்று. அப்பொழுது மட்டும் முதல் முறையாகவும் கடைசிமுறையாகவும், ராமண்ணா தன் மனத்தை அடக்க முயன்றான் என்று சொல்லலாம். வேண்டாம், இந்த வம்பே வேண்டாம் என்று நினைத்திருந்தான். சரளாவின் பக்கத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த போதும், முந்தின இரவு ஏற்பட்ட ஸ்பர்ச சுகத்தின் இனிமை வாயில் நீருறுவது போல நினைவுக்கு வந்தது. அப்பொழுது சரளாவின் கையைப் பிடித்து அமுக்கி, அந்த நினைவின் சுகத்தை மறக்க முயன்றான். சரளா சிரித்த முகத்துடன தன்னைப் பார்த்து," கடவுள் சீக்கிரம் எனக்கு அந்தச் சக்தியைக் கொடுக்கட்டும்" என்றாள். முதலில் ஒன்றும் புரியாமல் ராமண்ணா திடுக்கிட்டு, "என்ன சொன்னே?" என்றான். சரளா அதே சிரித்த முகத்தோடு "ஒன்றுமில்லை" என்று சொல்லி தன் கையை - பாவம் சக்தியில்லாமலிருந்தாலும்கூட, அன்பின் சக்தியினாலோ என்னவோ என்று சொல்வது போலப்பிடித்து அழுத்தினாள். அன்று வேறென்னமோ விசேடம் நடந்திருந்தது

வீட்டின் ஒழுங்கு, நேர்த்தி விஷயமாக. என்ன அது? போகட்டும், நினைவிலிருப்பது, மறுநாள் குமுதாவை சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்பது. அதுவும் சரளாவுடைய வற்புறுத்தல்.

இந்த விஷயம் ஞாபகத்திற்கு வந்தவுடன், ராமண்ணா மறுபடியும் முகத்தைத் திருப்பிப் படத்தைப் பார்த்தான்; நெடுமூச்செறிந்தான். "பைத்தியக்காரி! நான் எவ்வளவு முயன்றேன்! எல்லாவற்றையும் நீ கெடுத்துவிட்டாய்! உன் கையாலேயே உன் வாழ்க்கையை இன்னொருவளுக்கு எடுத்துக் கொடுத்து விட்டாய்! அதனால் தான் சொல்கிறேன், சரளா இதெல்லாம் உன்னுடைய தவறு என்று" என்று படத்தைப் பார்த்துக் கதையும் அறிவுரையும் சொன்னான்.

ராமண்ணா யோசித்துப் பார்த்தான். உண்மையில் நடந்ததெல்லாம் சரளாவின் தவறு என்று சொல்லும் போதும், சரளாவின் தூய்மையான உள்ளத்தைப் பற்றிய நினைவு அவனை வதைத்தது. தூய உள்ளத்துடன் செய்ததைத் தவறென்று கூற முடியுமா? ஏன் சொல்லக்கூடாது? விவகார முறைகளே விபரீதமாக இருக்கும் பொழுது, வாழ்க்கை முறைகளும் ஏன் விபரீதமாக இருக்கக்கூடாது? அநியாயமான வழிகளில் சம்பாதித்த பணத்தைக் கொண்டு கோவில் கட்டியவனைப் "புண்ணியவான்" என்று சொல்லுவதில்லையா? பாவத்தால் தூண்டப்பெற்று, புண்ணியத்தைச் செய்ய முடியும் என்றால், புண்ணியத்தின் தூண்டுதலால் பாவத்தைச் செய்யக்கூடாதா? பின்னிலையில் இருக்கும் தூய உள்ளம் முக்கியமா? அதன் விளைவாக ஏற்பட்ட அநர்த்தம் முக்கியமா? தேசம் – காலம் இவைகளின் எல்லைக்குட்பட்டே ஞானம் கிடைக்கும் – இந்த உலகில் செய்கை முக்கியம். எனவே நடந்துவிட்ட அநர்த்த சம்பவம் முக்கியம். ஆகவே – ராமண்ணா தயங்கினான். தனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன? என்ன விஷயம், எந்தச் சூழ்நிலை, அவைகளைச் சரிக்கட்டுவதற்காகத் தான் உருட்டுகின்ற தத்துவஞானக் கற்கள்தான் எப்படிப்பட்டவை! இந்த சுபாவத்தினால்தான் மனிதன் கடைசியில் ஞானம் எய்துவதற்குப் பதில், அந்தப் பாறிங்கற்களின் கீழ்ச் சிக்குண்டு தூள்தூளாகிப் போகிறான். ராமண்ணா தன் பேரிலேயே வெறுப்போடு சிரித்தபடி மறுபடியும் சரளாவின் படத்தைப் பார்த்தான். "சரளா, பார்த்தாயா உன் புருஷனின் நிலைமையை? வேண்டியதைச் செய்யக்கூடிய

யோக்கியதை உள்ளவன் என்று நீ நினைத்திருந்தாய். ஆனால் வேண்டாததைச் செய்துவிட்டு, அதை ஜீரணித்துக் கொள்ள முடியாமல் நினைவுகளின் அஜீரணத்தால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறான்." ராமண்ணா எழுந்திருந்து இப்படியும் அப்படியுமாக உலாவத் தொடங்கினான். அஜீர்ணத்தைப் போக்கு வதற்கு தேகப்பயிற்சி அவசியம் என்று நினைத்தவனைப் போல, முதுகுக்குப் பின்னால் கையைக் கட்டிக் கொண்டான். தன் அடிகளைப் பார்த்தவாறு முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு இங்கும் அங்குமாக நடக்கும் போது திடீரென்று," அந்தப் பாழும் சினிமா வுக்குப் போனதனால்தான் இப்படியெல்லாம் ஆயிற்று. எங்களை சினிமாவுக்கு அனுப்பியது சரளாதான்" என்று நினைத்துக் கொண்டான். கோபம் வந்தது யார்மேல் என்று சரியாகத் தெரியாததால், நாற்காலியை முரட்டுத்தனமாக இழுத்துத் தரையில் மோதி, அதில் உட்கார்ந்தபடி எதிரேயிருந்த சுவரை உற்றுநோக்கினான்.

உள்ளே சினிமாவைப் பற்றிய எண்ணம், வெளியில் எதிரே சுவர். உற்றுப்பார்க்கப் பார்க்க, ராமண்ணாவுக்கு அன்று குமுதாவை சினிமாவுக்கு அழைத்துக் கொண்டுபோன நிகழ்ச்சியே மறுபடியும் நினைவுக்கு வந்தது. இப்பொழுதும் குமுதா தன் இடதுபுறம் நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாளோ என்பதுபோலச் சிறிது இடப்பக்கம் உடலை வளைத்து நகர்ந்து உட்கார்ந்து கொண்டான். அன்று சினிமாவில் உட்கார்ந்திருந்த போது, அவளைத் தொடவேண்டுமென்று ஆசை, அவள் கையைத் தன் கையில் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசை, ஒவ்வொரு சமயம் தன் இடது கையினால் அவளைச் சுற்றி அணைத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசை. இந்த ஆசைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதற்காக அவன், குமுதாவுக்குக் கதையை விவரிப்பதில் உற்சாகத்தோடு ஈடுபட்டான். எவ்வளவு பேசினான் அன்றைக்கு! குமுதாவோ ஊம் என்று ஒரு சப்தம்கூட எழுப்பவில்லை. ஆனால் ஓரிரண்டு தடவை இருட்டில் பேசிக் கொண்டிருந்த தன்னைப் பார்த்துக் கொண்டிருந்தபோது படத்தின் வெளிச்சத்தில் அவள் கண்களின் பிரகாசத்தைக் கண்டபோது, அந்த முகத்தைக் கைகளில் தாங்கிக் கொண்டு முத்தமிடவேண்டுமென்று தோன்றியது. சட்டென்று எச்சிலை விழுங்கியபடி பேசுவதை நிறுத்திக் கொண்டான். இது யாருடைய தவறு? தன்னுடையதா? சரளாவினுடையதா?

இவ்வளவு நாட்களுக்குப் பிறகு ராமண்ணா இப்போது இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டான்.

தப்பு யாருடையதாக வேண்டுமானால் இருக்கட்டும், ஏற்கெனவே குறித்து வைத்திருந்தபடி என்பது போலச் சம்பவம் நடந்து விட்டதே? குமுதாவுக்கு ஏற்கனவே ஏற்பட்டிராத அநுபவம் - படத்தைப் பார்ப்பது. அதனால் உற்சாகம். தனக்கோ அவளைப் பார்த்து உற்சாகம். மறுநாள் தான் அதே உற்சாகமான மனநிலையில் இருந்தபோது தான் என்ன பேசினானோ! அந்தப் பேச்சினால் என்ன விநோதம்! - நினைவுக்கு வராத அந்த அற்ப விஷயத்தினால், என்றைக்குமே மறக்க முடியாத ஒரு கதை ஆரம்பமாகிவிட்டது! குமுதாவின், கோபமோ? நிஜமாகவே தலைவலியோ? - மனஸ்தாபத்தைத் தீர்ப்பதற்காகத் தான் அவள் அறைக்குப் போனபோது, ராமண்ணாவுக்கு முழு நம்பிக்கை தோன்றியது - குமுதா தனக்கு வசமாகி விட்டாள் என்று ... இப்பொழுதும் அந்த முதல் அநுபவம் நினைவலிருக்கிறது. அவளைச் சமாதானப்படுத்தி, கைபிடித்து எழுப்பவேண்டுமென்று தான் கை நீட்டி - அவள் கையைப் பிடிக்கப் போன போது நடந்த சம்பவத்தை நினைத்தால், தான் பண்பட்ட மனிதனா? மிருகமா? (மிருகத்திற்கு இதுபோல ஞாபக சக்தி உண்டா?) - இப்பொழுதும் உடல் 'ஜும்' மென்கிறது. அவள் தன் கைகளை நெஞ்சின் மீது வைத்துக் கொண்டு படுத்திருந்தாள். அவள் கையைப் பிடிக்கத் தன் கையை நீட்டியபோது அவளுடைய விரல்கள் மட்டுமே தன் கையில் பட்டாலும், கூடவே அவளது மார்புப் பகுதியையும் தன் கை தொட்டுக் கொண்டிருந்தது. ஒரு நிமிடம் அவன் பயந்து போய்விட்டான், அவள் ஏதாவது திகிலடைந்து கூச்சல் போட்டுவிடுவாளோ என்று. ஆனால் அதற்குள்ளாக அவள் தன் விரல்களை விடுவித்துக் கொண்டு, தன் கைக்கு முழு அவகாசத்தை உண்டாக்கித் தந்தாள். அப்பொழுது அவனுக்குப் பரிபூரண நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. மெய்மறந்தான். ஆனால் மிக்க பிரயாசையுடன், புத்தியின் பலம் கொண்டு, தன்னை அடக்கிக் கொண்டான். "குமுதாவை அழைத்துக் கொண்டு வருகிறேன்." என்று சரளாவிடம் சொல்லிவிட்டு வந்திருந்தான். இப்போது தாமதிக்க முடியாது. ஆனால் கிடைக்கும் சந்தர்ப்பத்தை இழக்கவும் முடியாது என்று நினைத்து, ஒரு பேச்சைச் சொல்லி அவளை எழுப்பினான். எவ்வளவு கெட்டிக்காரத்தனமான பேச்சு அது! தனக்கு உண்மையில் என்றைக்காவது கற்பனை

தோன்றியிருந்தால், அந்தப் பேச்சைச் சொன்னபோதுதான் இருக்கவேண்டும். "சரளாவுக்காச் சாப்பிடவா. நான் அப்புறம் வந்து மன்னிப்புக் கேட்கிறேன்" கற்பனையின் ரகசியம் தெரிந்தாற்போலாயிற்று அல்லது கற்பனை என்பது வேறொன்று மில்லை. இயற்கையான காம இச்சைக்காக மெய் மறக்கும் தன்மையிலிருந்துதான் கற்பனை பிறக்கிறதோ?

அப்பொழுதும் கூடக் கற்பனையைப் பற்றிய எண்ணம் வருவதற்கு, ஒரு விசேஷக் காரணம் இருந்தது. அன்று இரவு தான் குமுதாவுடன் இன்பம் துய்த்தது. அநுபவஸ்தனான தனக்கும் கூட ஒரு புது சக்தியைக் கொடுத்திருந்தது. அன்றைக்கே ஒரு புதுப் புத்தகம் எழுதத் தொடங்கியிருந்தான். அந்தப் புத்தகத்தை தான் என்றைக்கும் விட அதிகமாக மெய்மறந்து எழுதத் தொடங்கி னான். ராமண்ணாவுக்கு ஆச்சரியம். ஒரு கோணத்தில், சமூகத்தை இடர்ப்பாடுகள் இன்றி நடத்திச் செல்வதற்காக ஏற்படுத்துப் பட்ட விதிகளின் - லௌகீகத்தின் - கோணத்தில் தான் செய்தது தவறு, பாவம்; ஆனாலும் தன் மனம் உற்சாகமாக இருக்கிறது, தனது அறிவு கூர்மையாக இருக்கிறது, தன் உடல் புதிய வலிமை பெற்றதாக இருக்கிறது ! ஏன்? குமுதாவின் பேரில் தனக்குக் காதல் இருக்குமோ? -

இந்தக் கேள்விக்கு மறுநாள் காலையில் பதில் கிடைத்தது. தெளிவான பதில், குமுதாவின் பேரில் தனக்குக் காதல் இல்லை என்று. ஏனென்றால், எழுந்தவுடன் ராமண்ணா சரளாவின் அறைக்குத்தான் பாய்ந்து சென்றான். தான் எழுத ஆரம்பித்திருந்த புத்தகத்தைப் பற்றி உற்சாகத்துடன் அவளிடம் சொல்லத் தொடங்கினான். அவளுடைய அபிமானம் நிறைந்த பார்வை தன்மீது பதிந்தபோது, உலகில் சரளா மற்றும் தான் இருவரைத் தவிர வேறுயாருமே இல்லை என்பதுபோல மெய் மறந்திருந்தான். அவ்வளவேன்? நாள் முழுவதும் சரளாவின் அருகிலேயே உட்கார்ந்திருந்தான். "எழுதவில்லையா?" என்று கேட்டபோது, "ராத்திரி எழுதுவேன்" என்று அவளுக்குப் பதில் சொன்னான். "ஆனால் லட்சியம் இல்லாமல், இங்கே என்னைப் பார்த்துக் கொண்டு ஏன் உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று அவள் கேலி செய்தபோது, "லட்சியம் வெளியே இல்லை. உள்ளே இருக்கிறது. ஏனென்றால் நீயும் உள்ளே இருக்கிறாய்" என்று கூறினான். அதற்கு அவள், "ஆரம்பமாயிற்று சர்க்கரைப் பேச்சு" என்று வெட்கியபோது, "சர்க்கரைப் பேச்சல்ல, சரியான பேச்சு.

பைத்தியக்காரி, உள்ளே நீ இல்லாமல் வெளியே புத்தமே வராது" என்று கூறியவன், சட்டென்று குனிந்து அவள் நெற்றியில் முத்தமிட்டான். இவைகளினால் சரளாவின் பேரில்தான் தனக்குக் காதல் உறுதியாக இருக்கிறது என்று முடிவுக்கு வருவதற்குள் சந்தேகப் பேய் அவனுள் புகுந்து கொண்டது. சரளாவின் பேரில் காதல் இருப்பதால் நான் இப்படி நடந்து கொள்கிறேனா, அல்லது அவளுக்குச் செய்த அநியாயத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்கிறேனா? பகல் வெளிச்சம் மறைந்ததும் இந்தச் சந்தேகத்திற்கு வலுகூடத் தொடங்கிற்று. காலையிலிருந்து அதுவரையில் அவன் குமுதாவின் கண்களிலிருந்து தப்பித்துக் கொண்டிருந்த போதிலும், பொழுது போனதும் அவளைப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது. அவ்வப்பொழுது வேண்டும்-வேண்டாம் என்கிற இரண்டு கயிறுகளினால் வேறு வேறு திசையில் இழுக்கப்பட்டு வந்ததால், மனம் மூன்றாவது திசையையே பற்றிக் கொண்டிருக்கிறதோ என்கிறாற்போல, கடைக்கண்ணால் குமுதாவைப் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியில் இரவுச் சாப்பாடானதும் சிறிது நேரம் சரளாவுடன் பேசிக் கொண்டிருந்து விட்டு பிறகு, "இனி எழுத ஆரம்பிக்கிறேன்" என்று கூறி அவசரவசரமாக எழுந்திருந்து வெளியே புறப்பட்டபோது, கதவுக்கு முகத்தைக் காட்டியபடி நின்றுகொண்டு, "நாளைக்குச் சொல்கிறேன் உனக்கு, எப்படி வந்திருக்கிறது என்று" என்று சரளாவிடம் வாயால் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, கண்கள் எதிரே உள்கதவை நோக்கிக் கொண்டிருந்தன. அந்தக் கதவுக்குச் சிறிது மறைவில் நின்றிருந்த குமுதாவைப் பார்த்து முறுவலித்தபடியே, "என் அறைக்குப் போகிறேன்" என்றான் - அந்தப் பேச்சு குமுதாவுக்கு என்கிற பார்வையோடு.

உடல், அறிவு இவையிரண்டின் உரசலினால் ராமண்ணா சில நாட்கள் வரையில் அவதிப்பட்டான். உடலுக்கு வேண்டியிருந்தது, அறிவுக்கு வேண்டியிருக்கவில்லை. ஆனால் எப்போதும் உடலின் தேவை தீர்ந்தபிறகுதான். எவ்வளவோ முறை அறிவு வேண்டாம் என்று வாதிக்கும் போதெல்லாம், உடலின் பிடிவாதம் அதிகரிக்கும். இருந்தாலும் உடலும், அறிவும் ஒன்றுக்கொன்று விரோதமாக நின்று போராடின என்று சொல்லும்படியாகவும் இருக்கவில்லை. ஏனென்றால் ஒவ்வொரு முறையும் உடல் திருப்தியடைந்து அமைதி பெற்றவுடன், அறிவு கூர்மையாகும். எழுதும் அநுபவம் பெற்றிருந்த ராமண்ணாவுக்கு இதனால் ஆச்சரியம் ஏற்பட்டதே

போல, பயமும் தோன்றியது. மனிதனின் பண்பட்ட அறிவின் மீது உடலுக்கு இவ்வளவு ஆதிக்கமா? இது உண்மையானால் நீதி, நியாயம், பண்பாடு என்படுதெல்லாம் அர்த்தமற்ற ஆத்ம வாசனையாகும். சே! இது சரியான வாதமல்ல. பசி இயற்கையாக ஏற்பட்டுள்ள வாசனை என்பதனால், மனிதன் கிடைத்த இடத்தில் கிடைத்ததை, கிடைத்தபடி சாப்பிடுவதில்லையே? பஞ்ச காலத்தில் மட்டும் அதுபோல ஆங்காங்கே நிகழ்ந்ததாகத் தெரிகிறது. அப்படியானால்? காம வாசனையும் அப்படியே தானா? மனைவி படுக்கையில் விழுந்து விட்டது தன்னைப் பொறுத்தமட்டில் பஞ்சகாலமா? அதனால்தான் அவ்வாறு நடந்து கொள்ள வேண்டிவந்ததா? ஏன் இருக்கக்கூடாது? ஒவ்வோர் இயற்கை உணர்வுகளும் சரியான வேளையில் திருப்தி எய்தா விட்டால், அவை மனிதனை இவ்வாறு பைத்தியம் பிடிக்க வைத்துக் குதிக்க வைக்குமா? -

தன் வாழ்க்கையில் ராமண்ணா இந்த ரீதியில் யோசித்து அதுவே முதல் தடவை; அது கடைசித் தடவை என்றும் சொல் லாம். இப்பொழுதும் குமுதா வீட்டிலேயே இருக்கிறாள். சரளாவின் இடைஞ்சலும் இல்லை. ஆனால் தன் மனம் குமுதாவை விரும்பத் தயாராக இல்லை. இன்று சினிமாவுக்குப் போக வேண்டுமென்று அவள் மனத்தில் தீவிரமான ஆசை இருந்ததோ என்னவோ! போகவில்லை, நல்லதே ஆயிற்று. போயிருந்தால், நடந்துபோன பழைய அதே போன்ற நினைவுகள் மீண்டும் தோன்றியிருந்தால், தான் அங்கிருந்து எழுந்து ஓடியே போயிருப் பான் என்று தோன்றியது ராமண்ணாவுக்கு! நாற்காலியிலிருந்து இப்போதும் எழுந்திருந்தான். மறுபடியும் உலாவத் தொடங்கி னான். சரளாவின் படத்திற்கு எதிராக நின்றான். எதையோ நினைத்துத் தலையை ஆட்டினான். மறுபடியும் வந்து நாற் காலியில் உட்கார்ந்துகொண்டு எதையோ முணுமுணுத் தான்.

என்னதான் முணுமுணுப்பது? - ராமண்ணா தன்னையே சிரித்தபடி கேட்டுக் கொண்டான். அந்த வாக்கியம் ஏன் தன் நினைவுக்கு வந்ததோ? ஓஹோ! 'காமம்' என்கிற வார்த்தை தன் மனத்தில் சுழன்று கொண்டிருந்ததால் அப்படியாகியிருக்கலாம். அதே வாக்கியத்தை இப்போது கெட்டியாகச் சொன்னான் : ஸோகாமயத பஹுஸ்ரஸ்யாம், ப்ரஜாயேய இதி. எழுதியவன் பெயருக்கு ரிஷியானாலும், அவன் புத்தி எவ்வளவு குறும்புத்

தனமாக இருந்திருக்கிறது! ஆனாலும் உபநிடத காலத்து அந்தக் கிழட்டு ரிஷி சொன்ன இந்த வாக்கியம் எவ்வளவு உண்மை நிறைந்ததாக இருக்கிறது! உலகம் எப்படிப் பிறந்தது என்பதை, எல்லாம் அறிந்தவனைப் போல, எல்லோருக்கும் தெரிந்ததையே சொன்ன இந்த தாடிக்கார ரிஷி குறும்புக்காரனில்லாவிட்டால் வேறென்ன? முதலில் "அது" இருந்ததாம்-இல்லை-ஸ: என்றால் அவன் இருந்தானாம். அவன் "காமம்" கொண்டானாம். நான் அநேகம் ஆவேன், பிறப்பிப்பேன் என்று. சிருஷ்டி ஏற்பட்டதாம்! எவ்வளவு சுலபம் உலகத்தின் மூலம்! ஆனாலும் இதில் புதியதாக என்ன இருக்கிறது? உலகில் படைக்கும் சக்தி காமம் இருக்கிறதாம். "காமவாசனை" என்று சொன்னால், அதே விஷயம் ஆபாசமாகி விடுகிறது. இருந்தாலும் உபநிஷத்தில் சொல்லப்பட்ட காமம் மற்றும் இந்தக் காமவாசனை இவை இரண்டும் சிருஷ்டி செய்யும் ஒரே சக்தி அல்லவா? இது மூலசக்தி என்று கூறி, மகரிஷி முப்பாட்டனார் உபகாரமே செய்திருக்கிறார். ஆக, இன்றுவரை தன்னுடைய நடத்தைக்கு உபநிஷத்தின் சர்ட்டிபிகேட் கிடைத்தாற்போலாயிற்று.

ராமண்ணா நாற்காலியிலிருந்து எழுந்திருந்தான். மறுபடியும் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். பதினோரு மணி! எப்படிப்பட்ட பைத்தியம் தான்! இவ்வளவு நேரம் பயனின்றித் தலையைப் பிய்த்துக் கொண்டிருக்கிறான்! தான் சரளாவைக் காதலிக்கிறானா? குமுதாவையா? யாருக்கு வேண்டும் பதில்? அதன் அவசியம் தான் என்ன? சரளா இறந்துபோய் மூன்று மாதமாகிறது. குமுதாவின் பேரில் தனக்குச் சிரத்தை இல்லை. இதையறிந்தும் யோசிப்பதெதற்கு? தூக்கம் வரும்வரையில் ஒரு சமஸ்கிருதப் புத்தகத்தையாவது படிப்போம் என்று, மேஜைக்கருகிலிருந்த அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தைப் பொறுக்கி எடுக்க முனைந்தான்.

## 10

படுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளில் முனைந்து, படுக்கையின் மேல் போர்வையை எடுக்க வேண்டுமென்று கையை நீட்டிய பொழுது, கையில் கட்டியிருந்த கடியாரத்தின் முட்கள் குமுதாவின் கண்களுக்கு முன்னால் பளிச்சிட்டன. மணி பதினொன்று! இரவின் இந்த வேளை கவனத்துக்கு வந்ததும், குமுதா எல்லாவற்றையும் மறந்து சித்திரப் பாவை போல நின்றுவிட்டாள். இதே வேளை;

தான் என்றுமே மறக்கமுடியாத வேளை. குமுதா பெருமூச்சு விட்ட வண்ணம், அப்படியே படுக்கையின் மீது உட்கார்ந்துவிட்டாள். சரளக்கா விஷயத்தில் தான் பாவம் செய்யவில்லை என்று ஒரு நிமிடத்திற்கு முன்னால் தீர்மானித்திருந்தாள். அந்தத் தீர்மானம் இப்போது நொறுங்கிப் போய்விட்டது. இரவு பதினொரு மணி சமயம் என்பது கவனத்திற்கு வந்ததும் பழைய காட்சி ஒன்று திடீரென்று வந்து கண்முன்னால் நின்றது. அவள் மனத்தில் தனது தூய உள்ளத்தைப் பற்றி இருந்த சுயநம்பிக்கையை அது விலக்கியது. இரவு 11 மணி. அன்றைக்கும் இதே நேரம் தான் ராமண்ணாவின் கைகளில் சிக்குண்டவளாகி, இரண்டு மூன்று நாட்கள் ஆகியிருந்தன. முதலில் தான் பயந்திருந்தாள். ஆரம்பத்தின் நினைவுகள் அந்தப் பயத்தை அதிகரித்திருந்தன. மறுநாள் காலையில் எழுந்ததும் தொடைகள் தரதரவென்று நடுங்கின. சரளக்காவைச் சந்திப்பது எப்படி? என்கிற அதைரியம் ஏற்பட்டிருந்தது. ராமண்ணா இப்போது தன்னோடு பேசுவானா? இருட்டில் கருணையோடு கூடியிருந்த அவன் முகம், சிரிப்பால் மலர்ந்திருந்த அவன் கண்கள், வெளிச்சத்தில் வேறாகக் காணப் படுமோ? அவனைத் தான் சந்திப்பது சாத்தியமா? என்று யோசித்தபடி தினசரி வேலையில் ஈடுபட்டிருந்தாள். ஆனால் சரளக்காவும் ராமண்ணாவும் எப்போதும் போலவே காணப் பட்டார்கள் என்பது, அவளுக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று. இரண்டாவது இரவு மறுபடியும் ராமண்ணா வந்திருந்தான். அப்பொழுதும் அவனோடு பேசும் துணிவு உண்டாகவில்லை. அதற்கடுத்த இரவு மட்டும் - எங்கிருந்து தைரியம் வந்ததோ தனக்கு! - ராமண்ணாவின் வரவை எதிர் நோக்கியே உட்கார்ந்திருந்தாள். ராமண்ணா வந்ததுமே, "கற்பனைத் தேவி கடைக்கண் வீசி நிற்கிறாளே!" என்று சொன்னான்.

பேசுவதற்கு மனமிருந்தாலும், தைரியம் போதாததால் தான் தலையை மட்டும் ஆட்டினாள்.

"இதென்ன? ஓஹோ... திறந்திருக்கும் உன் கண்கள் உனக்கே காணப்படுவதில்லை, இல்லையா?" என்றான்.

சிரிப்பை அடக்கிக் கொண்டு தலையை ஆட்டினாள்.

ராமண்ணா அருகில் வந்து, தன் தலையைக் கெட்டியாகக் கைகளால் பிடித்துக் கொண்டு, "இப்போது தலையாட்ட முடியாது. இப்பவாவது வாய்திறந்து பேசுவாயா மாட்டாயா?

ஊம்?" என்று முகத்தருகே முகத்தை வைத்துக் கொண்டு கேட்டான்.

"உங்களுக்கு முன்னால் பேசும் தகுதி எனக்கு..." இதுவே அவளுடைய முதல் வாக்கியம். அதுவும் முற்றுப் பெறவில்லை.

"வாயால் வார்த்தைகள் வெளிவந்தால்தான் பேசினமாதிரி என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா நீ?"

"அப்படியென்றால்?"

"அப்படியென்றால் என்ன? இந்த நான்கு நாட்களில் என்னைவிட நீயே அதிகம் பேசி இருக்கிறாய்!" என்றான் ராமண்ணா.

"எனக்கு ஒன்றுமே தெரியாது?"

"அடேயப்பா, தெரியாமலிருக்கும் போதே இவ்வளவு பேசியவள் தெரிந்தபிறகு எவ்வளவு பேசுவாயோ!"

குமுதாவுக்குப் பயம் தோன்றியது, தானேதாவது கனவில் உளறியிருப்போமா என்று.

"கனவில் நான் ஏதாவது–" என்று தான் சொல்லி முடிப்பதற்குள் ராமண்ணா சிரித்து விட்டான்.

"பைத்தியக்காரி! கனவாம்! ஒரு வகையில் அது எனக்குத் தான் கனவாக இருந்திருக்க வேண்டும். நீ மட்டும் விழிப்புடனே தான் இருந்தாய். ஏன் இவ்வளவு பயந்து போய்ப் பார்க்கிறாய் என்னை? அதற்காகத்தான் நான் சொல்லவில்லையா, வாயால் பேசினால் மட்டுமே பேசினாற்போல அல்ல என்று. நீ வைத்த ஒவ்வொரு காலடியும் பேசிற்று. நீ வீசிய ஒவ்வொரு பார்வையும் பேசிற்று. உனது அரை குறையாகத் திறந்த உதடுகள் பேசின. அவ்வளவு ஏன்? உனது மௌனமே நிறையப் பேசிற்று. . அவைகளின் பேச்சையெல்லாம் கேட்டல்லவா நான் இப்படிப் பைத்திய மானேன்? ஆங்? சொல்லடி! இப்போ பேசு–வாயால் அல்ல" என்று கூறியபடி தனது உதடுகளால் குமுதாவின் உதடுகளுக்குக் காதல் சுவையின் பூட்டைப் போட்டான். அன்று இரவு இருட்டில் தாங்கள் இருவரே படுத்திருந்தபோது, மெல்லிய குரலில் ராமண்ணா எவ்வளவு அந்தரங்கமான வார்த்தைகளைப் பேசி னான்! "நீ என் கற்பனைத் தேவி. பொய்யல்ல, வேண்டுமானால் என் அறைக்கு வந்து பார். உனது சகவாசத்தின் தூண்டுதலால் நான் புதிய புத்தகம் எழுத ஆரம்பித்திருக்கிறேன்...ஆங்? பைத்தியக்காரி நீ! ஒரு ராத்திரி உன்னைப் பார்க்காவிட்டால் என் பேனா மேலே ஓட மாட்டேனென்கிறது—உன்னால் என்னில் புது

உற்சாகம் தோன்றியிருக்கிறது—எனது இலக்கிய வாழ்க்கையின் மூச்சு நீ..." என்று என்னென்னவோ சொன்னான். அந்தப் பேச்சுக்களினால் தானும் மெய்மறந்தாள். அன்று தானகவே அவனை இறுக அணைத்துக் கொண்டாள். அவன் தன்னைவிட்டு விட்டுப் போய்விடுவானோ என்று பயந்தது போல, இவை யெல்லாம் இப்படி நடந்ததானால்தான் மறுநாள் அவளுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. ராமண்ணா இன்னும் வந்திருக்க வில்லை. கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். சரியாக இரவு பதினொரு மணி! இவ்வளவு தாமதம்! தினமும் இதற்கு முன்னரே வருகிற ராமண்ணா, இன்று இன்னும் வரவில்லையே! காத்திருந்து அலுத்துப் போய்விட்டது. ஒரு நிமிடம் மூச்சையடக்கி அசையாமல் காதைத் தீட்டிக் கொண்டு கேட்டாள். எங்கிருந்தோ கிசுகிசுவென்று பேசும் ஓசை கேட்டது! இந்த நேரத்தில் யார் பேசுபவர்கள்? சரளக்காவோ ஒன்பது மணிக்கே தூங்கிவிடுபவள். ஆங்...ராமண்ணாதான் ஏதாவது படித்துக் கொண்டிருக்க வேண்டும். அந்த சுவாரஸ்யத்தில் தன்னிடம் வருவதை மறந்திருக்க வேண்டும்! அப்போது குறும்புத்தனம் செய்யப் போகும் ஒரு சிறுவனைப் போலக் குமுதா முறுவலித்துக் கொண்டாள். இவ்வளவு மும்முரமாக எல்லாவற்றையும்-தன்னையும்கூட மறந்து ராமண்ணா படித்துக் கொண்டிருக்கிறானல்லவா? மெதுவாக நடந்து போக வேண்டும். "கற்பனைத் தேவி என்று எனக்குக் கொடுத்த சர்டிபிகேட்டைப் பார்க்க வந்திருக்கிறேன். நீங்களே சொல்லவில்லையா, உங்கள் அறைக்கு வந்து பார்க்கும்படி" என்று சொல்வது. தன்னைப் பார்த்து ராமண்ணா திடுக்கிடும் காட்சியை நினைத்து அவள் தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டாள். மெதுவாகப் படுக்கையிலிருந்து எழுந்து, ஓசைப்படாமல் ராமண் ணாவின் அறைக் கதவண்டை வந்தாள். இடிவிழுந்தாற்போலச் செயலற்று நின்றுவிட்டாள். அறைக்கதவு மூடியிருந்தது. உள்ளே விளக்கும் இருக்கவில்லை. இதனால் அவளுக்கு எவ்வளவு ஏமாற்றம் ஏற்பட்டதோ, அதைப்போல இரட்டிப்பு பொறுக்க முடியாத கோபம் வந்தது அவளுக்கு. இன்னொன்றைப் பார்த்து. அதுதான், கிசுகிசு சப்தம், சரளக்காவின் அறையிலிருந்து வந்து கொண்டிருந்தது. அந்த அறைக்கதவு பாதி திறந்திருந்தது. உள்ளே விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது! அதைப் பார்த்து அன்று தனக்குக் கோபம் வந்தது உண்மை. விருவிருவென்று தன் அறைக்குச் சென்று, உள்ளே தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு,

விளக்கை அணைத்துவிட்டு, செத்துப் போனவள் போலப் படுத்துக் கொண்டு விடவேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. மறுநிமிடம் ஏதோ ஓர் அடக்க முடியாத ஆவல் அவளை சரளக்காவின் அறைக்கதவு வரையில் இழுத்துச் சென்றது. "ராமண்ணா சரளக்காவுடன் பேசிக் கொண்டு தன்னை மறந்து விட்டான்" என்று ஒருசமயம். "ராமண்ணா தன் மனைவியுடன் பேசிக்கொண்டிருக்கிறான்" என்று இன்னொரு சமயம் தனக்குத் தானே சொல்லிக் கொண்டு குமுதா சந்தேகத்துடன் கதவருகில் வந்து நின்றபோது, "அவ்வளவு நடந்தால் போதும். நான் நிம்மதியாகக் கண் மூடுவேன்" என்கிற சரளக்காவின் வார்த்தைகள் காதில் விழுந்தன. குமுதா முதலில் பயந்தாள். அக்காவின் கடைசி நிமிடங்கள் நெருங்கிவிட்டனவோ என்றஞ்சி, அறைக்குள் நுழையப் போனாள். அதற்குள்ளாக ராமண்ணாவின் குரல் கேட்டது. "இப்பொழுது இருப்பதைவிட்டு, இனிமேல் எனக்கு எந்த சுகமும் கிடையாது" என்றான். குமுதாவால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. மெதுவாக உள்ளே எட்டிப் பார்த்தாள், ஒரு நிமிடம் மட்டும். அங்கே அவள் கண்ட காட்சி அவளை அங்கிருந்து ஒரு வேகமான புயல் காற்றைப் போலத் தூக்கிக் கொண்டு போய், அவள் அறையில் படுக்கையின் மீது வீசியெறிந்தது----

குமுதா மறுபடியும் கைகடியாரத்தைப் பார்த்து நெடுமூச்சு விட்டவாறு எழுந்திருந்தாள். இனி மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு படுக்காவிட்டால், அந்தப் பழைய நினைவுகள் தன்னை வதைக்காமல் விடா என்று அவளுக்குத் தெரிந்தது. அந்த நினைவுகள் உண்மையிலேயே ஒரு வேதனை - அதுவும் சரளக்கா இறந்ததிலிருந்து அவை ஒரு பயங்கரமான அநுபவமாகி விட்டிருந்தன. அன்றுதான் எத்தகைய அநியாயத்தைச் செய்து விட்டாள். ஒரு நிமிஷத்தில் தான் கண்ட காட்சி என்ன? அது போகட்டும், அந்தப் பாழாய் போன ஆவல் தனக்கு ஏன் ஏற்பட்டது? பாவம்! மாதக் கணக்காகப் படுக்கையில் கிடந்த சரளக்கா. அவள் மனம் எவ்வளவு நொந்து போயிருக்கவேண்டும்! அத்தகைய நிலையில் கணவன் அவளைச் சமாதானப் படுத்தினால் தவறென்ன? அது தவறு என்று சொல்ல மற்றவர்களுக்கு என்ன உரிமை? இவ்வளவுக்கும் தான் பார்த்தது என்ன? கணவனின் தொடைமீது தலை வைத்துப் படுத்து, காதல் பிரகாசிக்கும் கண்களையுடைய முகத்தை நிமிர்த்தி, கணவனின் முகத்தைப்

பார்த்தபடி சரளக்கா படுத்திருக்கிறாள். கணவன் ஒருகையால் அவள் தலைக்கூந்தலைக் கோதியபடி, மற்றொரு கையால மனைவியின் கையைப் பற்றித் தன் கன்னத்தோடு ஒட்டவைத்துக் கொண்டு சிரித்த முகத்துடன், மனைவியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். இவ்வளவுதான் தான் பார்த்த காட்சி.

ஆனால் அன்றோ அந்தக் காட்சி அவளுக்கு நெருப்பாக இருந்தது. நிறைந்த எண்ணங்களினால் தளும்பி, அவள் இதயம் அடித்துக் கொண்டிருந்தது. ஒன்றையொன்று பின் தள்ளிக் கொண்டு, எண்ணங்கள் இதயத்திலிருந்து பாய்ந்து வந்து கொண்டிருந்தன. இப்பொழுது இருப்பதைவிட்டு இனிமேல் வேறு சுகமே கிடையாதாம்! அவை மறுபடியும் தன் அறைக்குள் அடி எடுத்து வைக்க விடக்கூடாது. அவன் கை இனி தன் உடலை என்றுமே தீண்டக்கூடாது. எப்படிப் பார்த்துக் கொண்டிருந்தன அந்தக் கண்கள்! இதயத்தில் ஈட்டியைச் செருகினாற்போல இருந்தன. வஞ்சகன்! தான் இங்கே வழிபார்த்தபடி இமை சேர்க்காமல் உட்கார்ந்திருந்திருக்கிறாள்! அப்படி என்ன அந்தரங்கம் படுத்த படுக்கையான மனைவியோடு! இன்னொரு முறை-சாகும் வரையில்-கண்ணெடுத்தும் பார்க்கக்கூடாது அவனை, உதட்டையசைத்துப் பேசக்கூடாது அவனுடன். வரட்டும்! கோபத்தின் எண்ணச் சுழல்களுக்கிடையே அவளுக்கு ஞாபகம் வந்தது, தான் தன் அறையின் உள்தாழ்ப்பாளைப் போட்டுக் கொண்டிருப்பது. அப்படியானால் அவன் எப்படி உள்ளே வரமுடியும்? அவன் உள்ளே வருவதற்கு வாய்ப்பு இல்லாவிட்டால், தன் மனத்திலிருக்கும் எண்ணங்களை எப்படி அவனிடம் சொல்லிக் காட்டுவது? ஒருவேளை கதவு மூடியிருப்பதைப் பார்த்து விட்டு "நல்லதாயிற்று" என்று சொல்லிக் கொண்டு அங்கிருந்து அப்படியே போய்விட்டால்? அவனுக்கு அந்த வாய்ப்பையே தரக்கூடாது. இதுவரையில் அவன் வரட்டும், நான் படுத்திருப்பதைக் கண்ணாரக் காணட்டும். அப்பொழுது என் அருகில் வரட்டும் பார்ப்போம் என்று சொல்லிக் கொண்டு குமுதா எழுந்திருந்து தாழ்ப்பாளைத் திறந்ததோடல்லாமல், கதவையும் திறந்து வைத்து விட்டு, விளக்கையும் ஏற்றி வைத்துவிட்டு, படுக்கையின் மீது படுத்துக் கொண்டிருந்தாள். "படுக்கையை விட்டு எழுந்திருக்க இயலாத பெண்டாட்டி! யாருடைய பயம்?" என்று கொதித்துக் கொண்டிருந்த கோபத்தோடு சொல்லிக் கொண்டாள்.

குமுதா அவ்வாறு ஆவேசத்துடன் எவ்வளவு நேரம் படுத்துக் கொண்டிருந்தாளோ! இப்போது வருவான், இன்னும் சிறிது நேரத்தில் வருவான், வந்தால் நான் முகத்தைக்கூட அந்தப் பக்கம் திருப்ப மாட்டேன் என்று பிடிவாதம் செய்து கொண்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டு படுத்திருந்தாள். இன்னும் அவன் வரவில்லை என்று தெரிந்ததும், மறுபடியும் கதவுப்பக்கம் முகத்தைத் திருப்பி வைத்துக் கொண்டு, அவனை எதிர்பார்த்து கண்களைத் திறந்தபடி படுத்துக் கொண்டாள்.

அன்றைய இரவு தான் அவ்வாறு நடந்து கொண்டது முதலில் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. தனக்கு எவ்வளவு ஆத்திரத்துடன் கோபம் வந்திருந்தது! தான் எவ்வளவு உறுதியாக நிச்சயம் செய்து கொண்டிருந்தாள்! ஆனால்....? கடைசியில் ராமண்ணா வந்தபோது, மனதில் தீர்மானித்திருந்த எதுவுமே நடக்கவில்லை. அதற்காக ராமண்ணாவின் பேரிலும் அவளுக்குக் கோபம் வந்தது. ராமண்ணா வருவான், வந்ததும் தன்னுடன் பேசுவான், வரத் தாமதமானதற்காகத் தான் கோபித்துக் கொண்டிருப்பதைக் கண்டு, சமாதானம் சொல்லத் தொடங்குவான். அப்பொழுது தான் மௌனமாக, முகத்தைத் திருப்பிக் கொண்டு, கடைசியில் குத்துகிறாற் போன்ற வார்த்தைகளால், அவன் மனத்தைப் புண்ணாகும்படி நோகவைக்க வேண்டும் என்று நினைத்து, தயார் செய்து கொணடு படுத்திருந்தாள் ஆனால் ராமண்ணா வந்ததுமே, விளக்கை அணைத்துக் கதவையும் மூடிவிட்டான். குமுதாவின் ஓர் ஆயுதமே நழுவி விழுந்து விட்டாற் போலாயிற்று. ஏனெனில் இருட்டில் பேசாமல் கோபத்தை எப்படிக் காட்டுவது? எனவே முகத்தைத் திருப்பிப் படுத்துக் கொண்டு, அவன் பேசுவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் பெருமூச்சு விடுவதைப் போல இருந்தது. இது ஏதோ ஏமாற்று வித்தையாக இருக்கும், தான் ஏமாறக் கூடாது என்று தீர்மானித்து, இருட்டாக இருந்தபோதிலும் கண்களை இறுக மூடிக் கொண்டாள். ஓரிரண்டு நிமிடங்களில் ராமண்ணா அருகில் வந்து படுத்துக் கொண்டான்; தான் சிறிது விலகிக் கொண்டாள். அவன் தன் கையை அவள் மீது போட்டு, வேகமாக அவளை அருகில் இழுத்துக் கொண்டான். அவளுக்கு அது சுகமாக இருந்தபோதிலும் இருட்டில் அவனுக்கு அது தெரியாது. நல்லதென்று இனியும் அவன் பக்கம் முகத்தைத் திருப்பாமலே இருந்தாள். முதலில் அவன் பேசட்டும் பிறகு

பார்த்துக் கொள்ளலாம் என்று இருந்தாள். ஆனால் ராமண்ணா பேசவே இல்லை. பழக்கப்பட்ட கைகளால் அவளது உடலின் வெவ்வேறு பாகங்களைத் தடவி, பாம்புப்பிடாரன் பாம்பைத் தன்னிச்சைப்படி ஆட்டுவிப்பதைப் போல, அவள் உடலைத் தன் வசப்படுத்திக் கொண்டான். உள்ளங்கையில் வைத்த பனிக்கட்டி கரைவது போல, ராமண்ணாவின் கைகளில் அகப்பட்ட அவள் உடல் கரைந்து, நீராகப் போய் விட்டது. உடலின் ஆதரவு தவறிவிட்டது என்பதற்காகவோ என்னவோ அவள் இதயம் அவன் இதயத்தில் சரண் புகுந்தது. வாலிபத்தின் இயற்கையான தேவைகளின் எதிரே, அவளது பொய்க் கோபமெல்லாம் இருக்குமிடம் தெரியாமல் ஓடிப் போய் விட்டது. ஒரு நிமிடம் முந்திய ஜன்ம ஜன்மாந்தரங்களின் அநுபவமெல்லாம் மறந்து போனாற்போல ஆகி தற்சமயத்து சுகத்தில் தன்னை மறந்திருந்தாள். மற்றொரு நிமிடம் அமர இன்பம் கிட்டிவிட்டதாக நினைத்து, நிகழ்காலத்தை மறந்து சுகத்தின் கூக்கூரலை எழுப்பினாள். மற்றொரு நிமிடத்தில் உலகையே மன்னிக்கும்படியான தகுதியுள்ள அன்பினால், அவளது இதயம் விசுவரூபம் எடுத்தாற் போலிருந்தது. இத்தகைய அநுபவத்தைத் தந்த ராமண்ணாவின் பேரில் சீற்றம் கொள்வதா? முன் பிறவியில் தான் என்ன புண்ணியத்தைச் செய்ததனால், இன்று தனக்கு இந்தத் துயர நிவாரணம் கிடைத்திருக்கிறது? இப்பொழுது குமுதா நிறைந்த உள்ளத்துடன் ராமண்ணாவை இறுக அணைத்துக் கொள்ள வேண்டுமென்று கையை நீட்டினாள்-அங்கே யாரும் இருக்கவில்லை! இதென்ன கனவா, பேய், பிசாசு விளையாட்டா என்று அவள் பயந்தாள். அதற்குள்ளாக மெதுவாகக் கதவைச் சாத்திக்கொண்டு யாரோ வெளியே செல்லும் ஓசை கேட்டது. ராமண்ணா போய் விட்டிருந்தான்!

ஏன்? ஏனிப்படி ஆயிற்று? என்று கேட்டபடி குமுதா திடுக்கிட்டுப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். எதற்காக வந்தான்? ஏனிப்படிப் போய்விட்டான்? இந்தக் கேள்விகளுக்கு குமுதாவுக்கு விடை தெரியாமல் இல்லை. ஆனால் அந்த விடை அவளுக்கு வேண்டியிருக்கவில்லை. மனத்திற்குப் பிடிக்கவில்லை. தாறுமாறாகத் தன் உடல்மீது கிடந்த ஆடைகள், நெற்றியில் பிசுபிசுவென்று ஒட்டிக் கொண்ட வியர்வை, உள்ளே படபடக்கும் இதயம், வெளியே அடிபட்ட உள்வலியால் நொந்து போயிருக்கும் மார்புப் பகுதி, தொடைகளின் நடுக்கம்-இவை எல்லாம்

ராமண்ணா வந்து போனதன் சாட்சியங்களாக இருந்தன. ஆனால் அவன் வந்து போனதற்கு இவ்வளவுதான் காரணமா? உடல்களின் சம்பந்தத்தைத் தவிர வேறு தொடர்பே இல்லையா?

தான் கோபித்துக் கொண்டிருப்பதை ஊகித்து, ராமண்ணா அவ்வாறு நடந்து கொண்டிருக்கக்கூடும் என்று ஒரு சமயம் தோன்றியது அவளுக்கு. அவன் பெருமூச்சு விட்டதைக் கேட்கவில்லையா தான்? பாவம்! அவனுக்கு ஏதோ மனவருத்தம் இருக்கவேண்டும்-என்ற எண்ணம் தோன்றியது. என்னவாக இருக்கும்? சிறிது நேரத்திற்கு முன்னால் அவன் சரளக்காவுடன் பேசிக் கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்க்கவில்லையா? அங்கே ஏதாவது மனவருத்தம் ஏற்பட்டிருக்குமோ? அவன் மனம் புண்படும்படி சரளக்கா ஏதாவது பேசியிருக்கக்கூடுமோ? இல்லாவிட்டால்....இல்லாவிட்டால்.... குமுதாவின் எண்ணங் களைப் போலவே, அவன் இதயத் துடிப்பும் நின்று விட்டாற் போல் ஆயிற்று. சரளக்காவிற்கு தெரிந்திருக்குமோ? அந்த எண்ணத்தினால் ஒரு நிமிடம்தான் குமுதா பயந்தாள். மறுநிமிடம் ஏற்கனவே உண்டாயிருந்த கோபம், வெறுப்பு இரண்டும் பீறிட்டெழுந்தன. படுக்கையில் கிடந்து, உயிர் இருந்தும் இல்லாத தற்குச் சமமான, ராமண்ணாவைப் போன்றவனுக்கு ஒரு கைவிலங்கு போல இருக்கும் சரளக்காதான் கணவனின் மனத்தை நோக வைத்திருக்க வேண்டும் என்று குமுதாவுக்கு உறுதியாயிற்று. என்னமோ சொன்னாளே அவள்? ஆங்...அவ்வளவு நடந்தால் போதும், நான் நிம்மதியாகக் கண் மூடுவேன், என்று. அவ்வளவு என்றால் எவ்வளவு? என்ன அது? சதாகாலமும் வியாதிக்காரி யானவள் புருஷன் தன் பக்கத்திலேயே இருந்து அழுக வேண்டும் என்று விரும்பியிருப்பாளோ? இவளுடைய சுகம்-துக்கம் யாருக்கு வேண்டும்? இவள் கண் மூடினால், இன்னொருவருக்குச் சுகம்.

படுக்கையின் மீது அமர்ந்து கொண்டிருந்த குமுதா திடுக்கிட்டு எழுந்தாள். அவளது அவயவங்களில் நடுக்கம் தோன்றியது. இந்தப் பழைய நினைவுகள் இப்போதும் அவளைச் சக்கையாகப் பிழிந்து கொண்டிருந்தன. அன்றைய தன்னுடைய எண்ணங்களை இவ்வாறு நினைக்கும்போது, குமுதாவின் கண்கள் நீரால் நிறைந்தன. அன்று சரளக்காவைப் பற்றி அவ்வாறு நினைத்தது பாவம். அந்தப் பாவத்திற்கு இன்று பிராயச்சித்தம் செய்து கொண்டிருக்கிறேன்-என்று சொல்லிக் கொண்டாள். பாவம்! சரளக்காதான் அன்று தனது சுகத்திற்கு இடையூறாக இருந்தாள்

என்று, தான் அப்போது நினைத்திருந்தாள். இப்போது சரளக்கா யாருக்கும் இடைஞ்சலாக இல்லை. ஆனாலும் தனக்குச் சுகமில்லை. ஒருவருடைய சுகம், ஒருவருடைய துக்கம் இன்னொருவர் கைகளில் இல்லை என்பது குமுதாவுக்கு இப்போது தெரிந்திருந்து. சில வருடங்களுக்கு முன்னால், சரளக்கா உயிருடன் இருந்தபோது, இது தெரிந்திருந்தால்? ஆனால் அப்பொழுது தெரிந்திருக்க முடியாது, ஏனென்றால் சுகம் என்பதைப் பற்றிய கற்பனையே, அப்போது அவளுக்கு இருந்திருக்கவில்லை. ராமண்ணாவின் பார்வையில் இருப்பதே தன்னுடைய சுகம் என்று நினைத்து, ராமண்ணாவைச் சரளாவிடமிருந்து தன் பக்கம் இழுத்துக் கொள்வது ஒன்றே, அப்போது அவளது வாழ்க்கையின் லட்சியமாக இருந்தது. இதுவல்லாமல் ராமண்ணா தனது பார்வையில் இருக்க வேண்டுமானால், அது அவனையும் பொறுத்திருக்கிறது என்பதே அப்பொழுது தன் கவனத்திற்கு வந்திருக்கவில்லை. எத்தகைய பைத்தியம் தன்னுடையது! அருகில் இருப்பது என்றால், உடலால் மட்டுமே அருகில் இருப்பது என்று நினைத்து, அந்தச் சுகத்தை அநுபவித்து இப்பொழுது உடலின் அருகாமை மனத்திற்கு வேண்டாததாகி விட்டது. தனது சுகத்தின் பாதை தனக்குத் தெரிந்திருக்கவில்லை. இன்னொருவரின் மீது குற்றம் சாட்டியிருந்தாள். தான் செய்தது தவறு என்று நினைத்துக் கொண்டாள். அதுவும் சரளக்கா விஷயத்தில் அவ்வாறு நினைத்ததும் நடந்து கொண்டதும் பாவம் என்று தோன்றியது.

இதுவரையில் பழைய நினைவுகளை மறகக வேண்டும், கண்களை இறுக மூடிப், படுத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த குமுதாவுக்கு, இந்த ஒரு நினைவை மட்டும் மீண்டும் மீண்டும் நினைத்துக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது. நடந்தது நடந்து விட்டது. கடைசியாக இந்த நினைவின் காரணமாகவாவது, எனது பாவத்திற்கும் பிராயச்சித்தம் செய்து கொள்கிறேன் என்பது அவளுடைய சமாதானம். அன்றைய அந்த இரவு ராமண்ணா அவ்வாறு யந்திரப் பொம்மை போல வந்து போனபிறகு கோபம், பொறாமை, துவேஷம், வெறுப்பு இவை ஒவ்வொன்றாகக் குமுதாவைப் பேய் போலப் பிடித்துக் கொண்டன. ராமண்ணாவின் பேரில் தனக்குத் தவிர்க்க முடியாத காதல் இருப்பதாக, அவளுக்கு அன்று நம்பிக்கை இருந்தது; தனது காதல் பாதையில் சரளக்கா முள் வேலியாகக் குறுக்கே நிற்கிறாள் என்றும் அவளுக்குச் சந்தேகம் இருந்தது.

ஆனால் ராமண்ணா தனக்கு வாழ்க்கை மூச்சைப் போல, அவனில்லாவிட்டால் தன்னைப் பொறுத்த வரையில், சூரியனுக்கும் வெளிச்சமில்லை என்று சொல்லவேண்டும். அவனை விட்டால் தனக்கு வாழ்க்கையே இல்லை—என்று எவ்வளவுக் கெவ்வளவு உறுதியாக நம்பிக் கொண்டிருந்தாளோ, அவ்வளவுக் கெவ்வளவு சரளக்காவைப் பற்றி இருந்த பயம் விலகிச் சென்று கொண்டிருந்தது. இத்தகைய காதலுக்கு எதிராக, பாவம், சரளக்காவைப் போன்ற சக்தியற்ற, ஜீவனற்ற வியாதிக்காரி நிற்க முடியுமா? கடைசியாக, தூக்கத்தைத் தவிர்க்க முடியாது வந்த போது, சரளக்காவைக் குறித்துக் குமுதாவின் இதயத்தின் கருணை நிறைந்தது. அவளைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமான எண்ணங்கள் தோன்றுவானேன்? படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாத அவளைப் பற்றித் தனக்கு என்ன பயம்? ராமண் ணாவுக்கு என்ன சுகம்? உயிரோடு இருந்தாலும் ஒன்றுதான், இல்லாவிட்டாலும் ஒன்றுதான். எப்பொழுதும் போல அவளிடம் நடந்து கொண்டால், அவளுக்கு ஒரு சந்தேகமும் வராது என்று தனது யுக்திக்காகத் தன்னைத் தானே மெச்சிக் கொண்டாள். தன் இதயம் ராமண்ணாவாலேயே நிரம்பியிருக்கிறது. எந்தக் காரணம் கொண்டும் அங்கே இன்னொருவருக்கு இடம் வேண்டாம் - என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டாள்.

ஆனால், ராமண்ணா பெருமூச்சு விட்டதை நினைத்து, அவள் மறுபடியும் யோசனையில் மூழ்கினாள். ஏதோ ஒரு மனவருத்தம் இருக்கிறது அவனுக்கு. என்ன அது? அதைப் போக்கத்தான் வேண்டும். மனைவி சொன்ன எதையோ கேட்டு அவன் ஏமாற்றம் அடைந்திருப்பானோ? ஒரு சமயம் சரளக்காவுக்குத் தெரிந்து விட்டால், அல்லது அவளுக்குத் தெரிந்து விட்டது என்பது எனக்குத் தெரிந்தால், நான் பின்வாங்குவேனென்று ராமண் ணாவுக்குச் சந்தேகம் இருக்குமோ? அதனால்தான் அவன் பெருமூச்சு விட்டிருப்பானோ? சே-அப்படியிருந்தால் அந்த மனவருத்தம் எவ்வளவு அர்த்தமற்றது! ஒருவேளை ஆதிசேஷனால் கட்டப்பட்டு, எட்டு திசை யானைகளால் இழுக்கப்பட்டாலும், என் இதயம் ராமண்ணாவை விட்டு நகராது-அந்த விஷயம் அவனுக்குத் தெரியாதோ என்னவோ! அத்தகைய உறுதியான காதல் ராமண்ணாவின் பேரில் தனக்கு இருக்கிறது என்பதை அன்று இரவு குமுதா நன்றாக உணர்ந்து கொண்டிருந்தாள். கடைசியாக அன்று படுப்பதற்கு முன்னால், குமுதா கடவுளிடம்

ஒன்றே ஒன்றைத் தான் வேண்டினாள்- "கடவுளே, நான் அவரை நேசிக்கும் அளவு அவரும் என்னை நேசிக்குமாறு செய். அது போதும். அதன் பிறகு எனக்கு யாரைப் பற்றியும் பயம் இல்லை. யாருடைய உதவியும் எனக்குத் தேவையில்லை" என்று.

இப்பொழுது மட்டும் இந்தப் பழைய நினைவு குமுதாவுக்கு வெறுப்பையூட்டியது. அது நல்ல புத்தியா, துர்புத்தியா? "அவர் என்னை நேசிக்குமாறு செய்" என்று அன்று இரவு தன் வாயிலிருந்து வார்த்தைகள் வந்திருந்ததனவே, அவை எவ்வளவு முன் சூசகமாக இருந்தன என்பது இன்று இரண்டு, இரண்டரை வருடங்களுக்குப் பிறகு குமுதாவுக்குப் புரிந்தது. ராமண்ணா தன்னை நேசிக்கவில்லை என்று அப்பொழுதும் அவளுக்கு சந்தேகம் இருந்ததோ என்னவோ! அதனால்தான் அவனையடைய கடவுளின் சகாயத்தை நாடவேண்டியதாயிற்று. அப்பொழுது தனக்குத் தெரிந்திருக்கவில்லை, சந்தேகமாக இருந்தது. இப்பொழுது அவளுக்குத் தெரிந்திருககிறது - வாக்கியத்தை முடிக் காமல் குமுதா படுக்கையிலிருந்து எழுந்தாள். தூக்கக் கலக்கமோ, யோசனைகளின் வேகமோ-யந்திரம் போலப் படுக்கையைச் சரிப்படுத்திக் கொண்டு, ஆயாசத்துடன் சாய்ந்தாள். அவளையறியாமலே கொட்டாவி ஒன்று ஓசையில்லாமல் அவளிடமிருந்து வெளிப்பட்டது.

## 11

"த்வீபாதனஸ்மாதபி மத்யாதபி ஹலநிதேர்த்திசோப்யந்தாத் |
ஆநீய ஜடிதி கடயதி விதிரபிமதமபி முகீபூத : ||"

ராமண்ணா கண்ணைத் துடைத்துக் கொண்டு உற்றுப் பார்த்தான். என்ன இது? எவ்வளவு நேரமாகத்தான் இந்த சுலோகத்தை எதிரே வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான்? மனதைக் கல்லாக்கிக்கொண்டிருந்த எண்ணங்களை மறப்பதற் காக, தான் ஒரு சமஸ்கிருத நூலைப் படிக்க எடுத்துக் கொண்டது தெரியும்; இங்கேயும் அங்கேயும் புரட்டிக் கொண்டிருந்தபோது, ஸ்ரீ ஹர்ஷனின் ரத்னாவளி நாடகம் கிடைத்தது. வாலிபத்தில் படித்தபோது மனத்தைக் கவர்ந்திருந்த அந்த நாடகம், கையில் கிடைத்ததில் அவனுக்குச் சந்தோஷமே உண்டாயிற்று. சௌகரியமாக நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, கால்களை மேஜையின் மீது போட்டுக்கொண்டு முதலிலிருந்து படிக்கத் தொடங்கினான். சூத்திரதாரன் முகவுரையின் முடிவில்

"த்வீபாதன்யஸ்மாதபி" என்கிற சுலோகத்தைச் சொல்லுகிறான். அந்த சுலோகத்தின் பொருள் என்றுமே அவன் மனத்திற்குப் பிடித்ததாக இருந்தது. அறிவு, விவாதம் இவைகளிலேயே முழு நம்பிக்கை கொண்டிருந்த ராமண்ணாவுக்கு, அவை இரண்டையும் மீறி ஒரு சம்பவத்தை நிகழச் செய்யும் இயற்கையின் யுக்தி? (சக்தி) எப்பொழுதுமே ஓர் ஆச்சரியமாக இருந்தது. அதே விஷயம் இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருந்ததால் அது அவனுக்கும் பிடித்த சுலோகமாக இருந்தது. விதி என்பதுதான் இயற்கையின் அந்த யுக்தி (அல்லது சக்தி) அது மனம் வைத்தால், இரு வெவ்வேறு தீவுகளிலிருந்து அல்லது பத்துத் திசைகளின் அடிவானத்துக்கு அப்பாலிருந்து ஒரு சங்கதியை அல்லது ஓர் ஆளைப் பிடித்திழுத்து வந்து தனது சம்பவத்தை நடத்தும். மனிதனுக்கு எது அகஸ்மாத்தமாக நடக்கும் சம்பவம் என்று தோன்றுகிறதோ அது இயற்கையின் விதிகளுக்குட்பட்டு நடக்கும் சம்பவமாக இருக்கும். எவ்வளவு விநோதமான, ஆனால் உண்மை அநுபவத்தின் அர்த்தம்! மிக நல்ல சுலோகங்களில் இது ஒன்று. "த்வீபாதன்யஸ்..." ராமண்ணா நிறுத்தினான. அதெல்லாம் சரி. ஆனால் இப்பொழுது சுமார் அரைமணி நேரமாகியிருக்கும். இவ்வளவு நேரமும் அதே சுலோகத்தைச் சுற்றியே தான் சிந்தனையை ஓட்டிக் கொண்டிருக்கிறானே! ஏன் இப்படி? ராமண்ணா நெடுமூச்செறிந்தான். எதை மறப்பதற்காகத் தான் மனப்பூர்வமாக இத்தப் புத்தகத்தின் துணையுடன் முயன்று கொண்டிருந்தானோ, கடைசியில் அதே விஷயத்தின் நினைவு இந்த சுலோகத்தினால் ஏற்பட்டுவிட்டது! பல்லிடுக்கில் சிக்கிக்கொண்ட காய்கறித் தோலின் துணுக்கைப்போல அது தன்னைத் துன்புறுத்திக் கொண்டிருக்கிறது. எப்படியாவது நாக்கைப் புரட்டி அதை வெளியிலெடுத்தே ஆகவேண்டும். இல்லாவிட்டால் நிம்மதியில்லை. ஆனால் அந்தக் குறிப்பிட்ட நினைவுதான் எது ? ஆங்... சில நிமிடங்களுக்கு முன்னால் கூடத் தன்னைத் துன்புறுத்திக் கொண்டிருக்கவில்லையா? அதே நினைவு.

"தான் சரளாவைக் காதலிக்கிறேனா? குமுதாவையா?" என்று கேட்டுக்கொண்டு, "யாருக்கு வேண்டியிருக்கிறது பதில்?" என்று கையை உதறையிருந்தானே சில நிமிடங்களுக்கு முன்னால்? அதே கேள்விகள், இந்த சுலோகத்தின் மூலமாகத் தன் இதயத்தில் புகுந்து குழப்பம் விளைவித்துக் கொண்டிருக்கின்றன. யாருக்கு வேண்டி யிருக்கிறது பதில் என்று இப்போது ராமண்ணா என்னவோ

அலட்சியமாக நினைக்கிறான். ஆனால் இரண்டு வருடங்களுக்கு முன்னால் ராமண்ணாவின் நிலை வேறாக இருந்தது. இந்த இரண்டு கேள்விகளில் ஒன்றுக்கு ஒன்றுத் தெளிவான பதில் அவனுக்குத தேவையாக இருந்தது. ஒரு நாள்-அல்ல, ஒரு இரவு என்று சொல்லவேண்டும். இந்தக் கேள்விகள் அவனை அலைக்கழித்திருந்தன. ஒரு சமயம் ஒரு பதில் , இன்னொரு சமயம் இன்னொரு பதில் சரியாகத் தோன்றியது. அன்று இரவு இதயத்தின் ஆவேசத்தினால், அறிவு செயலற்றதாகப் போய் விட்டபோது, அவன் மிருகத்தைப் போலாகிவிட்டிருந்தான். மிருகத்திற்கும் மனிதனுக்கும் வேறுபாடு அறிவுதான். அறிவு செயலற்றுப் போகும்போது, மனிதன் மிருகத்தின் நிலைக்குத் தாழ்ந்து விடுகிறான் என்பதை இன்று இரவு ராமண்ணா கண்டு கொண்டான். ஆம், அன்று இரவேதான் தனக்கு இந்த சுலோகமும் நினைவுக்கு வந்தது.

அன்று இரவு, தான் குமுதாவிடம் மிருகத்தைப்போல நடந்து கொண்டதாக இன்று தோன்றுவதைப் போல அன்றும் அவனுக்குத் தோன்றியது. தான் ஏன் அவ்வாறு நடந்துகொள்ள வேண்டி வந்ததோ? ஆங்...ஆம். அன்று தன் மனம் பெரும் குழப்பம் அடைந்திருந்தது. 3-4 நாட்களாகத் தினமும் இரவு சிறிது நேரம் குமுதாவுடன் கழித்து வந்தான். இந்திரிய சுகத்தின் ஆசையாலா? யுவதியான பெண்ணின் சகவாசத்தால் தோன்றிய உற்சாகமா? - எப்படியோ, ஏதோ ஒரு காரணத்திற்காக அந்தப் புது அநுபவத்தின் ருசி அவனுக்குப் பழக்கப்படத் தொடங்கியிருந்தது. மூன்று நான்கு நாட்களாக அந்த நிகழ்ச்சி தவறாமல் நடந்து வந்தது. அன்று இரவு சுமார் பத்தரை மணிக்குப் பிறகு, குமுதாவின் அறைக்குச் செல்வதற்காகப் புறப்பட்டிருந்தான். மெதுவாகக் கதவைத் திறந்து தன் அறையை விட்டு வெளியேறிக் கதவைச் சாத்துவதற்குள்ளாக, சரளாவின் அறையிலிருந்து அவள் இருமும் சப்தம் கேட்டது. எதிர்பாராத அந்த சப்தத்தைக் கேட்டு அவன் திடுக்கிட்டான். கதவைமூடிக் கொண்டிருந்த கை நடுங்கிற்று. சப்தம் செய்யாமல் கதவை மூடமுடியவில்லை. அப்பொழுது சட்டென்று ஏதோ முடிவுக்கு வந்தவனாக சரளாவின் அறைக்குப் போனான். தான் திடீரென்று தன்னுடைய அறையிலிருந்து பாய்ந்து வந்ததினால், தன் அறைக்கதவு ஓசைப்

பட்டது என்று யாரும் நினைத்துக் கொள்ளலாம் அல்லவா? ஆனால் சரளாவின் அறைக்குள் காலடி எடுத்து வைத்ததும், அவனுடைய அது போன்ற எல்லா எண்ணங்களும் மறைந்து, சகஜமான உற்சாகத்தோடு சரளாவிடம் சென்றான். அவள் முகத்தில் ஆயாசத்தின் களை காணப்பட்டது. முகம் சிறிது கறுத்தாற்போலும் இருந்தது. அசக்தியினால் மூச்சுவிடுவது கூடக் கஷ்டம் என்பதுபோல நாசித்துவாரங்கள் பிரயாசையுடன் மூச்சுவிடுவதைக் காணமுடிந்தது. இருந்தபோதிலும் தன்னைப் பார்த்ததுமே சரளா புன்முறுவல் செய்ய முயன்றாள். என்ன ஜீவன்! தனக்குக் கஷ்டமானாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், மற்றவர்களுக்கு மகிழ்ச்சியை உண்டாக்க நினைக்கும் சுபாவம்-என்பதை நினைத்து ராமண்ணாவுக்குத் தொண்டையில் ஏதோ அடைப்பது போலாயிற்று. அவளருகில் சென்றதும், அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவளுடைய நெற்றியையும், உடம்பையும் தொட்டுப் பார்க்கத் தொடங்கினாள்.

"எனக்கென்ன ஆகிவிட்டது? நீங்கள் இவ்வளவு திகில்பட்டு ஓடி வருவதற்கு?" என்று கேட்டாள்.

ராமண்ணாவின் வாயிலிருந்து பதில் வரவில்லை.

"எழுதுவதை விட்டுவிட்டு வந்தீர்களா என்ன?"

"அப்படியென்ன பிரமாதமாக எழுதிக்கொண்டிருந்தேன்!" என்று பேச்சை மாற்றுபவன் போல ராமண்ணா பதிலளித்தான்.

"பாழும் ஜென்மம் என் வாழ்க்கை! தனக்கும் சுகம் இல்லை, மற்றவர்களுக்கும் சுகம் இல்லை!" என்று கண்ணீரைத் தடுக்கும் முயற்சி என்பது போல முகத்தை வேறு புறம் திருப்பிக்கொண்டு படுத்தாள்.

ராமண்ணா ஒரு நிமிடம் தியானத்தில் இருப்பதைப் போல உட்கார்ந்திருந்தான். ஜன்மஜன்மாந்திரங்களின் பயிற்சியினாலோ என்னவோ என்று சொல்லும்படி, அவனது கை அன்பின் குளிர்காற்றைப் போல அவள் முதுகின் மீது படிந்தது. சில நிமிடங்கள் சரளாவும் ஒன்றும் பேசாமல் படுத்திருந்தாள். ராமண்ணாவின் ஸ்பர்ஸம் அவளது துயரத்தின் வெட்பத்தை அணைத்திருந்தது. அந்த மௌனத்தில் அந்த இரண்டு இதயங்களும் பரஸ்பரம் ஒன்றிப்போனது போல இருந்தன. சில நிமிடங்களுக்குப் பிறகு ராமண்ணாவே முதலில் பேசினான்.

"ஏன் சரளா, ஏதாவது உபத்திரவமாக இருக்கிறதா?"

படுத்திருந்தபடியே தலையை ஆட்டி, ஒன்றும இல்லை என்று சரளா காண்பித்தாள்.

"பின்னே இவ்வளவு நேரமாகியும் உனக்குத் தூக்கம் வரவில்லையே?" அதற்குள்ளாக உள்ளில் ஏதோ முன் னைத்தாற்போல உணர்ந்து," என்னை அழைத்திருக்க வேண்டும்" என்றான்.

சரளா பேசாமல் இருந்தாள்.

ராமண்ணா அவளை மெதுவாக எழுப்பி உட்காரவைத்து, அவள் மோவாயைப் பிடித்தபடி பிடிவாதமாகக் கேட்டான்.

"என்ன ஆகியருக்கிறது சொல்" என்று.

"ஒன்றும் இல்லை."

"ஊஹூம். பொய் சொல்லுகிறாய். உன் முகமே சொல்கிறது. என்னமோ இருக்கிறதென்று?"

"ஒன்றும்...ஒ...ன்...று...மே... இல்லை" என்று கூறிச் சிரித்தாள்.

"அப்படியானால் ஏன் தூக்கம் வரவில்லை?"

"அது எவ்வளவுதான் வரும்? எவ்வளவோ வருஷமாக நடந்து வருகிறது. என்றைக்கு முடியுமோ என்னமோ?"

"சீ! பைத்தியக்காரி! இப்படியெல்லாம் யோசிக்காதே, அப்புறம் அதையே தலைமுழுக்க நிறைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாய்."

"நான்தான் என்ன செய்வேன்? எனக்கே இவ்வளவு பேஜாராக இருக்கிறது. இனி மற்றவர்களுக்கு எவ்வளவு பேஜாராக இருக்கவேண்டும்?"

"படுத்த இடத்திலேயே படுத்திருக்கவேண்டுமென்பதால், உனக்கு அலுப்பு. எங்களுக்கென்ன கேடு அலுப்பு ஏற்படுவதற்கு? மேலும் உனகுத் தேலையாகிவிடும் என்று எதிர்ப்பார்ப்பதிலேயே நாட்கள் விநாடிகள் போல் கழிந்து விடுகின்றன."

"எனக்குத் தேவலையாகிவிடும் என்று நினைப்பது பைத்தியக்காரத்தனமான எண்ணம். பாருங்களேன், நீங்கள் என்ன குறை வைத்தீர்கள்? எல்லா பாட்டில்கள் மருந்தும் ஆயிற்று; இன்ஜெக்ஷன் ஆயிற்று. ஒரு நல்ல டாக்டர்கூடப் பாக்கி இல்லை-"

"அப்படியென்றால்? உனக்குத் தேவலையாகாது என்று தெரிந்தே, நான் இவ்வளவு வைத்தியமும் செய்தேனா?"

"பாவம் உங்கள் கடமையை நீங்கள் செய்தீர்கள். ஆனால் இது குணமாகக்கூடிய வியாதி இல்லை என்றால், நீங்கள் என்ன செய்வீர்கள்?"

ராமண்ணா வேடிக்கைப் பேச்சால் அவளுடைய எண்ணத்தை மாற்ற நினைத்தான்: "கடமை என்றால்? இவ்வளவு நாட்கள்

இவள் என் மனைவி என்பதற்காக எனக்குச் சமையல் செய்து பறிமாறிக் கொண்டிருந்தாள், தாம்பத்ய சுகம் கொடுத்தாள், என்னுடைய இத்தனை கிழிந்த துணிகளைத் தைத்துக் கொடுத்தாள், இத்தனை சட்டைகளுக்கு உடைந்து போன பொத்தான்களை தைத்துக் கொடுத்தாள் என்று கணக்குப் போட்டு-அந்தக் கணக்குப்படி இவ்வளவு நாட்கள், இவ்வளவு பில் வரும் வரையில் மருந்து வாங்கவேண்டும். பிறகு-"

"போதும் விடுங்க. நான் அப்படிச் சொல்லவில்லை என்று உங்களுக்குத் தெரியாதா? ஆனால் சாகப் போகிற செடிக்குத் தண்ணீர் இறைப்பது புத்திசாலித்தனம் அல்ல என்று-"

"இதோ பார் சரளா, நீ சாகப்போகிற பேச்சை விடு. உன்னைப் பிழைக்க வைக்கவேண்டியது எப்படி என்பது என் பொறுப்பு. போறுமா? இன்னொரு சமாசாரம். தேள் கண்ணில் கண்டதுமே 'சிவா, சிவா', என்று சொல்லிவிடு."

"அப்படியென்றால் ?" சிரித்த முகத்துடன் கேட்டாள்.

"இது போன்ற கெட்ட எண்ணம் வரும் என்கிற சந்தேகம் வரும்போதே என்னைக் கூப்பிட்டு விடு. நான் வந்து பக்கத்தில் உட்கார்ந்து கொள்கிறேன். உனக்குத் தூக்கம் வரும் வரையில்."

ஓர் அரைநிமிடம் பேசாமலிருந்து, பெருமூச்சு விட்டபடி சரளா, "அதைத்தான் நானும் சொல்கிறேன்" என்றாள்.

"அதைத்தான் சொல்கிறேன் என்றால்?" ராமண்ணாவுக்கு அவள் சொன்னதன் பொருள் விளங்கவில்லை.

"மறுபடியும் மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுப்பது என்கிறேன்."

"இங்கே வந்து உட்காருவது தொந்தரவு என்று நான் சொன்னேனா?"

"நீங்கள் சொல்லவில்லை. உங்களுக்கு அப்படித் தோன்றவும் தோன்றாது. இருந்தாலும் நீங்கள் எழுதிக் கொண்டு உட்கார்ந்திருக்கும்போது, உங்களை நான் கூப்பிடமாட்டேன்."

"நான் எழுதுவது என்னைவிட உனக்கே முக்கியமாக இருக்கிறதா?"

"ஏன் இருக்கக்கூடாது? நீங்கள் எழுதுவதனால் உங்களுக்கும் சந்தோஷம். படிப்பவர்களுக்கும் சந்தோஷம். அதை விட்டுவிட்டு இன்றைக்கோ நாளைக்கோ என்றிருக்கும் என் பக்கத்தில் வந்து ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டால் என்ன செய்தாற் போலாயிற்று?"

"நீயே ஒரு எழுத்தாளராக இருந்திருந்தால், உன்னை மணந்து கொண்டவர்பாடு திண்டாட்டம்தான்" என்று ராமண்ணா சிரித்து அவளையும் சிரிக்க வைத்து அந்த எண்ணத்தையே மறக்க வைத்தான்.

"இருந்தாலும் நான்கைந்து நாட்களாக - என்னமோ - ஏனோ மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் வருகின்றன, நானும் எவ்வளவோ முயல்கிறேன்."

"இதோபார் சரளா, மனத்தில் தோன்றும் யோசனை உனக்கு நோவு உண்டாக்காமலிருக்க நான் ஒரு யுக்தி சொல்லிக் கொடுக்கிறேன். யோசனை வந்ததுமே அதை வெளியில் விட்டுவிடவேண்டும். எண்ணங்கள் வருவது என்றால் தும்மல் வருவது போல, அதை அடக்கி உள்ளே வைத்துக் கொண்டால்-"

"வெளியில் விடுவது என்றால் என்ன? இருமுவதா, தும்முவதா?"

"இன்னொருவரிடம்-அதாவது என்னிடம்-சொல்வது, சரி, சொல் பார்ப்போம், நேற்று முந்தா நாள் யோசனைகள் இப்போதைக்கு வேண்டாம். இன்றைக்கு வந்த எண்ணத்தைச் சொல்."

"ஊஹூம்"

"பார்த்தாயா? மருந்து வேண்டாம் என்று விட்டு, வியாதி குணமாக வில்லை என்கிறாற்போல."

"நீங்கள் சிரிப்பீர்கள்."

"இல்லை"

"நீங்கள் கோபித்துக் கொள்வீர்கள்"

"இல்லை—அட, ஒன்று சிரிப்பு வரும், இல்லாவிட்டால் கோபம் வரும் என்றால், அப்படிப்பட்ட உன் யோசனைதான் என்ன?"

"இவ்வளவுக்கப்புறம் சொல்லித்தான் என்ன பிரயோஜனம்?"

"முதலில் சொல். அதனால் என்ன பிரயோஜனம் என்பதைத் தான் நான் சொன்னேனே?"

"ஊஹூம் சும்மா வாயால் சொல்வதால் போய்விடுகிற யோசனை அல்ல அது"

"என்ன செய்தால் போகும் சொல்"

"நீங்கள அதை நிறைவேற்றிக் கொடுக்கிறேன் என்றால்" என்று கூறி நிறுத்தி, "சரிபோதும், வீணாக ஏன் பொழுதைக் கழிக்கிறீர்கள்? பதினொன்று அடிக்கப்போகிறது. எனக்கும் தூக்கம் வரும்போல இருக்கிறது" என்றான்.

ஓரிரு நிமிடங்கள் ராமண்ணா மௌனமாக அவளை உற்றுப் பார்த்தான். மெதுவாக அவன் முகத்தில் முறுவல் படர்ந்தது.

இதயத்தையே தன் கையில் கொண்டு வந்தாற்போல, அவ்வளவு கனிவான ஸ்பர்சத்துடன் அவன் கை அவள் நெற்றியை வருடியது. மெதுவாக அவள் தலையைத் தூக்கித் தன் தொடை மீது வைத்துக் கொண்டான். அப்படியே அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளும் தன் கண்களை மேலே திருப்பி அவனையே உற்று நோக்கினாள். பார்வையோடு பார்வை கலந்தது. அவளது நெஞ்சாழத்திலிருந்த எண்ணம், சட்டென்று ராமண்ணாவுக்குப் பளிச்சிட்டதோ என்னவோ!

"அது ஒன்றைவிட்டு வேறு எது வேண்டுமானாலும் நிறைவேற்றுகிறேன்" என்றான் சிரித்த முகத்துடன்.

"எது ஒன்றை விட்டு?" அவளும் சீண்டும் குரலில் கேட்டாள்.

"இப்பொழுது உன் மனத்திலிருக்கிறதே, அதை விட்டு!"

"எனக்கு இது தெரிந்தேதான் இருந்தது" என்று சரளா பெருமூச்சு விட்டாள்.

"அது முடியாத காரியம் என்று உனக்கு என்றைக்கோ தெரிந்திருக்க வேண்டும்."

"எது முடியாத காரியம்? சொல்லுங்களேன்." அவள் குரலில் வேதனை இருந்தாலும் பிடிவாதமும் இருந்தது.

"எது என்றால் என்ன? இங்கே பார், சரளா உனக்கு ஒன்றும் ஆகப் போவதில்லை. நீ அந்த எண்ணத்தையே விட்டுவிடு."

"ஒன்றும் ஆகப் போவதில்லை!" சரளா தனக்குத் தானே பேசிக் கொள்வதுபோல தான் சொன்ன வார்த்தைகளையே திருப்பிச் சொன்னாள். "என்ன சந்தோஷ சமாசாரம் என்று சொல்கிறீர்கள், ஒன்றும் ஆகப் போவதில்லை, என்று? வருடத்திற்கு மேலாகி விட்டது, இவ்வாறு படுத்துக்கொண்டு. வீடு அழுது வடிகிறது. என்னால் அதற்கு எந்த சோபையும் இல்லை. ஒன்றும் ஆகாவிட்டாலும், ஒன்றும் கிடைக்கப் போகிறதும் இல்லை. நீங்கள் என்ன கிழவரா? குழந்தைகளில்லாத வீடு என்ன வீடு?"

"பைத்தியக்காரி! முதலில் மனைவி இருந்தாலல்லவா குழந்தைகளைப் பற்றிய பேச்சு?"

"என்னைப் போன்ற மனைவி இருந்தால், அந்தப் பேச்சுக்கே வழி இல்லை."

ராமண்ணாவால் இப்போது பதிலொன்றும் சொல்ல இயலவில்லை. சரளா அடிக்கடி இந்தப் பேச்சை எடுத்தாலும், தற்போது அவனுக்கு அது விஷயமாக ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. உள்ளில் தோன்றிய ஏதோ ஒரு அச்சத்தால்

தான் இநதப் பிணியிலிருந்து மீளப் போவதில்லையென்று சரளா தெரிந்து கொண்டிருந்தாள். அவளுடைய அந்த எண்ணத்தைப் போக்க ராமண்ணாவால் இயலவில்லை. அவனுக்கும் அந்த எண்ணமே வேண்டியிருக்கவில்லை. எவ்வளவோ தடவை அதே யோசனையால் அவனும் உள்ளுக்குள்ளேயே பயந்திருந்தான். இப்பொழுது அவனுடைய உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

"ஏன்"- அவனது உடல் நடுங்கியது சரளாவுக்குத் தெரிந்து விட்டதோ என்னவோ?

ராமண்ணா அப்போது கொஞ்சம் கோபமாகவே சொன்னான்: "உன்னைப்பற்றி ஏதாவது பயம் தோன்றினால் என் உடல் நடுங்குகிறது. அதைப்பற்றி என்ன சொல்லுவேன்? நான்தான் என்ன பண்ணுவேன் சரளா? சொல்" என்று நிராசை நிறைந்த குரலில் அவன் வாயிலிருந்து வார்த்தைகள் தடுமாற்றத்துடன் வெளிப்பட்டன.

படுத்தபடியே தன் கையை உயர்த்தி, அவன் கன்னத்தை வருடியபடி சிரித்தவாறே சரளா சொன்னாள் - "அய்யே, இப்போ யார் பைத்தியம்? பயமாம்! நான் ஏன் கெட்டதைச் சொல்லுகிறேன்? நான் போன பிறகு நீங்கள் என்ன பண்ணப் போகிறீர்களோ, யார் பார்க்கப் போகிறார்கள்? நான் சாகக் கூடாது. என் கண்முன்னாலேயே நீங்கள் என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்."

சரளாவின் பேச்சை முழுதும் கேட்டுக் கொள்ளாமல், "சொல் சரளா, உன் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன்" என்றான். எவவளவு பெரிய தவறு அது! தன் வாயிலிருந்து அந்த வார்த்தைகள் வரவேண்டியதொன்றே பாக்கி, உடனே சரளா -

"அந்த பாக்கியத்தைப் பார்க்க கடவுள் எனக்கு ஆயுளைக் கொடுக்கட்டும். உண்மையாகவே, நிறைவேற்றுவீர்களா? உண்மை யாக?" - தான் தலையசைத்திருக்க வேண்டும் அப்பொழுது- "அப்படியானால் இன்னொரு மனைவியை - "

"ஆங்!" என்று இடி விழுந்ததைப் போலத் திடுக்கிட்டான்.

"இல்லை, உங்களை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். என் எண்ணம் அது. எனக்காக நீங்கள் அதைச் செய்யக்கூடாதா? இந்த வீட்டில் குழந்தை குட்டிகள் விளையாடுவதைப் பார்த்துவிட்டு நான் சாகவேண்டும் என்று - "

யந்திரம் போலத் தன் தலையை ஆட்டினான். "முடியாது, முடியாது" என்று உள்ளே இதயம் அடித்துக்கொண்டது.

"அவ்வளவு-அவ்வளவு நடந்தால் போதும். நான் நிம்மதியாகக் கண்மூடுவேன்" இதயத்து முந்தானியை விரித்து வேண்டுவது போலச் சரளா சொன்னாள்.

"இப்போது இருக்கும் இதைவிட வேறு சுகம் எதுவும் எனக்குக் கிடையாது" என்ற வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வெளிப் பட்டன.

இருவரும் பேசும் நிலையில் இல்லை. சரளாவின் கண்களில் நீர்த்துளிகள் மின்னின. ராமண்ணா மிக்க வேதனையுற்றான். "சரளா, சரளா, எனக்கு எவ்வளவு மனம் புண்படுகிறது என்பதை நீ பார்க்கக் கூடாதா?" என்று கேட்டான். அதற்குச் சரளா பொங்கி எழுகின்ற துக்கத்தை அடக்கிக் கொண்டு சமாதானமான குரலில், "உங்களுக்கு மனம் வேதனையடைவதானால், இப்போது அந்தப் பேச்சே வேண்டாம்" என்றாள். சிரித்து முகத்துடன் தனக்கே ஆறுதல் கூறினாள்.

இவ்வளவு நேரம் பேசியதனால் ஏற்பட்ட களைப்போ அல்லது தன் மனத்திலிருந்ததை வெளியிட்டு விட்டோம் என்கிற நிம்மதியோ, எப்படியோ இரண்டே நிமிடங்களில் சரளா சிறு குழந்தையைப் போலத் தூங்கிவிட்டாள். சில நிமிடங்கள் கழித்து, ராமண்ணா மெதுவாக அவள் தலையைத் தலையணையின் மீது வைத்துவிட்டு, குதிகால்களின் மீது நடந்து வெளியே சென்றான்.

வெகுதூரம் பிரயாணம் செய்து, முன்பின் அறிந்திராத ஒரு நிலையத்தில் இறங்கினால் ஏற்படக்கூடிய பிரமை, ராமண்ணாவுக்கு ஏற்பட்டிருந்தது. சரளாவின் அறையிலிருந்து வெளிவந்ததும், இதென்ன? எங்கே வந்திருக்கிறோம்? அல்லது எங்கேயாவது புறப்பட்டிருக்கிறேனா? என்று கேட்பது போல, களையிழந்த கண்களால், இங்கும் அங்கும் முழித்துப் பார்த்துக் கொண்டு நிற்கிற போது, குமுதாவின் அறைக்கதவு அவன் கண்களில் பட்டது. ஆங் - எவ்வளவோ நாட்களுக்கு முன்பு - இல்லை, சில நிமிடங்களுக்கு முன்னால் தான் புறப்பட்டது அந்த அறைக்குத்தான் என்று நினைத்து, அதை நோக்கிப் போகும்போது, "சே, இதென்ன எண்ணம்!" என்று நினைத்தவனாக விருவிருவென்று நடந்து தன் அறைக்குச் சென்று கதவை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். ஆனால் மனம் கலங்கினாற் போலிருந்தது. ஏதோ மனக்குழப்பம் அவனை உட்கார்ந்த இடத்தில் உட்காரவிடவில்லை. எதையோ தேடுபவன் போல, ஆனால் சூனியப் பார்வையுடன் சுற்றுமுற்றும் பார்த்தான். "இன்றைக்கு ஒருநாள் போய்விட்டு வந்தால் போயிற்று" என்று

நினைத்துக் கொண்டிருந்தான். ஆனாலும் கால்கள் நகர மறுத்தன. சரளாவின் வேண்டுதலின் அந்த தீனக்குரல் செவி வழியாகச் சென்று, அவன் இதயத்தைத் தொட்டிருந்தது. இன்னும் வெளியேறி இருக்கவில்லை. இன்று இவ்வளவு பரிதாபமாக அவள் ஏன் வேண்டிக்கொண்டாள்? "எனக்காக" என்றாள். "அவ்வளவு நிறைவேறினால் நிம்மதியாகக் கண்மூடுவேன்" என்றாள். ஏன்? அவளுக்குத் தெரிந்திருக்குமோ? நோயின் கொடுமையால் புண்பட்டிருக்கும் அந்த இதயம் தன்னுடைய துரோகத்தால் எவ்வளவு அதிர்ச்சியடைந்திருக்கும்? அல்லது, தெரிந்திருக் காமலும் இருக்கலாம். இதற்கு முன்புகூட அவள் இதே விருப்பத்தை வெளியிட்டிருக்கிறாள். ஆனால் இன்று அவளுடைய குரலில் பலவீனம் நிறைந்திருந்தது. தான் பிழைத்திருக்கும்போதே இது நடைபெறவேண்டும் என்றாளே? ஓஹோ- தன் உறவினளான குமுதாவையே நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவள் மனத்தில் இருக்குமோ? பின்னால் நான் வேறு யாரை யாவது மணந்துகொண்டு விடுவேன் என்று பயந்து, தன் வாழ் நாளிலேயே விவாகம் நடந்து விடவேண்டுமென்று அவசரப்படுகி றாளோ? பாவம்! எவ்வளவு அழுக்கற்ற மனம்! எவ்வளவு சரளமான சுபாவம்! இத்தகைய மனைவியை அநுபவித்த நான், இன்னொருத்தியை மணப்பேன் என்று எப்படி இவள் எதிர் பார்க்கிறாள்? இப்பொழுது அவன் மனச்சுமை குறைந்து இதயம் லேசாகி இருந்ததால், இந்த எண்ணங்களினால் அவனுக்குச் சிரிப்பு வந்தது. இன்னொரு கல்யாணமாம்! எவ்வளவு குழந்தைத்தன மானவள் இந்தச் சரளா! தனக்கு இன்னொரு விவாகம் கிடையவே கிடையாது. வேறு யாரோடாவது மாத்திரம் அல்ல, குமுதாவோடுகூட - அப்பொழுது ராமண்ணாவுக்கு மறுபடியும் திக்பிரமை ஏற்பட்டாற் போலிருந்தது. இதென்ன இப்படி நான் எண்ணங்களின் குழப்பத்தில் சிக்கிக் கொண்டேன்- என்று நினைத்துக் கொண்டான். குமுதாவையும் மணந்து கொள்ள மாட்டேன் என்கிற எண்ணம் தனக்குத் தோன்றியதே? ஆனால் இப்பொழுது குமுதாவின் அறைக்குப் புறப்பட்டிருக்கிறானே! தான் ஏன் அங்கே போக வேண்டும்? அந்த நோக்கத்தோடு போக விரும்பும் தன் மனம், அவளை மணந்து கொள்ள ஒப்பமாட்டேனென்கிறது! சீ ! இந்தச் சிக்கலிலிருந்து தான் இப்பொழுதே விடுபடவேண்டும். போனது போகட்டும், இன்று முதல் குமுதாவின் அறையில் கால் வைக்கக்கூடாது என்று நினைத்துக் கொண்டான்.

ஆனால்? அவனுடைய மனத்தின் அந்த எண்ணங்களை அறிவு ஒப்பவில்லை. "நீ போவதில்லை என்று இங்கே உட்கார்ந்து கொண்டால், அவளுக்குத் தெரிவது எப்படி? இருவருடைய ஒப்புதலின்பேரில் ஏற்படுத்திக் கொண்ட ஏற்பாட்டை ஒருவனாக முறிப்பது ஞாயமா? அதுவுமல்லாமல் உன்னை மணந்து கொள்ள வேண்டுமென்று குமுதாவின் மனத்தில் இருக்குமானால், உன்னுடைய தீர்மானத்திற்குக் கொஞ்சமாவது அர்த்தம் உண்டு. ஆனால், அவளுக்கும் விவாகத்தைப் பற்றிய எண்ணம் இல்லாவிட்டால்? அப்பொழுது சிக்கல் எங்கே? இவ்வாறு பைத்தியம் போல் நடக்காதே. போ. அவள் எவ்வளவு நேரமாக உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறளோ!" என்று அறிவு அவனை முன்னின்று இழுத்தது. ஓர் அடி முன்னால் எடுத்து வைத்தவுடன்," குழந்தைகளில்லாத வீடு என்ன வீடு! எனக்காக வாவது கல்யாணம் செய்து கொள்ளுங்கள் வீட்டில் குழந்தைகள் ஓடி ஆடுவதைப் பார்த்துவிட்டு சாகிறேன்" என்று அவன் இதயத்தில் இன்னும் ஒலித்துக் கொண்டிருந்த சரளாவின் குரல் கயிற்றைப் போட்டு இழுப்பது போல அவனைப் பின்னுக் கிழுத்தது. "பைத்தியக்காரன் நீ! சரளாவின் மனச் சாந்திக்காக உனக்குச் சரி என்று படும்போது கல்யாணம் செய்து கொள்வாயாம். என்றைக்கோ நடக்கவிருக்கும் விஷயத்திற்குப் பயந்து இன்றைய சுகத்தை இழப்பதில் என்ன புத்திசாலித்தனம் இருக்கிறது? நட" என்று மறுபடியும் அறிவு ஊக்கிக் கொண்டிருந்தது. "நிஜமாக? நிஜமாக நிறைவேற்றுவீர்களா? அவ்வளவு-அவ்வளவு நடந்தால் நான் நிம்மதியாகக் கண் மூடுவேன்" என்று சரளாவின் குரல் இப்பொழுது வடிவெடுத்து, கைப்பிடித்து முன்னே செல்லாவிடாமல், தொங்கிக் கொண்டிருப் பதைப் போலத் தோன்றியது. "ஹ்ஹ! சரளாவைப்பற்றி ஏன் இவ்வளவு யோசனை? 'நீங்கள் என்ன கிழவரா?' என்று அவள் கேட்டதிலிருந்தே உன்னுடைய தேவையை அவர் புரிந்து கொள்ளவில்லையா? உன்னுடைய சுகத்தை உத்தேசித்துத்தானே அவள் சொன்னாள்? இப்போது சுகம் உனக்காக அங்கே படுக்கையின் மீது எதிர்நோக்கிக் காத்திருக்கிறது. தாமதிக்காதே" என்று அறிவு பலமாக ஐந்தாறடி அவனை முன்னோக்கி இழுத்தாற்போலிருந்தது. சரளாவின் குரல் பின்னால் நின்ற இடத்திலேயே நின்று விட்டது போலும்! இப்பொழுது தெளிவில்லாமல் கேட்டுக்கொண்டிருந்தது. "பைத்தியக்காரா,

பைத்தியக்காரா! 'இப்போது இருக்கும் இந்த சுகத்தைவிட, இனி எனக்கு வேறு சுகம் கிடையாது' என்று சரளாவின் முன்னால் ஒத்துக் கொண்டாய். இப்போது இருப்பதை விட்டு, வேறு எங்கே இன்பம் காணப்போகிறாய்?" என்று கூறி, அறிவு அவனை அறையிலிருந்து வெளியே இழுத்துக் கொண்டு வந்துவிட்டது.

ராமண்ணா முதலில் செயலற்றவனானான். பிறகு கோபம் கொண்டான். இவ்வளவும் நினைத்து முளையைக் குழப்பிக் கொள்வானேன்? விவாகத்தைப் பற்றிய யோசனை ஏன்? நியாயத்தைப் பற்றிய யோசனை ஏன்? இயற்கையே இந்த நியாயத்தை வகுத்துக் கொடுத்திருக்கிறது - என்று நினைத்துக் கொண்டு, சிறிது கர்வத்துடனேயே குமுதாவின் அறையில் காலடி எடுத்து வைத்தான். விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. பக்கத்தில் சுவற்றில் மாட்டியிருந்த கண்ணாடியில் தன்னுடைய பிரதிபிம்பம் தெரிந்தது. தன்னைத்தானே பார்த்துக் கொள்வ தற்கு, அவனுக்குப் பயமாக இருந்ததோ என்னவோ! அந்த வெளிச்சத்தில் குமுதாவைச் சந்திக்கக் கூச்சமாக இருந்ததோ •என்னவோ? குமுதாவின் முகம் வாசல் பக்கம் திரும்பியிருக்க வில்லை. இதையே பயன்படுத்திக் கொண்டு, அங்கிருந்து ஓடிவிடவேண்டுமென்றும் தோன்றியது. ஆனால் ஆணான ராமண்ணாவுக்கு அது அவமானமாகத் தோன்றியது. ஏன் ஓடிப்போகவேண்டும்? இந்தப் பெண்ணுக்குப் பயந்து கொண்டா? என்னுடைய நோக்கம் என்ன என்பதை, இவளுக்குத் தெளிவாகக் காட்டிவிடுகிறேன் - என்று நினைத்தபடி விளக்கை அணைத்து விட்டுப் படுக்கையில் படுத்துக் கொண்டான். ஆணின் அதிகா ரத்தைச் செலுத்திவிட்டு அறையை விட்டு வெளியேறினான்.

இல்லை - இனி வெளியேற வேண்டும் என்று நினைத்துக் கொண்டான், அவ்வளவுதான். ஆனால் அன்று தான் அந்த அறையிலிருந்து தப்பிஓடும் கள்ளனைப் போல நழுவியிருந்தான் அதுவரையில் இருந்த வெறி இறங்கியதும், ராமண்ணா வேறு மனிதனாகி விட்டான். இதென்ன இப்படிச் செய்து விட்டேன்? என்று தோன்றிய போதிலும் அங்கே நின்று கொண்டு மன்னிப்புக் கோரவோ சமாதானம் சொல்லவோ அவனது தன்மானம் இடங்கொடுக்காததால் அவன் நழுவுவதுபோல் அறையை விட்டு வெளியேறினான். தன் அறைக்குச் சென்ற பிறகு, அங்கும் அவனுக்கு விளக்கு வேண்டியிருக்கவில்லை. இருட்டிலேயே

உட்கார்ந்து கொண்டிருந்தான். மிருகம்! நான் ஓர் அசல் மிருகம்! என்று நினைத்துக் கொண்டான். மறுவிநாடி அப்படி நினைப்பது மிருகத்திற்கு அநியாயம் செய்வதாகும், எந்த மிருகமும் மனிதனைப்போல மிதமிஞ்சிய காமவாழ்க்கை நடத்துவதில்லை, இயற்கையின் நியதிக்குட்பட்டு ஒரு பொறுப்புடன் வாழ்கிறது - என்று தன்னையே பழித்துக் கொண்டான். அப்பொழுது அவனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது குமுதாவின் சகவாசம் இல்லாமற்போனால், தனது வாழ்க்கையில் ஏதோ ஒரு குறை ஏற்பட்டாற்போல இருக்கும் என்று. எந்த வகையில் யோசித் தாலும், கடைசியில் தான் குமுதாவிடமே ஓடிவந்திருந்தானே? நிமிடத்திற்கு முன்னால் அங்கே இயற்கைக்கு விநோதமாக நடந்து கொண்டிருந்த போதிலும், குமுதாவின் பேரில் தனக்குக் கோபம் இல்லை, போய் அவளிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்று தோன்றியது. அன்றைய அநுபவத்தை மறந்து, மனம் முந்திய நாட்களின் அநுபவத்தை நினைத்துச் சுவைத்துக் கொண்டிருந்தது. குமுதாவின் பேரில் தான் ஈடுபாடு கொண்டு விட்டேனோ? அப்பொழுது நினைவுக்கு வந்தது, ரத்னாவளி நாடகத்தின் அந்த சுலோகம். மனம் எப்படிப்பட்டது? அது ஏன், எப்படி, ஒருவரிடம் தன்னை இழந்து விடுகிறது? மனிதனை மீறிய விஷயம் 'விதி' என்பதற்குப் பதிலாக, 'காமன்' என்கிற பதத்தைச் சேர்த்து ராமண்ணா, அன்று அந்த சுலோகத்தின் பொருளை மாற்றி, மனத்திற்குச் சமாதானத்தை வரவழைத்துக் கொண்டிருந்தான். காமன் மனம் வைத்தால் போதும், கடல்களுக்கப்பாலிருந்து அல்லது கண்காணாத் தீவிலிருந்து அல்லது உலகின் மறுமுனையி லிருந்து ஒரு பெண் எதிர்பாராதபடி வந்து, உங்கள் மனத்தை அபகரித்ததுக் கொள்வாள்.

குமுதா அப்படிச் செய்திருக்கிறாளா என்று நினைத்து நினைத்து, அன்று இரவு முழுவதும் தான் உட்கார்ந்திருந்த நாற்காலியிலேயே உறங்கிப் போனான்.

அவைகளையெல்லாம் நினைத்தபடி, இப்பொழுது ராமண்ணா நாற்காலியிருந்து எழுந்திருந்தான். அன்றுபோல இன்றும் நாற்காலியிலேயே தூங்குவது வேண்டாம், அப்பொழுது இன்பக் கனவுகள் இருந்தன, இப்போது கனவிலும் சுகம் இல்லை என்று எழுந்திருந்து கொட்டாவிவிட்டு, அலுப்புடன் கையிலிருந்த புத்தகத்தை மேஜைமீது வீசி எறிந்தான். தொலைவில் எங்கோ ஒரு கடிகாரத்தில் பன்னிரண்டு அடிப்பது கேட்டது.

## 12

கொட்டாவி தூக்கம் வருவதற்கு அறிகுறி என்று சொல்வது தவறு என்று தோன்றியது குமுதாவுக்கு. இப்பொழுது தனக்கு ஒரேயடியாகக் கொட்டாவிகள் வந்து கொண்டிருந்தபோதிலும், தூக்கம் வருவதற்கான அறிகுறியே காணோம்! தூக்கம் வராத வாறு அலுப்பு உள்ளே பதுங்கிக் கொண்டிருந்து, இப்போது கொட்டாவி உருவத்தில் வெளிவருகிறதோ என்னவோ! தொலைவில் ஏதோ ஒரு கடிகாரத்திலிருந்து மணியடிக்கும் ஓசை கேட்கிறது. ஒன்று, இரண்டு, மூன்று—பன்னிரண்டு! நடுநிசி இன்னும் தனக்குத் தூக்கம் வரவில்லை. தொலைவிலுள்ள கடிகாரத்தின் மணியோசை கேட்குமளவுக்கு, உலகம் அமைதியில் ஆழ்ந்திருந்த போதிலும், உள்ளில் நடக்கும் போராட்டம்-கலவரம் இவைகளினால் தூக்கம் வரவில்லை. எவ்வளவு முறை தான் தூக்கம் வரக்கூடாது என்று முயற்சித்திருக்கிறாள்! இப்பொழுது வரட்டும் என்று முயற்சித்துக் கொண்டிருக்கிறாள்! ஒரு காலம்-அப்போது இரவின் அமைதியில் கூட கடிகாரத்தின் மணியோசை கேட்டுக் கொண்டிருககவில்லை, தானும் தூக்கத்தை வேண்டவில்லை. இவையெல்லாம் பழைய பிறவியின் நினைவுகள் போல ஆகிவிட்டன. ஆனால் வெறும் ஓரிரண்டு வருடங்களுக்கு முந்திய சமாசாரம். அப்பொழுது எவ்வளவோ இரவுகள் தான் இன்பக் கனவுகளைக் கண்ணாலேயே பார்க்க வேண்டுமென்பதற் காகத் தூக்கத்தை அண்ட ஒட்டாமல் படுத்துக் கொண்டிருப்பாள். ஓர் அநுபவம் இன்னும் அவள் கண்களில் நிறைந்திருக்கிறது. அன்று தன் வாழ்க்கைச் சூரியன் உதித்து விட்டான், இனி இரவு ஏது என்கிறாற்போல விடியும்வரையில் விழித்துக் கொண்டே இருந்தாள். விழித்துக் கொண்டே கனவு காண வேண்டுமென்கிற அவளது ஆசை அன்று நிறைவேறியிருந்தது. ஆனால் அந்தக் கனவும் இன்று மற்றக் கனவுகளைப் போல நழுவிப்போய் விட்டதே! போகட்டும்-நினைவினாலாவது இன்பத்தையளிக்கும் கனவாக இருக்கிறதே என்கிற மகிழ்ச்சியினால் அவள் முகம் மலர்ந்தது. கடந்து போனதைக் காணும் பிடிவாதத்தினால் என்கிறாற்போல, அவளது கண்கள் சுற்றுமுற்றும் உள்ளவைகளை அலட்சியப்படுத்தி, ஏதோ தொலைவில் உள்ளதைக் காண மலர்ந்தன. எவ்வளவு நாட்களுக்கு முந்திய விஷயம்? போகட்டும், காலம் முக்கியமல்ல, விஷயம் முக்கியம். அன்று இரவு—

உண்மையில் அன்று இரவு அவள் மனம் உற்சாகமாக இருக்க வில்லை. சில நாட்களாக அவள் அநுபவித்துக் கொண்டிருந்த இன்பப் பிரவாகத்திற்குத் தடை ஏற்பட்டாற்போல ஆயிருந்தது. கணவன்-மனைவியரின் அந்தரங்கக் காட்சியைக் கண்டது, ராமண்ணா அவ்வாறு அலட்சியத்துடன் தன் உடலை அவமானபபடுத்திவிட்டுச் சென்றது, இவைகளுக்குப் பின்னர், சில நாட்கள் குமுதாவின் மனநிலை சோகத்தில் மூழ்கியிருந்தது. ஒருபுறம் ராமண்ணாவின் பேரில் ஒருவகை வெறுப்பு இருந்தது, மற்றொரு புறம் அவன் தன்னை நெருங்கிய போதெல்லாம் மற்றவைகளை மறந்து, வெட்கங்கெட்டு தன் மனம் திருப்தியை அடைந்து கொண்டிருந்தது. அவன் நெருங்கிய போதெல்லாம் என்று ஏன் சொல்லவேண்டும்? முதல் மூன்று, நான்கு நாட்கள் அவன் வரவே இல்லை. அதை அவள் எப்படியாவது பொறுத்துக் கொண்டிருக்கலாம்; தன்னுடைய நடத்தைக்காக அவமானப்பட்டு அவன் அவ்வவாறு செய்கிறான் என்று மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டிருக்கலாம். ஆனால் ராமண்ணாவின் நடத்தை மேலும் அவள் இதயத்தைப் புண்படுத்துவதாக இருந்தது. அந்த மூன்று, நான்கு நாட்கள் வரையில் தன்னைக் கண்ணெடுத்தும் பார்த்திருக்கவில்லை, தன்னிடம் வந்திருக்கவில்லை. ஏதாவது எழுதுவதில் ஈடுபட்டிருந்தாலாவது, ஒரு சமயம் குமுதா மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கலாம். ஆனால் இவை ஒன்றும் செய்யாமல், நாள் முழுவதும் ராமண்ணா சரளாவின் எதிரிலேயே இருந்தான். மிகவும் மனப்பூர்வமாக அவளுக்குச் சிசுரூஷை செய்து கொண்டிருந்தான்; இரவு தூக்கம் வரும்வரையில் அவளுடன் அரட்டை அடித்துக் கொணடிருந்தான்; இரவில்கூட அவளுக்குப் பணிவிடை செய்வதற்காகவென்று அங்கேயே, வேறு படுக்கையை எடுத்துக் கொண்டுபோய்ப் படுத்துக் கொண்டிருந்தான் என்றும் குமுதாவுககுச் சந்தேகம் இருந்தது ஏன்? வேண்டிய பணிவிடைகளைச் செய்வதற்கென்றே தான் எப்போதும் தயாராக இருந்தபோது ராமண்ணா தன்னுடைய வேலைகளையெல்லாம் விட்டுவிட்டு, ஏன் இந்த வேலையை மேற்கொண்டான்? பணிவிடையாவது ஒன்றாவது? அதெல்லாம் ஒரு சாக்கு. தன்னை ஒதுக்குவதற்காக அவன் செய்த சூழ்ச்சி என்று தெரிந்து கொண்டு, குமுதா பொருமிக் கொண்டிருந்தாள். இனி இந்த வீட்டில் தனக்கு இடமில்லை. அக்காவின் பணிவிடைகளுக்குக்கூடத் தான் தகுதியற்றவள் என்றால், தான் வேறு யாருக்கு வேண்டியிருந்தாள்?

குமுதா தன் பாட்டுக்குத் தான் கண்ணீர் பெருக்கினாள். தன்னையே பழித்துக் கொண்டாள். நாளைக்கு எழுந்த உடன் இப்படிச் செய்யவேண்டும். அப்படிச் செய்ய வேண்டும் என்று தினமும் படுக்கப்போகும் போது. ஏதேதோ தீர்மானங்களைச் செய்து கொள்வாள். ஆனால் எந்த முடிவையும் அமுலாக்க முடிந்திருக்கவில்லை. அது மட்டுமா? அந்தத் தீர்மானங்களை முழுவதுமாக மாற்றவேண்டிய சந்தர்ப்பமே வந்து சேர்ந்தது. ஒரு நாள் காலையில் ராமண்ணா தன் அறைக்குப் பாய்ந்து வந்தான். "குமுதா, குமுதா?" ராமண்ணாவின் குரல்! தன்னைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறான்! சே- கனவு! என்று நினைத்துக் கொண்டாள் தூக்கக் கலக்கத்தில். ஆனால் அது கனவாக இருக்கவில்லை. ராமண்ணாவே சாட்சாத்தாக வந்து தன்னை உலுக்கி, "குமுதா, குமுதா" என்று எழுப்பிக் கொண்டிருந்தான். திடுக்கிட்டு எழுந்து, பேயறைந்தவள் போல பார்க்கத் தொடங்கினாள். "சீக்கிரம், சரளாவின் அறைக்கு வா" என்று கூறிவிட்டு, ராமண்ணா கனவில் வந்து போனவன் போலப் போய்விட்டான். தான் சரளக்காவின் அறையில் காலடி வைக்கும் போது, அவன் கோட் போட்டுக் கொண்டிருந்தான். அதே அறையில் ஒரு மூலையில் அவனுடைய படுக்கை இருந்ததை அவள் கவனிக்கவில்லை. "நான் டாக்டரைக் கூட்டிக் கொண்டு வருகிறேன். நீ இங்கேயே உட்கார்ந்திரு" என்று கூறிவிட்டு ராமண்ணா வெளியே வேகமாகச் சென்றான்.

அன்று தான் கிணற்றில் குதித்து உயிரைவிட்டுவிட வேண்டுமென்று தோன்றியது குமுதாவிற்கு. எவ்வளவு வெட்கங் கெட்டவள், எவ்வளவு சுயநலக்காரி, எவ்வளவு கொடியவள், எவ்வளவு நன்றி கெட்டவள் தான் என்று தன்னையே திட்டிக் கொண்டாள். மூன்று-நான்கு நாட்களாக சரளக்காவின் இருதயம் பலவீனமடையத் தொடங்கியிருந்ததாம். தனக்கு இது தெரிந்திருக்கக்கூடாதா? எப்போதும் ராமண்ணா அவள் அருகில் இருந்து வந்தான் என்பதனால், தான் அங்கே போய் உட்கார்ந்து கொள்ளவில்லை என்பது உண்மை. தன்னைப் பார்த்த உடன் சரளக்கா என்றும் போலப் புன்னகை செய்து வந்தாள் என்பதும் உண்மை. ஆனாலும்? தன்னுடைய பாழும், அசிங்கமான எண்ணங்களால், தலையை நிரப்பிக் கொண்டு தான் சரளக்காவின் நிலையைக் கவனிக்காது போய்விட்டாள். எப்படிப்பட்ட துரோகி தான்! பாவம்-மூன்று, நான்கு நாட்களாக ராமண்ணா ஒருவனே எப்படிப் பொறுத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும்? வேறுவழி

இல்லாமல் தன்னை எச்சரிக்க வரவேண்டுமென்றால் காரணம் இருந்தது. அன்று விடியற்காலையில் சரளக்கா சில நிமிடங்கள் மூர்ச்சையடைந்திருந்தாளாம். அவளை எழுப்பி, பணிவிடைகள் செய்து, சமாதானப் படுத்திவிட்டுப் பிறகு தன்னை அங்கே உட்கார வைத்துவிட்டு, ராமண்ணா டாக்டரிடம் சென்றிருக்கிறான்.

அன்று மாலையில் சரளக்காவின் உடல்நிலை தேறியிருந்தது. எல்லோருடைய புண்ணியம் என்று தோன்றியது குமுதாவிற்கு. எல்லோருடைய என்று தன்னையும் ஏன் சேர்த்துக் கொள்ள வேண்டும்? நாள் முழுவதும் வெளி அலைச்சலாலும், உள்ளத்தின் கலவரத்தாலும் ராமண்ணா வாடிப்போயிருந்தான். அவனுடைய புண்ணியம், என்றாள். அன்று அவன் பேருக்குச் சாப்பிட்டது ராத்திரி ஒன்பது மணிக்கு. அதற்குள்ளாக சரளா எவ்வளவோ தேறியிருந்தாள். அன்று இரவு டாக்டர் அவளுக்குத் தூக்கமருந்து கொடுத்துவிட்டு, இனி பயம் ஒன்றும் இல்லை என்று சொல்லிவிட்டுப் போயிருந்தார். இரவுச் சாப்பாடும் மற்றவையும் முடிந்த பிறகு, சரளக்காவின் உடல் நிலையும் நன்றாக இருப்பதைப் பார்த்துவிட்டு, குமுதா தன் அறைக்குச் சென்றாள். வேண்டுமென்றே சிறிது சீக்கிரமாகவே தான் சென்றாள். நாள் முழுவதும் ராமண்ணாவின் முகத்தைக் கவனித்திருந்தாள். அந்த முகத்தில் கண்ட பாவம் அவளுக்குப் புரிந்திருந்தது. மனைவியுடன் பேசுவதற்கு அவனுக்கு நேரம் கிடைக்கட்டும் என்பதற்காகவே தான் அவள் அப்படிப் போனாள். தனது உழைப்பின் நற்பயனைச் சுவைக்க வேண்டும் என்கிற ஆதுரம் அவனுக்கிருந்ததை அவள் அறிந்திருந்தாள். அன்று தன் அறைக்குச் சென்றபோது குமுதாவின், மனம் சந்தோஷமாக இருந்தது. ராமண்ணாவும் சரளக்காவும் இப்போது ஒருவரோடொருவர் எவ்வளவு ஆனந்த மாகப் பேசிக் கொண்டிருப்பார்கள் என்பதைக் கற்பனையில் கண்டு, அவளும் ஆனந்தமடைந்தாள். உடலின் அசதி, மனத்தின் மகிழ்ச்சி இவைகளினால் கண்ணை மூடிக்கொண்டு தூங்காமல் ஓய்வு பெறும் நூதன அநுபவத்தை அவள் பெற்றாள். அப்படியே எவ்வளவு நேரம் சாய்ந்து கொண்டிருந்தாளோ! திடீரென்று ராமண்ணா தன் படுக்கையருகில் வந்து நிற்பதையறிந்து கண்களைத் திறந்தாள். ஆயாசத்தால் முகத்தில் தோன்றியிருந்த பலவீனமான களை, மனத்தில் இருக்கும் சந்தோஷத்தால் மலர்ந்த புன்னகை-இந்த வடிவத்தோடு கூடிய ராமண்ணாவைப்

பார்த்ததுமே அவள் இதயத்தில் ஏதோ குழப்பம். அந்தக் குழப்பத்தின் காரணமாக அவள் மனம் லேசாகியது.

அன்றைய ராமண்ணா, பல பிறவிகளில் செய்த புண்ணியத்தின் பயனாக வந்து நிற்பதுபோலவுக் குமுதாவுக்குத் தோன்றியது. எவ்வளவு அமைதியாக இருந்தான்! எவ்வளவு நிர்மலமான மனத்தோடு பேசினான்! அன்று ராமண்ணாவை உடலை வருடி, தன்னிடம் இழுத்துக் கொண்டாள் குமுதா. இனமறியாத துயரத்தால் நொந்த குழந்தை ஆறுதலை நாடி வந்தது போல, ராமண்ணா தன்னிடம் வந்திருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ள அவளுக்கு அதிக நேரம் வேண்டியிருக்கவில்லை. பேசிக் கொண்டே படுத்துக் கொண்டிருந்தவன் விடியும் வரையில் அப்படியே தன்னுடைய கைகளின் அணைப்பிலேயே படுத்திருந் தான். தான் தூங்குவதற்குத் தாமதமாகியிருந்ததோ என்னவோ! காலையில் தன்னைவிட முன்னதாக எழுந்திருந்த ராமண்ணா தன் நெற்றியில் முத்தமிட்டபோதுதான் அவள் விழிப்புற்றாள். சிறிது திகிலுடன் எழுந்ததுமே பயந்த குழந்தைகள் ஒருவருக்கொருவர் சைகை மூலம் சும்மா இரு என்று காட்டுவது போல, உதடுகளின் மீது விரல்களை வைத்துக் காட்டினான். முகம் மட்டும் புன்சிரிப்பால் மலர்ந்திருந்தது. அந்தக் காலை நேரத்தில் தான் பெண்ணாகப் பிறந்ததன் பயனைப் பெற்றுவிட்டதாகத் தோன்றியது குமுதாவிற்கு.

ஒரு நிமிடம் ராமண்ணாவின் முகத்தில் மின்னிய அந்த முகப் பொலிவைக் கண்டு, தன்னால் ஓர் இதயத்திற்குச் சாந்தி கிடைத்ததே என்று குமுதாவுக்குத் தோன்றியது. ஆனால் அவளது இதயத்தின் உற்சாகம் அத்தோடு நின்று விடவில்லை. அவ்வளவோடு முடிந்திருந்தாலும்கூட தன்னுடைய வாழ்க்கை பயனுள்ளதாகிவிட்டது என்று நினைத்துக்கொள்ள அவள் தயாராக இருந்தாள். ஆனால் சுகமாகட்டும் துக்கமாகட்டும், அநுபவம் சில நிமிடங்களின் எல்லைக்குட்பட்டதாக இருந்த போதிலும், அந்த அநுபவத்தின் நினைவு பலகாலம் வாழ்ந் திருக்கும். இதுவல்லாமல் அநுபவிக்கும்போது சுகம் இதத்தையும் துக்கம் நோவையும் உண்டு பண்ணுகிறது. ஆனால் நினைவில் மட்டும் சுகம், துக்கம் இரண்டும் ஒன்றே. துக்கத்தின் நினைவால் கண்ணீர் வந்தாலும், இதயம் லேசாகிச் சுகமே தோன்றும். இந்த விஷயங்களெல்லாம் குமுதாவுக்கு அவ்வளவு தெளிவாகத் தெரிந்திருக்கவில்லை. (தெரிந்திருந்தால் அவள் சுகதுக்கங்களுக்கு

அப்பாற்பட்டவளாகியிருப்பாளோ என்னவோ!) ஆனால், இவைகளின் அநுபவம் மட்டும் அவளுக்கு அன்று மாலைக்குள் ஏற்பட்டது. ராமண்ணாவின் குழந்தை போன்ற அழகிய முகத்தை அடிக்கடி நினைத்துக் கொண்டாள். அவனைப்பற்றி நான் என்னென்னவோ நினைத்துக் கொண்டிருந்தேனல்லவா? நாள் முழுவதும் உடலும் உள்ளமும் நொந்து புண்பட்டு என்னிடம் வந்தான், சுகதுக்கங்களை என்னிடம் சொல்லிக் கொண்டான், என் அருகில் குழந்தையைப் போல படுத்து ஆழ்ந்து உறங்கினான். ஏன்? அவன் வாழ்க்கையில் எனக்கு ஓர் இடம் இருந்தே இருக்கவேண்டும். இல்லாவிட்டால் துக்கப்படும்பொழுது தன்னுடன் இவ்வளவு நெருக்கம் காட்டியிருப்பானா? அவன் உள்ளமும் என் உள்ளமும் ஒன்றோடொன்று பொருந்திக் கொண்டிருக்கவேண்டும். சில நாட்களுக்குமுன் ஏற்பட்ட உடல் உறவை விட இந்த உள்ளங்களின் உறவு அவளுக்கு அதிக இன்பத்தைக் கொடுத்தது. மூன்று, நான்கு நாட்களாக ராமண்ணாவின் பேரில் தனக்குத் தோன்றியிருந்த துயரமும் கோபமும் இப்போதைய நினைவில் இன்பத் தளிர்களாகக் காட்சியளித்தன. பன்னிரண்டு மணிகளின் அந்த ஒரு நாளில் குமுதாவின் முகத்தின் பிரகாசம், அதிக மனோகரமாகக் காணப்பட்டது, அவளுடைய அவயவங்களெல்லாம் காதல் ரசம் பூசப்பட்டது போல மின்னிக் கொண்டிருந்தன, அவளுடைய நடையில் சூர்யோதயத்தின் நவசக்தி இருந்தாற்போல இருந்தது. அவளது சொற்கள் மழைக்காலத்து ஆரம்பத் தூற்றல்களைப் போல ஆனந்தம் கலந்த தண்மையை வீசுவது போலிருந்தன; அவள் இதயம் சுற்று முற்றுமுள்ள பள்ளங்களைத் தன்னுள்ளே ஏற்றுக் கொண்டு நேர் பாதையைத் தேடி, சமுத்திரத்தையடையும் ஒரே தீர்மானத்தோடு புறப்பட்ட நதியைப் போலக் கணத்திற்குக் கணம் விரிந்து பெருகுவதுபோலத் தோன்றியது.

இந்தப் புதிய பாவனைகளைத் தன்னுள்ளே ஏற்றுக் கொண்டு, அசைபோட்டுக் கொண்டிருந்த குமுதாவின் முகபாவமே மாறியிருந்ததோ என்னவோ! அந்த நாட்களில் சரளக்கா தன்னை நிறைந்த கண்களால் பார்ப்பது போலப் பார்த்து வந்தாள். அடிக்கடி அருகில் அழைத்தாள்; கையிலே கையை வைத்தபடி எவ்வளவு நேரம் பேசாமல் சாய்ந்து கொண்டிருப்பாள்! ஒருநாள் மட்டும்- தான் அதை என்றுமே மறக்கமுடியாது-அவ்வாறு-சிறிது நேரம் பேசாமல் இருந்த பிறகு, சரளக்கா நெகிழ்ந்த குரலில்

"குமுதா" என்றழைத்தாள். எங்கோ போய்விட்டிருந்த தன் உள்ளத்தை, ஒளிந்து கொண்டிருக்கும் குழந்தையைத் தேடி எடுத்து, தூக்கி வைத்துக் கொண்டு, முத்தமிட்டபடி அழைத்துவரும் தாயைப் போல, அந்தக் குரல் பிடித்திழுத்து வந்தது.

"என்ன அக்கா?" என்று தானும் ஆதுரம் நிறைந்த குரலில் கேட்டாள்.

"என்னால் எல்லாருக்கும் ரொம்பத் தொந்தரவு ஆகிவிட்டது."

"யார் சொன்னார்கள் உனக்கு?"

"யாராவது சொல்லவேண்டுமா என்ன? எனக்கே தெரியாதா?"

"உனக்குத் தொந்தரவு ஆகாமலிருந்தால் போதும். மற்றவர்களைப் பற்றிய கவலை ஏன்?"

"எனக்குத் தொந்தரவு வேறயா? குமுதா, எனக்கு இனி ஒரு ஆசையும் பாக்கி இல்லை, இந்தப் பாழும் ஜீவனை இப்படிப் பிடித்துக் கொண்டு படுக்கையில் புரண்டு கொண்டிருப்பதற்கு."

"நீ எவ்வளவு பேருக்கு வேண்டியிருக்கிறாய் என்பதை மறக்காதே அக்கா."

"குமுதா, பைத்தியக்காரி! யார் யாருக்கு வேண்டியவர்கள்? இருக்கும்வரையில் வேண்டும் என்று தோன்றுகிறது. செத்த பிறகு மறந்து போகிறது. இல்லாவிட்டால் சம்சாரம் எப்படி நடக்கும், குமுதா?"

"வேண்டாம் என்றாலும், நீ அதையே யோசிக்கிறாய், அக்கா."

"என்ன செய்யட்டும் சொல், குமுதா? முந்தாநாள் மயக்கம் வந்தபோது, எங்கே போயே விடுவேனோ என்று பயப்பட்டுவிட்டேன்"

"ஆங்- இப்படி பேசு அக்கா! போவதற்குப் பயப்பட்டேன் என்று சொன்னாயே, அது சந்தோஷமான வார்த்தை."

"பயப்பட்டது என் பொருட்டு அல்ல, குமுதா. என்னால் யாருக்கும் நல்லது ஆகவில்லை. கெட்டதாவது ஆகாமலிருக்கட்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்."

"யாருக்கும் ஒரு கெடுதலும் ஆகாது."

"இருந்தாலும் நான் சாவதற்குள்ளாக அது ஒன்று நடந்து விட்டால் நல்லது-என்று-."

"எது?"

"உன் கல்யாணம்"

"போ அக்கா! முதலில் உனக்கு உடம்பு சரியாகட்டும். அப்புறம்-" குமுதா அங்கே பேச்சை நிறுத்தினாள். தனது கல்யாணப் பேச்சு

வந்ததனால், முதலில் இயற்கையாக அவளுக்கு வெட்கம் தோன்றியது. ஆனால் சட்டென்று மற்றோர் எண்ணம் தோன்றியது. தன் கல்யாணம்? அக்காவுக்கு இந்த எண்ணம் ஏன் வந்திருக்கவேண்டும்? தன் பேரில் இயற்கையாக இருந்த அன்பினாலா? அல்லது-அல்லது-வேறேதாவது சந்தேகத்தினாலா? தான் சாவதற்கு முன்னால் என் கல்யாணம் ஆகவேண்டுமென்று அக்கா விரும்புகிறாள்; அப்படியானால் யாருடன் தனக்கு விவாகம்?

"அக்கா நீ உடம்பு குணமாகும் வரையில் இல்லாத யோசனைகளையெல்லாம் வைத்துக் கொள்ளாதே. நான் ஒரு போதும் அதற்கெல்லாம் ஒத்துக் கொள்ள மாட்டேன்" என்று கூறியிருந்தாள் குமுதா.

"அவரிடம் சொல்லியிருக்கிறேன். உன்னிடமும் சொல்லுகிறேன். என் தலையில் எழுதியிருந்தால் கண்ணால் பார்த்துவிட்டுச் சாகிறேன்" என்று சரளக்கா பெருமூச்சு விட்டாள்.

அவரிடமும் சொல்லியிருக்கிறேன்! குமுதாவின் இதயத் துடிப்பே நின்று விட்டது போலிருந்தது. சரளக்கா என்ன சொல்லியிருக்கக் கூடும்? அல்லது வேறொருவனுடன் என்னுடைய கல்யாணம் என்கிற சரளக்காவின் விருப்பத்தைத் தெரிந்து கொண்டுதான் ராமண்ணா தன்னுடன்- முந்தாநாள் இரவு வெறும் நட்புடன் நடந்து கொண்டானா? நான் வேறென்னென்னவோ நினைத்துக் கொண்டேனே? இதென்ன புதிதாக ஆரம்பித்திருக்கிறது? "அக்கா, உன்னை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். உனக்கு உடம்பு சரியாகும் வரையில்-"

"பைத்தியக்காரி, குமுதா! இனி நான் குணமாகப் போவதை மறந்துவிடு. அதனால் தான் சாகப்போகும் இந்த அக்காவின் மனச்சாந்திக்காக, என்னுடைய கடைசி ஆசை என்பதற்காக"

"அக்கா, இனி இந்தப் பேச்சை நீ தொடர்ந்தால் என் ஆணை" என்று குமுதா இதயத்தின் ஆழத்திலிருந்து குரல் எழுப்பினாள்.

தனது அந்தக் குரல், குரலில் இருந்த பிடிவாதம், முகத்தில் காணப்பட்டிருக்கக்கூடிய உறுதி, பாவம், இவைகளையெல்லாம் கண்டு சரளாக்காவும் மிரண்டு போயிருக்க வேண்டும்.

"ஏன் குமுதா? போகட்டும் விடு. அவரிடமே சொல்கிறேன், அவரே உன்னோடு பேசட்டும்" என்றாள். சரளக்காவின் அந்த வார்த்தைகளால் குமுதாவுக்கு உயிரே போய்விட்டாற் போலிருந்தது. இதென்ன விபரீதம் என்று நினைத்துக்

கொண்டாள். என்னவாவது செய்து பேச்சை மாற்றவேண்டு மென்று முயன்றிருந்தாள். மூன்று நான்கு நாட்களாக ராமண்ணா சரளக்காவுக்கு எப்படி சிசுருஷை செய்து வந்தான், அவள் மயக்கமடைந்த அன்று அவன் எப்படி பயப்பட்டுப் போய் அலைந்து கொண்டிருந்தான், இரவுவரையில் எப்படி அவன் சாப்பிடுவதையே மறந்திருந்தான் என்பவற்றையெல்லாம் சுவாரசியமாக அவளுக்கு எடுத்துச் சொல்லத் தொடங்கினாள். சிறிது சிறிதாக சரளக்கா தன் வார்த்தைகளை மகிழ்ச்சியும் பெருமையும் கலந்த முகபாவத்தோடு கேட்கத் தொடங்கினாள். வெகுநேரம் பேசிய பிறகு, இனி கல்யாணத்தைப் பற்றிய பேச்சு வராது என்ற நம்பிக்கை ஏற்பட்டவுடன், குமுதா பேச்சை நிறுத்தினாள். "அப்படியா? நீயும் எல்லாவற்றையும் எவ்வளவு சூட்சுமமாகப் பார்த்து வைத்திருக்கிறாய்" என்று சிரித்துக் கொண்டே தன் முதுகைத் தடவிக் கொடுத்தபடி சொன்னாள். "என் அதிருஷ்டம் அவ்வளவொன்றும் கட்டை இல்லை போ" என்றாள்.

குமுதாவுக்கு அந்தக் கடைசி வார்த்தைகள் ஆச்சரியத்தை உண்டாக்கின. எதை உத்தேசித்து, சரளக்கா அந்த வார்த்தை களைச் சொன்னாள்? தான் ராமண்ண விஷயமாக அரட்டை யடித்தது- ஆங்- தெரிந்தது; அப்பேர்பட்ட கணவன் தன்னுடைய வனாக இருக்கும்போது, தன் அதிர்ஷ்டம் கட்டையல்ல என்று சொல்லியிருக்கலாம் என்று ஒரு முறை தோன்றியது. அதிர்ஷடம் கட்டையல்ல என்று சொன்னதில், தான் விரும்பியபடி குமுதாவின் விவாகம் நடந்தே தீரும் என்கிற நம்பிக்கை இருந்ததோ, என்று இன்னொரு தடவை தோன்றும். ஆனால் இதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கும் மனநிலையில் குமுதா இருக்கவில்லை. சரளக்காவின் வாயிலிருந்து தன் கல்யாணத்தைப் பற்றிய பிரஸ்தாபம் வந்ததுமே, இதுவரையில் எங்கோ பதுங்கிக் கொண்டிருந்த எண்ணங்கள் ஒரேடியாக நானாதிசைகளிலிருந்தும் குதித்து வந்தாற்போலிருந்தன. கல்யாணம்! என்ன ஆச்சரியம்! இதுவரையில் தனக்கு இந்த எண்ணமே வந்திருக்கவில்லையே! ராமண்ணாவுடன் தனக்கு ஏற்பட்ட அநுபவத்திற்குப் பிறகும் கூட, கல்யாணம் என்கிற எண்ணமே அவளுக்குத் தோன்றியிருக்க வில்லை! குமுதா சரளக்காவின் பல பேச்சுக்களை நினைத்து அசை போடத் தொடங்கினாள். தான் சாவதற்கு முன் இந்தக் கல்யாணம் நடக்கவேண்டுமென்கிற பிடிவாதம் மட்டும் அவளுக்கு

சரளக்காவின் பேரில் சந்தேகத்தை உண்டாக்கியது. ஒரு வேளை ராமண்ணாவைத் தான் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் என்கிற எண்ணம் சரளக்காவுக்கு ஏன் இருக்கக்கூடாது? அப்படி யென்றால்? தங்களிருவரைக் குறித்தும் சரளக்காவுக்கு சந்தேகம் வந்திருக்குமோ? சே! அக்காவின் சுபாவம் வஞ்சனையில்லாதது. பெண்ணுக்குக் கணவனும் குழந்தைகளும் தான் செல்வம் என்று அவள் எவ்வளவு முறை சொல்லியிருக்கிறாள்? தனக்குக் குழந்தைகள் இல்லை என்கிற துயரம் இருந்தாலும் வீட்டில் குழந்தைகள் இருப்பதைப் பார்த்தால் சந்தோஷம். அப்படி யிருக்குமோ? எண்ண அலைகள் அவளை மனம் போனபடி அலைக்கழித்தன. எவ்வளவு சிந்தித்த போதிலும் திருப்தி ஏற்பட வில்லை. கண்களை மூடிய உடன் ஒரு காட்சி எதிரே வந்து நிற்கும்; தானும் ராமண்ணாவும் சினிமாவுக்குப் புறப்பட்டிருக்கிறோம். தங்களின் குழந்தைகள் வீட்டில் விளையாடிக் கொண்டிருக்கின்றன. எதிரே படுக்கையில் சரளக்கா சிரித்த முகத்துடன் குழந்தைகளைப் பார்த்து, "இப்போது என் வாழ்க்கை பயனடைந்தது. இனி நீங்கள் இருவரும் சினிமாவுக்குப் போங்கள், வெளிநாட்டுக்கே போங்கள். எனக்கு இதுதான், வீடு" என்று கூறுகிறாள். கண்களைத் திறந்தவுடன் இந்தச் சித்திரம் மறைந்துவிடும்.

நினைவின் சுவையை அநுபவத்தபடி குமுதா படுக்கையிலிருந்து எழுந்தாள். அந்த நாட்களில் தூக்கம் வராமலிருந்ததே எவ்வளவு சுகமாக இருந்தது என்று நினைத்துக் கொண்டாள். இப்பொழுது?- அன்று என்னுடன் சரஸமாடிய தூக்கம் இன்று துஷ்யந்தன் சகுந்தலையை மறந்தது போல மறந்துவிட்டதோ என்று நினைத்துக் கொண்டாள். துஷ்யந்தன் சகுந்தலை. இந்த வார்த்தைகள் தன் வாயிலிருந்து எப்படி வந்தனவோ? ஆம் இந்தக் கதையை ஒரு இரவு -தூ! மறுபடியும் மறுபடியும் அதேதான்! ஓடிப்போக வேண்டுமென்று தோன்றும்-என்று குமுதா கோபத்துடன் காலகளைத் தரையில் உதைத்து விடுவிடுவென்று படுக்கையில் ஏறி முகத்தை மூடுகிறபடி போர்வையை இழுத்துக் கொண்டு படுத்துக்கொண்டாள்.

## 13

ராமண்ணா வீசியெறிந்த புத்தகம் மேஜையிலிருந்து நழுவி, தலைகீழாகத் தொங்கி, பக்கங்கள் திறந்தும் மடங்கியும், தொப் பென்று நிலைதவறி, உயரத்திலிருந்து விழுந்து மயக்கமடைந்த வனைப் போல நிலத்தின் மீது விழுந்தது. "உலகில் மனிதப்

பிராணிகள் தோன்றிய நாளிலிருந்து எவ்வளவு மனிதர்கள் பிறந்திருப்பார்களோ அவர்கள் எல்லோருக்கும் ஆளுக்கு ஒரு புத்தகம் என்கிற கணக்கில புத்தகங்கள் இருந்தும் தன்னுடைய சிக்கலுக்கு விடையளிக்கும் புத்தகம் கிடைக்கவில்லை"என்று கோபத்துடன் அந்தப் புத்தகத்தை பார்த்தபடி சொன்னான். "வாழ்க்கையின் புதிர்களை விடுவிப்பது இலக்கியமாம்! பைத்தியம்! வாழ்க்கை என்றால் என்ன? அதன் புதிர்கள் எவ்வளவு கணக்கற்றவை! அவைகளை விடுவிப்பதாவது?" என்று ஒரு கணம் இலக்கியகர்த்தாவான தன் பேரில் அவனுக்கு வெறுப்பில் பிறந்த கனிவு தோன்றியது.

தனது பிரச்சினை என்ன? அப்படிப் பார்த்தால் பிரசினையே இல்லை என்று சிலர் சொல்லக்கூடும்; இதென்ன பெரிய பிரச்சினை-என்று இன்னும் சிலர் நகைப்புடன் அதை அலட்சியப்படுத்தலாம். ஹூம்! மூடர்கள்! பாவம்! அறியாமையின் பசும் பாலகர்கள்! தங்கள் அறியாமையை அறிந்து கொள்ளாத துரதிர்ஷ்டசாலிகள்!

எங்கே இருக்கிறது பிரச்சினை? அதே குமுதாவின் விஷயம்தானே? அதில் என்ன பிரச்சினை? அன்பு மனைவி - இறந்து விட்டாள். இனி வாழ்க்கையிலோ, காதலிலோ நாட்டமில்லை. எந்த விதமான பந்தமும் இல்லை. அவளை விட்டுவிட்டால் தீர்ந்தது. விட்டு விடுவது என்றால், வெளியே துரத்துவது என்றல்ல. ஏதாவது ஒரு பெண்கள் பாதுகாப்பு நிலையத்தில் சேர்த்து, தன் கால்களில் மீது அவள் நிற்கும்படி செய்துவிட்டால் போயிற்று. இதென்ன பெரிய பிரச்சினை!

மூடர்கள்! இப்படிச் சொல்பவர்களுக்குத் தன்னுடைய பிரச்சினையே புரியவில்லை. அன்பு மனைவி மறந்துவிட்டாள், உண்மை. ஆனால் குமுதாவின் பேரில் தனக்கு அன்பு இருக்கிறது இல்லையா? யாருக்குத் தெரியும்? யார் அந்த விஷயத்தைக் கேட்டார்கள்?

குமுதாவின் பேரில் நேசம், இருந்தால் அவளை மணந்துகொள்ளவேண்டும், அதற்கு யோசனை என்ன?

சீ! இவர்களும் மூடர்கள். அன்பின் ரகசியத்தையே அறியாதவர்கள். அன்பு இருக்கிறதா இல்லையா என்பதைச் சொல்வது எப்படி? வயிறு நிரம்பிய பிறகு சமையல் நன்றாக இருக்கிறதா என்று கேட்டால்? நன்றாக இருக்கிறது என்று சொன்னால் - இன்னும் சாப்பிடு என்பார்கள். அது முடியாது.

சாப்பிட முடியாவிட்டால் நன்றாக இருக்கிறது என்று நீ சொன்னது பொய் என்பார்கள். ஆனால் வயிறு நிறையத் தின்றதே சமையல் பிடித்திருந்தது என்பதற்குச் சாட்சியம். குமுதாவின் பேரில் அன்பு இருக்கிறதா?

இந்தக் கேள்வியை ராமண்ணா கூடியமட்டில் கேட்டுக்கொள்ளவில்லை. அந்தக் கேள்விக்கு நேரான பதிலைக் கொடுப்பதற்கு முன்பே நூற்றுக் கணக்கான விஷயங்கள் அவன் கண்ணெதிரில் நின்றன.

என்றைக்கு அது? - அன்று - ஆ - ? ஆங்... சரளா ஒரு விடியற்காலையில் காபரா செய்தாளே, அன்று. அன்று முழுவதும் ஒரு யந்திரத்தைப் போல தனது நடவடிக்கைகளை நிறைவேற்றியிருந்தாள். இரவில் சரளா பழையபடி குணமடையும்வரை, டாக்டர் மூன்று நான்கு முறை பயமில்லை என்று நம்பிக்கையளிக்கும்வரை, தன்னுடைய கால்கள் நடந்து கொண்டிருந்தன, கைகள் தங்கள் வேலையைச் செய்து கொண்டிருந்தன, கண்கள் பார்த்துக்கொண்டிருந்தன, காது கேட்டுக் கொண்டிருந்தது - ஆனால் இவைகளில் எதுவும் தன் நினைவில் இருந்திருக்கவில்லை. எல்லாம் சரியான பிறகு ஏதோ சிறிது சாப்பிட்ட பிறகு, ஒருபுறம் எல்லையற்ற மன அமைதி, மற்றொரு புறம் தவிர்க்கமுடியாத தூக்கம். சரளாவோடு தனக்கும் மறுபிறவி கிடைத்தாற்போல இருந்தது. மனத்திலே தோன்றிய ஆனந்தத்தால் எங்கேயாவது உட்கார்ந்து கொண்டு "ஆசைதீர" அழவேண்டும் போல் தோன்றியது. கடைசியில் யாரிடமாவது தனக்கேற்பட்டுள்ள ஆனந்தத்தைச் சொல்லித் தீர்த்துக் கொள்ளவேண்டும்போல இருந்தது. அப்பொழுதுதான் குமுதாவின் அறைக்குப் போனான். தனக்கு நன்றாக நினைவிருக்கிறது. குமுதாவைத் தான் சிநேகத்தோடு பார்த்தானே ஒழிய, உடலின்பம் தரும் பெண் என்கிற பார்வையால் அல்ல. அந்த இரவின் நினைவு வரும்போது ராமண்ணாவுக்கு ஆச்சரியம் தோன்றும்; மறுநாள் விடியற்காலை - தனக்கு என்ன தோன்றியதோ என்னவோ! - குமுதாவின் நெற்றியில் தான் முத்தமிட்டானே? அப்பொழுது குமுதாவின் முகம் ஒரு பெண்ணின் முகம் என்ற எண்ணம்கூடத் தோன்றியிருக்கவில்லை.

அன்று இரவு தனது மனோபாவத்தைப் பற்றி ராமண்ணாவுக்கு முழு நம்பிக்கை இருந்தது. இருந்தாலும் என்ன? உள்ளத்து உலகமே ஒரு விசித்திர உலகம். தானொன்று நினைத்தால், தெய்வம் வேறொன்று நினைக்கும் என்று சொல்வார்களே? இங்கே

குமுதா வேறொன்று நினைத்துவிட்டாள். அதைப் பற்றி ராமண்ணாவுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. தனக்கும் குமுதாவுக்கும் இடையே இருந்த உறவு பற்றி இதுவரையில் தோன்றியிருந்த எண்ணம் இப்போது தன் மனத்தில் தோன்றுவதற்கு ராமண்ணா இடமளித்தான். குமுதா தன்னை நேசிக்கிறாள்! இந்த எண்ணம் பளிச்சிட்டபோது அவனது நெஞ்சு 'பக்'கென்றது. இதென்ன புது சிக்கல். குமுதா தன்னைக் காதலித்தால் தான் என்ன செய்ய முடியும்? தான் பிறர்வசப்பட்டவன் என்று அவனுக்கு கோபம் வந்தது. முதலில் தன் பேரிலேயே கோபித்துக்கொண்டான். இதுவரையில் தன்னுடைய நடத்தை குமுதாவுக்கு ஊக்கம் அளித்திருந்தால் தன்னுடைய மடத்தனத்திற்கு சரியான பிராயச்சித்தம் என்று தன்னையே நிந்தித்துக் கொண்டான். மூடன்! தான் படு முட்டாள்! கேவலம் உடலுறவை விரும்பி, குழந்தைத் தனமான சுபாவத்தின் லாபத்தை அடைந்து, அவளைத் தன்னுடையவளாக்கிக் கொண்டபோது வேறு எண்ணங்களே இருக்கவில்லையே! சுலபமாக என் கையில் கிடைத்ததுமே எனக்குத் தெரிந்திருக்கவேண்டும், என்னை அவள் நேசிக்கிறாள் என்பது, என்று தலையில் அடித்துக் கொண்டான். மற்றொரு முறை பெண் இனத்தின் மீதே சீறிவிழுந்தான். காமவாழ்க்கை என்றால் பெண்களுக்கு முதலில் தோன்றுவது கல்யாணத்தைப் பற்றிய எண்ணமே! ஓர் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளும் எண்ணமே அவர்களுக்கு இல்லை, அதற்கொடு நெறி, முறை, கட்டுப்பாடு என்கிற பின்னணி இருந்தே தீரவேண்டும்! வேறு எந்த இயற்கையான ஆசையும் மனிதனின் மீது இவ்வளவு ஆதக்கத்தையும், பாவம் - புண்ணியம் என்கிற சுமையையும் சுமத்துவதில்லை. குமுதா தன்னை நேசிப்பதானால் இனி போகவேண்டிய மார்க்கமென்ன?

விபத்துக்கள் ஒன்றன்பின் ஒன்று வந்தே ஆகவேண்டும்! இது என்ன கொடுமையான நியதியோ இயற்கைக்கு! ஏற்கனவே பல சிக்கல்களில் சிக்குண்டிருந்த ராமண்ணாவின் எதிரே, இப்போது புதியதோர் சிக்கல் தலைதூக்கி நின்றது. கண்டத்திலிருந்து தப்பிய பிறகு சரளாவின் விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டுமென்று டாக்டர் சொல்லியிருந்தார். "அவரால் எந்த அதிர்ச்சியையும் தாங்கிக் கொள்ள முடியாது. அவர் கேட்டதைக் கொடுத்து, ஒரு குழந்தையைப் போல அவரைத் திருப்திபடுத்திக் கொண்டிருங்கள்" என்று சொல்லியிருந்தார். அப்பொழுது இருந்த

சூழ்நிலையில் இது ராமண்ணாவுக்கு அநுகூலமாகவே இருந்தது. குமுதா தன்னை நேசிக்கிறாள் என்கிற சந்தேகம் வந்த பிறகு, கூடுமான வரையில் அவளுடன் நெருங்கிப் பழகுவதைத் தவிர்க்கவேண்டும் என்றிருந்த ராமண்ணாவுக்கு, இப்போது சரளாவின் அருகிலேயே வேண்டியமட்டும் இருப்பதற்கு ஒரு சாக்கு கிடைத்தாற் போலாயிற்று. "குழந்தையைப் போல உன்னைத் திருப்திப்படுத்த வேண்டுமென்று டாக்டர் சொல்லியிருக்கிறார். அதனால்தான் இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன். சாக்லேட் வேணுமானால் சொல், உடனே கொண்டுவந்து கொடுக்கிறேன்" என்று அவளிடம் கேலியாகப் பேசிக்கொண்டிருந்தான்.

"சாக்லேட் என்று சும்மா ஆசை காட்டுவீர்கள் அவ்வளவுதான். ஒன்றும் கொடுக்கமாட்டீர்கள்!" என்று சரளாவும் அந்த வேடிக்கைப் பேச்சுக்கு ஈடுகொடுத்தாள்.

"ஆசை காட்டுகிறேனா? உனக்கென்ன பைத்தியமா? வேண்டு மானால் என்னைப் பரீட்சை செய்து பார். சரளே, நீ மூவுலகங் களையும் கேட்டாலும் கொண்டுவந்து தருவேன்" என்று தானும் விநோதமாக நாடக பாணியில் சொன்னான்.

திடீரென்று சரளா நெடுமூச்செறிந்தாள். கேலிப் பேச்சுக்கு இடையில் தோன்றிய இந்தப் பெருமூச்சால் ராமண்ணா திகைப்படைந்தான்.

"என் உனக்குப் பொய் என்று தோன்றுகிறதா?"

சரளா பேசாமல் தலையை மட்டும் ஆட்டினாள்.

"அப்படியானால் கணவனின் மேல் இருந்த நம்பிக்கை போய்விட்டது என்று சொல்."

"ஊஹூம்" என்று கூறி, மறுபடியும் தலையை ஆட்டினாள்.

"அப்படியானால் மனசிலிருப்பதை வெளியே சொல்லிப் பாரேன்."

சரளா பெருந்தன்மையுடன் ஒருமுறை சிரித்தாள்." என்ன வேடிக்கை சொல்லத்தான் சொல்லேன் பார்க்கலாம், சரளா"

" நீங்கள் அதை நிறைவேற்ற மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும்."

ஹூம் என்று ராமண்ணா அவளை உற்றுப் பார்த்து, சீண்டுகிற சிரிப்புடன் சொன்னான், "என் மனமும் உன் மனமும் அவ்வளவு பொருத்தம். என் மனத்திலிருப்பது உனக்கு முதலிலேயே தெரிந்து விடுகிறது?"

"ஆச்சு - இப்படிப் பேச ஆரம்பித்துவிட்டால்-"

"சரி வாயை மூடிக் கொள்கிறேன், போதுமா? இல்லை, கண்ணை மூடிக்கொள்ளட்டுமா? இல்லையில்லை - இது பார்க்கக்கூடிய பொருள் இல்லையே? சரி காதை மூடிக் கொள்கிறேன், சொல்" என்று காதுகளின் மீது கைகளை வைத்துக்கொண்டான்.

"நீங்கள் அதற்குள் காதை மூடிக் கொண்டு விட்டீர்கள் என் பேச்சுக்கு."

"அட ராமா. டாக்டரிடம் சொல்கிறேன். கேட்டதைக் கொடுங்கள் என்று சொல்லியிருக்கிறார் புண்ணியவான். அதனால் வேண்டியதை நீ வாய்விட்டுக் கேட்கும்படி உனக்கு மருந்து தரச் சொல்கிறேன்"

"வாய்விட்டு ஏன்? கை கூப்பிக் கேட்கிறேன்"

"கேள் அப்படியானால் பக்தையே, மெச்சிய உனது தெய்வம், நீ வேண்டியதைக் கண்ணை மூடிக்கொண்டு கொடுக்கும்."

தான் அந்த வார்த்தைகளை எவ்வளவு விநோதமாகவும், உல்லாசமாகவும், விளையாட்டுப் பையனின் குழந்தைத் தனமான குறும்புத் தனத்தோடும் சொன்னான்! ஆனால் கோடைகாலத்து மழையைப் போலச் சரளாவின் பதில் திடீரென்று வந்து, அவனது உல்லாச மனநிலையின் மீது நீரைச் சொரிந்தது. அந்த மழையில் சொட்ட சொட்ட நனைந்தவனைப் போலத் தன்னுடைய உடல் அவள் பதிலால் திடீரென்று வியர்த்துவிட்டது. தான் கண்ணைமூடிக் கொண்டிருந்தான், தன் முகத்தில் புன்னகை நடனமாடிக் கொண்டிருக்கிறது, அடுத்த சிறுபிள்ளை விளையாட்டுக்காகத் தன் உள்ளம் ஆவலோடு துடித்துக் கொண்டிருக்கிறது; ஆனால் இவையெல்லாம் ஒரு கணம் மட்டுமே. மறு நாழிகையில் சரளாவின் வாயிலிருந்து

"நீங்கள் குமுதாவின் கல்யாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டும்"

என்கிற வார்த்தைகள் வெளிவந்தபோது மூடிய கண்களைத் திறக்க அவனுக்கும் பயமாக இருந்தது.

"என்னது? என்ன சொல்கிறாய் சரளா?"

"வேண்டாம் என்றாலும், நீங்கள் தானே கேட்டீர்கள்?"

"இப்படிப் பேசினால், சரளா, நான் என்ன செய்யவேண்டும்?"

"இப்போ கேளுங்கள் டாக்டரை."

உண்மையில் அந்தப் பேச்சை அவள் நல்லெண்ணத்துடன்தான் சொன்னாள் என்பது, பின்னால் எவ்வளவோ நாட்களுக்குப் பிறகு

அவனுக்குத் தெரியவந்தது. டாக்டரின் பேச்சைத் தானே முதலில் எடுத்திருந்தான். சோகமான சூழ்நிலையை மாற்றி, மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிற நல்லெண்ணத்துடன் வேண்டுமென்றே வேடிக்கைப் பேச்சு என்று அவ்வாறு சொல்லியிருந்தாள். ஆனால் அப்பொழுது ராமண்ணாவுக்கு அப்படித் தோன்றவில்லை.

டாக்டரைக் கேளுங்கள் என்று சரளா சொன்னபோது ராமண்ணாவுக்கு ஒரே எண்ணம்தான் தோன்றியது. தனக்கும் குமுதாவுக்கும் இடையேயுள்ள உறவு அவளுக்குத் தெரிந்திருக்கிறது. அல்லது குமுதாவே சொல்லியிருக்கவேண்டும். சென்ற நான்கைந்து நாட்களாக இருவரும் ஏதோ கிசுகிசு வென்று பேசிக் கொண்டிருந்தார்கள். இப்போது டாக்டரின் பேச்சை எடுத்ததனால் ஏதோ ஆகக்கூடாதது ஆகிவிட்டிருக்கவேண்டும்! ஆகக் கூடாதது என்ன மண்ணாங்கட்டி! ஆக வேண்டியதுதான் ஆகியிருக்கிறது. தெருவிலே போகிற பேயை வீட்டிற்குள் சேர்த்துக் கொண்டாற் போலாயிற்று. இந்தப் பாழாய்ப்போன குமுதாவை எந்தக் கெட்ட நேரத்தில் சேர்த்துக் கொண்டேனோ! இந்தப் பெண் தானாகட்டும் எத்தனை பெரிய மோசக்காரி! தன்னிடத்தில் ஏன் சொல்லவில்லை? ஏன் என்ன? தன்னை வலையில் வீழ்த்த முதலிலிருந்தே அவள் இந்த ஆட்டத்தை ஆடியிருக்கவேண்டும். சந்தேகமே இல்லை. அன்று அறைக்குப் புத்தகம் தேட வந்தது, அதற்கும் முன்பு என் கை தன் கையில் படும்படி செய்தது, தன்னை நான் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு பொகும்படி அப்பாவியான சரளாவைத் தூண்டி விட்டது - இவையெல்லாம் ஏற்கனவே தயாரித்த திட்டமாக இருக்கவேண்டும். அதனால்தான் இப்பொழுநு சரளாவிடமே சொல்லிவிட்டிருக்கிறாள், நான் நழுவாமல் மாட்டிக் கொள்ள வேண்டாமென்று! அடேயப்பா!

"குமுதாவே சொன்னாளா உன்னிடம்?" என்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் கேட்டுவிட்டான்.

"சீ! இந்தப் பேச்சை அந்தப் பெண் தானாகச் சொல்லுமா? நான் உங்களிடம் பேசுகிறேன் என்பதுகூட அவளுக்குத் தெரியாது."

சரளாவின் இந்தப் பதிலைக் கேட்டு, ராமண்ணாவின் சந்தேகம் வலுத்தது. சரளாவுக்கு எத்தகைய அதிர்ச்சியும் ஏற்படாத வண்ணம் தான் பதிலளிக்கவேண்டும். தன் மனத்தில் ஓடும் எண்ணங்களின் நெளிவுகள் கூட அவளுக்குத் தெரியக்கூடாது என்று, எப்படியோ சமாளித்து, சிரித்த முகத்துடன், "சரி டாக்டரையே கேட்கிறேன்" என்றான்.

அன்று மட்டும் ராமண்ணா தனிமையில் யோசிக்க வேண்டிவந்தது. இரண்டு விஷயங்கள் அவன் முன்னால் தெளிவாகத் தெரிந்தன: குமுதாவின் உறவின் முடிவு என்னவாக இருக்கும் என்று அவனுக்குத் தெரிந்திருந்து. குமுதா வேண்டுமென்றே வீசிய வலை இது. எனவே இதிலிருந்து மீள அறிவு முழுவதையும் செலவழிக்கவேண்டும். அந்தச் சமயத்தில் குமுதாவின் பேரில் அவனுக்கு எவ்வளவு கடுமையான வெறுப்புணர்ச்சி எற்பட்டிருந்தது! என்னை வலையில் இழுப்பதா? என் வீட்டில் இருந்து கொண்டு, என் மனைவி ஒன்றும் செய்ய இயலாதவளாக இருக்கிறாள் என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு, அதை துருபயோகப்படுத்திக் கொள்கிற சூழ்ச்சியா? அவமானம்-கோபம்-வெறுப்பு-துவேஷம்-எரிச்சல் இவைகளின் மோதலினால், புயலில் சிக்கியவனைப்போல, அவன் திசை தவறித் தடுமாறினான்.

மறுநாளுக்குள்ளாக ஆத்திரமெல்லாம் அடங்கிவிட்டிருந்தது. தன்னுடைய தவறும் இல்லாமல் இல்லை என்று அவன் இரவு படுக்குபடியே ஒத்துக் கொண்டான். எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும்; இனி இந்தப் போராட்டம் வேண்டாம் என்று தீர்மானித்துக் கொண்டான். அன்றிலிருந்து குமுதாவைக் கண்ணெடுத்துப் பார்க்கக்கூட அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. சரளா அதன் பிறகு அந்தப் பேச்சை எடுக்காவிட்டாலும், தான் கவனிக்காதபோது தன்னைத் தன்னிடமிருந்து எதையோ எதிர்ப்பார்ப்பது போலப் பார்ப்பதை அவன் கவனித்திருந்தான். பகலில் சரளாவுடன் பேச்சு, மாலையில் காற்றாட உலாவச் செல்லுதல்: இரவில் ' எழுதுவது. எல்லாம் இப்பொழுது தடங்கலின்றி நடந்து வந்தபோதிலும், உள்ளுக்குள்ளேயே அவனுக்கு ஒரு பயம் இருந்தாற்போல இருந்தது. 'டாக்டரைக் கேட்பது' எப்பொழுது தவிர்க்க முடியாததாகிப் போய்விடப் போகிறதோ என்று. ஒரு நாள் சரளா "டாக்டரையாவது கேளுங்களேன்" என்றபொழுதுதான் அவன் திடுக்கிட்டான். "ஏன்? என்ன ஆச்சு இப்போ?" என்று பைத்தியம் போலக் கேட்டான்.

"என்ன ஆகணும்? கண்ணாடியையாவது பார்த்துக் கொள்ளுங்கள்" என்றாள். அப்பொழுதுதான் அவனுக்கு புரிந்தது.

"ஓ! என்னைச் சொல்லுகிறாயா? எனக்கென்ன கேடு?" என்று அலட்சியப்படுத்தப் பார்த்தான்.

"அப்படிச் சொன்னால் போதுமா? முகமெல்லாம் வெளுத்துப் போயிருக்கிறது."

"என்னத்தையாவது சொல்லாதே. நான் எப்போதும் அழகாக இருக்கவேண்டும் உனக்கு. ஹ்ஹ!"

"எனக்காக நீங்கள் அழகாக இருக்கும் நாட்கள் என்றைக்கோ முடிந்து போய்விட்டன." மறுபடியும் பேச்சு அந்த விஷயத்திற்கு வரக்கூடும் என்று பயந்த ராமண்ணா பேச்சை மாற்றினான். "மருந்து சாப்பிட்டியா? வேண்டாமா? நான் போகட்டுமா எழுத?" என்று கேட்டான்.

"நீங்கள் போங்களேன். குமுதாவின் சாப்பாடும் ஆச்சி. அவள் உட்கார்ந்து கொள்வாள்-"

ராமண்ணா அவசரமாகவே போனான். அதற்குள்ளாக மற்றொரு யோசனை அவனைப் பிடித்துக் கொண்டது. தான் இவ்வாறு அதிக நேரத்தைத் தன் அறையிலேயே கழிப்பதால், குமுதா சரளாவின் அருகில் அதிக நேரம் இருக்கமுடிகிறது. இன்னும் என்ன வலையை விரிப்பாளோ?...

ராமண்ணா சட்டென்று தலையைச் சொரிந்தபடி எழுந்து நின்று கொண்டு எதிரில் பார்த்தான். அவனுக்குச் சிரிப்பு வந்தது. பாவம்! தான் இவ்வளவு நேரம் நினைவுகளின் அரியாசனத்தில் அமர்ந்திருந்தபோது, அந்தப் புத்தகம் மட்டும் தோற்றுப்போய் சரணடைந்த சத்துருவைப் போல அப்படியே தரையில் தலைவைத்துப் படுத்துக் கொண்டிருக்கிறது. தான் தான் பைத்தியம். புத்தகத்திலிருந்த அந்த சுலோகத்திற்காக தான் கோபித்துக் கொண்டானே? ஏன் அந்த சுலோகம் உண்மையையே சொல்லுகிறது என்பதற்காக அதன் பேரில் தன்னுடைய கோபம்! அந்த சுலோகத்தில் கூறப்பட்டிருப்பது எழுத்துக்கு எழுத்து உண்மை "இன்னும் என்ன வலையை விரிப்பாளோ?" என்று அன்றுதான் மனத்திற்குள்ளாகவே கேட்டுக் கொண்டானே? அது வலையல்ல. குமுதா வீசியது அல்லவே அல்ல. "ஆநீய ஜடிதி கடயிதி விதி " என்று அந்த சுலோகம் கூறுகிற வலை, விதி வீசிய வலை. சிருஷ்டி மாயை வீசிய வலை. அநாதி காலந்தொட்டு, உலகை வியாபித்து வீசிய வலை. அதனால்தான் கடைசியில் அதில் அகப்பட்டுக் கொண்டான். தோல்வியை ஒப்புக் கொள்வது போல, நின்ற இடத்திலேயே முழங்கால்களை உன்றிச் சரணடைவது போல, ராமண்ணா மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

## 14

முகத்தை முக்காட்டால் மறைத்துக் கொண்டால், வெளி உலகம் காணாமலிருக்கலாம், ஆனால் உள் உலகம் மறைந்துவிடாது என்பதை அறியக் குமுதாவுக்கு அதிக நேரம் ஆகவில்லை. அது மட்டும் அல்ல, வெளியுலகம் முழுமையாக மறைக்கப்பட்டு விட்டதனால் தானோ என்னவோ, உள் உலகத்தின் சித்திரம் அதிக அளவில் பெரிய உருவில் நிற்பதைக் குமுதா கண்டாள். மெதுவாக முக்காட்டை விலக்கிச் சுற்று முற்றும் பார்த்தாள். எல்லாம் முன்பொரு முறை கண்டது போலத் தோன்றியது. தினமும் பார்க்கிற காட்சியே ஆனாலும், ஏதோ ஒரு வகையில் தன் அறையின் சூழ்நிலை - ஆம், சூழ்நிலைதான் - இதே போல முன்பு ஒருமுறை இருந்ததாகத் தோன்றியது. என்றைக்கு? எப்பொழுது அறை இதுபோலத் தனக்குக் காணப்பட்டது? தான் முக்காடிட்டுக் கொண்டு படுத்திருக்கவேண்டும், அது சகிக்க முடியாமற் போயிருக்கவேண்டும். அப்பொழுதுதான் முக்காட்டை நீக்கி சுற்று முற்றும் பார்த்திருக்கவேண்டும். - இப்படி, ஆம்.

இரவு விடிவை நோக்கி வளர்ந்து கொண்டிருந்தபோது, தூக்கம் வராமல் களைத்துப் போன குமுதாவின் மனத்திற்கு என்றைக்கு, எவ்வளவு நாட்களுக்கு முன்னால் என்பது தெளிவாக நினைவுக்கு வரவில்லை. ஆனால் சந்தர்ப்பம் மட்டும் - வெறும் சந்தர்ப்பம் ஏன், நடந்ததெல்லாம், ஒவ்வோர் அடியும், ஒவ்வொரு சந்தர்ப்பமும் - முழுவதும் நினைவிருக்கிறது.

அப்பொழுது ராமண்ணாவின் மனம் அமைதியாக இருக்க வில்லை என்று குமுதாவுக்குத் தோன்றியது. ஒரு நாள் காலை. சரளக்கா மயக்கமடைந்த அன்றிலிருந்து, ராமண்ணாவின் முகத்தில் ஒரு கவலை படர்த்திருந்தது. நாள் முழுவதும் கவலைக் கிடமாக இருந்த சரளக்காவின் நிலை தேறி இரவு "இனி பிழைத்துக் கொள்டாள்" என்று தோன்றிய பிறகு, அன்று இரவு ராமண்ணா தன் அறைக்கு வந்திருந்தான். அதன் பிறகு பல நாட்கள் வரவே இல்லை. மனைவியின் பேரில் உள்ள கவலை யினால், மனம் வியாகூலப்பட்டு அவன் அவ்வாறு செய்திருக்கக் கூடும் என்று முதலில் நினைத்திருந்தாள். ஆனால் நாட்கள் வாரங்கள் ஆயின, ராமண்ணா வரவே இல்லை! இது மட்டுமே தன்னுடைய கவலையாக இருந்திருந்தால், குமுதா அதற்குத் தக்க காரணத்தைத் தேடிக் கண்டுபிடித்து, சமாதானத்தை வரவழைத்துக் கொண்டிருப்பாள். ஆனால் வீட்டில் சந்தர்ப்பம்

நேரிட்டபோது கூடத் தன்னை முகம் உயர்த்திப் பார்க்கவில்லையே! குமுதாவுக்கு சந்தேகம் தோன்றியது, பிறகு பயம் ஏற்பட்டது. இல்லாவிட்டால் தானாகவே அவன் அறைக்குச் சென்று, அவனோடு பேச்சுக் கொடுத்து அவனைக் கேட்டிருப் பாள். உள்ளத்தின் கொதிப்பை எவ்வளவு நாட்களுக்குத் தாங்கிக் கொள்ளமுடியும்? மனதைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் இரவு வெகு நேரம் சரளக்காவுடன் பொழுதைக் கழித்தாள். அப்பொழு தாவது ராமண்ணாவைக் கண் நிறையப் பார்க்கலாமே என்று உள்ளுக்குள் ஓர் ஆசை. ஆனால் தான் சரளக்காவின் அருகில் உட்கார்ந்திருக்கும்போது, ராமண்ணா அங்கே எட்டிக்கூடப் பார்க்கவில்லை! எவ்வளவோ தடவை, தான் அங்கே சென்றபோது ராமண்ணா அங்கே உட்கார்ந்திருந்தான், தன்னைக் கதவருகே கண்டதுமே "சரி துணைக்கு ஆள் வந்தாச்சு" என்று பொய்ச் சிரிப்புடன் சென்றுவிடுவான். இதையெல்லாம் பார்த்து, குமுதாவுக்கு ராமண்ணாவின் பேரில் ஏனோ பரிதாபம் ஏற்படும். ஒருமுறை அத்தகைய மனநிலையில் இருந்தபோது தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சரளாக்காவைக் கேட்டாள்: "ஏன் அவருக்கு உடம்பு சரியாயில்லையா?"

"கேட்டால் எனக்கென்ன கேடு வந்திருக்கிறது என்கிறாரம்மா!" என்று சரளக்கா பெருமூச்சு விட்டாள்.

"இல்லை. முகமெல்லாம் வெளிறியிருக்கிறது. அதற்காகக் கேட்டேன்."

"நானும் அப்படிக் கேட்டபோது, என்னத்தையோ சொல்லி விட்டார்."

"மறுபடியும் கேட்டுப் பார்க்கிறாயா? ஏனென்றால்---"

"நான் கேட்டால் அவர் சொல்லமாட்டார்." மறுபடியும் சரளக்கா பெருமூச்சு விட்டாள்.

குமுதாவின் சந்தேகம் மறுபடியும் தலை தூக்கியது. என்ன இது? கணவன் - மனைவியிடையே சண்டையா? அது தன்னைப் பற்றிய விஷயமாக இருக்குமா? தன்னிடம் வருவது இருக்கட்டும், பார்ப்பது கூட இல்லை. சரளக்காவுக்கு ஏதாவது தெரிந்து---?

"உன்னிடம் சொல்லாமல் யாரிடம் சொல்லவேண்டும் அக்கா?" என்று பலவந்தமான சிரிப்பால் உள்ளத்து எண்ணங்களுக்குத் திரையிட முயன்றவாறு குமுதா கேட்டாள்.

"ஹூம்" என்று நீண்ட பெருமூச்சு விட்டு, "என் மேல் கோபித்துக் கொண்டிருக்கிறார்" என்றாள் சரளக்கா.

*புருஷன்-மனைவி மனஸ்தாபத்தில் மூன்றாவது மனிதர் தலையிடுவது மிகவும் நாசூக்கான விஷயம் என்பதால் குமுதா, பேசாமலிருந்தாள்.*

*"அவர் மேல் என்ன தவறு?" சரளக்கா வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னாள்.*

*அதற்கும் ஒன்றும் பதில் சொல்லாமல், குமுதா சரளக்காவின் போர்வையைத் தலைகீழாகத் திருப்பிப் போட்டு சரி செய்தபடி மௌனமாக இருந்தாள். இருந்தாலும் சரளக்காவின் மனத்திலிருப் பதை இனி அடக்கி வைத்துக் கொள்ளமுடியாது; அது வெளியில் வந்தே ஆகவேண்டும் என்றுதான் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். சரளக்காவின் உள்ளத்து வேதனை கரையை உடைத்துக் கொண்டு பாய்ந்தது.*

*"அவருடையது என்ன தவறு சொல், குமுதா. வெளிவேலை களைக் கவனிப்பதற்கு அவகாசம் இருக்கவேண்டும் என்பதற்காக, வீட்டுக்கு மனைவியைக் கொண்டுவருவது. இங்கே படுக்கையில் கிடக்கும் மனைவிக்குப் பணிவிடை செய்வதற்காகக் கைகட்டிக் கொண்டு நிற்பது!*

*ஏன், குமுதா?"சரளக்காவின் முகத்தின் மீது துயரம், ஏமாற்றம் இவைகளின் ஜ்வாலை வீசியது.*

*"அதனால்தான் சொன்னேன், அவருடைய தப்பென்ன?"*

*இப்பொழுதும் குமுதா பேசவில்லை. அவள் பேச வேண்டுமென்கிற எண்ணம் கூட, சரளக்காவுக்கு இருக்கவில்லை. அவள் அப்படியே தன் பேச்சைத் தொடர்ந்தாள்.*

*"வீட்டுக்கு வந்தால் வரவேற்கவோ, புன்சிரிக்கவோ, களைத்துப் போயிருக்கிறீர்களா என்று கேட்கவோ ஒருத்தி வேண்டாமா? ஒன்றுமில்லை. வீட்டில் காலடி எடுத்து வைக்கவேண்டியதுதான் தாமதம், படுக்கையின் மீது சாகாமல் படுத்துக் கொண்டிருக்கும் இந்த முகரக்கட்டை!"*

*இப்போது மட்டும் குமுதாவுக்குப் பேசியே ஆக வேண்டியிருந்தது.*

*"என்ன · அக்கா இது? இல்லாததையெல்லாம் நினைத்து மனதைப் போட்டு குழப்பிக் கொள்ளாதே. ஒரு நாள் உன்னைப் பார்க்காவிட்டால், பைத்தியம் பிடித்துவிடும் அவருக்கு. உனக்கு யார் இந்தப் பைத்தியக்கார யோசனையெல்லாம் சொல்லு கிறார்கள்?"*

"குமுதா, பைத்தியக்காரி! யாராவது சொல்லவேண்டுமா? அவர் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறதே. முதலிலெல்லாம் வந்தவுடனே வந்து பார்ப்பார் ஏதாவது தேறியிருக்கிறேனோ என்று. இப்பொழுது அது சாத்தியமில்லை என்பது நிச்சயமாகி விட்டது. இப்பொழுது அவர் வந்ததும் என்னைப் பார்த்துத் தன் மனத்திலிருப்பதை மறைத்துக் கொண்டு வேறு எதையாவது பேசுவதற்கு முயற்சி செய்கிறாரே?—அப்பொழுது அவர் முகத்தைப் பார்த்தால், என் இதயத்தையே பிடுங்கிக் கையில் வைத்துக்கொண்ட மாதிரி ஆகிவிடுகிறது. நான்தான் என்ன செய்யட்டும் சொல், குமுதா? வீட்டிலாவது ஒரு நான்கு குழந்தைகள் இருந்தால், வெளியிலிருந்து வந்தவுடன் பையன்களின் விளையாட்டிலும் ரகளையிலும் எதாவது சந்தோஷம் கிடைக்கும். என் தலையில் அதொன்றும் எழுதியிருக்கவில்லை. வந்தும் அவரைக் கெடுத்தேன், போகும்போதும்—"

இவ்வளவு நீளமாகவும் கலக்கத்துடனும் பேசியது, சரளக்காவுக்கு ஆயாசத்தை உண்டாக்கியதோ என்னவோ! அந்த ஆயாசத்தைக் கூடப் பொறுத்துக் கொள்கிற சக்தி, அவள் உடலுக்கிருக்கவில்லையாதலால் கண்களில் நீர்த்துளிகள் மின்னின. குமுதாவுக்கும் அதைப் பார்த்துப் பொறுக்க முடியாத வேதனை ஏற்பட்டது.

"ஒருத்தியே படுத்துக்கொண்டு, இல்லாத யோசனைகளை யெல்லாம் செய்கிறாய் அக்கா. இந்த வீட்டில் யாருக்கும் என்றைக்கும் அது போன்ற எண்ணங்கள் வரவில்லை."

சரளக்கா துயரத்தின் தீவிரத்தை அடக்கிக் கொண்டு சொன்னாள்: "இருந்தாலும் என் மனத்திற்குச் சமாதானம் இல்லை, குமுதா. பிழைத்திருக்கும்போது என் கடமையைச் செய்யவில்லை, சாகும்போது செய்யலாம் என்று பார்க்கிறேன். அதற்காகத்தான் அவரிடம் ஒரு விஷயம் சொன்னேன். அதற்காக என் மேல் கோபித்துக்கொண்டிருக்கிறார் என்று தோன்றுகிறது."

"என்ன விஷயம் அக்கா, அது? அவருக்குக் கோபம் வரும்படி உன் வாயிலிருந்து எதுவும் வந்தது என்பதை நம்புவது என்னாலேயே முடியவில்லை."

"அதென்னமோ, அம்மா! கோபம் வந்ததென்னமோ உண்மை."

"அப்படி என்ன அக்கா நீ சொன்னே?"

குமுதா சிறிது தமாஷாகவும், சிறிது சீண்டும் குரலிலும்தான் அந்தக் கேள்வியைக் கேட்டாள். அப்படிக் கேட்கும்போது

கடைசியில் அதுவும் ஒரு வழக்கமான கணவன்-மனைவி சண்டையாகத்தான் இருக்கும் என்று தான் அவள் நினைத்திருந்தாள். தான் அந்த வீட்டில் வசிப்பதற்காக வந்த நாளிலிருந்து, சரளக்காவின் வாயில் கடுமையான அல்லது வக்கிரமான வார்த்தைகளையோ அல்லது அல்லது அவளது எந்தப் பேச்சுக்காகவும் ராமண்ணா அவளைக் கோபித்துக் கொண்டதையோ கேட்டிருக்கவில்லை. இப்பொழுதோ அவள் ஆதரவற்ற நிலையில் இருக்கிறாள், ஆகையால் ராமண்ணா அவளைக் கோபித்துக் கொள்வது சாத்தியமே இல்லை. நோயின் அசதியினால் எப்படிப்பட்டவர்களுடைய புத்தியும் சிறுபிள்ளைத் தனமாகும். இதயம் பலவீனமடையும். அதனால் சரளக்கா மனம் நொந்து போயிருக்க வேண்டும் என்று எண்ணி, குமுதா அந்தக் கேள்வியைக் கேட்டிருந்தாள்.

"அவரிடம் இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள்ளும்படி நான் சொன்னேன்."

சரளக்காவின் இந்த பதிலைக் கேட்டு, குமுதாவின் நிலை உயரத்திலிருந்து கீழே விழுந்து நினைவிழந்தவள், மறுபடியும் நினைவு வரப்பெற்றது போலிருந்தது. தான் இருப்பதெங்கே? பேசிக் கொண்டிருப்பது யார்? எதைப்பற்றிப் பேச்சு? ஒரு கணம் ஒன்றும் தெரியவில்லை. கல்யாணம்? ராமண்ணாவுக்கு? இன்னொரு கல்யாணம்? ஏன்? மனைவியே அதைச் சொல்லு கிறாளே ஏன்? இதைக் கேட்டுச் சிரித்துக் கேலி செய்வதை விட்டு, ராமண்ணா கோபித்துக் கொண்டது ஏன்? ஏ...ன்...? இவ்வாறு பலதரப்பட்ட கேள்விகள் ஒன்றையொன்று முட்டி மோதிக் கொண்டு தன் தலையில் தை,தை என்று குதித்து, மிதித்துத் தூளாக்கிக் கொண்டிருந்தனவென்று தோன்றியது. கூடவே இவை ஒன்றையும் தன் முகத்தில் காட்டிவிடக்கூடாது என்கிற முயற்சி! ராமண்ணாவின் கல்யாணத்தைப் பற்றித் தனக்கு ஏன் இவ்வளவு கவலை என்கிற சந்தேகம் சரளக்காவுக்கு வந்திருந்தால்? எனவே தனது எண்ணங்களின் மோதலின் ஓசை, தனக்கே கேட்காதவாறு உரக்கச் சிரித்துவிட்டாள்! மனம் நொந்திருக்கும் போதும் சிரிக்கக் கூடும் என்கிற அனுபவம் தனக்கு என்று ஏற்பட்டிருந்தது.

"அய்யே! இப்படிச் சிறுபிள்ளைத்தனமான பேச்சு பேசினால் கோபித்துக் கொள்ளாமல் இருப்பார்களா, அக்கா?" என்று சிரித்தபடியே கேட்டாள்.

"அவர் கோபித்துக் கொண்டார், நீ சிரிக்கிறாய்!"

சரளக்காவின் மனம் புண்பட்டதையறிந்து குமுதா வருந்தினாள். "சிரிக்கிறேனென்று தப்பாக நினைத்துக் கொள்ளாதே, அக்கா. இல்லை, நீயே யோசித்துப் பார். மனைவியைக் காப்பாற்ற வேண்டுமென்று பகலும் இரவும் பாடுபட்டுக் கொண்டிருப்பவரிடம் இன்னொரு கல்யாணம் பண்ணிக்கொள் என்று சொன்னாள்—"

"அவ்வளவு கூட எனக்குத் தெரியாதா, குமுதா? நான் பிழைக்க வேண்டும் என்று அவர் பாடுபடும்போது, நான் எதற்காகச் சாகவேண்டும் என்கிறேன்? ஆனால், இவ்வளவு கஷ்டப்படுபவருக்குக் கொஞ்சம் சுகம் கிடைக்கட்டுமே, அதுவும் என் கண் முன்னால் கிடைக்கட்டுமே என்று—"

"இன்னொரு மனைவி என்றால், அவருக்கு அதனால் சுகம் இருக்காது."

அதைச் சொன்னபிறகு, தன் நாக்கை அறுத்தெறிந்து விடவேண்டுமென்று தோன்றியது குமுதாவிற்கு. எவ்வளவு அமங்கலமான வார்த்தைகள் தன் வாயிலிருந்து வந்து விட்டன!

குமுதா போர்வையைத் தூக்கி எறிந்து விட்டுப் படுக்கையினின்றும் எழுந்தாள். அன்று தன் வாயிலிருந்து வந்த வார்த்தைகள் அமங்கலமானவை என்று இப்போது தனக்குத் தோன்றுகிறது. அப்போது தோன்றவில்லை என்று நினைத்துக் கொண்டாள். இருந்தாலும் அன்று இரவு சரளக்காவுடன் பேசிய பேச்சிலிருந்து, தன் மனம் கலங்கியிருந்தது என்பது மட்டும் நிஜம். பேசிமுடித்து விட்டு சரளக்கா தூங்கிப் போனதும், தன் அறைக்கு வந்த குமுதாவுக்கு ஓர் இடத்தில் நிற்க மனம் வரவில்லை. அப்படி நின்றால், தன் மனத்திலிருக்கும் எண்ணம் 'தொப்'பென்று குதித்து, தன் எதிரே வந்து நின்று பேச்சுக் கொடுக்குமோ என்கிற பயம். அதைத் தவிர்ப்பதற்காக அந்த அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்தாள். கடைசியில் அந்த எண்ணம் அவளை எதிர்க்காமல் விடவில்லை.

ராமண்ணாவின் விவாகம்! அது உன்னோடு ஏன் இருக்கக் கூடாது? கல்யாணம் நிச்சயமாகியிருக்கும் அக்காவைச் சீண்டுகிற தம்பியைப் போல, அந்த எண்ணம் அன்று குமுதாவைச் சீண்டிக் கொண்டிருக்கிறது. ஒரேயடியாகத் திருப்பி திருப்பி அதே கேள்வியைக் கேட்டுக்கொண்டதால், கடைசியில் குமுதாவுக்கும் "இது உண்மையாக இருக்குமா?" என்று தோன்றத்தொடங்கியது. ஆனால் அந்தப் பொய் நிம்மதி வெகுநேரம் நீடிக்கவில்லை. அது

உண்மையாக இருக்குமானால், ராமண்ணா கோபித்துக் கொண்டிருக்கிறான் என்பது அதிர்ச்சியாகும். தன்னைக் கல்யாணம் செய்து கொள்வது அவ்வளவு வேண்டாத, விரும்பத் தகாத விஷயமாகிவிட்டதா. எதிரே கண்ணாடியில் தெரியும் தன் உருவத்தைப் பார்த்துக் கொண்டாள். அந்த உடலின் மீது ராமண்ணாவுக்கு எத்தகைய உரிமை இருந்தது என்கிற சித்திரமும் அவள் கண்களுக்கெதிரில் நின்றது. அப்படியிருந்தும் - ராமண்ணா வுக்குக் கோபம்! சே! இந்தக் கல்யாணம் தனக்கு சம்பந்தமில் லாதது என்று சொல்லிக் கொண்டாள். எவ்வளவு நாட்களாகி விட்டன, ராமண்ணா தன்னிடம் வராமல், கண்ணெடுத்துப் பார்க்காமல்? ஏன்? "ஆங்.. தெரிந்தது.." என்று தோன்றியது குமுதாவுக்கு. "வேறு யாரையாவது மணந்து கொள்ளும் நோக்கம் அவனுக்கு இருக்கவேண்டும். அதனால்தான் தன் சகவாசத்தை அவன் தவிர்க்கிறான்!"

இந்த எண்ணம் தோன்றியதும் அவளது உயிரே போய் விட்டாற் போலிருந்தது. ராமண்ணாவுக்கும் இன்னொருத்திக்கும் விவாகம் என்கிற எண்ணம், பொறுக்கக்கூடாதது என்பது போலக் கண்களை இறுக மூடிக் கொண்டு பேய் பிடித்தவளைப்போல ஆவேசத்துடன் தலையை ஆட்டி "இல்லை, இல்லை இது பொய். இது நடக்காது" என்று கண்ணாடியில் காணப்பட்ட குமுதாவிடம் பிடிவாதமாகச் சொல்லத் தொடங்கினாள். கண்ணாடிக்கு மிகவும் அருகில் வந்தபோது, அவள் விழிப்புற்றவள் போலானாள். இதென்ன பைத்தியக்காரத்தனம்! இல்லாத பொல்லாத கற்பனை களினால் பிரமித்துப் போவதா? ஆனால் இது கற்பனையல்ல, சரளக்காவின் வாயிலிருந்து வந்த வார்த்தைகளைத் தன் காது களினாலேயே கேட்டிருக்கிறாள், ராமண்ணாவின் இரண்டாவது விவாகம்-

சே! இது ஒரு நாளும் நடக்காத காரியம் என்று மனத்திற்குச் சமாதானம் ஏற்படுத்திக் கொண்டிருந்தாள். அந்தப் பேச்சுக்கு ராமண்ணா கோபித்துக் கொண்டிருக்கிறான் என்று சரளக்காவே சொல்லவில்லையா? ஒரு நிமிடம் அவள் சந்தோஷமடைந்தாள். இந்த எண்ணம் தோன்றியதால் கூடவே வருத்தமும் தோன்றியது அவள் முகத்தில். ராமண்ணாவின் இரண்டாவது கல்யாணம் நடக்காத காரியம் என்றால் என்றால்? ஒரு வேளை இந்தப் பேச்சு தன் விஷயமாகவே இருக்குமானால், ராமண்ணா தன்னை விவாகம் செய்து கொள்ளவும் தயாராக இல்லை என்றல்லவா

ஆகிறது? கண்ணாடியிலுள்ள குமுதா, தன் மனத்திற்குகந்த பதிலை அளிப்பாள் என்று எதிர்பார்த்து ஆவலுடன் தன் பிரதிபிம்பத்தைப் பார்த்தாள்.

மனம் எவ்வளவு சஞ்சல புத்தியுள்ளதாக இருக்கிறது! அவ்வாறு ஒரேயடியாகப் பிரதிபிம்பத்தை உற்றுப் பார்த்துக் கொண்டு நின்ற போது, முதலிலிருந்த எண்ணம் எங்கோ மாயமாய் மறைந்து, பிரதிபிம்பத்தைப் பற்றிய எண்ணமே அங்கே நிலை கொண்டது. தன்னுடைய பிரதிபிம்பத்தைத் தானே மோகித்தவள் போல ஆனந்தம், கர்வம் இரண்டும் அவள் முகத்தில் குடிகொண்டன. "இது ராமண்ணாவின் சொத்து" என்று சொல்லிக் கொண்டாள். "கல்யாணம் செய்து கொண்டாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி இது முழுக்க முழுக்க ராமண்ணாவின் உடைமை. ராமண்ணா யாரைக் கல்யாணம் செய்துகொண்டாலும் இந்த உடல் மட்டும் ராமண்ணாவின் சொத்து. தெரிந்ததா?" என்று பிரதிபிம்பத்திற்குத் தெரிவிப்பவள் போலக் கேட்டாள். யாகத்தில் பலிகொடுக்கப்படும் மிருகத்திற்கும் சுவர்க்கம் உண்டு என்று நம்பாதவர்கள், சுவர்க்கத்தைப் பற்றியே அறியாதவர்கள் என்று வாதிடவும் அப்போது குமுதா தயாராக இருந்தாள். ஒரு வகையான யக்ஞத்தில் தன் உடல் பலியிடப்பட்டது. அதனால் அந்த உடலுக்கு ஆனந்தமே கிடைத்தது என்பதை அவள் புளகமடைந்த தன் உடல் மூலம் அன்று அறிந்து கொண்டாள். கண்ணாடியில் அதைப் பார்க்கப் பார்க்க அந்த உடலின் பேரில் முதலில் கர்வம், பிறகு ஆனந்தம், பிறகு கருணை, கடைசியில் அன்பு தோன்றியது அவளுக்கு. ஒன்றையும் யோசிக்காமல் அவசரவசரமாக அந்த உடலைச் சிங்காரித்துக் கொண்டாள். பலியானதால் ஆனந்தம், எவ்வளவு சீக்கிரம் பலியாகிறோமோ அவ்வளவு சீக்கிரமாக ஆனந்தம்; எனவே இப்பொழுதே இந்த பலியை அர்ப்பணித்து விடவேண்டும் என்று தீர்மானித்து, அறையை விட்டு வெளியே புறப்பட்டாள். ராமண்ணாவின் அறையில் வெளிச்சம் கதவுக்குக் கீழேயுள்ள இடைவெளியில் தெரிந்தது. அந்த வெளிச்சத்தின் ஒரு நுண்ணிய இழையால் கட்டப்பட்டு, பலமாக இழுக்கப்படுவது போல உணர்ந்தவளாய் குமுதா நேராக அந்தக் கதவருகே சென்றாள்.

அதே வெளிச்சத்தின் இழை கதவண்டை வந்ததும், அவள் காலில் ஒரு கணம் இடறியது போலாயிற்று. சிறிது தயங்கினாள். இது என்ன? தன்னையறியாமலே கதவைத் தட்டி விட்டாளா?

இல்லை. அது தன் இதயத் துடிப்பின் ஒலி! டக்! டக்! இல்லை; அறைக்குள் இருந்த கடிகாரத்தின் ஓசை. டக்! டக்! ஊஹூம் உள்ளே ராமண்ணா குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருக்கிறான்! சட்டென்று குமுதாவுக்குப் புரிந்தாற் போலிருந்தது. புரிந்ததற்காக அவள் முகத்தில் முறுவல் படர்ந்தது. மனத்தைப் போல வேகமுடைய இன்னொரு சக்தி இருக்கிறதா உலகில்? குமுதாவின் மனம் அந்த ஒரு நிமிடத்தில் கண்டு கொண்ட வர்ண அலைகளோடு கூடிய எண்ண வெள்ளத்தின் நிரந்தர ஓட்டத்தில், தானே அந்த மனத்துடன் பதினான்கு உலகங்களிலும் சஞ்சரித்துவிட்டு வந்தாற்போல் இருந்தது அவளுக்கு. ராமண்ணா குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருக்கிறான். ஏன்? தனக்காகத்தான், தனக்காகவேதான் என்று தெரிந்துகொள்ள குமுதாவின் ஆசை கொண்ட மனத்திற்கு வெகுநேரம் பிடிக்கவில்லை. தன்னைவிட்டு ராமண்ணா இருக்கமாட்டான்! ஆனால் பாவம்! தன்னிடம் வரமாட்டான். சரளக்காவின் வார்த்தைக்குப் பயந்து கொண்டிருக்கிறான்! அதனால் குறுக்கும் நெடுக்கும் அலைந்து கொண்டிருக்கிறான்! இப்பொழுது அவனுக்கு எவ்வளவு ஆச்சரியமாக இருக்கும்! தெய்வத்தின் அருளை வேண்டுகிற பக்தனின் எதிரில் தெய்வம் தானே பிரத்யட்சப்பட்டால், அந்த பக்தனின் நிலை என்னவாக இருக்கும்? மெதுவாகக் கதவின் மீது கை வைத்தாள் குமுதா. கதவு திறந்தே இருக்கிறது! இப்பொழுது தான் உள்ளே போக வேண்டும், போனதுமே பின்புறத்திலிருந்து ராமண்ணாவின் கண்களை இறுக மூடவேண்டும்! ஊஹூம் கண்களை மூடினால் போதாது. திருப்தி இல்லை. ராமண்ணாவை இறுக அணைத்துக் கொள்ளவேண்டும், நன்றாகக் கட்டியணைத்துக் கொள்ள வேண்டும், தன் கைகளிலே சிறைப்பட்ட அவனது உடல் சிறிது சிறிதாகக் கரைந்து கரைந்து தன்னுள்ளில் கலந்துவிட வேண்டும். அவ்வளவு பலமாக இருக்கவேண்டும் தன்னுடைய அணைப்பு! வேண்டாம் அதுவும் வேண்டாம். அதோ! இப்போது இந்தப் பக்கம் வந்து கொண்டிருக்கிறான்; மனத்திற்குள் இருக்கும் குழப்பம் காரணமாக, அவன் முகம் எவ்வளவு அழகாகக் காணப்படுகிறது! ஏதோ எண்ணத்தால் அவனது உதடுகள் துடித்துக் கொண்டிருக்கின்றன. துடிக்கும் அந்த உதடுகளைக் கண்டதும் குமுதாவின் உதடுகள் லேசாக விரிந்தன. அந்த உதடுகளைத் தன உதடுகளால் கெட்டியாகப் பிடித்துக்

கொள்ளவேண்டும். அவைகள் நடுங்காதபடி. என்று தோன்றியது அவளுக்கு அத்தோடு திருப்தியாயிற்றா? இரண்டு கைகளாலும் அவன் முகத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு? ஐயோ! அந்த முகம் இப்படித் தன்னெதிரில் இருந்தால் தனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்! அதை எதிரில் வைத்துக் கொள்ளக் கூடாது மூடிவைக்கவேண்டும், முத்தமிடவேண்டும், துண்டுதுண்டாக்கி.

அன்று இரவு தான் மனத்தால் மிகவும் இழிந்துவிட்டாள் என்பதில் சந்தேகமிருக்கவில்லை. ஒன்றன் மேல் ஒன்றாக எழுந்த எண்ணங்களால் கடைசியில் நிதானத்தை இழந்துவிட்டாற் போலகிவிட்டதோ என்னவோ! ராமண்ணா கட்டிலின் மீது உட்கார்ந்திருந்தது, தான் அவன் பக்கத்தில் இருந்தது, அவன் தன்னைக் கையால் தடுத்தபடியே கட்டிலினின்றும் எழுந்திருந்தது, இவைகளையெல்லாம் பார்த்தபோதுதான் அவள் விழித்துக் கொண்டாள்.

"என்ன இது? ஏன் இப்படி? இங்கே ஏன் வந்தாய்?" என்று தடுமாறிய வண்ணம் ராமண்ணா எழுந்திருந்து தன்னைவிட்டு விலகிக் கொண்டான்.

அப்பொழுது குமுதாவின் நெற்றி, உடல் எல்லாம் வியர்த்து, மழையால் குளிர்ந்த தரை மூச்சு விடுவதைப் போல, அவள் இதயம் நெட்டுயிர்த்தது. அந்தப் பெருமூச்சுடன் தன் உயிரும் பறந்து போய் விட்டிருக்கக்கூடாதா என்று தோன்றியது அவளுக்கு. ராமண்ணாவின் முகத்தின் பாவனையைக் காணக் காண, அவளுடைய உன்மத்தம் நழுவிக் கொண்டிருந்தது. கடைசியில் தான் ஒன்றும் பேசாமல் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, அங்கிருந்து எழுந்து தன் அறைக்குச் சென்றிருந்தாள். ஆனந்தத்தில் இருக்கும்போது மனத்தின் வேகம் எவ்வளவு தீவிரமாக இருக்கிறதோ, அவ்வளவே நிராசையில் இருக்கும் போது உடலின் தள்ளாமை அதிகரிக்கும் போலும்! ஏனெனில் அங்கிருந்து தன் அறைக்குச் செல்வதற்கு அவளுடைய கால்களுக்கு எவ்வளவு யுகங்கள் வேண்டியிருந்தன! வந்து, தன் படுக்கையின் மீது விழுந்து, முகத்தை முக்காட்டால் இறுக இழுத்து மூடிக் கொண்டபோது, அடக்கமுடியாத எண்ணம் மூடியிருந்த தன் உதடுகளைத் திறந்து கொண்டு வெளியில் பாய்ந்து வந்தது "நான் அவருக்கு வேண்டாதவளாகி விட்டேன் - வேண்டாதவளாகி விட்டேன்." மறுகணம் தான் உலகிற்கே வேண்டாதவளாகி

விட்டேன் என்கிற எண்ணத்தால் அவள் உடல் கடகடவென்று நடுங்கியது.

என்றைய நினைவு இது? ஹாங் அன்று ராத்திரியின் நினைவு. அன்று தான், "இனி நான் உள்ளத்தால் விதவை," என்று சொல்லிக் கொண்டாள். சரி இப்பொழுது? சரளக்கா உடலால் இல்லாவிட்டாலும், வீடுநிறைய, மனம் நிறைய அவள் உருவம் வியாபித்து நிற்பது போல இருக்கிறது. அதனால் தான் சாகும் வரையில் உள்ளத்தால் விதவையே! உடலால் தான் விதவையல்ல என்பதைக் குமுதா மறந்திருக்கவில்லை. மனத்திற்கு இருப்பது போல உடலுக்குத் தன்மானம் என்பது இல்லவே இல்லை என்று சொல்லிக் கொண்டாள். உடலைப் பற்றிய எண்ணம் வந்ததுமே உடல் களைத்துப் போயிருக்கிறது என்பதும் அவள் கவனத்திற்கு வந்தது. உடல்? குமுதா சட்டென்று திகிலடைந்தாள். ஐயோ! எவ்வளவு வெட்கங்கெட்டது இந்த உடல். மீளும் வழி தெரியாமல் வேட்டைக்காரர்களால் சூழப்பட்ட மானைப் போல, குமுதா மறுபடியும் படுக்கையின் மீது உட்கார்ந்து கொண்டாள். இரண்டு கைகளாலும் தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

## 15

முற்றாத ஜலதோஷம் வந்தவனைப் போலாயிற்று ராமண்ணாவின் நிலை. வலித்தாலும் பரவாயில்லை. தும்மல்களை வரவழைத்துக் கொண்டே ஆகவேண்டும், இல்லாவிட்டால் சனி தேவலையாகிறாற் போலில்லை. ராமண்ணா நாற்காலியில் உட்கார்ந்தபடியே சரளாவின் படத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். "பைத்தியக்காரி, பார்த்தாயா? உன்னுடைய நோக்கம் எவ்வளவு நல்லதாக இருந்ததோ, அதன் விளைவு அவ்வளவுக்கவ்வளவு கோரமாக இருக்கிறது! கடைசியில் நீயே என்னைவிடச் சிறந்த "இலக்கியகர்த்தாவாகி விட்டாய்! ஆங்! எவ்வளவு சோகமயமான டிராஜடியைப் படைத்துவிட்டுப் போய்விட்டாய் நீ! அதைத் தெரிந்து கொள்ளாமல் தவறு உன்னுடையது என்றேன். தப்பு யாருடையதும் அல்லாததால்தான் டிராஜடி அவ்வளவு மனத்தைத் தொடும்படி அமைந்திருக்கிறது" ராமண்ணா சட்டென்று எழுந்திருந்தான். நான் கிழவனாகி விட்டேன் என்று நினைத்துக் கொண்டான். மனிதன் நிகழ்காலத்தை மறந்து, பழையதை நினைத்துக் கொள்வதில் உற்சாகம் காட்டத்தொடங்கினால் அது அவனுக்கு மூப்பு வந்து

விட்டதன் அறிகுறி என்று, எங்கேயோ படித்தது அவன் நினைவிற்கு தூ! மறுபடியும் நினைவு என்று சொல்லியபடி குறுக்கும் நெடுக்கும் உலாவத் தொடங்கினான். ஹாங்! அன்றைய நினைவு! போகட்டும் அந்த நினைவை முழுவதும் வெளியில் கொண்டு வந்து மனத்தை லேசாக்கிக் கொண்டு படுப்போம் என்று தீர்மானித்தவனைப் போல அடியெடுத்து வைத்து, இப்படியும் அப்படியும் உலாவத் தொடங்கினான். ஆம்! அன்று தான் இப்படித்தான் உலாவிக் கொண்டிருந்தான் ஏன்? அன்று என்னவாயிற்று? ஆம், சரளா மீண்டும் அன்று தன் கல்யாணத்தைப் பற்றிய பேச்சை எடுத்திருந்தாள். அந்தப் பேச்சு வந்தபோதெல்லாம் தனக்கு வெட்கத்தால் ஓடிப்போய்விட வேண்டுமென்று தோன்றும். தனக்கும் குமுதாவுக்கும் இருந்த கள்ள நட்பைப் பற்றிய சந்தேகம் சரளாவுக்கு வந்திருக்கிறது. அதைத் தடுக்கக்கூடிய நிலையில் தானில்லை என்பதாலேயே சரளா, இந்தப் பிரஸ்தாபத்தை எடுக்கிறாள் என்கிற சந்தேகம், இந்தப் பேச்சு வரும் போதெல்லாம் அவன் மனத்தை ரம்பம் போல அறுத்துக் கொண்டிருந்தது. சில சமயங்களில் சரளாவின் உள்ளம் தூய்மையானது, அவள் நல்ல எண்ணத்துடன்தான் இந்த யோசனையைச் சொல்கிறாள், தனக்கும் குமுதாவின் சகவாசம் பழக்கப்பட்டுப் போயிருக்கிறது. ஊம் என்று சொல்லிவிடலாமா என்று தோன்றும். அப்பொழுது சட்டென்று நாக்கைக் கடித்துக் கொள்வான். எவ்வளவு முட்டாள்தனம்! சரளா நினைப்பதென்னவோ? தான் நினைப்பது என்னவோ? அவள் "இன்னொரு கல்யாணம்" என்று தான் சொல்லுகிறாள். குமுதாவைச் செய்து கொள்ளுங்கள் என்று சொல்லவில்லை. அப்படி அவள் நினைப்பதாக இருந்தால் அதை ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க மாட்டாளா? ஒரு முறைகூட அப்படிச் சொல்லவில்லை. அப்படியிருக்கும் போது தானாகவே, "சரி, நான் குமுதாவைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்று சொன்னால் தன் தவற்றைப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டதாக ஆகிவிடாதா?

ஆனால் தன்னுடையது தவறு என்று ஒப்புக் கொள்ள ராமண்ணா எப்போதுமே தயாராக இருக்கவில்லை. ஒரு சமயம் தான் குமுதாவை நேசித்திருந்தால், அது ஒரு வகையில் தவறென்று தோன்றக்கூடும். ஆனால் தான் குமுதாவை நேசிக்கவில்லை. அப்படியானால் நேசமில்லாத உடல் உறவு விபசாரமல்லவா?

தான் உண்மையிலேயே ஒரு காமுகனா? இதையும் ஏற்றுக் கொள்ள ராமண்ணா தயாராக இருக்கவில்லை. அல்லது தனக்குத் தெரியாமலே தான் குமுதாவை நேசிக்கிறேனோ? எந்த முடிவுக்கும் வரமுடியாத மனநிலையில் இருக்கும்போது மறுபடியும் சரளா "இன்னொரு கல்யாணம்" என்கிற பேச்சை எடுக்கும்போது, சில சமயங்களில் அவனால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தன் உள்ளத்தைப் பற்றி அவனுக்கு இன்னும் ஒரு முடிவும் ஏற்படவில்லையானாலும், குமுதாவைப் பற்றி அவனுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. அன்று அந்த இரவு நடந்த சம்பவத்தால், ராமண்ணாவுக்கு முழுநம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அன்று தான் இதே போல் மனம் ஒரு முடிவுக்கு வராமலிருந்ததால் அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்து கடைசியில் மனமும் கால்களும் களைத்துப் போனதால் கட்டிலின் மீது உட்கார்ந்து கொண்டான். அப்பொழுது இருந்தாற் போலிருந்து தன் மனத்திலிருந்த சந்தேகம், பயம், குற்றமனப் பான்மை இவை மூன்றும் ஒன்றாகக் கலந்து உருவெடுத்து நின்றிருக்கின்றனவோ என்று நினைக்கும்படி, குமுதா தன் அறைவாசலில் நின்றிருந்தாள். குமுதா தன்னை நேசிக்கிறாளென்பது பற்றி அன்றைய அவளது முகபாவத்திலிருந்து ராமண்ணா முழுமையாகத் தெரிந்து கொண்டான். ஆனால் காதல் எவ்வளவு கனிவுள்ளதோ அவ்வளவே குரூரமும் உடையது. எவ்வளவு வசீகரமானதோ அவ்வளவே பயங்கரமானது, ஆனந்தத்தைக் கொடுப்பது போலவே, வெறுப்பையும் தரவல்லது என்பதை மட்டும் ராமண்ணா அன்றுவரை கண்டிருக்கவில்லை. அந்தக் கணத்தில் குமுதாவின் வடிவம்தான் எப்படி இருந்தது! விட்டில் பூச்சிக்கு விளக்குப் போல அவனுக்குக் குமுதா வசீகரமாகக் காணப்பட்டாள். அவளை உற்றுப் பார்க்கக்கூட ராமண்ணா பயப்பட்டான். பார்த்தால் அவளது அழகென்னும் கயிறு தன்னைக் கட்டி இழுத்துக் கொண்டு விடுமோ என்று பயந்து, முகத்தைத் திருப்பிக் கொண்டு கட்டிலிலிருந்து எழுந்திருக்க முற்பட்டான். நீட்டிய அவள் கைகள் இன்னும் அவனைத் தொட்டிருக்கவில்லை. ஒரு கணம் - அரைக்கணம் - கண்ணிமைக்கும் நேரத்தில் - இனி தான் பலியாகப் போகிறான் ஆகிவிட்டான் என்னும் போது, அவள் கைககளைத் தொங்கப் போட்டுக் கொண்டு முகத்தை உயர்த்தி அவனைப் பார்த்தாள். எவ்வளவு கெட்டிக்காரத் தனமானது, சிருஷ்டியின் விளையாட்டு!

அந்த ஒரு கணத்தில் வியர்வையில் அவளுடைய அழகெல்லாம் கரைந்து போய் விட்டாற்போல இருந்தது. இப்பொழுது அவள் முகத்தில் வெறும் குரூரம், அதன் பிறகு வெறுப்பூட்டும் களை இவைகளே மிஞ்சியிருந்தன. கொஞ்சம் கொஞ்சமாக அவனும் அவளைப் பார்க்கத் தொடங்கினான். மாறிப்போன அவளது முகக்களையைப் பார்க்கப் பார்க்க, இப்போது தான் அவளைத் தைரியமாகப் பார்க்க முடியும் என்பதை அவன் அறிந்து கொண்டான். அப்பொழுது பேச்சுக்குத் தேவையே இல்லாம லிருந்தும். தன் வாயிலிருந்து ஏதோ பேச்சு வெளிவந்திருந்தது; அத்துடன் குமுதாவும் வெளியேறி விட்டிருந்தாள்.

அன்றிலிருந்து ராமண்ணாவின் பயம் அதிகரித்தது. தான் மற்றவரை நேசிப்பது வேறு, மற்றொருவர் தன்னை நேசிப்பது வேறு என்பதைத் தெரிந்து கொண்டான். தான் நேசிப்பதானால் அதில் ஆனந்தம் இருக்கிறது. நேசிக்கும் நபர் தன்னை பதிலுக்கு நேசிக்காவிட்டாலும்கூட அதில் சுகம் இருக்கிறது. ஆனால் மற்றொருவருடைய நேசத்திற்குத் தான் பாத்திரம் என்னும் பொழுது வேட்டைக்குப் பலியானது போல் தோன்றும், அதுவும் தன் மனத்தில் நேசம் இல்லாமலிருக்கும் போது- என்பது இதுவரையில் ராமண்ணாவுக்குத் தெரியாமல் இருந்தது. வேட்டை நாய்களுக்குத் தப்பி ஓடுகிற முயலைப் போல, அன்றிலிருந்து ராமண்ணா குமுதாவிடமிருந்து தப்பி, தன் அறையிலேயே வெகுநேரம் அடங்கிக் கொள்ளத் தொடங்கினான். வரவர சரளக்காவின் சகவாசத்திற்கும் பயப்படத் தொடங்கியிருந்தான். "இன்னொரு கல்யாணம்" என்கிற வார்த்தைகள் தன் செவிகளில் விழுந்து விட்டால், தன் நிலைமை என்னவாகுமோ என்கிற பயம். அதனால் முடிந்த வரையில் விலகி இருப்பதே நல்லது. பாதுகாப்பானது என்று நினைத்துக் கொண்டான். உடலால் அவன் எவ்வளவுக்கெவ்வளவு விலகியிருந்தானோ, அவ்வளவுக் கவ்வளவு மனம் அவனைக் குமுதாவின் பால் இழுக்கத் தொடங்கியது. குமுதா தனது உடலின் அருகில் இல்லா விட்டாலும், மனத்தின் அருகில் கண்டிப்பாக இருக்கிறாள் என்பதையறிந்து, அவன் ஏமாற்றமடைந்தவனைப் போலானான். இப்படி இருந்தால் வெறும் உடலால் மட்டும் விலகியிருப்பதால் எதைச் சாதித்தது போலாயிற்று என்று சில சமயங்களில் தோன்றும். எப்படியும் அவள் தன்னை நேசிக்கிறாள், ஆகையால்

அவள் தன்னை நிராகரிப்பாள் என்கிற பயம் இல்லை. ஒரு முறை உடலின் வேட்கையைத் திருப்திப் படுத்தினால் என்ன தவறு என்று தோன்றும். கல்யாணத்தைப் பற்றிய பேச்சு குமுதாவின் வாயிலிருந்து வந்திருக்கவில்லையே? இனி என்ன பயம்? என்றும் தைரியம் சொல்லிக் கொண்டான். இவைகளையெல்லாம் மீறினால் சரளாவுக்குப் பிறகு.

அப்போது ராமண்ணாவுக்குத் தன் பேரிலேயே வெறுப்புத் தோன்றியது. "சரளாவுக்குப் பிறகு" என்று என்றுமே தோன்றியிராத எண்ணம் ஏன் தோன்றியது? தான் இவ்வளவு கொடியவனா, நன்றி கெட்டவனா, பண்பில்லாதவனா? உள்ளுக் குள்ளாகவே தன் மனம் சரளாவின் முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறதே? சே!- அந்த தேவியின் முன்னால் தான் ஒரு அரக்கன்! தன் சுகதுக்கங்களை விழுங்கியபடி, என்னுடைய சுகத்திற்காக அவள் எனக்கு இன்னொரு விவாகம் நடப்பதற்காகத் தானே வேண்டி வேண்டி என்னை வற்புறுத்திக் கொண்டிருக்கும் பொழுது, இந்த எண்ணம் ஏன்? அவளால் எனக்கு என்ன இடையூறு ஏற்பட்டிருக்கிறது என்பதற்காக நான் அவள் மரணத்தை விரும்புகிறேன்- என்று ராமண்ணா தன்னைப் பலவாறாகப் பழித்துக் கொண்டான். சில மாதங்களுக்குப் பிறகு ஒரு முறை, தானாகவே போய் சரளாவின் கால்களில் விழுந்து எல்லாவற்றையும் ஒப்புக்கொண்டு இன்னொரு கல்யாணத்திற்கு ஒப்புதல் தரவேண்டும் என்று முடிவெடுத்தான். ஆனால் கடைசி நிமிடத்தில் துணிச்சல் ஏற்படவில்லை. அப்பொழுது சரளாவின் உடல்நிலை நாளுக்குநாள் அதிக க்ஷீணமடையத் தொடங்கி யிருந்தது. அச் சமயத்தில் இதுபோன்ற சோககரமான எண்ணங் களை அவளிடத்தில் வெளியிடுவது அவளது உடல்நிலைக்கு ஏற்றதல்ல என்கிற வெளிப்படைச் சாக்கை உபயோகப்படுத்திக் கொண்டான். ஆனால் ஒரு வேளை அந்த இன்னொரு கல்யாணத்தில் குமுதாவுக்கு இடமே இல்லை என்றானால் எப்படி என்கிற பயமும் அவனைத் தடைசெய்தது.

கடைசியில் பேச்சுக்குப் பேச்சு, கணத்திற்குக் கணம் குமுதா ராமண்ணாவின் மனத்தில் வந்து நிற்கத் தொடங்கினாள். சரளாவின் உடல்நிலை க்ஷீணிக்கத் தொடங்கிய அன்றிலிருந்து குமுதாவின் கண்களிலிருந்து தப்புவது அவனால் இயலவில்லை. வியாதிக்காரியின் பணிவிடைக்காக, செய்தே ஆகவேண்டிய துயரமூட்டுகிற சம்பவங்களின் நிழலில் ராமண்ணாவும்,

குமுதாவும் அதிகமாக சேர்ந்து பணியாற்ற வேண்டியிருந்தது. சரளாவின் முடிவு இனி வெகு தொலைவில் இல்லை என்கிற எண்ணத்தின் சோகத்தில் நொந்து போயிருந்த ராமண்ணவின் மனத்திற்கு, தன்னையடக்கும் சக்தி இருக்கவில்லை. எப்படியோ, கடைசியில் ஒர் இரவு தூக்கிலிடப்படவிருக்கும் குற்றவாளி, தூக்கு மரத்தினடியில் சென்று நிற்கிற தவிர்க்க முடியாத மனநிலையில் குமுதாவின் அறைக்குச் சென்றிருந்தான்.

குமுதா தன்னை நேசிக்கிறாள், இன்றில்லாவிட்டால் நாளை அவளையே வேண்டுமானால் கல்யாணம் செய்து கொள்ளக்கூடும் என்கிற இரண்டு எண்ணங்கள், இப்பொழுது குருடனைப் போலிருந்த ராமண்ணாவின் இருகைகளிலும் இரண்டு கோல் களைப் போல ஆதாரமாகியிருந்தன. குமுதா தன்னை நேசிக் கிறாளா இல்லையா? என்று சில சமயங்களில் அவனுக்கு சந்தேகமும் வராமலிருக்கவில்லை. எவ்வளவோ தடவை எப்போதும் தான் தொட்டவுடன் இன்னும் மிருதுவாகிக் கொண்டிருந்த குமுதாவின் அவயவங்கள், இப்போது தன் கைபட்டவுடன் இறுகி முரடாவது போலத் தோன்றியது ஏன்? இருந்தாலும் குமுதா என்றும் தனக்கு விருப்பமில்லாததை வெளிப்படையாகக் காண்பித்துக் கொண்ட தில்லை. அதுதான் ராமண்ணாவின் மனத்திற்குத் துணிச்சலைக் கொடுத்தது. சில சமயங்களில் முன்பு ஒரு முறை கண்ட குமுதாவின் குரூரமான சித்திரம் கண்முன்னே நிற்பது போல இருந்தது. அந்த சித்திரம் அவன் கண்முன்னே நிற்கும் போது அவனும் கடுமையாகவே நடந்துக் கொள்வான். குற்றம் புரிந்த கணமே ஓடிப்போகும் குற்றவாளியைப் போலப் புறப்பட்டுச் சென்று விடுவான். எவ்வளவோ முறை தன் எண்ணங்களுக்கா, தன் நடத்தைக்காக வெட்கிய மனநிலையில், குமுதாவின் பேரில் அவனுக்குக் கருணை உணர்வு தோன்றும். அந்த சமயங்களில் அவளுடன் பேசி அவள் மனத்தைத் தன்பால் ஈர்க்க முயற்சிப்பான். அநேகமாக மௌனமாக இருக்கும் குமுதா, ஒரு முறை தன்னைப் பதில் சொல்ல முடியாதவனாக்கியது அவன் மனத்தில் எத்தகைய அதைரியத்தை உண்டாக்கியது?

"குமுதா, என் பேரில் உனக்குக் கோபம் இருக்க வேண்டும்" என்றான் ஒரு தடவை, மிகவும் கருணையும் பச்சாத்தாபமும் நிறைந்த குரலில். குமுதா பதில் சொல்லவில்லை. ஆனாலும் பெருமூச்சை அடக்க அவள் செய்த முயற்சியில், அவள் உடல் நடுங்குவதை அவன் கை உணர்ந்தது.

"நீ கோபித்துக் கொண்டிருந்தாலும் தவறு உன்னுடையதல்ல என்கிறேன்" மன்னிப்புக் கேட்பவனின் குரலில் கூறினான்.

"தவறு செய்தவர்களுக்கு மற்றவர்களின் தவறை எடுத்துக் காட்ட உரிமை கிடையாது."

அடேயப்பா! எப்படிப்பட்ட பதில் அது!

"அதைத்தான் நான் சொல்லுகிறேன், அதனால்தான் தவறு உன்னுடையதென்றே நான் சொல்வதில்லை."

"நான் என்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டேன். மற்றவர்களின் தவறைச் சுட்டிக் காட்டும் அதிகாரம் எனக்கில்லை என்றேன்" என்று கூறியபடி தூரமாக விலகிச் செல்லும் முயற்சியில் இருந்தாள்.

அவளைத் தன்னருகே இழுத்துக் கொண்டபடி, "பைத்தியக்காரி, நீ என்ன தப்புச் செய்தாய்? இவ்வளவு நாட்கள் நான் உன்னை மறந்தது போல நடந்து கொண்டேன். அது என் தவறு. அதற்காக நீ கோபித்துக் கொண்டாலும் அது நியாயம்தான் என்றேன்" என்று சொன்னான்.

இருட்டில் சிரிக்கும் அந்த முகத்தைப் பார்க்க முடியவில்லையானாலும், அவளது சிரிப்பில் மிகுந்த வெறுப்பும், ஏமாற்றமும், நிராகரிப்பும் கலந்த விஷவாயு இருந்ததென்பது, ராமண்ணாவுக்குத் தெரியாமற் போகவில்லை. சட்டென்று அவனுக்கு அதைரியம் ஏற்பட்டது போலிருந்தது. அதைக் காட்டிக் கொள்ளக்கூடாது என்பதற்காகச் சிறிது கடுமையான குரலிலேயே கேட்டான்: "ஏன்? உனக்கு நம்பிக்கையில்லையா என் வார்த்தையில்?" என்று

"வைத்த நம்பிக்கைக்குத் தகுந்தபடி நடந்து கொள்ள வேண்டுமென்று உங்களுடன் யாரும் ஒப்பந்தம் செய்து கொள்ள வில்லையே?"

"ஏன் இப்படிப் பேசுகிறாய் குமுதா? நான் என்ன உன்னை மோசம் செய்யவேண்டுமென்று நினைத்திருக்கிறேன் என்று உன் அபிப்ராயமா?"

"இருட்டில் கண்களைத் திறந்து கொண்டு நடக்க வேண்டுமென்று சொல்லுகிற பைத்தியக்காரி நான்!"

"அவ்வளவு நம்பிக்கையில்லாவிட்டால், நீ என்ன செய்ய வேண்டுமென்கிறாயோ சொல். அதைச் செய்ய நான் தயார்."

அதற்கும் சிரித்தாள், "வஞ்சகம் செய்தவர்கள் என்ன செய்ய வேண்டும்? மூடி வைக்க வேண்டும்?" என்றாள்.

"வேண்டுமானால் இப்பொழுதே வா. சரளாவின் முன்னில் என் வாயால் எல்லாவற்றையும் ஒப்புக் கொள்கிறேன்."

"ஏன்? இந்த விஷயத்தைச் சொல்லி அவளைச் சாகடிக்க வேண்டுமென்கிறீர்களா?"

"ஆங்? என்ன சொன்னே?"

"என்னவா? நீ படுக்கையிலே கிடக்கும்போது நாங்கள் இப்படிக் கிடந்தோம் என்று சொன்னால் அவள் உள்ளம் உடைந்துபோய் விடாதா? எனக்கு இத்தகைய உபகாரம் ஒன்றும் நீங்கள் செய்யவேண்டாம்."

"நானும் அதனால்தான் பேசாமலிருக்கிறேன். வேறு என்ன செய்ய வேண்டும் சொல். அதற்கு நான் தயார்."

"அக்கா பிழைத்திருக்கும் வரையில் என்னிடம் வருவதை நிறுத்தி வைப்பீர்களா?"

அந்தக் கேள்வியின் பின்னணி அப்போது தனக்குத் தெரிந்திருக்கவில்லை. அதனால் அதை ஒரு வேடிக்கைப் பேச்சு என்று நினைத்துச் சிரித்திருந்தான். "தவறான செயலைச் செய்யும் போது கள்ளத் தனமாகச் செய்வார்கள். ஆனால் அதை விட்டுவிடுவதைக்கூட திருட்டுத்தனமாக விட்டுவிடவேண்டு மென்று சொல்லுகிறாயே. இது நல்ல வேடிக்கை. பார்! ஆங்! ஹஹ்ஹா."

"அப்படியானால்? இது தவறான் செயல் என்பது உங்கள் அபிப்ராயம் என்கிறீர்கள்."

"ஆங்? என்ன சொன்னே! சே! சே! என் அபிப்ராயம் என்று சொல்லவில்லை. மற்றவர்கள் அப்படிச் சொல்வார்கள், அதற்காச் சொன்னேன்"

"அப்படியானால் உங்கள் பார்வையில் இது நல்ல செயல் என்கிறீர்களா?"

"இதென்ன குமுதா? பேச்சில் என்னை மாட்டிவைக்க வேண்டுமென்கிறாயா? நல்லது தவறு! எனக்கும் உனக்கும் அந்த விஷயத்திற்கும் சம்பந்தமே வருவதில்லை. இருவர் மனமொப்பி ஒரு காரியத்தைச் செய்யும் போது"

"நீங்கள் மனதார ஒப்புக் கொண்டீர்களா?"

"அப்படியென்றால்? என் மனம் உன்னிடம் தோற்றுவிட்டது என்பதனால்தான் முயற்சித்தாலும் உன்னை விட்டு இருக்க முடியவில்லை; நீயே பார்த்திருக்கிறாய்"

"எனக்கெப்படித் தெரியும் இது உங்கள் மனம் விரும்பிய விஷயம் என்பது; நான் நினைத்தேன் இது உங்கள் உடலுடன் ஒட்டிய கெட்ட பழக்கம் என்று" என்று இடையில் புகுந்து கூறித் தன்னை பதில் சொல்ல முடியாதவாறு செய்து விட்டாள்.

எப்படிப்பட்ட வார்த்தைகள்! எங்கிருந்து வந்தது அவளுக்கு அவ்வளவு அறிவு, அத்தகைய எண்ணம்? நேரிட்ட ஆபத்தை எதிர்க்க, இயற்கையே பிராணிக்குத் தகுந்த சக்தியைக் கொடுக்கிறதா? என்றைக்குமே இவ்வளவு பேசாத இவள் இன்று ஏன் இப்படி நடந்து கொள்கிறாள்?

"ஏன்? பேசாமலிருக்கிறீர்கள்?"

"இல்லை குமுதா. தவறாகத்தான் புரிந்து கொள்வேன் என்பது உன் பிடிவாதமாக இருந்தால், என்ன செய்வது? தூங்குவதாகப் பாவனை செய்பவர்களை"

"பாவனை செய்தவர் யார்? ஒரு காலத்தில் எனக்கு யாருடைய, எதனுடைய பயமும் இருக்கவில்லை, உங்களின் நேசத்திற்குப் பாத்திரமானவள் என்று சொல்லிக் கொள்வதில்."

"ஒரு காலத்தில் ஏன்? இப்பவும் நீ என்னுடைய"

"ஆனால் இப்போது அதைச் சொல்லிக் கொள்வதில் எனக்கு ஆனந்தம் இல்லை."

"வீணாகத் தவறாக"

"நான் உங்களின் ஒரு கெட்ட பழக்கத்தின் விளையாட்டுப் பொம்மை" என்று கூறிக் குமுதா எழுந்து போய்விட்டாள்.

அவையெல்லாம் இவ்வளவு `நன்றாக ராமண்ணாவுக்கு நினைவிலிருப்பதற்கு இன்னொரு காரணம் இருந்தது. அன்றிலிருந்து குமுதா தன்னைக் காண்பதைத் தவிர்த்து வந்தாள், இரவில் தனது அறையின் கதவை உட்புறம் தாழிட்டுக் கொண்டாள், எப்பொழுதாவது தான் அவளை உற்றுப் பார்த்துப் பேச்சுக்கொடுக்க முயன்றால், தன்னை வெறுப்பு உமிழும் பார்வைகளால் உற்சாக பங்கப்படுத்தினாள். அதிக நேரம் சரளாவின் பக்கத்தில் செலவழிக்கத் தொடங்கினாள், தானும் அங்கே உட்கார்ந்திருந்தால், தான் எழுந்து போகும் வரையில் தலையைக் குனிந்து கொண்டே இருப்பாள். அவளுடைய இந்த நடத்தையைப் பார்க்கும்போது ஒருபுறம் அவனுக்குத் தன் பேரிலேயே பச்சாத்தாபம் தோன்றும், மறுபுறம் அது அவன் சினத்தைக் கிளறிவிட்டது. ஆனால் இந்த மனநிலை விபரீதத்தில் சென்று முடியும் சந்தர்ப்பமே வரவில்லை. ஒரு நாள் தானும்

அவளும் இருவரும் சரளாவின் அருகில் அமர்ந்திருந்த போது, "குமுதா, கொஞ்சம் காப்பியாவது போடறியா? என்னமோ வாயே கெட்டுப் போனால் போல இருக்கிறது" என்றாள் சரளா. குமுதா எழுந்திருந்து சமையலறையை நோக்கிச் சென்றாள். உடனே சரளா, "அந்தக் கதவைக் கொஞ்சம் மூடிவிட்டு வாருங்கள்" என்றாள். எந்தக் கதவு? ஏன் மூடவேண்டும்? என்ன சொல்கிறாள்? ராமண்ணாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"சமையலறைக் கதவை மூடிவிட்டு வாருங்கள் என்றேன். உங்களோடு கொஞ்சம் பேச வேண்டும்" என்று சரளா உடைத்துச் சொன்னாள்.

ராமண்ணாவின் கால்கள் நகரமுடியாதபடித் தோன்றின. தான் எதற்குப் பயந்திருந்தானோ அதைக் கடைசியில் தவிர்க்க முடியவில்லை. குமுதா பழிவாங்குவது போலச் செய்து விட்டாள்.

"கதவைக் கொஞ்சம் முன்னால் இழுத்துவிட்டு வாருங்கள் என்றேன்"

"இல்லை, வெறுமே பேசி ஏன் உடம்புக்கு அசதி ஏற்படுத்திக் கொள்கிறாய். இப்போ அப்படி என்ன பேசவேண்டும் என்னோடு?"

இருந்தாலும் கதவை மூடிவிட்டு, தண்டனைக்குத் தயாராக இருக்கும் குற்றவாளியைப் போல வந்து உட்கார்ந்து கொண்டான்.

"உங்கள் கையைக் கொடுங்கள்"

யந்திரம் போலக் கை முன்னால் நீண்டது.

"நான் சொல்கிறேனென்று வருத்தப்பட்டுக் கொள்ளாதீர்கள்"

"சரளா, ஏன் ஆயாசப்படுத்திக் கொள்கிறாய்?" கடைசி முயற்சி செய்பவனைப் போலக் கேட்டான். "ஆயாசம்!" சரளாவின் முகத்தில் வைராக்யத்தின் அமைதிக்களை இருந்தது. "என்னுடைய ஆயாசத்தைப் பற்றி இனிக் கவலைப்படாதீர்கள்."

யாரோ பின்னாலிருந்து வந்து தன் கழுத்தை நெரித்தாற் போல இருந்தது ராமண்ணாவுக்கு. முகத்தைத் திருப்பினான். தான் துஷ்டன், கொடியவன், நன்றி கெட்டவன், காமுகன்

"அய்யே! அப்படி என்ன ஆகிவிட்டது இப்போ, மனசை வருத்திக் கொள்வதற்கு? எவ்வளவு நாள் இப்படியே நான் முனகிக் கொண்டே படுத்திருக்க வேண்டும்?"

"என்ன சொன்னே?" ராமண்ணாவுக்கு இது ஏதோ புது விஷயம் என்று தோன்றியது. சரளா அவன் கைமீது தன்கையை வைத்து வருடியவாறு, "உங்கள் மனசு தைரியமானது என்று தெரிந்து சொல்லுகிறேன். என் வேளை சமீபித்துவிட்டது."

நினைப்பதற்கு முன்னாலேயே ராமண்ணாவின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகச் சொரிய ஆரம்பித்தது.

"இதென்ன சிறு குழந்தையைப் போலச் செய்கிறீர்கள்? இருந்த வரையில் நானும் இந்த வீட்டில் வேண்டிய மட்டும் சுகத்தைக் கண்டேன். போன பிறகு என்னால் உங்களுக்குத் துன்பம் நேரக் கூடாது என்று நான் வேண்டிக் கொள்கிறேன். நீங்கள் அதற்கு முன்னாலேயே அழ ஆரம்பித்து விட்டீர்களே? கைக்குட்டை இருக்கிறதா இல்லையா? என் புடவைத் தலைப்பாலேயே கண்ணைத் துடைத்துக் கொள்ளுங்கள்."

அந்தச் சமயத்திலும் அந்தப் பேச்சைக் கேட்டு ராமண்ணாவின் முகத்தில் முறுவல் படர்ந்தது. குனிந்து புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டபோது சரளா தன் தலையின் மீது கையை வைத்திருந்தாள். எத்தகைய ஸ்பர்சம்! சாவு நெருங்கி யிருந்த போதிலும், அவனில் புதுத் தெம்பை அது ஊட்டியிருந்தது. சரளாவின் மரணம் நெருங்கிவிட்டது என்பது குறித்து இப்போது அவனுக்குச் சந்தேகம் இருக்கவில்லை. கண்ணீர் விட்டதனால் துயரத்தின் சுமையும் குறைந்திருந்தது.

"சரளா, நாங்களெல்லாம் இவ்வளவுக்கு உனக்கு வேண்டாதவர்களாகி விட்டோமா? ஏன் மறுபடியும் மறுபடியும் சாவைப் பற்றியே பேசுகிறாய்?"

"வாயால் சொல்லாவிட்டால் அது வராமல் இருந்துவிடுமா? சாவு நெருங்கி விட்டது என்கிற உரிமையில் சொல்கிறேன். கேட்கிறீர்களா?"

"சாவைப் பற்றிய பேச்சு வேண்டாம். ஆனால் உனக்கு என்ன சொல்லவேண்டுமோ அதைச் சொல்."

"கேட்கிறீர்களா?"- தன் உள்ளங்கையை வருடியபடி கேட்டாள்.

"ஏன் சந்தேகம்?"

"எவ்வளவோ நாளாகச் சொன்னாலும் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. நீங்கள் கோபித்துக் கொள்ளவும் செய்தீர்கள். ஆனால் இன்னொரு தடவை சொல்கிற அவகாசமாவது ஏற்படுமோ இல்லையோ! அதனால்"

"என்ன விஷயம்?"

"சாகப் போகிற மனைவியின் கடைசி ஆசை இது."

"என்ன சமாசாரம் சரளா? இவ்வளவு ஏன் மனசைப் போட்டுக் குழப்பிக் கொள்கிறாய்? என்ன சொல்"

"வேறென்ன? அதே தான்"

"எது? இன்னொரு கல்யாணம்? ஹஹ்ஹ" பேச்சை அலட்சியப்படுத்துகிற சிரிப்போடு கூறினான்.

"ஆம் குமுதாவை மணந்து கொள்ளுங்கள்."

"என்ன?"

வெறும் முதுகின் மீது யாரோ தன்னைப் பிரம்பால் அடித்தாற் போலிருந்தது ராமண்ணாவுக்கு

"ஏன்? என் கண் மூடுவதற்கு முன்னால் நடந்து விட்டால்"

"குமுதாவுக்கும் எனக்கும் கல்யாணம்!"

"இப்படி ஒன்றும் தெரியாதவரைப் போலப் பேச வேண்டாம். எவ்வளவு தடவை நான் உங்களிடம் சொல்லியிருக்கிறேன்."

"குமுதாவை?"

"ஆமாம் ஒருநாள்கூட என்பேச்சை முழுவதும் கேட்டுக் கொள்ளவில்லை. எவ்வளவு தடவை நான் சொல்லவேண்டு மென்றிருந்தேன்."

ராமண்ணாவுக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. இப்பொழுது பேச்சை வளர்த்துப் பயனில்லை. "முடியாது" என்று சொன்னால் அவள் மனத்திற்கு அதிர்ச்சி. ஓரிரண்டு நாட்களில் யோசனை செய்து சொல்கிறேன் என்றால் ஆயிற்று என்று நினைத்து அவளிடம் அவ்வாறே சொன்னான்.

"மறுபடியும் என்ன யோசனை"

"சரளா, உன் பேச்சு என் மனத்தை எவ்வளவு புண்படுத்தியிருக்கிறது என்று உனக்குத் தெரியாது. சிறிது அமைதியாக யோசித்து அப்புறம் சொல்கிறேன்."

"நீங்கள் சொல்லும் வரையில் நான் இருக்கப் போகிறேனோ, இல்லையோ!" என்று ஏமாற்றத்துடன் பெருமூச்சு விட்டாள்.

"பைத்தியக்காரி நீ!"

ஆனால் கடைசியில் தானே பைத்தியக்காரனானான். இது நடந்த மறுநாள் காலையில், சரளா எதையும் பார்க்காதவளாக கடைசியாகக் கண்களை மூடிவிட்டாள்.

ராமண்ணா அவள் படத்தையே பார்த்தபடி உட்கார்ந் திருந்தான். அன்றைய நினைவுகளில் மூழ்கியிருந்தானோ என்ன வோ? அவன் கண்களிலிருந்து நீர் தாரையாக வழிந்து கொண் டிருந்தது. கண்களின் முன்னால் பனித்திரை இட்டாற் போலாகி, சரளாவின் படம் தெளிவாகத் தெரிவது நின்ற பிறகும். அந்தத் திசையிலேயே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

## 16

கெட்டியாகத் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த குமுதா, சில நிமிடங்களுக்குப் பிறகு நெடுமூச்சுவிட்ட வண்ணம் எழுந்திருந்தாள். உடல் வெட்கங்கெட்டது மட்டும் அல்ல, எவ்வளவு வகைகளில் வெட்கங் கெட்டதாக இருக்கிறது என்கிற எண்ணம் தோன்றியது அவளுக்கு "உங்கள் உடலோடு ஒட்டிக் கொண்டிருக்கும் கெட்ட பழக்கம்" என்று ஒருநாள் தானே ராமண்ணாவைச் சொல்லியிருந்தாள். ஆனால் இன்னொருவரைப் பற்றிச் சொல்லத் தனக்கு என்ன தகுதி? மனத்திற்கு அவ்வளவு விருப்பமின்மை, வெறுப்பு தோன்றியிருந்த போதிலும் தன உடலுக்கும் ராமண்ணா ஒரு பழக்கமாகிவிட்டிருக்கிறானா? ஒரு நாளாவது அவன் நெருக்கத்தை விரும்பாமல் தான் கழித்திருக் கிறாளா? சாகும் தறுவாயில் சரளக்கா அவனிடம் வாய்விட்டுக் கேட்டாள். அப்பொழுதும் கூட மனைவியின் உயிரைக் காப்பாற்றுவதற்காகக் கூட அவன் ஒப்பவில்லையே, தன்னைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு? என்னைக் கல்யாணம் செய்து கொள்வதைத் தவிர்க்க, அவன் மனைவியின் உயிரையும் பலிகொடுக்கத் தயாரானானான்! இதையறிந்தும் என் உடல்- இதையறிந்த பிறகும், அவனுடைய சொத்தாக இருக்கிறது! அது மட்டுமல்லே- இப்பொழுது அவனது சத்தைத் தன்னுள் வைத்துக் கொண்டிருக்கிறது. வெட்கக்கேடு என்றாள். தனக்கு எப்படித் தெரியாமல் போய்விட்டது. இப்போதைக்கு ஒரு மாதத்திற்கு முன்னரே தெரிந்திருக்க வேண்டும். ஆனால் தன் கவனத்திற்கே வந்திருக்கவில்லை. குமுதா மறுபடியும் படுக்கையின் மீது உட்கார்ந்து கொண்டாள். எதற்கும் தயாரான அவளுக்கு, இந்தப் புது சிக்கலினால் யாதொரு பயமும் இல்லை. ஆனால் ஒரே ஓர் எண்ணம் அவளை வருத்தியது. வீட்டில் குழந்தைகள் வேண்டும் என்று ஆசைப்பட்ட சரளா, கண்ணால் பார்க்காமல் போய் விட்டாளே என்று. இப்பொழுது யாருக்கு இது சந்தோஷமான சங்கதி? ராமண்ணாவுக்கா? ஆழ்ந்த வெறுப்பின் சிரிப்பு அவள் முகத்தில் தோன்றியது. கூடவே வெற்றியின் களையும் படர்ந்தது. இந்தச் செய்தியை ராமண்ணாவிற்குச் சொல்லவேண்டும். அதைக் கேட்டு அவனுக்கேற்படும் வருத்தத்தைக் கண்குளிரப் பாாக்க

வேண்டும், வயிறு குலுங்கச் சிரிக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

## 17

ராமண்ணா முகத்தைத் துடைத்துக் கொண்டு எழுந்திருந்தான். இனி இந்த வேதனையே வேண்டாம், நாளைக்கு குமுதாவிடம் தெளிவாகச் சொல்லிவிடவேண்டும். ஒரு முடிவுக்கு வரவேண்டும், அது வரையில் மனத்திற்கு அமைதி கிட்டுகிறாற் போல இல்லை என்று நினைத்துக் கொண்டு எழுந்திருந்த போது, கைகடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். விடியற்காலை நான்கு மணி! எவ்வளவு நேரமாகத் தான் அவ்வாறு உட்கார்ந்து கொண்டிருந்திருக்கிறோம் என்கிற நினைவு வந்தவுடன், அவனுக்குக் களைப்பு மேலிட்டது. கொட்டாவி விட்டான் - வெளியே செல்லும் போது மற்றொரு முறை சரளாவின் படத்தைப் பார்த்தான். "சரளா, உன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக நான் சம்மதித்திருக்கலாம். ஆனால் இப்பொழுது சம்மதித்துப் பிரயோஜனமில்லை. அதற்காகவே நீ உயிரைக் கொடுத்தாய் என்பதை என்றும் மறவேன். உன் பலிக்குக் காரணமானதை வீட்டில் வைத்துக் கொள்ளமாட்டேன். மன்னித்துவிடு" என்று மனத்திற்குள்ளாகவே வேண்டிக் கொண்ட ான்.

இன்னொரு கல்யாணம் ! சே!

ஆனால் பாவம்! சரளாவுக்குத் தீவிரமான ஆசை இருந்தது. கடைசியில் குழந்தைகளுக்காகவாவது நான் கல்யாணம் செய்து கொள்ளவேண்டுமென்று

ராமண்ணா சட்டென்று யோசிப்பதை நிறுத்தினான். ஏதோ எண்ணத்தால் உயிர் வந்ததோ என்கிறாற்போல ஓர் அமைதியான மூச்சை விட்டான்.

ஆம்! இல்லாவிட்டால் அது ஒரு வழிகாண முடியாத சிக்கலாகியிருக்கும். இப்பொழுது யாதொரு சிக்கலும் இல்லை என்று சமாதானத்தோடு கூடிய நகைமுகத்துடன் நடந்தான். எதிரே குமுதாவும் சிரித்தபடி வந்தாள். ராமண்ணா ஒருநிமிடம் பயந்து போனான்.

"இல்லே- எழுதிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். நேரமாகி விட்டது. இப்போது தான் முடிந்தது. மணியைப் பார்த்தேன்-"

"எனக்கும் சந்தோஷ சமாசாரம் சொல்லவேண்டியிருந்தது. அதனால்தான் நீங்கள் வரும்வரையில் காத்திருக்கப் பொறுமை இல்லாமல் நானே வந்தேன்."

"ஓகோ! அப்படியா? எனக்கும் ஒரு விஷயம் சொல்ல வேண்டியிருந்தது."

"நான் தாயாகப் போகிறேன்" பட்டென்று குமுதா சொன்னாள்.

ஆங்! என்றது ராமண்ணாவின் உள்ளம். உடனே அவனுடைய அறிவு சுறுசுறுப்படைந்தது. "ஆங்! அப்படியானால் பலே நல்ல சந்தோஷ சமாசாரம்" என்றான்.

அந்த வார்த்தைகள் தன் வாயிலிருந்து வெளிவந்த பிறகு, ராமண்ணாவுக்குத் தோன்றியது—இனி என்ன செய்தாலும் என்ன பிரயோஜனம்— என்று.

ராமண்ணாவின் பதிலைக் கேட்டு குமுதாவும் வியப்படைந்தாள். "இந்த மனிதனும் தன்னைப் போலவே எல்லாவற்றிற்கும் தயாராக இருக்கிறானே" என்று நினைத்துக் கொண்டாள்.

ராமண்ணா தான் முதலில் சமாளித்துக் கொண்டான். "ஆங் இப்போது நானும் சரளாவின் படத்தின் முன்னால் வாக்குக் கொடுத்து விட்டுவந்தேன்."

குமுதா அதைரியமுற்றாள். "என்னவென்று?" என்று உதட்டைத் திறக்காமலே கேட்டாள்.

"அவளுடைய கடைசி ஆசையை நிறைவேற்றியே தீருவேனென்று" என்று ராமண்ணா நிச்சயமற்ற குரலில் சொன்னான்.

ஆங்! என்றது குமுதாவின் உள்ளம். உடனே அவள் அறிவுமுன் வந்து, "விரும்பியது நடப்பதைக் கண்ணாரக் காணும் பாக்கியம் இருக்கவில்லை அக்காவுக்கு" என்றது. அவள் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள்.

அதன் பிறகு இரண்டு மாதங்களுக்குள் குமுதா-ராமண்ணா இவர்களின் விவாகம் நடைபெற்றது. அக்காவின் பேச்சை நிறைவேற்றுவதற்காகக் குமுதாவும், மனைவியின் கடைசி விருப்பத்தை நிறைவேற்ற ராமண்ணாவும் கல்யாணம் செய்து கொள்ள உடன்பட்டார்கள் என்று ஜனங்கள், அவர்கள் இருவருடைய நல்ல பண்பை மெச்சினார்கள். ஆனால் கணவன் மனைவிக்குச் சுகமும் நீண்ட ஆயுளும் கிடைக்கட்டும், வீடு நிறையக் குழந்தைகள் ஆகட்டும் என்று மனப்பூர்வமாக ஆசி கூறுபவர்கள் யாரும் இருக்கவில்லை.

# இரண்டாம் பாகம்

## முடிவில்லாதது

"முதலில்லாதது" சம்பவங்கள் நடந்து பத்து வருடங்களுக்குப் பிறகு.

# 1

காமம் முதலில்லாதது. அதற்கு முடிவும் இல்லை.

காதல் முடிவில்லாதது. அதன் முதலை அறியவும் முடியாது.

முதலில்லாததும் முடிவில்லாததும் காமம், முடிவில்லாததும் முதலில்லாததும் காதல் ஆகையால் காமம் என்றால் காத —

ராமண்ணா தயங்கினான். என்ன யோசனை? தான் யோசனையாவது செய்து கொண்டிருந்தானா? முகத்தை உயர்த்தி எதிரே பார்த்தான். ஜன்னல் மூலமாக வெளியிலே காணப்பட்ட நகரம், ஜனக்கும்பல், வாழ்க்கையின் ஓர் அணு, சமூகத்தின் ஒரு பிரதிபிம்பம். இவ்வளவு நேரம் ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தபோது இவையொன்றும் காணப்பட வில்லையே? சூனியமான மனத்துடன் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந்த போது, மனம் மட்டும் காமம், காதல் என்று எதை எதையோ யோசித்துக் கொண்டிருக்கிறதே? அப்படி யானால் தன் மனம் சூனியமாக இருக்கவில்லை! அப்படியல்ல, தனக்குச் சூனியம் என்று தோன்றினாலும் மனம் தன்னையறி யாமல், தன்னை மீறி விழித்துக் கொண்டிருந்திருக்கிறது! அப்படியானால் தான் வேறு, மனம் வேறு!

ராமண்ணா முறுவல் படர்ந்த முகத்துடன் தன்னைத்தானே பழித்துக் கொள்வதுபோல நெடுமூச்சு விட்டபடி ஜன்னலை விட்டுத் திரும்பினான்.

காமம், காதல்! தான், மனம்! ஏன் இவ்வளவெல்லாம் நீண்ட யோசனைகள்? இன்னும் ஒரு மணி நேரத்தில் தான் கூட்டத்திற்குப் போகவேண்டும். தன்னை உபசரித்து அழைத்துப் போவதற்காக நிர்வாகி வருவார். பொழுது போகாமல் அவர் வருவதை எதிர் பார்த்து தான் ஜன்னல் அருகில் போய் நின்று கொண்டான். அப்பொழுது பெரிய யோசனைகளெல்லாம் தன்னைப் பற்றிக் கொண்டன. என்றால் ஏதாவது யோசனை செய்து கொண்டே இருக்க வேண்டும். இல்லாவிட்டால் மனம் எங்கிருந்தோ தன்னுடைய எண்ணங்களை அசை போடத் தொடங்கும்.

ராமண்ணா கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான் -

இதை வாங்கி எவ்வளவோ வருடங்களாகின்றனவே? குமுதாவை விவாகம் செய்து கொண்டபோது வாங்கிய கடியாரம்.

ராமண்ணா யோசிப்பதை நிறுத்தினான். குமுதாவும் கூட்டத்திற்கு வரவேண்டும். அவள் தயாராக இருக்கிறாளோ இல்லையா? பார்த்துவிட்டு வரலாமென்றால், அவள் தயாராக

இருந்துவிட்டாலோ என்கிற பயம். ஒருவேளை தயாராக இல்லா விட்டால் கூட்டத்திற்குத் தாமதமாகுமே? அல்லது ஏதாவது சாக்குச் சொல்லி தப்பித்துக் கொள்வாளோ? தப்பித்துக் கொள்ளவேண்டும் என்று தன் மனம் விரும்புவதை நினைத்து ராமண்ணா தன்னைத்தானே பழித்துக் கொள்வான். சாக்குக்கு என்ன குறைச்சல்? மோகன் விளையாட்டிலிருந்து திரும்பி வந்தானோ இல்லையோ?

ராமண்ணா மறுபடியும் ஜன்னலருகில் வந்தான். மகன் மோகன் வந்து விட்டானா, வந்து கொண்டிருக்கிறானா என்று பார்ப் பதற்காக.

மோகனுக்கென்ன அவசரம்? கூட்டம், வரவேற்பு இவைகளைப் பற்றி அவனுக்கென்ன அக்கறை? ராமண்ணா ஓர் அரைக்கணம் தயங்கினான், திடுகிட்டான். ஒருமணிநேரத்திற்கு முன்பேதான் தயாராக உட்கார்ந்திருக்கிறானே! இருந்தாலும் அந்தக் கூட்டம், அந்த வரவேற்பு, அந்த கௌரவம், வரவேற்பிதழ் இவைகளைப் பற்றித் தனக்கே ஆனந்தம் ஏற்படவில்லையே! ஒரு காலம் இருந்தது, அப்பொழுது சொற்பொழிவுக்கு அழைப்பு என்றால் உற்சாகமாக இருந்தது, ஒரு காலம் இருந்தது, அப்பொழுது தன் பணத்தையே செலவழித்து தான் எழுதியதைப் பிரசுரிக்க அவன் முன்பின் பார்த்ததில்லை. ஒரு காலம் இருந்தது, அப்பொழுது தன் எண்ணங்களை இன்னொருவர் கேட்டுக் கொள்ளவேண்டும், தனது புரட்சிகரமான படைப்புக்களை விமர்சகர்கள் கவனமாகப் படிக்க வேண்டும் என்கிற ஆசை இருந்தது. கூட்டத்தில் தன்னை அறிமுகப்படுத்தும் பொழுது மகிழ்ச்சி ஏற்பட்டுக் கொண்டி ருந்தது. கழுத்தில் மாலையை அணிவிக்கும் போது, இதயம் பூரித்துக் கொண்டிருந்தது. ஆனால் அப்போது பொது மக்கள் தன்னை லட்சியம் செய்யவில்லை. இப்போது? ஹூம் பல் இருந்த போது கடலை கிடைக்கவில்லை, கடலை கிடைத்தபோது பல் இல்லை என்று சொல்லுகிறாற் போல ஆகிவிட்டது தன் வாழ்க்கை. அல்லது அதுதான் வாழ்க்கையின் சுவாரஸ்யமோ? விரும்பியபோது விரும்பிய பொருள் கிடைத்து விட்டால், வாழ்க்கை சுவையற்றுப் போய் விடுமோ? விரும்பியதெல்லாம் கிடைத்துவிட்டால் மனிதனின் முன்னேற்றம், முயற்சி எல்லாம் மறைந்துவிடுமே? அதனால்தான் துஷ்யந்தன் சகுந்தலையின் விவாக வாழ்க்கை, வயது மீறிய பிறகு தொடங்கியதோ

என்னவோ! இன்றைய கூட்டத்தில் தான் இந்த விஷயங்களையே எடுத்துச் சொல்லலாமே?

எண்ணங்களை அசை போட்டபடி, ராமண்ணா மெல்லமெல்ல நடந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். உண்மையாகவே ஆராயத்தக்க விஷயம். குழந்தையின் காரணமாக துஷ்யந்தனும் சகுந்தலையும் ஒன்று சேர்ந்தார்கள். ஆனால் குழந்தை, கணவனையும் மனைவியையும் ஒன்று சேர்க்கும் முடிச்சு என்று கூறும் பவபூதியே, தனது நாடகத்தில் குழந்தை, ராமனையும் சீதையையும் பிரித்ததை வர்ணித்திருக்கிறான். உண்மையில் இது பெரிய விஷயம்.. ராமண்ணா சட்டென்று எழுந்து ஜன்னல் வழியே பார்த்தான். மோகன் வந்தானா? ராமண்ணாவுக்கு ஆவல், அதைரியம், மாலைவேளை, சிறுவனான மோகன் தாமதிக்க மாட்டான் என்கிற ஆவல். ஆனால் விடையாட்டிலிருந்து சந்தோஷமாகக் கண்கள் மலர வருகிற மகனைப் பார்க்க அதைரியம். உற்றுப் பார்த்தால் யாரையோ பார்க்கிற மாதிரித் தோன்றுகிறது. யாருடைய சித்திரம் தன் கண்முன்னால் நிற்குமென்பதை ராமண்ணா அறிவான். மோகன் தன் பிள்ளை; தன் மூலமாகக் குமுதாவுக்குப் பிறந்தவன். இருந்தாலும் மோகனின் கண்களைப் பார்த்தால், சரளாவின் உருவமே தன் கண்களின் முன்னால் நிற்கும்.

இன்றைக்குப் பத்து வருடங்களாகிவிட்டன. இந்த மர்மம் ராமண்ணாவுக்குப் புரியாமல், சரளா தனது முதல் மனைவி. அவளுக்கு அன்னையாகக் கூடிய ஆரோக்கியம் இருக்கவில்லை. குமுதாவை மணந்து கொண்டான். அவளுக்குப் பிறந்த குழந்தைக்குச் சரளாவின் கண்கள் இருக்கின்றனவே! எவ்வளவோ முறை மோகனைப் பார்க்கத் தயங்கியிருந்தான் ராமண்ணா பழைய நினைவுகளுக்குப் பயந்து.

## 2

"வீட்டில் குழந்தைகள் இருந்தால் தான் அழகு" என்று சொல்லிக் கொண்டிருந்தாள் சரளா.

ராமண்ணாவுக்குத் தெரியும். அவன் இது போன்ற சந்தர்ப்பங்களை எப்போதும் மறக்கமுடியாது.

"வீட்டில் குழந்தைகள் இல்லாவிட்டால் வீடு 'வெறிச்' சென்றிருக்கும்" என்பாள்.

"குழந்தையைப் பெறுவதற்கு மனைவி வேண்டுமே? அதனால்தான் நான் மனைவியின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க முயற்சிகள் செய்கிறேன்' என்று ராமண்ணா பதிலளிப்பான்.

"இன்றைக்கோ, நாளைக்கோ என்று படுக்கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் என்னைப் போன்ற மனைவியைக் கட்டிக் கொண்டு என்ன செய்யப் போ,றீர்கள்?"

"என் பெண்டாட்டி எப்படி இருக்கவேண்டும் என்கிற கவலை என்னுடையது."

"என்னைப் போன்ற பெண்டாட்டி இருந்தால், அவளைப்பற்றி நீங்கள் கவலைப்பட்டுக் கொண்டே இருக்கவேண்டியதுதான்."

"நீ ஒரு பைத்தியக்காரி சரளா! ஒரு நாலுநாள் படுக்கையில் படுத்துவிட்டதனால், உடம்பு குணமே ஆகாது என்று தீர்மானித்து விட்டாயா?"

"இல்லாத நம்பிக்கையெல்லாம் வைத்துக் கொள்ளாதீர்கள் நீங்கள். அதனால் தான் சொல்லுகிறேன். என் கண்மூடுவதற்குள்ளாக நீங்கள் இன்னொரு கல்யாணம் செய்துகொண்டு வீடு, குழந்தைகள் எல்லாச் சுகங்களையும் அநுபவிப்பதைப் பார்க்க வேண்டுமென்று என்னுடைய ஆசை."

"ஓஹோ! உன் கணவன் என்ன எந்தப் பெண் வேணுமானாலும் விரும்பக்கூடிய அழகன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? அல்லது நான் உன்னை இங்கேயே விட்டுவிட்டுப் பெண்தேடிப் போக வேண்டுமென்கிறாயா"

"யாரும் உங்களை விரும்பவும் வேண்டாம், நீங்கள் யாரைத் தேடியும் போக வேண்டாம். நம்ம குமுதா இருக்கிறாள்."

"பாவம்! அந்தப் பெண் பலியாக வேண்டுமா?"

"ஷ்ஷ்! என்னத்தையாவது சொல்லாதீர்கள், அவளுக்கும் 18 வயதாகிறது. அவளுக்கு நீங்கள்; உங்கள் புத்தகம் என்றால் எவ்வளவு ஆசை தெரியுமா?"

"அதை லாபமாக்கிக் கொள் என்கிறாயா?" என்று ராமண்ணா தன் பேச்சுக்காகத் தானே சிரித்தான். சரளா மடிந்தாள், குமுதாவைக் கல்யாணம் செய்து கொண்டான், மகனும் பிறந்தான். ஆனால் அதைப் பார்க்கச் சரளா உயிருடன் இருக்கவில்லை.

ராமண்ணா உட்கார்ந்த இடத்திலிருந்தே எதிரிலுள்ள சுவற்றைப் பார்த்தான். சரளாவின் படம் தொங்கிக் கொண்டிருந்தது. அதையே விடாமல் உற்றுப் பார்த்தான். சட்டென்று யோசனை தோன்றியது போல, நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

சரளா உயிரோடு இருக்கிறாள்! தன் குடும்ப வாழ்க்கையைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்! அதனால்தான் மோகனின் கண்கள் சரளாவின் கண்களைப் போல அதே அச்சாக

இருக்கின்றன. தன்னுடைய குடும்ப வாழ்க்கையைப் பார்க்க வேண்டுமென்கிற பிடிவாதத்தினால் சரளாவின் கண்கள், அவள் உடலோடு அழிந்து போக வில்லை. பிழைத்துக் கொண்டு, தன் வாழ்க்கையைப் பார்த்துக் கொண்டிருக்கின்றன! இன்று தனக்கு நடக்கவிருக்கும் பாராட்டு விழாவைக் கண்டு அந்தக் கண்கள் மலரும்– ராமண்ணா பயப்பட்டான். அவன் உடல் நடுங்கியது... இந்தப் பத்து வருடங்களில் தனக்கு ஏற்பட்ட எல்லா அனுபவங் களையும் எந்தக் கண்கள் பார்த்திருக்குமோ?

சூ- என்றான் ராமண்ணா. வெளியிலிருந்து குருவி ஒன்று பறந்து வந்து சரளாவின் படத்தின் மீது உட்கார்ந்து கொண்டிருந்தது.

'சூ' என்று விரட்டினான் எரிச்சலோடு.

குருவி பறந்து போய் விட்டது. கூடவே அவன் மனத்தில் தீட்டியிருந்த எண்ணங்களின் சித்திரமும் பறந்து போய் விட்டது. ஏதோ இக்கட்டிலிருந்து தப்பித்துக் கொண்டவன் போல, ராமண்ணா சட்டென்று எழுந்திருந்து அவசரமாக ஜன்னலருகில் வந்தான். மூச்சுவிடத் திணறுபவன் போல வெளிக்காற்றுக்காக வாயைத் திறந்தான். கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். இன்னும் 55 நிமிடங்கள் இருந்தன, நிர்வாகி வந்து தன்னை அழைத்துப் போவதற்கு.

## 3

"இன்னும் 55 நிமிடங்கள். ஒரு மணி என்றே வைத்துக் கொள்ளலாம்" என்று சொல்லிக் கொண்டாள் குமுதா, தன் கைக்கடியாரத்தைப் பார்த்த வண்ணம்.

கடியாரத்தை மீண்டுமொரு முறை பார்த்தாள். பெருமூச்சு விட்டாள்.

பத்து வருடங்களாயிற்று கடியாரத்தை இதே போலப் பார்த்து, இதே போலச் சொல்லி, போகட்டும். இப்பொழுது ஏன் பழைய எண்ணங்கள்? மோகனைச் சீக்கிரம் வரச் சொல்லியிருந்தேன். இந்தப் பையன் ஏன் இன்னும் வரவில்லை - என்று எண்ணியபடி வேலையில் ஈடுபட முனைந்தாள். செய்வதற்கு வேலை ஒன்றும் இருக்கவில்லை. இருந்ததையே கிளறிக் கொண்டிருந்தாள்.

அன்றைக்கும் இப்படித்தானே சாமான்களையெல்லாம் ஏதோ கிளறிக் கொண்டிருந்தாள்?

பாழும் நினைவு! வேண்டாததையே தூக்கித் தூக்கிக் காட்டுகிறது. இன்று பத்து வயது மோகன் வருவதற்காகக் காத்திருக்கிறாள். அன்று ஒரு வயது மோகன் விழித்தெழுவதைக் காணக் காத்திருந்தாள்.

பத்தே வருடங்கள்! ஒரு ஜன்மம் போல நீண்ட கால கட்டமாகத் தோன்றுகிறது. இருந்தாலும் ஒவ்வொரு விஷயமும் இப்பொழுதும் கண் முன்னால் தெளிவாக நினைவுக்கு வருகிறது.

மோகனின் முதல் வருடப் பிறப்பு விழா. பிறப்பு நாள் என்னவோ உண்மை. ஆனால் விழா என்று சொல்லும்படித் தோன்றவில்லை. விவாகத்திற்கு முன்பே வயிற்றில் உதித்த குழந்தை. அந்தக் குழந்தைக்காகத்தான் ராமண்ணா தன்னை மணந்து கொண்டான். குழந்தை இல்லாமல் இருந்தால் தன்னுடைய விவாகம் நடந்திருக்காது. தான் இன்னொருவருடைய தாட்சண்யத்திற்கு ஆளாகியிருக்கவேண்டாம். இப்பொழுது இந்தக் குழந்தையினால்தான் தனக்கு இந்த அவல நிலை! அப்பொழுது அவள் அந்தக் குழந்தையை நேசிப்பது சாத்தியமாக இருக்கவில்லை. ஒரு வருடத்துக் குழந்தைக்குத் தாய்ப்பாலின் அவசியமும் இருக்கவில்லை. இவருடைய காம விளையாட்டின் பலனை இவரே அனுபவிக்கட்டும் என்று அந்தக் குழந்தையை அங்கேயே விட்டுவிட்டு யாருக்கும் தெரியாமல் புறப்பட்டுப் போவதென்று காலையிலேயே தீர்மானித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது ராமண்ணா தன் அறைக்கு வந்தான். அவள் உடல் 'ஜும்'மென்றது. பயம் தோன்றியது. தன்னுடைய தீர்மானத்தை நிறைவேற்ற முடியாமற் போய் விடுமோ என்கிற அதைரியம் ஏற்பட்டது. ராமண்ணா எதற்காக வந்திருக்கிறான் என்பது பற்றியும் அச்சம் தோன்றியது. ஏன்? ஏன்? பழைய அனுபவம் நினைவுக்கு வந்தது. ராமண்ணா ஆண், அதுவும் இப்போது கட்டு திட்டத்திற்குட்பட்டுக் கல்யாணம் செய்து கொண்டிருக்கும் கணவன். படுத்த படுக்கையாகியிருக்கும் மனைவியைப் பற்றிய பயமும் இல்லை. அதனால் தைரியமாக வந்திருக்கிறான். தன்னுடைய உரிமையை நிலைநாட்டிக் கொள்ள வந்திருக்கிறான் என்கிற எண்ணத்தினால், உள்ளில் இருந்த துவேஷம் கண்களில் தெரிய அவனை நோக்கினாள். இந்த வீட்டில் தான் இருப்பதற்கு இது ஒரு காரணமா? தனது குழந்தையின் தாய் என்கிற எண்ணத்தைக் கூட மறந்து, தான் இன்பம் துய்ப்பதற்காகவே இருக்கும் பொருள் என்கிற எண்ணத்தில் தன்னிடம் வந்திருக்கிறானே?

"குமுதா"

அதோ! அந்தக் குரலின் பரிச்சயம் தனக்கு இல்லையா? எவ்வளவு முறை தான் அந்தக் குரலுக்கு மனம் பறிகொடுத்து மெய்

மறந்திருக்கிறாள்? எனக்குத் தெரியும். இந்தக் குரல் எதற்கு சூசகம் என்பது நன்றாகத் தெரியும்.

"குமுதா இன்றைக்கு மோகனுக்குப் பிறந்த நாள் விழா என்று"

தான் அவனைச் சட்டென்று உற்றுப் பார்த்தாள். ஹூம்- நானே பைத்தியக்காரி. என்னைப்பற்றிய எண்ணமே இவருக்கு இல்லை. இவர் வந்தது மோகனுக்காக. இனி என்னுடைய தேவை இல்லை அவருக்கு. வஞ்சித்து வசப்படுத்திக் கொள்ளும் வரையில் என் பேரில் அக்கறை இருந்தது. வந்த கோபத்தை அடக்கிக் கொள்ளும் முயற்சியில் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

ஆனால் தான் கோபத்தினாலா உதட்டைக் கடித்துக் கொண்டாள். இந்த சங்கதி- நினைவுக்கு வரும்போதெல்லாம் குமுதா. தன்னைத்தானே இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டாள். தனக்குக் கோபம் வந்தது. ராமண்ணாவின் பேரில் துவஷம் பொங்கிக் கொண்டிருந்தது என்று நினைத்து நினைத்து அதையே நம்பிக் கொண்டாள். ஆனால் சில சமயங்களில், விசேஷமாகக் கனவுகளில், அந்த நினைவு வரும்போது வேறோர் அனுபவத்தைக் கண்டாள். ராமண்ணா வந்தபோது தான் குழம்பியது பயத்தினால் அல்ல, ஆசையினால்; ராமண்ணாவின் பேரில் தன் கண்களில் துவேஷம் இருக்கவில்லை, எலும்புகள் நொறுங்குகிற மாதிரி இறுக அணைத்துக் கொள்ளவேண்டும் என்கிற ஆவேசம் இருந்தது; தான் உதடுகளைக் கடித்துக் கொண்டது மனத்தில் எழுந்த எண்ணங்களை அடக்குவதற்காக.

குமுதா ஊசலாடுவது இதனால்தான். அறிவுபூர்வமாக, சாதக-பாதக காரணங்களைக் காட்டித் தான் ராமண்ணாவை வெறுப்ப தாகப் பிடிவாதமாக சொல்லிக் கொள்ளும்போதும், இதயம் ராமண்ணாவுக்காகத் துடித்துக் கொண்டிருந்தது என்பதை அன்றிலிருந்தே தான் அறிந்திருந்தாள்.

"-மோகனின் பிறந்தநாள் விழாவுக்காக, உனக்கு இந்த கடியாரம்" என்று ராமண்ணா சொன்னபோது, தன்னுடைய சக்தி முழுவதும் அடங்கிப் போய்விட்டிருந்தது. தனக்கு நினைவு கூடத் தவறிவிட்டிருந்ததோ என்னவோ! ஏனென்றால் மறுபடியும் குனிந்து பார்த்தபோது, ராமண்ணா கைதொட்டுத் தன் கையில் கடியாரத்தைக் கட்டி விட்டிருந்தான்.

"இதுதான் அந்தக் கடியாரம்" என்று இப்பொழுது மற்றொரு முறை அதைப் பார்த்தாள். "இன்னும் சுமார் ஒரு மணி நேரம்" என்று வருத்தத்துடன் பெருமூச்சு விட்டபடி, கண்ணாடியின் முன்னால் உட்கார்ந்து கொண்டாள். முகத்தில் சிரிப்பு மலர்ந்தது.

எவ்வளவு வெட்கங்கெட்ட பெண்தான் என்று தன் பிரதிபிம்பத் தோடு சொல்லிக் கொண்டாள். இன்னொரு மணிநேரத்தில் ராமண்ணாவுடன் தானும் கூட்டத்திற்குப் போக வேண்டியிருந்த தால், இவ்வாறு அலங்கரித்துக் கொள்ள வேண்டியதாயிற்று இல்லையா? அதற்காகத்தான் மோகனைச் சீக்கிரம் வரச் சொல்லியிருந்தாள். ஆனாலும் அவன் இன்னும் வரவில்லையே! முன் வாசல் கதவைத் திறந்து பார்த்தாள். வெளியே மோகனையும் காணோம், வேறு யாரையும் காணோம். உள்ளேயும் யாரும் இருப்பதற்கான அறிகுறிகளே இல்லை என்று நினைத்துப் பெரு மூச்சு விட்டபடி, கதவைச் சாத்திவிட்டு மறுபடியும் கண்ணாடிக் கெதிரில் உட்கார்ந்து கொண்டாள்.

இன்று ராமண்ணாவுடன் போகவிருக்கிறாள். அவனது மனைவி என்கிற ஹோதாவில்.

அன்று ராமண்ணாவை விட்டுப் போயிருந்தாள் அறிவு கெட்டவளாக.

கைக்கடியாரத்தை ராமண்ணா கொடுத்ததிலிருந்து, அவளுக்குத் தன் பேரிலேயே நம்பிக்கை இல்லாதது போலாகியிருந்தது. அதிலும் ராமண்ணா அறையைவிட்டு வெளிச் சென்றதுமே, தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை மார்போடு சேர்த்து இறுக அணைத்துக் கொண்டபோது, ராமண்ணாவின் மீது தனக்கு இன்னும் பற்றுதல் இருக்கிறது என்பதை உணர்ந்து கடகட வென்று நடுங்கினாள். அன்று மாலை மறுபடியும் ராமண்ணா தன் அறைக்கு வந்தான். யாரையோ பார்ப்பதற்காகப் புறப்பட்டி ருந்தான். "நான் இன்னும் 1 மணிநேரத்தில் வருகிறேன். சரியாகச் சொல்வதானால் 55 நிமிடங்களில் வருகிறேன்" என்று கூறிச் சிரித்து விட்டுப் போனான்.

அவன் வெளியேறிய கணமே தனது கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டு, "இன்னும் 55 நிமிடங்கள்" தான் இந்த வீட்டிலிருந்து தப்பி ஓடுவதற்கு என்று நினைத்துக் கொண்டாள்.

ஹூம்... என்னவோ ஆயிற்று, எங்கோ வந்து சேர்ந்தது, என்று நினைவை உதறுவது போலச் சமாளித்துக் கொண்டு எழுந்திருந்தாள்.

மோகன் வருவானோ என்று எதிர்பார்த்து வாசலுக்கு வந்தாள். கதவைத் திறந்து பார்த்தாள், ஏமாற்றத்தால் ஏற்பட்ட சினத்தால் கதவைத் தடால் என்று சாத்திவிட்டு, கோபத்தோடு நடந்து வந்து கண்ணாடியின் முன் நின்று கொண்டு தலைக் கூந்தலைச் சரி செய்து கொள்ளத் தொடங்கினாள்.

# 4

கதவின் ஓசையைக் கேட்டு ராமண்ணா சட்டென்று எழுந்தான்.

"யாரோ வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது" என்று ஜன்னலருகில் வந்து பார்த்தான். யாரையும் காணவில்லை.

"கதவு ஓசைப்பட்டதே" என்று தனக்குள் சொல்லிக் கொண்டு, மீண்டும் அறைக்குள் சென்று, மேஜையின் எதிரே வந்து நின்று கொண்டான். அதன் மேலிருந்த பென்சிலை எடுத்துக் கொண்டான். உடனே சிரித்து விட்டான். சிரித்தபடியே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, "மனத்தின் போக்கே வியப்பாக இருக்கிறது" என்றான்.

கதவு ஓசைப்பட்டது, யாரோ வந்தார்கள் என்று தான் நினைத்துக் கொண்டான். பைத்தியமல்லவா தான்? கதவு ஓசைப்பட்டால் யாராவது போயிருக்கவும் கூடுமல்லவா? இருந்தாலும் கதவு ஓசையுண்டாக்கினால் யாரோ உள்ளே வந்திருப்பதாக நினைப்பதே வழக்கமாக இருக்கிறது.

ராமண்ணா உடனே பயந்து போய் எழுந்திருந்தான், ஜன்னலருகில் பாய்ந்து சென்று பயத்தோடு தொலைவு வரையில் பார்த்தான். பிறகு சமாதானமடைந்தவனாகப் பெருமூச்சு விட்டபடி வந்து உட்கார்ந்து கொண்டான்.

"யாராவது போயிருக்கவும் கூடும்" என்று தன் வாயிலிருந்து அபசகுனம் போல வெளிவந்ததே? யாராவது உண்மையாகவே புறப்பட்டுப் போயிருந்தால்?

ராமண்ணாவின் உடல் ஜும் மென்றது. எண்ணங்களைத் தடுக்க முடியாமல் ஒரு கணம் கண்களை மூடிக் கொண்டான். மறுகணம் மூடிய கண்களுக்கெதிரே நின்ற நினைவுகளுக்குப் பயந்து கண்களைத் திறந்தான்.

அன்றைய நினைவு என்றுமே வேண்டாம், தன் சத்துருக்களுக்குக் கூட வேண்டாம் என்று நினைத்துக் கொண்டான்.

அன்றும் ஒரு பாராட்டு விழாவுக்குத்தான் ஏற்பாடாகியிருந்தது. ஆனாலும் அது தனக்கு மட்டுமே தெரியும். குமுதாவுக்குச் சொல்லியிருக்கவில்லை. எதிர்பாராத வகையில் அவளைச் சந்தோஷப் படுத்தவேண்டுமென்று அவன் நினைத்திருந்தான். அன்று மோகனுக்குப் பிறந்தநாள் விழா. உண்மையில் குழந்தையின் பிறந்தநாள்விழா அல்ல. கல்யாணத்தின் முதல் வருட விழாவாக இருந்தது. ஏதோ காரணத்தால் விவாகத்திற்கு முன்பே மோகன் தங்கள் வாழ்க்கையில் பிரவேசித்து விட்டிருந்ததால் அவனது பிறந்தநாள் விழாவைச் சில மாதங்களுக்குத் தள்ளிவைக்கும்

ஏற்பாட்டிற்கு இருவருமே சம்மதித்திருந்தனர். முந்தின நாளே குமுதாவுடன் பேச முயன்றிருந்தான். விவாகத்தின் முதல் ஆண்டு விழா என்று கூறி, அவளை உற்சாகப் படுத்த முயன்றிருந்தான். கட்டிய வீட்டில் தண்ணீர் ஒழுகினால் ரிப்பேர் செய்வதில்லையா? அப்படித்தான் தங்கள் விவாகமும் என்று குமுதா சொன்னாள்! எவ்வளவு கொடூரமான வார்த்தைகள்! இருந்தாலும் மறுநாள் தான் கடியாரத்தை எடுத்துக் கொண்டு போனான். போனவன் மெய்மறந்தாற் போல நின்றுவிட்டான்.

இவள் தன் குமுதாவா என்று அவனுக்குத் தோன்றிற்று. குமுதா தாயான அன்றிலிருந்து தான் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த போதிலும், இந்த மாறுதல் தன் கவனத்திற்கு வந்திருக்க வில்லையே? ஒரே வருடத்திற்கு முன்னால் அப்பாவிச் சிறுபெண் ணாக இருந்தாள். தன்னைப் பார்த்து நாணுவாள். தொட்டால் சிரிப்பாள்; வேட்கை கொண்ட கண்களில் பயத்தின் நிழலும் இருந்தது. ஆனால் இப்பொழுது? தாய்மையினால் மார்பகம் பூரித்திருக்கிறது. குழந்தையைப் பேணி வளர்ப்பதால் பெரியவள் என்கிற களை வந்திருக்கிறது. முகத்தில் சாந்தமான வசீகரம் இருக்கிறது. குழந்தையைத் தாங்குகிற தொடைகள் புதுச் சக்தியையும் அழகையும் பெற்றிருக்கின்றன! ராமண்ணாவின் உறுதி குன்றியது. தான் எதற்காக வந்தோம் என்பதை மறந்து "குமுதா" என்றழைத்தான். அப்படிப் பெயர் சொல்லிக் கூப்பிட்டவுடன் விழிப்பேற்பட்டாற்போல இருந்தது.

தான் கூப்பிட்ட விதத்தினால், குமுதா சுயபாதுகாப்பைத் தேடுகிற பிராணியைப் போல ஆனாள். தனது குரலின் பொருள் தனக்கும் தெரிந்திருந்தது. ஆண் இதயத்தின் அழைப்பு அந்தக் குரல். இயற்கையில் பெண்ணை ஈர்க்கும் ஆணின் சகல சக்திகளும் கொண்டதாக இருந்தது அந்தக் குரல். மதமேறிய ஆண் பெண்ணை வசப்படுத்திக் கொள்ளுகிற சாமர்த்தியத்தைக் காட்டும் ஹூங்காரமாக இருந்தது அந்தக்குரல். அதைக் கேட்டு வெட்டேறகத் தலைகுனிந்து நிற்கும் ஆட்டைப் போலக் குமுதா எதிரில் வந்து நின்றாள்.

அப்பொழுது ராமண்ணாவின் விவேகம் பிரமையடைந் திருந்தது. தனது அந்தஸ்தின் அறிவும் ஏற்பட்டது. தானொரு நன்கு படித்த சமூக வாழ்க்கையில் பண்புள்ள, இலக்கிய கர்த்தா, அறிவுஜீவி என்கிற சித்திரம் நசித்துப் போய், இயற்கையில் உள்ள மற்ற மிருகங்களைப் போலத் தானும் ஒரு மிருகம்,

வேண்டுமானால் மனித மிருகம் என்று நினைத்துக் கொண்டான். பெண்ணை ஒரு போகப் பொருளாக மட்டும் பார்ப்பது காட்டு வாழ்க்கை. ஆண் பெண்களிடையே ஏற்றத் தாழ்வு இல்லை. இருவரும் சமம் என்று நினைப்பதுதான் பண்பாட்டின் லட்சணம் என்று தெரிந்து கொண்டிருந்த ராமண்ணாவுக்குக் குமுதாவைப் பார்த்ததும், தன்னுள்ளே தோன்றிய மன விகாரங்களுக்காக வெட்கம் ஏற்பட்டது. "குமுதா, இன்று மோகனின் பிறந்தநாள்" என்று வேறு ஏதோ விஷயத்தைப் பிரஸ்தாபித்தான். எப்படியோ கடைசியில் அவள் கையைத் தொட்டுக் கடியாரத்தைக் கட்டினான். அதொருகணம், கணமல்ல யுகம். இல்லை, கணமுமல்ல யுகமுமல்ல. தான் அவள் கையைத் தொட்டபோது, காலம் சலனமின்றி நின்று விட்டது போல அவனுக்குத் தோன்றியது.

அந்த வெறியின் இருளில் அவனுக்கு வழிதவறிவிட்டது போலும்! நண்பனின் வீட்டுக்குச் சென்றான்.

"வழி தவறிவிட்டதா?" என்று நண்பன் கேட்ட பொழுது திடுக்கிட்டுக் கலவரம் அடைந்தான். அதைக் கண்டு நண்பன் சிரித்த போது தன் நிலையைச் சமாளித்துக் கொண்டு தானும் சிரிக்க முயன்றான். தான் நண்பன் வீட்டுக்குப் போனது எதற்காக? போவதற்கு முன்னால் அதைப் பற்றி எண்ணியே இருக்கவில்லை. இருந்தாலும் "என்ன இந்த நேரத்தில் வந்தாய்?" என்று நண்பன் கேட்டதுமே, "ஒரு முக்கியமான வேலை இருக்கிறது, ரகசியம்" என்று பதிலளித்தான்.

"என்ன ராமண்ணா, அப்படிப்பட்ட முக்கியமான காரியம்? முகத்தைப் பார்த்தால் ரொம்பக் குஷியாக இருக்கிறாற்போல இருக்கிறது. ரகசியம் என்று வேறு சொல்கிறாய்? ஆங்? வேறெதாவது திருவிளையாடல் புரிந்திருக்கிறாயா என்ன?"

"ஆங்!"

"விரட்டாதேடா, நீங்கள் இலக்கிய கர்த்தாக்கள், உங்களை நம்பவே கூடாது. இலக்கியம் என்றால் வாழ்க்கையின் பிரதி பிம்பம் என்று காட்டுகிற பிடிவாதத்திற்காக கதை எழுதுவதற்கு முன்னால் சொந்தமாக அதன் அனுபவத்தைப் பெறுவதற்காக-முன்பின் பார்க்க மாட்டீர்கள். அதனால் கேட்டேன். ஏதாவது புது லீலை? ஆங்? ஹஹ்ஹ"

சிரித்துக் கொண்டிருக்கும் நண்பனின் பற்களை உடைக்க வேண்டும், அவனை நிலத்தின் மீது தள்ளி அவன் உடல் மீது தாண்டவம் செய்யவேண்டும், உடனே கைலாசத்திற்கு ஓடிச்

செல்லவேண்டும் என்று ராமண்ணாவுக்குத் தோன்றியது. ஆனால் பண்பட்ட சமூகத்தில் அவ்வாறு மனத்தில் தோன்றியபடி நடந்து கொள்ள முடியாது. தான் குமுதாவை மணந்து கொண்டது பற்றி ஜனங்கள் பேசிக் கொள்வதை ராமண்ணா அறிவான். அதைப் பற்றியும் அவன் ஒன்றும் செய்கிறாற்போல இருக்கவில்லை. நண்பனின் பேச்சுக்கு ஒரே பதில். பொய்ச்சிரிப்பு அதைச் சிரித்து வைத்தான்.

"இலக்கிய கர்த்தா என்றால் என்ன? Licence இல்லாத கிருஷ்ணன் என்று நினைத்துக் கொண்டாயா?" என்று கேட்டான்.

"எனக்கென்ன தெரியும் ராமண்ணா? செத்ததும் இல்லை, சொர்க்கத்தைக் கண்டதுமில்லை. புத்தகம் எழுதவில்லை, பேர் கெட்டுப் போகவில்லை. ஆங்?"

"அப்படியானால் புத்தகம் எழுதினால், பேர் கெடும் என்று சொல்"

"நான் ஏன் சொல்லவேண்டும், நீயே பார்க்கிறாயே ராமண்ணா? புத்தகம் நன்றாக இருந்தால், இதைவிட நன்றாக எழுதியிருக்க வேண்டும் என்பார்கள். புத்தகம் தோல்வி என்றால் இவர்கள் பழைய பேப்பர் வியாபாரம் பண்ணத்தான் தகுதியானவர்கள் என்கிறார்கள். மொத்தத்தில் புத்தகத்தினால் எழுதியவனுக்கும் சந்தோஷம் இல்லை. படிப்பவனுக்கும் சந்தோஷமில்லை."

"அப்படியென்றால் எழுதச் செய்தவன் ஒருவனுக்கு மட்டும் சந்தோஷம் என்று சொல்" என்று தானும் அவனுடைய பாணியிலேயே பேசினான்.

"சரி போகட்டும் விடு! அதென்னமோ முக்கியம், ரகசியம் என்றாயே?" நண்பனின் கேள்விக்குத் தான் அளித்த பதிலைக் குறித்து ராமண்ணாவுக்கு இன்றைக்கும் வியப்பேற்படுகிறது. எவ்வளவு பெரிய பொய், எவ்வளவு அசத்தியம் தன்னுடைய பதில்! அதைத்தான் எவ்வளவு யோக்கியனைப் போலச் சொல்லியிருந் தான். அன்று தான் தெரிந்தே, வேண்டுமென்றே, மோசடியான பதிலைச் சொன்னது தெரிந்தால், தானாகவே தெரிவித்தால், சமுதாயம் இன்று தன்னைக் கௌரவிக்குமா? யார் சொல்ல முடியும்? கௌரவித்தாலும் கௌரவிக்கலாம். தன்னைப் போன்ற பல மோசடிக்காரர்களின் கூட்டமே சமுதாயம். இன்றைய அவர்களுடைய கௌரவமும் ஒருவகை மோசடி அல்ல என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆனால் ஆனால் அன்றைய தன்னு டைய பதில் உண்மையிலேயே மோசடியான பதிலா? தான்

வேண்டுமென்றே, தெரிந்தே அப்படிச் சொன்னானா? "அதென்னமோ முக்கியம் ரகசியம் என்றாயே?" என்று நண்பன் கேட்டதும் தான் பதில் சொல்லியிருந்தான்.

"இன்றைக்குச் சரளா இறந்து போய் இரண்டு வருடங்கள் ஆகிவிட்டன்" என்று

"ஹூம் ... ராமண்ணா, பழையதை நினைத்துக் கொண்டு"-

"சே! நான் துக்கப்படுகிறேன் என்று நினைக்காதே அதனால் தான் முக்கியமான விஷயம் என்று சொன்னேன், தனக்குப் பிறகு நான் துயரப் படக்கூடாது, நான் சுகமாக வாழவேண்டும், வீட்டிற்காகக் குழந்தைகளை பெறவேண்டும், தான் எப்பொழுதும் பார்த்துக் கொண்டேயிருப்பாள் என்று சரளா ஆயிரம் முறை எனக்குச் சொல்லியிருந்தாள். இன்றைய இந்த இரண்டாவது கல்யாணமும் சரளாவின் சந்தோஷத்திற்காகத்தான். அவளே பார்த்து வைத்திருந்தது என்றும் சொல்லலாம். அவசரமாக முகூர்த்தம் வைத்ததும் அதற்காகவே இருந்தாலும் அவள்"

"ராமண்ணா, நூறு ஜன்மங்களுக்கொரு முறை இந்த மாதிரி மனைவி கிடைக்கலாம். அதுவும் கொடுத்து வைத்திருந்தால். உங்கள் கல்யாணத்தை அவள் கண்ணால் காணவில்லையே என்று வருந்துவது கூடத்தவறு. எங்கேயிருந்தாலும் உன்னைப் பார்த்துக் கொண்டேயிருப்பேன் என்று சொல்லியிருந்தாள் அல்லவா?"

"இருந்தாலும் என் மனத்திற்குச் சமாதானம் வேண்டுமே? அதனால் வருடத்திற்கு ஒரு நாள், இதை ஒரு நினைவுநாளாக ஆசரிக்கிறேன். இந்த நாளும் மோகனின் பிறந்தநாளும் எதிர்பாராத விதமாக ஒரு நாளில் அமைந்துவிட்டது. இன்றைய என்னுடைய சுகமான சூழ்நிலையைச் சரளா பார்க்கட்டும், பார்க்கிறாள் என்று என்னுடைய நம்பிக்கை. அதனால்தான் இன்று குழந்தைக்கு ஒரு தங்கச் சங்கலி, குமுதாவுக்கு ஒரு நல்ல புடவை-"

"ஹாங் ஹாங்! டீ, இதைக் கேட்டியாடீ?"

"டேய், கூப்பிடாதே. உனக்குப் புண்ணியம் உண்டு. அதற்காகத் தான் ரகசியம் என்று சொன்னேன், ரகசியமானாலும் முக்கிய உதவி உன் மனைவிதான் செய்யவேண்டியிருக்கிறது"

"அப்படியானால் ரகசியம் வாழ்ந்தாற் போலத்தான்!"

"சாயங்காலம் வரையிலும் தான் ரகசியம். சாயங்காலம் நீ உன் மனைவியையும் அழைத்துக் கொண்டு 'வாக்கிங்' என்று சொல்லிப் புறப்பட்டு வழி தவறிவிட்டது போல் பாசாங்கு செய்து

மார்க்கெட்டுக்கு அழைத்துப்போ. அங்கு போன பிறகு அவரிடம் விஷயத்தைச் சொல். இரண்டையும் அவரே பார்த்து எடுக்கட்டும். நீங்கள் வீடு திரும்பும் போது, நான் இங்கே வந்திருப்பேன். அவைகளை வாங்கிக் கொண்டு போகிறேன்"

"அப்படியானால்? நாங்கள் மார்க்கெட்டிலிருந்து எங்கள் வீட்டிற்கே வரவேண்டுமா? பலே! ராமண்ணா! உங்கள் வீட்டிற்கு வந்து, விருந்து சாப்பிட்டு விட்டு நீ பரிசளிப்பதைப் பார்த்துவிட்டு வருவதை விட்டுவிட்டு-"

"இன்றைக்கு வேண்டாம் இன்றைக்கு நீங்கள் இருந்தால்"

"நாங்கள் இருந்தால் உனக்கென்ன இடைஞ்சல்? நீ முன்னேறி யவன். எழுத்தாளன். பரிசைக் கொடுத்துவிட்டு உன் மனைவிக்கே நீ முத்தம் கொடுத்தால் எங்களுக்கொன்றும் ஆட்சேபணை இல்லை. ஆங்? ஹஹ்ஹ!"

"அப்படியொன்றும் இல்லைடா! இருந்தாலும் இன்றைக்கு வேண்டாம். இன்றைக்கு- அதிருக்கட்டும். நான் வருகிறேன். இதோ பணம் வைத்திருக்கிறேன், பார்."

"புத்தி சமநிலையில் இல்லாவிட்டால், எழுத்தாளர் ஆகலாம் போலிருக்கிறது!-"

இன்னும் என்னென்ன நினைத்துக் கொண்டானோ நண்பன். தான் மட்டும் அங்கிருந்து சென்றுவிட்டான். வெளியே வந்ததும் இறக்கைகள் பெற்ற பறவை தான் என்று தோன்றியது அவனுக்கு. பகல் முழுவதையும் எப்படியோ வெளியே கழித்துவிட்டு, கடைசியாக நண்பன் கொண்டு வந்திருந்த பொருட்களைப் பெற்றுக் கொண்டு, சாயங்காலம் பட்சியைப் போல வீடு திரும்பினான்.

வீட்டில் குமுதாவும் இருக்கவில்லை, மோகனும் இருக்கவில்லை!

ராமண்ணா திடுக்கிட்டு நாற்காலியிலிருந்து எழுந்தான். பத்து வருடங்களுக்கு முந்திய நினைவு வெள்ளத்தில் தான் சிக்கிக் கொண்டிருந்தோம் என்கிற உணர்வு அவனுக்கு இருக்கவில்லை. ஒருகணம் புடவையையும், சங்கிலியையும் கையில் வைத்துக் கொண்டிருப்பவன் போல, ஜன்னலருகே நடந்து சென்றான். அப்பொழுது அவன் விழித்துக் கொண்டான்.

எனக்குப் பைத்தியம் பிடித்துவிடாதே? என்று கைகளைக் கீழே தொங்கப் போட்டான். இல்லாத புடவை எங்கே கீழே விழுந்து அழுக்காகி விடுமோ என்பது போலப் பயந்து, மெதுவாகக் கைகளைத் தொங்கவிட்டான் எனக்குப் பைத்தியம்

பிடித்துவிடாதே, என்று மற்றொரு முறை முணுமுணுத்தபடி தலையை உதறிக் கொண்டான்.

திடீரென்று ராமண்ணாவுக்குச் சிரிப்பு வந்தது, அன்று அந்தப் புடவைக்காகத் தனக்கு ஏற்பட்ட எண்ணங்களை நினைத்து.

ஹூம் இன்றைய கூட்டம் சீக்கிரம் ஆரம்பித்தால் நல்லது. இல்லாவிட்டால் தனக்குப் பைத்தியம் பிடிப்பது உறுதி என்று நினைத்துக் கொண்டான்.

நாக்கு விஷயத்தை மாற்ற முயன்றாலும் மனம் கேட்கவில்லை. நினைவைப் பின் தொடர்ந்தே சென்றது. நினைவுச் சித்திரம் முன்னால் நின்றதும் ராமண்ணா மறுபடியும் சிரித்தான், அன்று அந்தப் புடவையைப் பற்றிய எண்ணம் தனக்குத் தோன்றியதை நினைத்து.

## 5

குமுதாவின் கோபம் புடவையின் மீது திரும்பியது. மோகன் இன்னும் வரவில்லை என்ற கோபத்துடன், கண்ணாடி முன் நின்றுகொண்டு கூந்தலைச் சரிப்படுத்திக் கொண்டிருந்த போது, புடவைத் தலைப்பு விலகிற்று. விலகிய தலைப்பு தோற்றுவித்த இளமைச் செல்வத்தைக் கண்டபோது, கோபம் இன்னும் அதிகரித்தது. தன் முழு உருவத்தையும் நிலைக் கண்ணாடியில் கண்டாள். தான் உடுத்தியிருந்த புடவையின் காரணமாகத் தன் அழகும், தோற்றமும் களையேறி இருப்பதைக் கண்டு, புடவையின் மேல் ஆத்திரம் கொண்டாள்.

பாழும் புடவை! அன்றிலிருந்து இன்றுவரை கசப்பான நினைவுகளாலேயே நெய்யப்பட்டது போலிருக்கிறது என்று, கண்ணாடிக்கு முகத்தைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்தாள். பழக்கம் காரணமாகத் தொடை மீதுள்ள புடவையின் சுருக்கத்தைச் சரிப்படுத்திக் கொண்டாள். உடனே ஏதோ தீட்டுப் பட்டுவிட்டது போலக் கையை எடுத்துக் கொண்டாள்..பத்து வருடங்களுக்கு முந்திய சங்கதி....- காலையில் ராமண்ணா கைக்கடியாரத்தைக் கொடுத்திருந்தான். இல்லை, கையைத் தொட்டுக் கட்டியிருந்தான். அப்பொழுது ஒரு கணம், அவனுடைய கையைப் பிடித்துத் தன்பக்கம் இழுத்துக் கொள்ளவேண்டும் என்று தோன்றியது. பழைய கதையெல்லாம் மறந்து ஒருமுறை, வாழ்க்கையில் கடைசி தடவையாக, உடலோடு உடல் கலக்கும் வண்ணம் தழுவிக் கொள்ளவேண்டும் என்று தோன்றியது.

அதற்குள்ளாக ராமண்ணா கையை விட்டுவிட்டுப் புறப்பட்டுப் போயிருந்தான். தான் ஆசை வெறி கொண்ட பூதம் போல், படுத்திருந்த மோகனை மூட்டைபோலத் தழுவிக் கொண்டாள். அப்பொழுது அவளுக்கு விழிப்பேற்பட்டாற் போலாயிற்று. இனி இந்த வீட்டில் தங்கினால் தான் ராமண்ணாவுக்கு வசமாவது நிச்சயம், அந்த அவமானத்தைப் பொறுத்துக் கொள்ளமுடியாது, அங்கிருந்து புறப்பட்டுப் போயே ஆக வேண்டும் என்று நிச்சயித்திருந்தாள். காய்ந்த இரும்பைப் போல ஆகிவிட்டிருந்தது. தன் உடல். எந்த ஸ்பர்சம் ஏற்பட்டாலும் நடுங்கிக் கொண்டிருந்தது. தான் அங்கிருந்து புறப்பட்டே ஆக வேண்டும், புறப்பட்டே ஆகவேண்டும்–.

பத்து வருடங்களுக்குப் பிறகு, இன்றும் குமுதாவுக்கு இந்தப் புதிர் விளங்கவில்லை. ஒரு புறம் ஆழமான நேசம், இன்னொரு புறம் அதே அளவு ஆழமான வெறுப்பு. ஏன்? சில சமயங்களில் அவளுக்குத் தோன்றும்; எல்லாத் தவறும் தன்னுடையது தான், ராமண்ணாவுடையது ஒன்றும் இல்லை என்று. அந்தச் சமயங்களில் சரளக்காவின் நினைவு வந்து குமுதாவுக்குத் தன் நடத்தை அக்காவுக்குச் செய்கிற துரோகம் என்று தோன்றிக் கொண்டிருந்தது.

எவ்வளவு முறை சரளக்கா சொல்லியிருக்கிறாள்? சில சமயங்களில் ராமண்ணா வீட்டுக்கு வருவதற்குத் தாமதமானால் குமுதா கேட்பாள்.

"ஏன் அக்கா அவர் வருவதற்கு இவ்வளவு தாமதம்?"

"தாமதம் ஏது? அவர் வருகிற நேரமே அதுதான்."

"அதுக்கில்லை அக்கா, நீ ஒருத்தியே வீட்டில்"

"அதனாலென்னா? என் வேலை எனக்குச் சரியாக இருக்கிறது."

"இல்லையக்கா, நீ உடம்பு சரியில்லாதவள் என்பதற்காக வாவது."

"அய்யே நீ சிறுசு, குமுதா நாளை உனக்கும் கல்யாணம் ஆனால் தெரியும். ஆண்களுக்கு வெளியில் இருக்கும் வேலை-"

"மனைவிக்கு உடம்பு சரியில்லை என்பதற்காகவாவது-"

"பார் குமுதா, ஆணின் சுபாவம் அது, வீட்டுக்கு வெளியில் வேலை, வீட்டைவிட்டு அலைந்து கொண்டிருப்பது. பெண்ணின் விஷயமே வேறு. தானாயிற்று தன் வீடு, தன் குழந்தைகள், வேலை வெட்டி இவைகளையெல்லாம் எப்படி விடமுடியும் ஒரு பெண்ணால்?"

சரளக்காவின் பொறுமையான சுபாவத்தைக் கண்டு, குமுதா வியப்படைந்திருந்தாள். ராமண்ணா தன்னை அலட்சியம் செய்தாலும் அவளுக்கு மனத் தாங்கல் இருக்கவில்லை.

"ஆணின் வாழ்க்கை நான்கு பேரோடு சேர்ந்து அரட்டையடித் தால் என்ன வாயிற்று? யார்? இவரையா சொல்கிறாய்? பாவம்! அவர் வெளியில் செல்வதே குறைச்சல். படிப்பதும் எழுதுவதுமே சரியாக இருக்கிறது. எப்பொழுதாவது அலுத்துப் போனால், வெளியே சிறிது அதிக நேரம் இருந்துவிட்டு வருவார்" என்று அவர் ராமண்ணாவைப் பரிவுடன் தாங்கிப் பேசுவாள்.

"வெளியே போயிருக்கிறபோது சரி. வீட்டுக்குள் இருக்கும் போதும் கூட மணிக்கணக்கில் தான் வீட்டில் இருக்கிறோமா இல்லையா என்கிற உணர்வே இருப்பதில்லை அவருக்கு. எழுது வதிலே அவ்வளவு முழுகிப் போய்விடுகிறார்" என்று சொல்லும் போது, சரளக்காவின் ரத்த ஓட்டமற்ற கன்னங்கள் பெருமையாய் சிவப்பேறிவிடும்.

"இப்படிப்பட்டவர்களுக்குப் பெண்டாட்டி இருந்தாலும் ஒன்று தான் இல்லாவிட்டாலும் ஒன்றுதான்" என்று தானே ஒருமுறை ஏளனமாகச் சொல்லியிருந்தாள் குமுதா.

"ஐயோ பைத்தியக்காரி! என் பெருமையை நானே சொல்லிக் கொள்ளக்கூடாது. நானில்லாவிட்டால் ஒரு கணம் கூட அவருக்குச் சரிப்படாது. ஒருமுறை கல்யாணமான புதிதில், நான் ஒரு மாசம் போலத் தாய் வீட்டிற்குப் போயிருந்தேன். அந்த ஒரு மாசத்தில் புண்ணியவான் ஒரு வார்த்தைக்கூட எழுதவில்லை" என்று எவ்வளவு சந்தோஷத்தோடு சொல்லியிருந்தாள் சரளக்கா!

"என் குடும்ப வாழ்க்கை இவ்வளவு சந்தோஷமாக இருப்ப தனால், தான் சுமங்கலியாகவே நான் போய்விடவேண்டும் என்று என் பிடிவாதம்." என்று அக்கா சொன்னபோதுதான் அழுது விட்டிருந்தாள்.

இப்பொழுதும் அதே ராமண்ணாதானே? அந்த ராமண் ணாவை முழுக்க முழுக்கத் தனக்குத் தெரியாதா? தெரிந்தே தான் அவனை மெச்சிக் கொள்ளவில்லையா?

ஆனால்? அந்த ராமண்ணா தன்னுடையவன் ஆகவில்லை, தன்னுடையவனாக இல்லை என்கிற எண்ணம், குமுதாவின் மனத்தில் உறுதியாக இருந்தது. தான் விரும்பியது ராமண்ணாவை, ராமண்ணா விரும்பியது- தன் உடலையா? மனைவி படுக்கையில் கிடக்கிறாள் என்பதனாலோ, புது அனுபவம் என்பதனாலோ,

ஆணின் பெருமை என்பதனாலோ- ராமண்ணா தன்னோடு இன்பம் துய்த்தானல்லவா? கல்யாணமாகாமலே தாய்மையை அடைந்துவிட்ட தனக்கு- சமுதாயத்தில் கொடுமை இழைக்கப் படும் என்பதற்காக வேறுவழி இல்லாமல், கருணையால், உபகாரம் செய்யும் நோக்கத்துடன் தன்னை ராமண்ணா மணந்து கொண்ட தாக நம்பியிருந்தாள்.

இவனுடைய காதல் வேண்டும்; உபகாரம் வேண்டாம். சமுதாயம் தன்னைப் புறக்கணித்தாலும் பரவாயில்லை, காதலுக் காக சுகத்தைத் தியாகம் செய்யவும் தான் தயாராக இருக்கும் பொழுது, காதலில்லாத கல்யாணம் என்கிற பந்தத்தில் தன்னைச் சிறைப்படுத்திவிட்டானே?

அன்றைக்கே தன்னுடைய காதலின் கதை முடிந்துவிட்டது என்று நினைத்துக் கொண்டிருந்தாள் குமுதா. விவாகமான ஒரு மாதத்திற்கெல்லாம் 'அத்தை' வீட்டிற்குப் போவதாக சாக்குச் சொல்லி வீட்டை விட்டுப் போயிருந்தாள். கல்யாணமாகிவிட்டது, சமுதாயத்திற்குப் பயப்பட வேண்டியதில்லை என்கிற சமாதானம் தனக்கு இருக்கவில்லை. காதலில்லாக் கல்யாணம் என்னும் விபசாரத்தின் கர்ப்பம், தன் வயிற்றில் இருப்பது என்று உள்ளே வளர்ந்து கொண்டிருந்த ஜீவனை துவேஷிக்கத் தொடங்கினாள். அத்தை இல்லாவிட்டாலும், தூரத்து உறவான ஒரு கிழ ஜீவன் இருந்தது. அவளுடன் ஒரு மாதத்தைக் கழிக்கலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தாள். அதுவும் பொறுத்துக் கொள்ள முடியாததாயிற்று.

"நல்லாயிருக்கியே லட்சணமா? உண்டாகியிருக்கிறாயா என்ன?" என்று மறுநாள் காலையிலேயே கேட்டாள் அந்தக் கிழவி.

"கல்யாணம் ஆச்சுங்கறதையாவது தெரியப்படுத்தக்கூடாது? கல்யாணத்துக்குக் கூப்பிடாவிட்டாலும் வேண்டாம். கடலைப் பருப்பு போளி பல்லில்லாத கிழவிக்கு எங்கே சாப்பிட முடியப் போகிறது என்று நினைத்துக் கொண்டாயாக்கும்!"

இரண்டொரு நாட்களுக்கெல்லாம் புறப்பட்டுப் போய்விடலாம் என்று தோன்றியிருந்தது குமுதாவுக்கு.

ஆனாலும்-

குமுதாவுக்கு இன்று அதை நினைத்துக் கொண்டால் சிரிப்பு வரும். அந்த வயதான ஜீவனின் சகவாசத்தில், எவ்வளவு சுகமிருந்தது என்பதை நினைத்தால், அந்தச் சில நாட்கள் தன்னுடைய ஆனந்தமான நாட்கள் என்று அவளுக்குத் தோன்றும்.

"தாமதமாகக் கல்யாணம் செய்துக்கறது. ஒரு மாசத்துக்கெல்லாம் கர்ப்பம்! இந்தக் காலத்துப் பெண்களுக்குத் தெரிந்த கல்யாண சுகம் இவ்வளவுதான்"- ஒருநாள் ஏதோ பேச்சு வாக்கில் அந்தக் கிழவி சொன்னாள் அல்லவா?

"கல்யாணம்னா என்ன என்று தெரிந்தபிறகு எங்கள் கல்யாணம் நடக்கிறது. அத்தை" என்று ஏனோ தானும் சீண்டினாள். "என்ன தெரிகிறது உங்க தலை! கல்யாணம்னா அது ஒண்ணே அல்ல!"

"அதுன்னா எது அத்தை?"

"இப்போ பண்ணின்டு உட்கார்ந்திருக்கியே. அது !" என்று கிழவியும் விடாமல் சொன்னாள்.

"அதைவிட்டால் வேறு என்ன இருக்கு கல்யாணத்தில்?"

"அப்படி நினைத்துத் தான் நாசமாகப் போகிறதுகள் குமுதா இன்னித்துப் பெண்கள்! அதை விட்டால் என்ன இருக்காம்! ஆணும் அதே பேச்சைச் சொன்னால் உங்க கதி என்ன?"

"எனக்குத் தோன்றுகிறது அத்தை, ஆணுக்குத்தான் அதொன்றே முக்கியமாகத் தோன்றுகிறதென்று. பெண்ணுக்கு, பிறந்த குழந்தைகளை வளர்த்தறாவது இருக்கு."

பல்லில்லாத வாயைத் திறந்து, மனப்பூர்வமாகச் சிரித்தாள் கிழவி தன்னுடைய பேச்சைக் கேட்டு!

"ஆணுக்கு அதுவே முக்கியமாம்! அய்யே! பைத்தியக்காரி! அதுவே முக்கியமாக இருந்தால், ஆண் கல்யாணமே பண்ணிக்க மாட்டான். வீட்டுச் சாப்பாட்டை விட, ஹோட்டல் தின்பண்டங்கள் ஆணுக்கு ஜாஸ்தி ருசி. உன்னைக் கல்யாணம் பண்ணின்டு, உன் குழந்தைகளின் வியாதி வெக்கைகளை சகித்துக் கொண்டு, நீ கிழவியாறதைப் பார்த்துக் கொண்டு காலத்தை ஓட்டும் ஆணுக்கு கல்யாணத்தில் வேண்டியது வேறே இருக்கு, குமுதா! "

குமுதா வாயடைத்துப் போனாள் அதைக் கேட்டு. படிப்பு வாசனையில்லாத இந்தக் கிழவியின் அறிவைக் கண்டு வியந்தாள். அதற்குள்ளாக கிழவி கண்களைத் துடைத்தபடி மூக்கை உறிஞ்சுவதைக் கண்டு திடுக்கிட்டாள்.

"ஏன் அத்தை? எனக்கு புத்தி சொல்லிக் கொண்டே நீ அழுகிறாயே?"

"அழவில்லையடி பெண்ணே! பழைய நாளின் சுகம் ஞாபகம் வந்தது. சந்தோஷம் தாங்கமுடியவில்லை."

இந்தக் கிழவி சுகம் கண்டிருந்தாள் என்பதே குமுதாவுக்குப் புதிய செய்தி. என்றைக்குமே அவளை விதவையாகவே பார்த் திருந்த தனக்குத் தோன்றியிருந்தது.-

குமுதாவுக்குச் சட்டென்று சிரிப்பு வந்தது.

"ஏன்? எதுக்கு சிரிக்கிறே, குமுதா?"

"ஒண்ணுமில்லை அத்தை. நீ சுகமான நாட்கள் என்று சொன்னாயே, அதனால் என்னவோ தோணித்து."

"அப்படின்னா? நான் கல்யாணமே பண்ணிக்கவில்லை, சுகத் தையே கண்டதில்லை என்று நினைத்துக் கொண்டாயா?" கிழவிக்கு என்ன தோன்றியதோ, சிரித்துக் கொண்டே சொன்னாள்-

"நான் பிறந்ததிலிருந்தே இப்படியே இருக்கேன் என்று நினைத்துக் கொண்டாயா?"

"எனக்குத் தோணித்து, சுகமான நாட்களை நினைத்து மனம் துயரப்பட்டதோ என்று"

"துக்கமா? அடி பைத்தியமே! சுகமான நாட்கள் நினைவுக்கு வந்தால் சந்தோஷம் ஏற்படும். இல்லாவிட்டால் இவ்வளவு நாள் ஏன் செத்துக் கொண்டிருக்கிறேன், உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு? எங்கேயாவது ஏரி, குளம், கிணறு இதனடியில் சுகமாகப் படுத்துண்டிருப்பேனே. ஆனால், பழைய சுகத்தின் ஒரே நினைவி னால் இன்றைக்கும் நான் சுகமாக இருக்கிறேன் என்று சொல்."

"அதென்ன அப்படிப்பட்ட சுகம் அத்தை?"

"நீ இன்னும் சிறிசு. உனக்குப் புரியாது."

"அய்யே, இந்தக் கதையெல்லாம் வேண்டாம் அத்தை. இன்றையப் பெண்கள் சீக்கிரமே பெரியவர்களாகிவிடுகிறார்கள்."

"ஏன் பெரியவங்க ஆறாங்களோ? அந்த வேலைக்கு மாடுகூடச் சீக்கிரம் பெரிசாகிவிடுகிறது."

"உனக்கு வேற யோசனையே இல்லை அத்தை"-நொந்த குரலில் சொன்னாள்.

"உன்னைப் பற்றிச் சொல்லலை குமுதா. மொத்தத்தில் இப்பத்திய பெண்களைப் பற்றிச் சொன்னேன். எங்க காலத்தில் 8-10 வயதாயிருக்கும் போது கல்யாணம் ஆகும். கௌரி பூஜை, பஞ்சமி சதுர்த்தி, நவராத்திரி அழைப்பு, வெற்றிலை பாக்கு, குங்குமம் என்று ரெண்டு மூணு வருஷம் சந்தோஷமாக இருப் போம். அந்த சாக்கை வைத்துக் கொண்டு, வயசு வந்த பெண்களோட பழகுவோம். அவர்கள் பேச்சு, உறவிலிருந்து அறிவு ஏற்படும்"

"அதிருக்கட்டும் அத்தை. உன்னுடைய அந்த ஒரு சுகத்தின் நினைவு என்று சொன்னியே. அது என்ன சொல்."

"அதைத்தான் சொல்கிறேன். இதையெல்லாம் சொல்லா விட்டால் அது தெரியாது. இப்படியெல்லாம் செய்து அறிவு வர்றதுக்குள், எங்களுக்கு எல்லா விஷயங்களும் தெரிந்திருக்கும். ஆண்கள் எப்படி, அவர்கள் சுபாவம் என்ன, நம்மவர் எப்படிப் பட்டவர், அவர் யார் யாரோடு இருக்கிறார் - அது - இது - எல்லாம். அதனால்தான் எனக்கு எங்களவரைப் பற்றிக் கோபமும் வரவில்லை, ஆச்சரியமும் ஏற்படவில்லை."

"ஏன் உங்களுடையவர் நடத்தை சரியாக இருக்கவில்லையா அத்தை?"

"சரியோ, இல்லையோ? நாலு பேர் அவருடைய சகாக்கள் இருந்தாற்போல அவரும் இருந்தார்."

"அப்படின்னா - அப்படின்னா - வெளியில் எங்காவது?--"

"இருந்தா ஒருத்தி பிடாரி!"

"இருந்தாலும் உனக்கு அவர் மேல் கோபம் இருக்கவில்லை என்று சொல்கிறாயே அத்தை"

"அதுக்காக? குழந்தை அசிங்கத்துல கையை வைச்சிட்டா குழந்தையைக் கோபிச்சிப்பியா? அசிங்கம்னு அதுக்குத் தெரியாது. அதென்னமோ புதுசு. ஒரு வேடிக்கை."

"அதென்ன வேடிக்கை அத்தை? வீட்டிலேயே பெண்டாட்டி அவங்களுக்காக அழுகிறபோது?"

"அழறதுக்கு எனக்கென்ன கேடு? என்னோட சண்டை போட்டாரா? என்னை அடித்தாரா, உதைத்தாரா?"

"ஆனா உன்னை விட்டுட்டு இன்னொருத்தியெ--*

"ஐயோ பைத்தியமே! என்னை விட்டுட்டா? என்னை எங்கே விட்டார்?"

"இல்லை அத்தை. விடறதுன்னா - இப்படி - இல்லே - அதாவது - நீ வீட்டில் இருக்கிறப்போ தினமும் அவர்--"

"தினமுமா? அதனால்தான் சொன்னேன். இந்தக் காலத்துப் பெண்களுக்குக் கல்யாணம்னா அது ஒண்ணுதான்னு. என்னோட அவர் சம்சாரம் பண்ணினாப் போதுமில்லையோ? தினமும் அவர் என்ன செய்கிறார், மற்ற வேளைகளில் என்ன செய்கிறார், அதைப் பத்தியெல்லாம் எனக்கென்ன? எனக்கும் கை நிறைய வேலை இருக்கும். வீட்டு நிறைய ஆட்கள்...அத்தை, மாமனார், மைத்துனர், நாத்தனார், வர்றவங்க, போறவங்க- இதையெல்லாம் விட்டுவிட்டு தினமும் சரசமாடறதுக்கு நான் என்ன பைத்தியமா?"

"அப்போ இதுதான் உன் சுகமான நாட்களின் நினைவு என்று சொல்."

"இது தினசரி விஷயம். சுகமான நாட்கள்ங்கறது வேற இருக்கு."

"இதுலெ அதெப்படிப்பட்ட சுகமோ!"

"அப்படிச் சொல்றியா? கேட்டியானா உனக்குப் புரியும்."

"சொல்றதானா சொல், அத்தை."

"ஹூம்... இதுவரைக்கும் என்னைக் கிண்டிக் கிண்டிப் பேச வைச்சிட்டு, இப்போ சொல்றதுன்னா சொல்லுங்கறியா, கெட்டிக் காரி தான்! வாயில தண்ணி ஊத்திண்டப்புறம் சாப்பிடாம இருப்பாங்களா? சொல்றேன், கேள். ஒரு நாள் எல்லா வேலை யையும் முடிச்சுட்டு எங்க அறைக்குள்ளே போய் படுக்கிறதுக்குத் தயார் பண்ணிண்டிருந்தேன்"

"ஒருத்தியேவா?"

"அப்படின்னா? நான் என்ன பயந்தாங்கொள்ளின்னு சொல்றியா?"

"இல்லே, உங்க வீட்டுக்காரர்...?"

"அவர் சாப்பிட்டதுமே வெளியே போயிருந்தார். சரியாகவும் சாப்பிட்டிருக்கவில்லை. ஏதோ கவலை இருக்கவேண்டும் என்று நானும் பேசாமல் இருந்தேன். ராத்திரி திரும்பி வந்ததுக்கப்புறம் கேட்டுக்கலாம்னு இருந்தேன்."

"ராத்திரி திரும்பி வருவார்ங்கற நம்பிக்கை இருந்ததுன்னு சொல்."

"எதிலுமே நம்பிக்கை இல்லாவிட்டா, சம்சாரத்திலே சுகமே இல்லை குமுதா. அதற்கு முந்தி 3-4 நாளாக அவர் வீட்டுக்கு வந்திருக்கவே இல்லை. நண்பர்களோடு சீட்டாடப் போயிருக்க வேண்டும்னு நினைத்துக் கொண்டேன்."

"சுகத்தையே நினைச்சுக்குற பிடிவாதம் இருந்தது உனக்குன்னு சொல்."

"என்ன சொன்னே?"

தான் சொன்னதன் பொருள் கிழவிக்கு, விளங்கவில்லை போலிருக்கிறது! சிறிது குழப்பமடைந்தாள் தன் கேள்வியைக் கேட்டு.

"எது வரைக்கும் வந்தேன்?"

"3-4 நாளாக உங்க வீட்டுக்காரர் வீட்டுக்கே வந்திருக்கவில்லை, நீ படுப்பதற்குத் தயார் பண்ணின்டிருந்தே--"

"ஹூம். அதற்குள் வாசற்கதவு ஓசைப்பட்டது. எனக்கு ஆச்சரியம். வந்தாலும் இவ்வளவு சீக்கிரம் வரக்கூடியவரல்ல.

சரியாகச் சாப்பிட்டிருக்கவும் இல்லை. ஏதாவது கோபமாயிருக்குமோ என்னமோ..ன்னு...அதுக்குள்ளாக அறைக்குள்ளே வத்துட்டாரு. சட்டையை கழட்டி வைச்சாரு. 'உஷ்'ன்னு சொல்லிகிட்டே வந்து 'சின்னி'ன்னு கூப்பிட்டார்--"

"என்னன்னு கூப்பிட்டார்?"

"சின்னின்னு. நான் கல்யாணத்தின் போது ரொம்ப சின்னவளா இருந்ததனால, என்னைச் சின்னின்னு கூப்பிட ஆரம்பிச்சார். பிறகு சம்சாரம் தொடங்கினப்புறம் என்னைப் பார்த்து, 'டீ, நீ ஆகாசத்துல இருக்கிற நட்சத்திரம். கல்யாணத்தின் போது தூரத்திலிருந்து பார்த்தேன். இவ்வளவூண்டு இருந்தே. இப்ப பக்கத்திலிருந்து பார்த்தா--" என்று - இல்லே - எப்படியோ என்னை சின்னி என்றே கூப்பிட்டு வந்தார். 'சின்னி' என்றார். 'ஏன் இன்னிக்குச் சரியாகவே சாப்பிடலை?'ன்னு கேட்டேன். 'என்ன மோ, தலைவலி சின்னி'ன்னார். 'அமிர்தாஞ்சனம் கொண்டு வரட்டுமா?'ன்னு கேட்டேன். "அமிர்தாஞ்சனம் வரட்டும்'னார்."

"என்ன சொன்னார்?"

"அமிர்தாஞ்சனம் வரட்டும்னார். அவர் பேசுவதே அப்படி. 'எந்த மருந்தும் வேண்டாம் சின்னி. நீ இங்கே வா' என்று சொல்லி என்னை பக்கத்துலெ சேர்த்துகிட்டு, என் தொடைமேலே தலையை வைச்சுப் படுத்தாரு. நான் குனிஞ்சு பாக்கறதுக்குள்ளே அவரு தூங்கிட்டாரு. குமுதா. புருஷங்கன்னா விளையாடற பசங்கன்னு அன்னிக்கு எனக்குப் புரிஞ்சது. வெளியிலெ என்ன வேணா விளையாடட்டும், எவ்வளவு நேரம் வேணா விளையாடட்டும். ஒய்வு. அமைதி. ஆதரவு வேணும்னா வீட்டிலிருக்கிற பெண்டாட்டி கிட்டதான் வரணும் பார்த்துக்க. இன்னிக்கும் - இன்னிக்கி எனக்கு வாயிலெ பல்லில்லை, கண்ணிலெ பார்வையில்லை. தொடையெல்லாம் சுருங்கி நார்போல ஆயிட்டிருக்கு - இருந்தாலும் இன்னிக்கும் அந்த ஞாபகம் வந்துட்டா அன்னித்து இளமை வந்துட்டா மாதிரி இருக்கு பாத்துக்க."

"போறும் போறும் அத்தை!"

"அடி பைத்தியமே! நீ ஏன்டி அழறே?"

"நான் அழவில்லை அத்தை. அழவில்லை" என்று கூறிவிட்டு, தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளமுடியாமல், தன் அறைக்கு ஓடிப் போய்விட்டாள். அன்று இரவைப்போல ஆழ்ந்த தூக்கம் என்றைக்கும் அவள் தூங்கியிருக்கவில்லை.

காலையில் எழுந்துப் பார்த்தால் ராமண்ணா வந்திருக்கிறான்.

கையில் பிடித்திருந்தது. அன்று கையில் பிடித்திருந்தது. இதே புடவையைத்தான்.

உடனே முந்திய இரவின் இனிய நினைவு கனவு போலாகி விட்டது.

"நாசம்! இந்தப் புடவை என்றால் சுகத்தை மறைக்கும் படுதா!"

இருந்தாலும் என்ன காரணத்தினாலோ இன்றுதான் அதையே உடுத்திக் கொண்டிருக்கிறாளே? முன்பு ஒரே ஒரு முறை அதை உடுத்திக் கொண்டபோது மோகனுக்கு ஜுரம் வந்திருந்தது.

சீ! என்ன வேண்டாத யோசனைகள்! மோகன் இப்போது வந்துவிடக்கூடும் என்று ஏமாற்றத்துடன் பதுங்கிக் கொள்பவள் போல, அங்கேயே உட்கார்ந்து கொண்டாள், எதிரில் உள்ள சுவரைப் பார்த்தபடி.

## 6

மலர்ந்த முகத்துடனேயே ஜன்னல்வரை சென்று ஓரிரு. நிமிடங்கள் தொலைவுவரை உற்றுப் பார்த்தாள். கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டாள். என்ன இல்லாவிட்டாலும் இன்னும் 45 நிமிடங்கள் சங்கத்திலிருந்து அழைப்பு வர. இல்லாவிட்டால் வருகிறவர் காரணமில்லாமல் சிரிக்கிற தன்னைப் பார்த்து ஏதாவது நினைத்துக் கொள்ளக்கூடும். காரணம் இல்லாமல் இல்லை. அந்தக் காரணத்தைப் பிறருக்குச் சொல்லும் படியாக இல்லை. அதுவும் அல்லாமல் பத்து வருடங்களுக்கு முந்திய சங்கதி. எல்லாவற்றுக்கும் மேலாகத் தன் ஓர் அனுபவத்தின், சொந்த எண்ணத்தின் விஷயம்.

போகட்டும் விடு என்று நினைத்துக் கொண்டு, நாற்காலியை நோக்கி நடந்தான். நடையைத் திருப்பி புத்தக அலமாரியைப் பார்த்து, அந்தப் பக்கம் சென்று, அலமாரியைத் திறந்து புத்தகங்களைப் பார்க்கத் தொடங்கினான். ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு பிரித்துப் பார்த்தான். சமஸ்கிருத சுலோகம்! புத்தகத்தின் பெயரைப் பார்த்தான். காளிதாச மகாகவியின் அபிஞ்ஞான சாகுந்தலம் நாடகம். சுலோகத்தை இன்னொரு முறை படிக்கத் தொடங்கினான்:

**ரம்யாணி வீக்ஷ்ய மதுராம்ஸ்ச நிஸம்ய சப்தான்**
**பர்யத்ஸுகீ பவதியத் சுகிதோபி ஜந்து:**
**தச்சேதஸா ஸ்மரதி நூநமபோதபூர்வம்**
**பாவஸ்திராணி ஜனனாந்தர சௌஹ்ருதானி**

**(பர்யாகுலஸ்திஷ்டதி)**

ஹூம், ஹூம் என்று முணுமுணுத்த வண்ணம் ராமண்ணா தானும் "பர்யாகுல"நாகவே நின்றுவிட்டான்.

அதனால்தான் அந்தப் புண்ணியவானைச் சிறந்த கவி என்று உலகம் புகழ்கிறது - என்று காளிதாசனுக்கு சர்ட்டிபிகேட் கொடுத்துவிட்டு, சுலோகத்தை மற்றொருமுறை படித்தபடி, நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டான். காளிதாசன் சிறந்த கவி.

அதில் சந்தேகமே இல்லை. வெளி உலகத்தை விட மனிதனின் உள்ளில் இருக்கும் உலகில் பிரவேசித்து, சஞ்சரித்து, நம்மெல்லோருக்கும் உதவும்படி உள்ளங்களின் வரைபடத்தையே எழுதிக் காட்டியிருக்கிறான் என்று சொல்லலாம்.

இன்று தான் உல்லாசமாக இருந்திருக்க வேண்டும். எந்த எழுத்தாளனுக்கும் இல்லாத மரியாதை தனக்கு. பொதுமக்கள் சபை, பொதுமக்களின் பாராட்டு! இனி என்ன வேண்டும்? பொது வரவேற்புக்காகவே என்றாலும், குமுதாவும் தன்னோடு வரவிருக்கிறாள். அவளுடைய ஆடை, அபரணங்கள், அலங்காரம் - எல்லாவற்றிற்கும் மேலாக அவள் அவயங்களில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் துறவு வாழ்க்கை - இவைகளை ஒரு கணம் கண்ணாரக் கண்ட ராமண்ணாவுக்குச் சொர்க்கமே கிடைத்தாற் போலாயிற்று. சொர்க்கம் ஏன்? குமுதா உடுத்தியிருந்த புடவையைப் பார்த்து மோட்சமே கிட்டியது போலிருந்தது.

அந்தப் புடவை! அன்று தான் மனப் பூர்வமாக காதல் காணிக்கை என்று கொண்டு வந்து கொடுத்த புடவை! அந்தப் புடவையை உடுத்தியிருந்த அழகு வடிவத்தைக் கண்டபோது, ஒரு கணம் ஆனந்தமாக இருந்தது. மறுகணத்தில், மறுகணத்திலிருந்து, மனம் சோகமுற்றது, "பர்யாகுல"மாயிற்று. ஏன்? பழையவை நினைவுக்கு வந்ததனாலா? இனி நடக்கப் போவதன் அறிகுறியாகவா?

காளதாசன் சொல்லுகிறான், அழகிய பொருட்களைப் பார்க்கும்போது, பழைய ஜன்மத்து நினைவுகள், நம்மையறியாமலேயே நம்மை மயக்கத்தில் ஆழ்த்தும் என்று.

பழைய ஜன்மத்தவ்வளவு தூரம் போவானேன்? இந்த ஜன்மத்து நினைவே ராமண்ணாவைச் சோர்வு படுத்தத் தொடங்கியுள்ளது. பத்து வருடங்களுக்கு முன்னால் குருட்டு மோகத்தில், பொய் சொல்லி, நண்பனை ஏமாற்றி, தான் அந்தப் புடவையைக் கொண்டு வந்திருந்தான் - குமுதாவுக்கு.

உற்சாகத்தோடு வீட்டுக்குப் போனபோது குமுதாவே இருக்க வில்லை! ஒரு கணம் பயந்து போனான் ராமண்ணா அப்போது. மறுகணம் ஏமாற்றமும் துயரமும், மூன்றாவது கணம் உரக்க வாய்விட்டுச் சிரித்துவிட்டான்.

சிரிப்புக்கும் சந்தோஷத்திற்கும் சம்பந்தமில்லை. மிகுந்த வேதனையை அநுபவித்துக் கொண்டிருக்கும் இதயத்திலிருந்தும் கூட, சிரிப்பு உதயமாகும் என்பதை, அன்றைய அனுபவத்தி லிருந்து அவன் தெரிந்து கொண்டான். அன்று தான் சிரித்தது எதற்காக? நாடக பாத்திரமாக இருந்தால், ஏன் என்பதை நீண்ட ஒரு தனியுரை மூலம் மற்றவர்களுக்குத் தெரியாமல் தெரியப் படுத்தக்கூடும். "அடே மடையா, ராமண்ணா! எப்படியாயிற்று பார்த்தாயா உன் நிலையை! எப்படிப்பட்ட அடி விழுந்தது உன் கன்னத்தில்! ஹஹ்ஹ! புடவை கொண்டு வந்திருக்கிறாயா? ஹஹ்ஹ! புடவை கொண்டுவந்திருக்கிறாயா? ஹஹஹஹ! குமுதாவுக்காக அடே காதல் துரோகி! உனக்காகத் தன் உயிரையே கொடுத்த, நீயே என் உயிர் என்று சொல்லிக் கொண்டிருந்த உன் மனைவி சரளா பிழைத்திருந்த போது, ஒரு முறையாவது, அவளுக்காக இதில் பாதியளவாவது நன்றாகயிருந்த புடவையைக் கொண்டு வந்து கொடுத்திருக்கிறாயா? ஹ! இப்பொழுது கொண்டு வந்திருக்கிறான்! யாருக்காக?..." ஆனால் இந்தப் பிரசங்கம் தன் காதுகளுக்கே கேட்காத அளவுக்குத் தனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டு தான் அன்று சிரித்திருக்கவேண்டும்.

பத்து வருடங்களுக்குப் பிறகு, இன்று எண்ணிப் பார்த்தால்? துணிச்சலோடு எண்ணத்தை எதிர் கொண்டால்?

ராமண்ணா சட்டென்று பயப்பட்டான். உள்ளிருந்து எழுந்த கேள்விக்குச் சரியாகத் தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தது திடீரென்று கவனத்திற்கு வந்தது. எதிரே சுவற்றில் சரளாவின் படம்!

முகமெல்லாம் முறுவல் படத்தில். உதடுகளில், வாயில், கன்னங்களில், கண்களில் - பார்க்குமிடமெல்லாம் சிரிப்பு. வண்ணத்திற்குப் பதிலாக சிரிப்பிலேயே பிரஷ்ஷைத் தோய்த்து எழுதியது போலிருந்தது சித்திரம். முதலில் வறுமை, பிறகு நோய். சுகத்தைக் காணாமலே சிரிக்கும் வாழ்க்கை சரளாவுடையது.

"என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் ஒரு தடவை.

"எழுதிக் கொண்டிருக்கிறேன்" என்று தான் பதிலளித்தான்.

"போதும் நிறுத்துங்கள். எப்பப் பார்த்தாலும் என்ன எழுத்து? என்ன சுகம் இருக்கிறதோ அதிலே?"

"சரளா, உனக்குச் சுகம் கொண்டு வந்து கொடுக்கவேண்டும் என்கிற அவசரம் எனக்கு. அதற்காகத்தான் இப்படி ஒரே மூச்சாக எழுதிக்கொண்டே இருக்கிறேன்."

"எனக்கா? இன்னும் எனக்கு என்ன சுகத்தைக் கொடுக்கிறே னென்கிறீர்கள்? வயிற்றுக்குள் அடங்க வேண்டுமா, வேண்டாமா?"

"அதிகமாக வெளியில் தெரியவேண்டும் அப்போதுதான் உனக்கு நன்றாக சோபிக்கிறது" என்று கூறித் தான் - கண்ணீருடன் இதை நினைவு படுத்திக் கொண்டான்.- அவள் உதடுகளின் மீது லேசாகத் தன் விரல்களால் தட்டிக் கொடுத்தான். அப்பொழுது தான் வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டிருந்ததால் சிவப்பு ரசம் உதடுகளில் ஊறிக் கொண்டிருந்தது. "இப்படிப் வெளியில் தெரியவேண்டும்" என்றிருந்தான்.

"பேசுகிறபடியே எழுதக் கூடாதா? உங்கள் புத்தகங்களின் விற்பனையாவது ஆகும்."

"பேசுவதைக் கேட்பவள் வீட்டிலிருக்கும் பெண்டாட்டி. எழுதியதைப் படிப்பவர்கள் மற்றவர்களின் மனைவியர்"என்று அவன் சிரித்தான்.

"அவர்கள் படிப்பதற்கு ஒரு நாள் தாமதமாகும். இன்றைக்கு எழுதாதீர்கள்."

"ஏன்? இன்னிக்கு என்ன?"

"இன்னிக்கு என்ன? உங்கள் கையைப் பிடித்த அன்றிலிருந்து--"

"ஆங். இரு. இரு! துத்! மறுபடியும் மறந்துவிட்டேன் நான்! இந்தத் தடவையும் மறந்து விட்டேன். சரளா, என்னை மன்னித்து விடு. எழுதுகிற இந்த அற்பமான சுய காரியத்தில் இன்று நமது விவாகத்தின் ஆண்டு விழா என்பதையே--"

சரளா தன் வாயின் மீது கையை வைத்துத் தடுத்தாள். "அப்படிச் சொல்லாதீர்கள். வருடத்தில் ஒரு நாள் விழா மட்டும் அல்ல நமது விவாகம். எனக்கென்னமோ ஒவ்வொரு நாளும் விழா நாளாகவே தோன்றுகிறது."

"சரளா, உன்னைப் போன்றவளின் கையைப் பிடிப்பதற்கு எனக்கு தகுதியில்லை. அந்தத் தகுதியைப் பெற ஜன்மங்கள் பல எடுக்கவேண்டும்."

"அந்த ஜன்மங்கள் எல்லாவற்றிலும் நானும் உங்களைத் தொடர்ந்து கொண்டே இருப்பேன்" என்று கூறி அவளும் சிரித்தாள்.

"போன ஜன்மத்தில் நீ ஒரு துரும்பைக் கூடக் கையால் எடுத்துக் இன்னொருத்தருக்குக் கொடுத்திருக்க மாட்டாய் சரளா."

"ஏன்? அப்படி ஏன் தோன்றியது உங்களுக்கு இப்போது?"

"என்னைப் போன்ற தரித்திரம் உனக்கு கணவனாக வந்து வாய்த்திருக்கிறானே? ஒரு நாள் நல்ல புடவை கொண்டு வந்து கொடுக்கக் கூட சக்தி இல்லை. உன் அழகுக்குத் தகுந்தபடி!"

"மனைவியின் அழகு பிரகாசிப்பது அவள் உடுத்துகிற சேலையினால் அல்ல; அவளைக் கைப்பிடிக்கிறவன் அளிக்கிற நேசத்தால்."

"அப்படியானால் அழகுக்கும் Concession rate இருக்கிறதென்று சொல்."

அதற்கும் சரளா சிரித்தாள். எந்தப் பேச்சுக்கும் சிரிப்புத்தான் இருக்கும்போதும் சிரிப்பு. இப்போது - இப்போதும் படத்தில் சிரிப்பு!

ராமண்ணா நெடுமூச்செறிந்தான். "பர்யாகுல" காளிதாசன் எங்கும் நிறைந்தவனாக இருந்தானோ? சுகத்தின் நினைவால் துயரம் ஏற்படும் என்று எவ்வளவு சரியாகச் சொல்லியிருக்கிறான்!

ஹும்...இன்னொரு விஷயத்தை மட்டும் காளிதாசன் சொல்ல வில்லை. அதைத்தான் அனுபவத்தில் காண்கிறான். அது, துயரத்தின் நினைவால் சந்தோஷம் தோன்றுவது! இல்லா விட்டால் பழையதையெல்லாம் தான் ஏன் நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்?

மற்றொரு முறை கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். ஹும். எண்ணங்களின் வேகத்திற்கும் கடியாரத்தின் வேகத்திற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது. இன்னும் 42 நிமிடங்கள் தன்னுடைய பாராட்டு விழா வரவேற்புக் கமிட்டி-வருவதை எதிர்பார்ப்பதற்கு! இப்பொழுதுதான் சிறிது கம்பீரமாக உட்கார்ந்து கொள்ள முயலவேண்டும்... மறுபடியும் சிரிப்பு வந்தது. சே! அந்தப் புடவையின் நினைவைச் சுவைத்தே வருவோம். அடக்கி வைத்தால் வரவேற்புக் கமிட்டியினர் வரும்போது நினைவுக்கு வந்து ஆபத்தில முடியும்.

தூ! இதென்ன சிறு பிள்ளைத் தனம் என்று நினைத்து மறுபடியும் நாற்காலியிலிருந்து எழுந்திருந்தான். ஏன் இந்தப்

பாழும் நினைவுகள்? முதுகுக்குப் பின்னால் கைகளைக் கட்டிக் கொண்டு அறையின் நெடுகிலும் அடி எடுத்து வைத்து நடந்தான். முதல் மனைவி இறந்து போனாள். அவள் இறப்பதற்கு முன்னால் ஏதோ காரணத்தினால் வீட்டிலிருந்த இன்னொருத்தியின் மீது மோகம் கொண்டேன். படுக்கையில் .கிடக்கும் மனைவிக்குத் தெரியாதபடி, அந்த இன்னொருத்தியுடன் விபசாரம் புரிந்தேன். அந்தப் பெண் கர்ப்பம் தரித்தாள். மனைவி இறந்தாள். அந்தப் பெண்ணை மனம் புரிந்து கொண்டேன். உலகில் தினமும் எவ்வளவோ பேர் இந்த மாதிரி நடந்து கொள்ளக்கூடும் இல்லையா? அவர்களுக்கெல்லாம் இல்லாத மனவேதனை எனக்கு மட்டும் ஏற்படுவானேன்? அல்லது விபசாரத்தை ஏற்றுக் கொள்ளமுடியாத பயந்தாங்கொள்ளியா நான்?

சே! 'விபச்சாரம்' என்று குமுதாவை அவமானப் படுத்துகிறேன். அது விபசாரம் அல்ல. உண்மையில் அது--

அது என்ன! காதலா? காமமா?

இன்றைக்கும் பேச்சுக்கும் பேச்சு சரளாவின் இனிய நினைவு தனக்கு வருவதால், தனது காதல் இன்றைக்கும் சரளாவின் பேரில்தான் என்று நம்பியிருக்கிறான். ஏன்? இருவரையும் ஒரே மாதிரியாகக் காதலிப்பது சாத்தியமில்லையா? இல்லாவிட்டால், விவாகத்திற்குப் பிறகு இல்வாழ்க்கை நடத்தியதால் முதல் மனைவியிடம் காதல், இல்வாழ்க்கை நடத்திய பிறகு கல்யாணம் செய்து கொண்டதனால், இரண்டாமவளான குமுதாவிடம் விபசாரம் என்று சொல்லவேண்டுமா?

சில சமயங்களில் குமுதாவின் மீதும் தனக்குக் காதல் இருக்கிறது - இல்லை, இருந்தது- ஏன் இருக்கக்கூடாது - என்று தோன்றும் ராமண்ணாவுக்கு. அன்று தான் புடவையை எடுத்துக் கொண்டு போனபோது, குமுதா வீட்டில் இல்லாமலிருந்ததைக் கண்டு முதல் கணத்தில் தன் உள்ளத்தில் ஒரு சூனியம் அனுபவட்படவில்லையா? அது காதலின் அறிகுறியல்லவா? பின்னால் அடுத்த கணத்தைப் பற்றிய பேச்சு வேறு. அப்பொழுதுதான் அறிவுபூர்வமாக யோசித்து, உள்ளத்தின் கொதிப்பில் சிரிப்புப் பொறிகளைப் பறக்க விட்டிருந்தான். ஆனால் முதல் கணத்தின் மனத்தின் சூனியத்திற்கு என்ன பொருள்?

இருந்தாலும் ராமண்ணாவுக்குச் சந்தேகம். குமுதாவின் பேரில் தனக்கு உண்மையான காதல் இருந்தால், அவளுக்குத் தன் மீது இவ்வளவு வெறுப்பு ஏற்பட்டிருக்காது. இன்றைக்குப் பத்து

வருடங்களாகிவிட்டன தாங்கள் ஒருவரின் நெருக்கத்தை மற்றவர் விரும்பாமல் குடும்பத்தை நடத்தித் தொடங்கி. அப்படியிருந்தும் தனக்கு வேறு எங்கும் அக்கறை தோன்றவில்லையே? இது உண்மைக் காதலின் லட்சணமாக இருக்குமோ?

யோசனைகளின் சுமையால் களைத்துப் போன ராமண்ணா, மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். சட்டென்று குமுதாவின் உருவம் அவன் கண்ணெதிரே நின்றது... சுற்றுமுற்றும் பார்த்தான்...சாட்சாத் குமுதா அல்ல; தன் மனம் உருவாக்கிய வடிவம்... மனம் அல்ல, நினைவு முன்னால் கொண்டு வந்து நிறுத்திய உருவம். பத்து வருடங்களுக்கு முன்னால், அவள் வீட்டில் காணப்படாத போது தான் சரியாக ஊகித்து அவனுடைய அத்தை வீட்டிற்குச் சென்றபோது தன் எதிரே நின்ற உருவம்.

அவள் முகத்தில் மலர்ந்திருந்த புன் சிரிப்பைக் கண்டு ராமண்ணா பயப்பட்டான். வழி நெடுகிலும் அநேகர் சிரித்திருந் ததினால் அவனுக்கு அந்த பயம் தோன்றியிருந்தது---ஹூம் ஜனங்கள்தான் சிரிக்காமல் என்ன செய்வார்கள்?

குமுதா வீட்டிலில்லாததால், அவன் மனநிலை எப்படியெல் லாமோ மாறிக் கடைசியில் அவள் அத்தை வீட்டிற்குத்தான் போயிருக்கவேண்டுமென்று ஊகித்திருந்தான். அதற்குள்ளாக எவ்வளவோ இடங்களில் தேடிப் பார்த்துவிட்டு வந்திருந்தான். யாரையும் கேட்கிறார்போல இல்லை. இன்னொருத்தருக்குத் தெரியும்படியான விஷயமும் இல்லை. இவ்வாறு அவதியுற்று அலைந்து திரிந்து ஒரு தீர்மானத்திற்கு வந்து, ரயில்வே ஸ்டேஷன் சாலையைப் பிடித்துக் கொண்டு, டிக்கெட் வாங்கி, கம்பார்ட்மேண்ட்டுக்குள் அவன் ஏறி உட்காருவதற்குள்ளாக வண்டி புறப்படும் நேரமாகிவிட்டிருந்தது. உள்ளே நுழைந்தவன் மற்ற முதல் வகுப்பு பிரயாணிகள் வியப்புடன் தன்னைப் பார்த்தனர். ஏன் பார்க்க மாட்டார்கள் என்று நினைத்தபடியே காலியாக இருந்த 'பெர்த்'தைப் பிடித்துக் கொண்டான். யாருடனும் பேசவேண்டுமென்று தோன்றவில்லை. மற்றவர்களும் இவனுடன் பேச்சுக் கொடுக்கவில்லை. மற்றவர்களும் இவனுடன் பேச்சுக் கொடுக்கவில்லை. ஆனால் அவ்வப்பொழுது விழியோரத் தால் பார்த்துக் கொண்டு மட்டும் இருந்தார்கள். எவ்வளவு நேரமானாலும் தூக்கம் வரவில்லை. நேரம் வந்ததும் மற்றவர்கள் தங்கள் படுக்கையை விரித்தனர். இதற்குள் ராமண்ணா

களைப்பால் நொந்து, படுக்கலாம் என்கிற எண்ணத்துடன் படுக்கையை--

தூ! எப்படிப்பட்ட மடையன் தான்! என்ன நகைப்புக்கிடம் தன்னுடைய நிலைமை! தான் புறப்பட்டபோது கையில் அந்த ஒரு புடவையை மட்டுமல்லவா வைத்திருந்தான். இப்போது அதையே தன்னுடைய படுக்கையாக விரித்துக் கொண்டிருக்கிறான். மற்ற பிரயாணிகளுக்கு இது மிக்க வேடிக்கையாக இருந்தது. கடைசி யாகத் தனது கேலிக்குரிய நிலையை நினைத்து அவனுக்கெ சிரிப்பு வந்து விட்டது.

இருந்தாலும் மற்றவர்கள் தன்னை அந் நிலையில் கண்டு, வழிநெடுகிலும் சிரித்திருப்பார்களே என்று நினைத்து, ராமண்ணா குமுதாவைச் சந்திக்கத் தயங்கிக் கொண்டிருந்தான். தன் முகத்தில் என்ன அவலட்சணம் வழிந்து கொண்டிருக்கிறதோ! இப்பொழுது குமுதாவும் தன்னைப் புன்சிரிப்புடன் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அன்று காலையில் தன்னை எந்தப் பார்வையுடன் பார்த்திருந்தாளோ அதே சிரித்த முகம் கொண்ட அவள் உருவம், இப்பொழுது ராமண்ணாவின் கண்ணெதிரில் நின்றிருக்கிறது.

ராமண்ணா யோசித்தான். இன்றைக்குப் பத்து வருடங்க ளானாலும் தன் கண்ணெதிரே நிற்கும் குமுதாவின் உருவம் அன்றையதேதான். எவ்வளவு முயன்று பார்த்தாலும், மற்றெந்தக் காலத்துக் குமுதாவின் உருவத்தையும் அவனால் நினைக்க முடியவில்லை. இது எத்தகைய மனத்தின் மோசடி? அல்லது உலகின் மனிதனின் விவகாரமே இப்படித்தானோ? அதனால் தான் சங்கராச்சாரியார் உலகமே ஒரு மாயை என்று சொல்லியிருக்கக்கூடுமோ? எந்தப் பொருளும் தான் இருப்பதைப் போலக் காட்சியளிக்காதோ? பார்ப்பவனின் விருப்பம் போலும் நேசம் போலும் அந்தப் பொருளுக்கு வடிவம் வருவதோடல்லாமல் அதே வடிவம் கடைசி வரையிலும் நிற்கும்..

ஹூம்.. தத்துவஞானத்தோடு இவ்வளவு திணித்தாலும் வீண், ஆத்ம வஞ்சனை. இருப்பதை ஒத்துக்கொண்டே ஆகவேண்டும். குமுதா தன்னை முதலில் வசீகரித்தது காம மோகன வடிவத்தால். எப்பொழுதும் தன் கண்ணெதிரில் நிற்பது அந்தக் காம மோகன வடிவமே. வா என்று குறிப்பாக ஜாடை செய்கின்றனவோ என்று நினைக்கும்படியான பார்வையுடைய கண்கள், கண்டவுடன்

கட்டியணைக்கவேண்டும் என்று தோன்றுகிற தோள்கள், அருகில் சென்றால் காந்தம் போல இழுத்துக் கொள்ளும் உதடுகள், திரண்ட மார்புகள், அடியெடுத்து வைத்து நடக்கும் போது குலுங்கும் தொடைகள்--

தனக்கு வெட்கமில்லையா என்று சில சமயங்களில் தோன்றும். ஆனால் அங்கே வெட்கம் என்கிற பேச்சே இருக்கவில்லை. தான் அறிவுபூர்வமாகச் சங்கல்பித்துக் கொள்ளுகிற சித்திரமாக அது இருக்கவில்லை; அதை அழிக்கவும் மறைக்கவும் கூடிய சக்தி தனக்கு இருக்கவில்லை. அன்று அத்தை வீட்டுக்குப் போனபோது, பிரத்தியட்சமாகக் குமுதா எதிரே நின்றபோது, அவள் முகத்தில் புன்முறுவலைக் கண்டபோது, ராமண்ணாவின் கண்கள் இருளடைந்தாற்போல ஆயின ஒரு கணம்.

ஓஹோ! ராமண்ணாவுக்குச் சரியாக நினைவுக்கு வந்தது. புடவையைக் கொண்டு போனபோது அல்ல. இரண்டாவது தடவை, முதலில், மோகன் பிறப்பதற்கு முன்னால், கல்யாணமான கொஞ்ச நாட்களுக்கெல்லாம் குமுதா அத்தை வீட்டிற்கு முதல் முறை போயிருந்தாளே? அப்பொழுது ஒரு தடவை தன் நிலை அது போலவே ஆகிவிட்டிருந்தது. அப்பொழுதும் குமுதா தன்னைச் சிரித்த முகத்துடன் தான் எதிர் கொண்டாள். அப்பொழுது - இப்பொழுது! எப்பொழுதானால் என்ன? குமுதாவை நினைக்கும் போதெல்லாம் அவளுடைய ஒரே உருவத்தின் வடிவம் தன் கண் எதிரே நிற்கிறது. அப்பொழுது முதல் தடவை, மோகனைப் பெறுவதற்கு முன்னால், கல்யாணம் என்கிற சடங்கு முடிந்தபிறகு, அகஸ்மாத்தாகத் தன்னிடம் வெறுப்பேற்பட்டுப் போயிருந்தாளே! அன்றைய அனுபவத்தை நினைத்தால் இன்றைக்கும் உடல் ஜும் என்கிறது. சிரித்த முகத்துடன் அவள் நிற்கிறாள். பேச இயலாதவனாகத் தான் நிற்கிறான். தாய்மை எய்தவிருப்பதாலோ என்னமோ, அவள் முகத்தில் பெருந்தன்மையின் களையும், கண்களில் கருணையின் திருஷ்டியும் இருக்கிறது. அவைகளை எதிர்க்க முடியாமல் தான் குற்றவாளியைப் போல நின்றிருக்கிறான். எவ்வளவு நேரம் அப்படியே நிற்கவேண்டிவருமோ என்கிற பயம். அந்த உருவம் அவ்வளவு நேரம் எதிரே நின்றால், தான் நிதானம் தவறி நடத்துவிடக்கூடும் - இது நிச்சயம் - என்று நினைத்துக் கொண்டிருக்கும் போது உள்ளேயிருந்து கிழட்டுக் குரல் கேட்டது:

"குமுதா யார் அது ஆம்பிளை வந்தது?"

என்ன பதில் சொல்லப் போகிறாள்? தனக்குத் தெரியாதென்றா? நண்பனென்றா? தூரத்து உறவினன் என்றா? யாரோ காலிப்பயல் என்றா?

"அத்தை என் வீட்டுக்காரர் வந்திருக்கிறார். வா இங்கே"

அந்தக் கணத்தில் ராமண்ணாவுக்குத் தைரியம் வந்தது, நம்பிக்கையும் ஏற்பட்டது - குமுதா இன்னும் தன்னை விரும்புகிறாளென்று. 'என் வீட்டுக்காரர்' என்று சொன்னதில் அவ்வளவாக நெருக்கம் இருந்ததாகத் தோன்றவில்லை.

"அட, உன் புருஷனா? ஏன் இப்படி வந்திருக்கிறான்? பள்ளிக்கூடத்திலிருந்து தப்பி ஓடி வந்த பையன் மாதிரி?" என்று கூறிக் கொண்டே கிழவி அறைக்குள் வந்தாள். சித்திரப் பாவைகள் போலத் தாங்கள் இருவரும் நின்றிருப்பதைப் பார்த்து, கிழவியின் கண்களில் குறும்பு பிரகாசித்தது.

"ஏம்பா, கல்யாணத்துக்கு இந்தக் கிழவியைக் கூப்பிடாட்டாலும் முதல் பிரசவத்துப் பொறுப்பு மாத்திரம் என் தலையிலே கட்டிட்டியா?"

தான் பதில் சொல்லாமல் பைத்தியக்காரனைப் போலப் பல்லைக் காட்டியிருந்தானோ!

"சிரிப்பா, சிரி. ஒரு நாள் இல்லைன்னா ஒரு நாள் எல்லாரும் இப்படிக் கிழடாகவேண்டியவர்கள்தான். அதனால வயசு இருக்கறப்பவே சிரிக்கிறது, குதிக்கிறது எல்லாம் செஞ்சுடணும். ஏன் இப்படி நிக்கறே, குமுதா? வீட்டுக்கு வந்தவங்களை உக்காரச் சொல்றதில்லையா?"

"வீடு உன்னிது, அத்தை"

"எஜமானன் உன்னுடையவன். நீ இருக்கிற இடத்துலெ அவன் வீடு. உட்காரப்பா. ஓய்வெடுத்துக்க, அவள் ஊர் சமாச்சாரமெல்லாம் பேசி உன் தலையை உருட்டாமலிருந்தால். நான் டீ போட்டுகிட்டு வர்றேன். அப்புறம் குளிப்பியாம். பெண்டாட்டி எங்கே ஓடிப் போயிடப் போறாளோன்னு அவ வந்த மறுநாளே நீயும் வந்துட்டே."

தன் பதிலை எதிர்பாராமல் கடைசி வார்த்தைகளைத் தனக்குத் தானே பேசிக் கொண்டு கிழவி போன பிறகு, ராமண்ணாவுக்கு கொஞ்சம் தைரியம் வந்திருந்தது.

"குமுதா--?"

"என்ன?"

"என் மேல் கோபமா?"

"ஏன்?"

"இந்தக் கல்யாணம் உனக்கு வேண்டியிருக்கவில்லையா?"

"இல்லாவிட்டால் தெருத் தேவடியாளாகியிருப்பேன். உங்கள் கருணையினால் தப்பித்தேன்"

"தெரிந்தது. என் மேல் கோபம் உனக்கு."

"உங்கள் மேல் அல்ல. என் மேல்."

"உங்கள் இனிப்பான வார்த்தைகளில் மோசம் போய்--"

"குமுதா, குமுதா, அப்படிச் சொல்லாதே. இருவரும் மனமொப்பிக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறோம்."

"கல்யாணம் ஆனதினாலே, பிறக்கிற குழந்தையின் பேருக்கு முன்னால் தந்தையின் பெயரைச் சேர்த்துக் கொள்ளலாம். எனக்கென்ன--"

"குமுதா, உன்னை மனப்பூர்வமாக--"

"போறும் உங்கள் மனப்பூர்வம். நீங்கள் எழுத்தாளர், வார்த்தை களின் முக்கியத்துவம் தெரிந்தவர். அதனால்தான் மனப்பூர்வமாக என்று சொல்கிறீர்கள். 'இதயப்பூர்வமாக' என்று தவறிக்கூட--"

"ஏன், குமுதா, இன்னும் பேசிகிட்டே இருக்கியா?" என்று கேட்டபடி கிழவி உள்ளே வந்தாள். அதை ராமண்ணா என்றைக்குமே மறக்க முடியாது. அப்பொழுது அந்தக் கிழவி வந்திருக்கவில்லை என்றால், சந்தர்ப்பத்தின் ஆவேசத்தில் தான் எதையாவது சொல்லிவிட்டிருப்பானோ என்னவோ! கிழவியின் வருகையால் சந்தர்ப்பத்தின் ரசம் - ஆவேசம் இரண்டும் பங்கமடைந்தது. அதனாலேயே தனக்குத் தைரியம் வந்திருக்கிறதோ என்னவோ! குமுதாவுக்கு அப்பொழுது சொன்ன வாக்குகள் இப்போதும் தனக்குச் சிக்கலாக இருப்பதை அநுபவிக்கிறான். பத்து வருடங்கள் கழிந்துவிட்டன, சிக்கல் போகவில்லை.

குமுதாவைத் தான் நேசிக்க முடியும், நேசிக்கிறான் என்று சொல்லலாம், ஆனால் சரளாவின் நினைவு மங்கும் வரையில் குமுதாவின் மீதும் தனக்குக் காதல் என்று எப்படி தைரியமாகச் சொல்லுவான்? அன்று அந்தக் கேள்வியைக் குமுதாவிடமே கேட்டிருந்தான். அவளுடைய பதில் நிஷ்டூரமாக இருந்தது.

"உங்கள் காதல் வேண்டாம், உங்களோடு வாழ்க்கை வேண்டாம்" என்று சொல்லியிருந்தாள்.

ஆனால் கடைசியில் சம்மதித்திருந்தாள், தன் வீட்டில் உபசாரத்திற்காக இருக்க, ஒரு நிபந்தனையின் பேரில்.

தற்சமயத்தில் பிரசவம் ஆகும் வரையில் அவள் அத்தை வீட்டிலேயே இருப்பாள். அதன் பிறகு தன்னிடம் வந்தால், தான் அவளுடன் இல்வாழ்க்கையின் உரிமையைச் செலுத்தக்கூடாது.

"சம்மதம். சந்தோஷத்துடன் சம்மதிக்கிறேன்" என்றிருந்தான்.

சம்மதிக்கிறேன் என்று சொல்லியிருந்தான். தனக்கே ஆச்சரியம். என்ன சந்தர்ப்பம்? எதை ஒப்புக் கொள்கிறேன்?_கடைசியாக நினைவுச் சித்திரங்களை அனுபவித்ததை உணர்ந்து - நீண்ட பெருமூச்சு விட்டு - காளிதாசன் மகாகவி என்பதை ஒப்புக் கொண்டேன் என்று சொல்லிக் கொண்டான்.

## 7

"அன்றைக்கு ஒத்துக்கொண்டது தவறாகப் போய்விட்டது" என்று குமுதா எதிரிலிருந்த சுவரை நோக்கிக் கூறினாள். இன்றுதான் கணவனின் பாராட்டு விழாவுக்கு அவனுடைய நிழல் போல, வேறு வழியில்லாமல், இழுக்கப்படுவது அன்றையத் தவறுக்குச் சரியான பிராயச் சித்தம் என்று நினைத்துக் கொண்டாள். எவ்வளவானாலும் பெண்ணின் சுபாவம்; மறுபடியும் கண்ணாடியின் முன்னால் முகத்தைத் திருப்பியபடி உட்கார்ந்து கொண்டாள். முகம் தெரியவேண்டும், புடவை தெரியக்கூடாது என்றால் எப்படி நடக்கும் பைத்தியக்காரி - என்று தன்னைத்தானே கேலி செய்து கொண்டாள். இல்வாழ்க்கையில் சௌகரியங்களும் வேண்டும், அசௌகரியங்களும் கூடாதென்றால் எப்படி நடக்கும்? கல்யாணத்திற்கு முன்னால் தான் எப்படி நடந்து கொண்டிருந்த போதிலும், இப்பொழுது கல்யாணமான குடும்பப்பெண், "புருஷனுள்ள சுமங்கலி"-! வயிற்றுக்கும் துணிமணிக்கும் குறைவு இல்லை! சுகத்திற்கு உரிமை இல்லை!

அன்றைக்கே தான் தைரியமாக நடந்துகொண்டிருக்கவேண்டும்.

வயிற்றிலிருந்த சிசுவுக்காகத்தான் இளகிவிட்டாள். அதற்காக ஆரம்பத்தில் அந்தக் குழந்தையின் மீது கோபம் இருந்தது. ராமண்ணாவின் குழந்தை - அதைப் பார்க்கும்போதெல்லாம் ராமண்ணாவை மறக்கமுடியவில்லை. ராமண்ணாவை நினைக்கும் போதெல்லாம் - இப்பொழுதும் உடல் புல்லரிக்கிறது குமுதாவுக்கு!

ஒரு வகையில் தன்னுடைய ஆனந்த கோபுரத்தின் கலசமாகி இருந்தது அந்தக் குழந்தை.

"குமுதா, உன் உடம்பு நிறைஞ்சிருக்கிறதைப் பார்த்தா நீ ஆண் குழந்தையைத்தான் பெறப்போறே - ன்னு தோணறது" என்றாள் ஒரு நாள் கிழவி.

"எப்படி ஆகணும்மா அப்படி ஆகும். இதெல்லாம் யார் கையில் இருக்கு அத்தை?" என்றுதான் கொஞ்சம் பெரியவளைப் போலச் சொன்னாள்.

"ஹூம். இப்போ சொல்லு இதெல்லாம் யார் கையிலெ இருக்ககுன்னு" என்று கிழவி தன்னை கேலி செய்தாள்.

குமுதா அவ்வப்போது யோசிப்பாள். இதென்ன ரகசியம்? மனிதன் முழுவதுமாக மற்ற சக்திகளுக்குக் கட்டுப்பட்டவன் என்றால், மனிதனின் பிறப்பையே பார்க்கவேண்டும். தனக்கு இது தெரிந்திருந்ததா? இப்பொழுது கேட்டால், "தெரிந்திருந்தது" என்று சொல்லலாம், நிஜம். ஆனால் அப்போது? அப்பொழுது வேறு ஒன்றும் தெரிந்திருக்கவில்லை, எந்த விருப்பமும் இருக்கவில்லை.

என்ன ஆச்சரியம்! இப்போது நடந்தவைகளையெல்லாம் கண்டு, யோசித்து, கணக்குப் போட்டு பார்த்து, நன்மை-தீமைகளை எண்ணிப் பார்த்த பிறகு, ராமண்ணாவின் மேல் கோபம். ஆனால் அத்தை சொல்வது உண்மையானால், ராமண்ணா எல்லா ஆண்களையும் போல அல்லது ஆண்களெனும் ராமண்ணாவைப் போல. பசிக்கும்போது சுவை. வயிறு நிரம்பிய பிறகு உறக்கம். உலகில் இது வழக்கம். ராமண்ணாவின் தவறுதான் என்ன? தவறு தன்னுடையது தான். கை கொட்டுவதற்கு இரண்டு கைகள் வேண்டும். உயிருக்கு இரண்டு உயிர்கள் வேண்டும். புதிய இலை துளிர்க்க வேண்டுமானால் பழைய இலை உதிரவேண்டும். உண்மை, ஆனால் அந்தப் பழைய் இலை தான் ஒருத்தியே ஏன் ஆக வேண்டும்? ராமண்ணாவும் ஏன் உதிரக்கூடாது.

சிறிது சிறிதாகக் குமுதாவில் ஒரு வகையான மென்மை தோன்றியது. ராமண்ணாவின் காம விளையாட்டுக்கு மோசம் போய்விட்ட அறியாத சிறுமி தான் என்கிற எண்ணம் பின்னடைந்து, ஒரு புதிய ஜீவனைப் படைத்து வளர்க்கிற தாய் தான் என்கிற எண்ணம் அவளை மகிழ்வித்தது. அந்தத் தகுதி தன்னில் இருக்கிறதா என்று தன் அனுபவமில்லாமைக்குப் பயம். அந்தத் தகுதி தன்னில் தோன்றிக் கொண்டிருக்கிறது என்று நாளுக்கு நாள் ஏற்பட்டுக் கொண்டிருந்த அனுபவத்திற்காக உற்சாகம். தொடைகளின் கனம் அதிகரிக்க அதிகரிக்கச் சந்தோஷம். பிறக்கும் குழந்தையை உட்காரவைத்து, விளையாட்டுக் காட்டி, வளர்க்க ஆதாரமாக இருக்கக்கூடிய சக்தி அவைகளுக்கு வேண்டுமல்லவா? சில சமயங்களில் ஏதோ ஒரு

சொல்லமுடியாக வேதனை உள்ளத்தில், இல்லை, உள்ளத்தில் அல்ல, குழந்தையின் ஆகாரத்துக்காக முன் தயாரிப்புகள் நடந்திருந்த உடலின் மாறுதல் அது என்று சந்தோஷமடைவாள்.

பாவம்! ராமண்ணாவின் மேல் கோபித்துக் கொண்டு என்ன பயன் என்று, அவ்வப்பொழுது நினைத்துக் கொள்வாள். எவ்வளவானாலும் ஆண்! கணத்திற்குக் கணம் மாறுகிற புத்தி, கணநேர சுகத்திற்காக ஆசை! நிரந்தரமான தாய்மைச் சுகத்தின் அனுபவம் ஆணுக்கு இருப்பதில்லை. எல்லா ஆண்களையும் போல ராமண்ணாவும், என்று அவன் மீது கருணை கொள்வாள். அதே நினைவுப் பாதையில் தனக்கு ஆண் குழந்தை பிறக்குமென்கிற நம்பிக்கையில் அந்த ஆணுக்காகவும் சில முறை கருணை கொள் வாள். கண்ணாடியின் முன் உட்காரும் பொழுது, பெருமையின் புன்முறுவல் அவள் முகத்தில் தோன்றும். பைத்தியக்கார ஆண்! இந்த அழகுக்கு மனம் இழந்ததில் ஆச்சரியமென்ன?

சில சமயங்களில் நினைவுகளின் ஓட்டத்தில் சரளக்கா ஞாபகத்தில் வருவாள். பாவம்! எந்த சுகத்தையும் காணாமல், ஏங்கி ஏங்கி உயிரை விட்டாளே! வீடு என்றால் குழந்தை குட்டிகள் நிறைந்திருக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தாள் அவள். ஹூம்– தான் அப்பொழுது எவ்வளவு அறியாத அப்பாவியாக இருந்தாள்! ஒரு நாள் அக்காவுடன் பேசிக் கொண்டிருந்த போது, தான் கேட்ட ஒரு கேள்வி எவ்வளவு பைத்தியக்காரத்தனமாக இருந்தது!

"பார் குமுதா, பெண்ணுக்கு சுகம் என்பது தன்னுடையது என்று சொல்லிக் கொள்ளக்கூடிய வீடு, சந்தோஷமாக இருக்கும் புருஷன், வீடு நிறைய ஓடி ஆடி விளையாடுகிற குழந்தைகள்."

"உனக்கு உன் வீடு இருக்கிறது–"

"சந்தோஷமாக இருக்கும் புருஷனும் இருக்கிறான்." என்றாள் சரளக்கா சிரித்துக் கொண்டே.

"பின்னே என்ன? இன்றைக்கில்லாவிட்டால் நாளைக்குக் குழந்தைகளும் பிறக்கும்."

தான் சொன்னதைக் கேட்டு அக்கா நீண்ட பெருமூச்சுவிட்டு, படுத்தபடியே கூரையைப் பார்த்துக்கொண்டு பேசாமலிருந்தாள்.

"அப்புறம்–"

"நீ ஒரு பைத்தியம்" என்றாள் அக்கா.

தனக்கு ஒன்றும் புரிந்திருக்கவில்லை. கணவன் இருந்தால் குழந்தைகள் பிறந்தே ஆகவேண்டும் என்று தான் நம்பியிருந்தாள்.

"பைத்தியம் நீ குமுதா. இந்த நோயிலிருந்து நான் மீளுவதே கஷ்டம்-"

"அக்கா!"

"ஒரு வேளை குணமடைந்து விட்டேன் என்று வைத்துக் கொள். அப்பொழுதும் குழந்தை பாக்கியம் என் பங்குக்கு இல்லை."

"ஏன்?"

சரளக்கா கலகலவென்று நகைத்தாள். அந்தச் சிரிப்பால் அவள் முகம் களைப்புற்று, இன்னும் கொஞ்சம் அழகாகக் காட்சி யளித்தது.

"ஏனா? ஏன் என்ன என்பதெல்லாம் நாளைக்கு உனக்கே தெரியும், கல்யாணமான பிறகு" என்று கூறியிருந்தாள் அக்கா.

அப்படியானால்? கல்யாணம் ஆனாலும் குழந்தைகள் பிறக்கும் என்கிற நம்பிக்கையில்லை, பெண் தாய் ஆகியே தீருவாள் என்கிற நம்பிக்கையும் இல்லை! இந்தப் புதிர் எப்படி என்பது தனக்குத் தெரிந்திருக்கவில்லை அப்பொழுது.

அப்போது தெரிந்திருக்கவில்லை, பின்னர் தெரிவதற்குத் தாமதமாகவில்லை.

புத்தி இருந்தபோது தெரியவில்லை, புத்தியை இழந்த பிறகு தெரிந்தது!

எவ்வளவு சோகமான மனநிலையிலிருந்த போதிலும், அந்த நினைவுகளினால் இதயத்தில் புது சக்தி பாய்ந்தது போலாகும்.

புத்தியை இழந்த பிறகே தெரிந்தது.

குமுதாவுக்கு இப்போதும் ஆச்சரியம், தன்னுடைய அப்போதைய மனநிலையை நினைத்து, ஒரு காலத்தில் ராமண்ணாவைப் பார்த்ததுமே, ராமண்ணாவை நினைத்த மாத்திரத்தில் புத்தி தன் வசமிருந்து தப்பி ஓடிப்போய்க் கொண்டிருந்தது. ஏன் அப்படி? எல்லோருக்குமே அப்படித்தான் ஆகுமோ என்பது பற்றிக் குமுதாவுக்கு நிச்சயமாக ஒன்றும் தெரிந்திருக்கவில்லை. தனக்கு மட்டும் அப்படி ஆகிக் கொண்டிருந்தது. புத்தி, சரீரம் இரண்டின் பேரிலும் தனக்கு வசம் இருக்காது. யோகிகளைப் பற்றிச் சொல்வார்களே! கண்ணெதிரில் இல்லாமலிருப்பது அவர்களுக்குக் காணப்படுமாம். உடலுக்கேற்படும் சுகதுக்கங்களின் உணர்வு அவர்களுக்கு இருப்பதில்லையாம். மோகனின் தாயாகும் தகுதியைப் பெறுவதற்கு முன்னர் தானும் அதுபோன்ற யோக சித்தியைப் பெற்றிருந்தாளோ என்னவோ!

தனக்கு இன்னும் நினைவிருக்கிறது ஒரு நாள் நடந்த சம்பவம். அன்று தன் கதை முடிந்து விட்டதென்றே எண்ணியிருந்தாள். தன்னுடைய ரகசியம் சரளக்காவுக்குத் தெரிந்துவிட்டதென்று அவளுக்குத் தோன்றி விட்டது. அன்றைய தன்னுடைய அனுபவம் பின்னால் தனக்கே ஆச்சரியத்தை உண்டாக்கியது.

நடந்ததென்னமோ சின்ன விஷயம்தான். இரவு 9 மணி ஆகியிருக்கலாம். வெளியே போயிருந்த ராமண்ணா இன்னும் வந்திருக்கவில்லை. தான் சாப்பிட்டிருக்கவில்லை, சரளக்காவும் பால் அருந்தியிருக்கவில்லை. அக்கா அவ்வளவு நேரம் காத்துக் கொண்டிருந்தது தனக்குப் பிடிக்கவில்லை. ஓரிரண்டு தடவை பிடிவாதமாகக் கேட்டாள்.

"அக்கா, உனக்குப் பால் கொண்டுவந்து தரட்டுமா?"

"எனக்கென்ன அவசரம்? அவர் வரட்டும், சாப்பிட்டாகட்டும்"

"நான் உட்கார்ந்திருக்கிறேன் அக்கா, அவர் வரும் வரையிலும்-

"நானும் உட்கார்ந்திருக்கிறேன். எனக்கு மட்டும் என்ன வேலை இருக்கிறது?"

"உட்கார்ந்திருப்பியாம். ஆனால் பால் சாப்பிட்டு விட்டு-"

"இருக்கட்டும் விடுடீ, குமுதா நான் ஒன்றும் பசியினால் செத்துவிடப் போவதில்லை!" என்று சரளக்காவும் சிறிது வெறுப் புடனேயே கூறி இருந்தாள்.

சிறிது நேரம் கழிந்தது. ஆனாலும் ராமண்ணா வந்திருக்க வில்லை. தனக்கு என்ன தோன்றியதோ என்னமோ! சட்டென்று "அக்கா, பால் கொண்டு வருகிறேன்" என்று எழுந்திருந்தாள்.

"வேண்டாம் என்று சொல்லவில்லையாடி? நான் ஒருத்தியே-"

"நானும் முடித்துவிடுகிறேன், அக்கா."

சரளக்கா தான் சொன்னதைத் தவறாகப் புரிந்துகொண்டு விட்டாள்.

"அட பைத்தியமே! உன்னை யார் சாப்பிட வேண்டா மென்றார்கள்? எப்போதிலிருந்து நான் சொல்லிக் கொண்டிருக் கிறேன். இன்னும் வளருகிற பெண் நீ. பசியை அடக்கக்கூடாது என்று. பசித்தால் நீ சாப்பிட்டுவிடு. நான் உட்கார்ந்திருக்கிறேன்."

"அப்படியல்ல அக்கா. பசிக்கிறது என்பதற்காக நான் சொல்லவில்லை. அவர் வெளியில் "யார் வீட்டுக்கோ சாப்பிடப் போயிருக்கிறார்."

"அப்படியா? எப்போ சொன்னார்?"

"எப்போது சொன்னால் என்ன? அதனால்தான் சொன்னேன், இரண்டு பேரும் முடித்துவிடுவோம்."

"என்னமோ!- என்னமோ! எப்போ சொல்லியிருந்தாரோ என்னமோ!" என்று சரளக்கா அமைதியிழந்து முணுமுணுத்தாள். தான் அக்காவுக்குப் பால் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, உள்ளே தன்னுடைய சாப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தாள். அப்படித் தயார் செய்து கொண்டிருக்கும் போதே வெளியில் யாரோ பேசும் குரல் கேட்டது. கவனித்துக் கேட்டாள். வெளியே யாரும் இருந்திருக்கவில்லை. இருந்தாலும் தான் கேட்டது உண்மை என்று தோன்றி, தனது சாப்பாட்டின் ஏற்பாடுகளை நிறுத்தி வைத்துவிட்டுச் சிறிது நேரம் கழித்து வெளியே வந்தாள்.

"அட, இவ்வளவு சீக்கிரம் சாப்பிட்டு விட்டாயா குமுதா?" என்று அக்கா கேட்டாள்.

"இல்லை. சாப்பிடவேண்டும் என்று இருந்தேன். அதற்குள் ஏதோ பேச்சு சப்தம் கேட்டாற்போல இருந்தது..."

"யார் பேச்சு?"

"யாரும் இல்லை. இருந்தாலும் பேச்சு சப்தம் கேட்டது"

"அதுக்காக எழுந்து வந்துவிட்டாயா? போ, இங்கேயே கொண்டு வா உன் இலையை. ஒருத்தியே உள்ளே உட்காருவதை விட"

"இல்லை, நான் இன்னும் கொஞ்சநேரம் காத்திருக்கிறேன்"

"அவர் யார் வீட்டிலோ சாப்பிட்டு விட்டு வருவதாகச் சொன்னியேடி?"

"ஆமா அக்கா. ஆனால் அதற்குள்ளாகப் பேச்சு கேட்டது என்றேனே?"

"அப்படின்னா? இவரே வீட்டுக்கு வந்திருக்கிறார் என்கிறாயா, எனக்குத் தெரியாமல்?"

"இல்லை அக்கா. நண்பர்கள் வற்புறுத்திச் சாப்பிட அழைத்துச் சென்றிருந்தார்களோ என்னவோ? இவரும் புறப்பட்டவர் சட்டென்று, 'ரொம்பத் தாமதம் ஆகிறது, நான் வீட்டுக்குப் போகிறேன்' என்று சொல்லி, வீட்டுக்குப் புறப்பட்டது போல"

"பசியோடு தூக்கமும் சேர்ந்து கொண்டது போலிருக்கிறது உனக்கு" என்று அக்கா தன்னைக் கேலி செய்து கொண்டிருந்த

போதே, வாசல் கதவு தட்டுகிற சப்தம் கேட்டது. உடனே தலைப்பைத் தலைமீது இழுத்துவிட்டுக் கொண்டு, கதவைத் திறந்து விட்டு, சட்டென்று உள்ளே ஓடிவந்து விட்டிருந்தாள். என்ன காரணமோ ஏதோ, இதயம் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. சமையலறையில் மறைவாக நின்றபடியே கேட்டுக் கொண்டிருந்தாள்.

ராமண்ணா வந்தவன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு,

"ஓ, மருந்து, பால் எல்லாம் சாப்பிட்டாயிற்று போலிருக்கே? நல்லதாயிற்று நீங்கள் எங்கே எனக்காக் காத்துக் கொண்டிருக்கப் போகிறீர்களோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன்."

"உங்கள் சாப்பாடு ஆயிற்றா?" சரளக்கா கேட்டாள்.

ராமண்ணாவுக்கு சந்தர்ப்பம் தெரிந்திருக்கவில்லையோ என்னவோ?

"என்ன கேட்டே?" என்றான்.

"இல்லை, யாரோ சிநேகிதர்கள் வற்புறுத்தி அழைத்திருந்தார் களாமே"

"ஆங்! உனக்கு யார் சொன்னா?"

"குமுதா சொன்னாள்"

"அவளுக்கு யார் சொன்னார்கள்"

"ஏன்? நீங்கள் சொல்லவில்லையா, போகும்போது?"

ராமண்ணா குழப்பமடைந்து சுற்றுமுற்றும் பார்த்தான். தன்னைத் தேடினானோ? சரளக்காவை உற்றுப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தான்.

"ஏன்? என்ன ஆயிற்று இப்போது? எங்கேயாவது சாப்பிட்டா யிற்றல்லவா?"

அக்காவின் பேச்சைக் கேட்டு ராமண்ணா உரக்கச் சிரித்தான்.

"பெண்கள் நீங்கள் இரண்டு பேருமாகச் சேர்ந்து, நேரங்கழித்து வந்ததற்காக எனக்குப் பட்டினி தண்டனை விதிக்க யோசித்திருக்கிறீர்கள் போலிருக்கிறது. ஆனால் நான் தவறை ஒத்துக் கொள்கிறேன். ஏனென்றால், பசிக்கிறது."

"பசிக்கிறதா? அப்படியானால் நண்பன் வீட்டில் சாப்பாடு?"

"அந்தப் புண்ணியவான் ரொம்பவும் பிடிவாதம் செய்தான். நானும் சம்மதித்துப் பாதிவழி போனேன். ஆனால் அதற்குள்ளாக எனக்குத் தோன்றியது இதெல்லாம் முடிவதற்கு எவ்வளவு

தாமதமாகுமோ என்று. அதனால்தான் நடுவிலேயே அவனிடம் சொல்லிவிட்டு வந்துவிட்டேன். ஹஹ!"

"அப்படியானால்? நீங்கள் இன்னும் சாப்பிடவில்லையா?" சரளக்கா மிகவும் வியப்போடு கேட்டாள். ராமண்ணா தலையை அசைத்தான்.

"முதலில் பிடிவாதத்திற்காகச் சம்மதித்தீர்கள். அப்புறம் தாமதம் ஆகிறதென்று வந்துவிட்டீர்கள்" சரளக்கா அதே குரலில் தனக்குத் தானே பேசிக் கொள்வதுபோலச் சொல்லிக் கொண்டாள்.

அதன் பிறகு நடந்த சம்பாஷணையைக் கேட்காமல், ராமண்ணாவின் சாப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு, தான் அங்கிருந்து மறைந்தாள். அன்று ராமண்ணாவும், சரளக்காவும் தன்னைப் பார்க்கிற பார்வையின் பொருள் தனக்கு விளங்கினாற் போலிருந்தது. வெளியில் நடந்த விஷயத்தைத் தான் சொன்னதை அவர்களால் நம்ப முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. அவ்வளவேன்? தன்னாலேயே அதை நம்ப முடியவில்லை. இருந்தாலும் நண்பனின் பிடிவாதம், ராமண்ணாவின் அவசரம் இரண்டைப் பற்றியும் பேச்சு தனக்குத் தெளிவாகக் கேட்டது. தனக்குக் கேட்டதே உண்மையாகவும் இருந்துவிட்டது. என்னமோ எல்லாம் சரியாகிவிட்டது. தன்னாலும் நம்பமுடியாத விஷயம். அந்த இன்னொரு சம்பவம் நடக்காமலிருந்திருந்தால் தான் இதை நம்பியும் இருக்கமாட்டாள்.

அந்த இரண்டாவது சம்பவத்தால் தன் மனம் சஞ்சலமடைந்தது. பயமும் தோன்றியது. இது ஏதோ மோசடி அல்லது பேய் பிசாசுகளின் விளையாட்டாக இருக்குமோ என்கிற பயம். முன்பு ராமண்ணாவின் இரவுச் சாப்பாடு விஷயமாக அப்படி நடந்தது குறித்துத் தனக்கு ஆச்சரியம் ஏற்பட்டிருந்தாலும், தான் அதைச் சில நாட்களிலேயே மறந்து விட்டிருந்தாள். அக்கா, ராமண்ணா இருவரும் ஆச்சரியப்பட்டிருந்தாலும், அவர்களும் அதை மறந்து விட்டார்கள். சில நாட்கள் "இன்றைய எதிர்காலம் எப்படி?" என்று தன்னைக் கேலி செய்திருந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாக எல்லாம் பழையபடியே நடக்கத் தொடங்கின.

ஒருநாள் இருட்டுகிற வேளை. தான் அக்காவுடன் பேசிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாள். ராமண்ணா ஏதோ ஒரு

புத்தகம் ஒன்றைக் கொண்டு வருவதற்காக அவசரமாக வெளியே போயிருந்தான். "நான் இப்பவே வந்து விடுகிறேன். ஒரு விஷயத்தினால் தடைப்பட்டு நிற்கிறது. சரி பார்ப்பதற்குப் புத்தகம் இல்லை. அதை வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று வேகமாகப் புறப்பட்டுப் போயிருந்தான்.

நான்கைந்து நிமிடங்கள் தான் அக்காவோடு பேசிவிட்டு சட்டென்று எழுந்திருந்தாள். எழுந்தவள், "அப்பப்பா!" என்று வலி தாளாதவளைப் போல வலது காலைப் பிடித்துக் கொண்டாள்.

"ஏன்? காலுக்கு என்ன ஆயிற்று?"

"தடுக்கி விழுந்து விட்டேன்."

"என்னது?" என்று அக்கா வியப்புடன் கேட்டதும் தான் விழிப்படைந்தவள் போலானாள். அசட்டுக் களை முகத்தில் படர அக்காவைப் பார்த்தபடி நின்று விட்டாள்.

"பகல் கனவு காணுகிறாயா என்னடி, குமுதா?" என்று அக்கா சிரித்தபடியே கேட்டாள்.

"இல்லை அக்கா. உண்மையாகவே எதிலோ இடறி விழுந்து காலில் அடிபட்டு ரொம்பவும் வலிக்கிறாற்போல இருந்தது திடீரென்று" என்று காலைப்பிடித்துக் கொண்டு சொல்லும்போது, அடியும் படவில்லை, வலிக்கவும் இல்லை என்று அக்காவைப் போலத் தனக்கும் தெளிவாகத் தெரிந்தது.

"சரிதான் இந்த வியாதிக்கு உனக்கு சீக்கிரம் மருந்து கொடுக்க வேண்டியதுதான்" என்று கூறி, அக்கா சிரித்துக் கொண்டிருந்த போதே, யாரோ "கதவைத் திறவுங்கள்" என்று கூப்பிட்டார்கள்.

கதவைத் திறந்தபோது ராமண்ணா யாரோ இன்னொருவரின் தோள்மீது கையை ஊன்றிக் கொண்டு நின்றிருந்தான். அவசர மாகப் போகும்போது இடறி விழுந்து, வலது காலில் அடிபட்டுக் கொண்டு வந்திருந்தான்.

அன்றிலிருந்து குமுதாவுக்குப் பரிபூரண நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. ஏன் இப்படி ஆகிறது என்பது தெரியா விட்டாலும், ராமண்ணா சம்பந்தப்பட்ட தனக்கேற்பட்ட இந்த அனுபவங்களிலிருந்து, தான் முழுமையாக ராமண்ணாவுக்கு மனத்தைப் பறிகொடுத்து விட்டவள் என்கிற நம்பிக்கை தவிர்க்க முடியாததாயிற்று.

எவ்வளவோ முறை எண்ணிப் பார்த்தாள். காதல் என்றால் இப்படி இருக்குமா? நேசிக்கும் ஒருவரோடு இவ்வளவு மன நெருக்கம் ஏற்படுமா?

தன்நிலை அவ்வாறு இருந்தது. வயிற்றினுள் சிசு உருவாவதற்கு தான் இது போன்ற யோகத்தை அனுசரிக்க வேண்டியதாயிற்று. தாய்மை என்பது காமதிருப்திக்கு விதிக்கப்பட்ட தண்டனை அல்ல, கலவியின் களைப்புக்குப் பலன் அல்ல, ஆண்-பெண் சேர்க்கையின் விபரீத விளைவல்ல, எந்த ஒரு நிஜமான காரணத்தினால் தோன்றிய காரியமல்ல, இரண்டு இதயங்கள் ஒன்று கூடியதன் புற சங்கேதம் என்கிற பாவனை அவளுடைய அறிவின் சக்திக்கு அப்பாற்பட்டதாக இருந்ததால், தெளிவற்ற உருவில் தோன்றியது. அந்தத் தாய்மையின் உந்துதலினால்தான் அன்று தான் சம்மதித்திருந்தாள், பிரசவம் ஆன பிற்பாடு மறுபடியும் ராமண்ணாவோடு வந்து இருக்க. இருந்தாலும் பிடிவாதமாக நிபந்தனை போட்டிருந்தாள் இல்வாழ்க்கையை மட்டும் நடத்த மாட்டேன் என்று.

இருந்தாலும் சம்மதித்திருக்கக்கூடாதோ என்று அவ்வப் பொழுது தோன்றும். பின்னால் அந்தப் புடவை விஷயமாக மட்டும் "சம்மதித்தது தவறு" என்று தோன்றியிருந்தது.

"நான் சம்மதித்திருக்கக்கூடாது" என்றாள். சட்டென்று சுற்றும் முற்றும் பார்த்தாள். என்னவோ பேசினேனே நான்? சம்மதித்திருக்கக் கூடாது என்றேனே? கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டாள், நினைவுக்கு வந்தது. இன்று இவருடன் இவருடைய பாராட்டு விழாவுக்குப் போக சம்மதித்திருக்கக் கூடாது என்று தன் வாயிலிருந்து வார்த்தைகள் வந்தனவோ என்று, மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டு எழுந்தாள். "இந்தப் பையனின் சுபாவம் எனக்குத் தெரியும். விளையாடப் போனால், வேறு எதைப் பற்றிய கவனமும் கிடையாது. எவ்வளவு தடவை சொல்லியிருந்தேன், இன்றைக்குக் கூட்டத்திற்குப் போக வேண்டும், சீக்கிரம் வா, என்று." இன்னும் வந்த பாடில்லை. இவன் எப்போது வருவது? எப்போது புறப்படத் தயாராவது? என்று மற்றொரு முறை கடியாரத்தைப் பார்த்துக் கொண்டாள். "அட, இன்னும் அரைமணி நேரம்தான் இருக்கிறது, புறப்படுவதற்கு" என்று படபடப்புடன் வாசலுக்கு வந்து, மோகனை எதிர்பார்த்துக் கொண்டு நின்றாள்.

# 8

"இன்னும் அரைமணிநேரம்! அடேயப்பா, பொழுதே நகர மாட்டேனென்கிறது" என்றான் ராமண்ணா கைகடியாரத்தைப் பார்த்துக்கொண்டு. சீ! எத்தகைய மடையன் நான்! பல வருடங்களின் நினைவுப் பாதையைக் கடந்து கொண்டு செல்லும்போதும் பொழுதே நகரவில்லை- என்கிறேனே! போகட்டும்- இன்றைய பாராட்டுவிழா நினைவுப் பாதையில் உள்ளதல்லவே. அதற்காகத் தான் காத்துக் கொண்டிருக்கிறான். தான் எழுத்தாளன் என்பதற்காகப் பொது மக்கள் அளிக்கும் பாராட்டு. தனக்கு வயது 45. உண்மையில் பெருமைப்படும்படியான விஷயம். குடியரசு நடக்கும் இக்காலத்தில் குடிமக்களே தனக்கு வரவேற்பு அளிக்கிறார்கள். உண்மையிலேயே பெருமைக்குரிய விஷயம். இருந்தாலும் அதைப்பற்றித் தனக்கு யாதொரு உற்சாகமும் இல்லையே? ஏன்? ஏன் என்ன? உலகமே மோசம்- மன்னிக்கவேண்டும், இது மரியாதை இல்லையோ என்னமோ?- உலகம் முழுவதுமே மாயை. ஹாங்! மோசம் என்றால் முரட்டுத்தனமான வார்த்தை, மாயை என்றால் தத்துவ ஞானம். இங்கே இருக்கிறது இலக்கியத்தின் சக்தி, இருந்தாலும் வீட்டில் யோசிக்கும்போது 'மோசம்' என்கிற பொருத்தமான வார்த்தையையே உபயோகிக்கலாமே? மோசம், தன்னுடைய இலக்கிய சேவை மோசம், இன்றையப் பொதுமக்கள் பாராட்டு விழா மோசம். தன்னுடைய இலக்கியம் எத்தகையது? இப்பொழுது தான் எண்ணிய எண்ணங்கள்? அந்த எண்ணங்களை தான் எழுதியிருக்கிறானா? இவ்வளவு நாட்களாக அநுபவித்தானே? அதை எங்கேயாவது வர்ணித்திருக்கிறானா? காதல் மனைவி ஒருத்தி- காமக்களியாட்டத்திற்கு மனைவி இன்னொருத்தி. அந்தக் கதையைச் சொல்லியிருக்கிறானா? அதைச் சொல்ல மொழி இல்லை, உத்தி இல்லை, உசிதம் இல்லை. சொன்னால் கேட்பவர்கள் புரிந்து கொள்வார்களா?

பைத்தியக்காரா, பைத்தியக்காரா? மக்கள் புரிந்துகொள்வார்கள் என்கிற தன்னம்பிக்கையோடு இத்தனை வருடங்கள் உன்னுடையதே ஆன நடையில் சிந்தனைக் களஞ்சியமான, சிந்தனையைத் தூண்டுகிற எத்தனை பிரசங்கங்களை நீ செய்திருக்கிறாய், ஞாபகமிருக்கிறதா? இலக்கியப் படைப்புக்கள் எத்தனை எழுதினாய்? உன்னுடைய 'சேவை'யினால் சமுதாயம் முன்னேறியிருக்கிறதா?

மோசம்! இந்த உலகமே மோசம். உண்மையாக இருப்பது ஒன்றே தான் நம்முடைய மிருகத்தனமான வாழ்க்கை. பர்த்ருஹரி

சொல்வது போல உணவு, உறக்கம், அச்சம், கலவி இவை தான் உண்மையான வாழ்க்கை. மனிதனின் சகஜமான வாழ்க்கை என்றால் இந்த நடவடிக்கைகள்தான். மற்றவையெல்லாம் செயற்கை, மோசம். சில நாட்களுக்கு இந்த நடவடிக்கைகளை ஒதுக்கி வைத்து, நம்மை நாமே 'பண்பட்டவர்கள்' என்று சொல்லிக் கொள்ளுவோம். ஒரு நாள், கொந்தளிப்பை அடக்க முடியாமல் போர், விபசாரம், சுரண்டுதல் இவைகளின் மூலம் அதுவரையில் அடக்கி வைக்கப்பட்டிருந்த புலன்களைத் திருப்திப்படுத்திக் கொள்கிறோம். அப்பொழுது கணப்பொழுது வெட்கம்; முகத்தை முகம் பார்க்காமல், முதுகோடு முதுகு ஒட்டிக் கொண்டு வாழ்வோம். 'பண்பட்டவர்கள்' ஆவோம். பிறகு மறுபடியும், பிறகு மறுபடியும்–

நீசைர்கச்சத்யுபரி ச தஸா சக்ரநேமிக்ரமேண

இன்றைய கூட்டத்தில் இதைப்பற்றியே பேசினால்? ஓ-பாராட்டுப் பத்திரம் வாசித்தளிப்பது ஒன்றிருக்கிறதல்லவா? விதி குரூரமானது என்பது இதனால்தான். என்னுடைய இலக்கியச் சேவையை மட்டுமல்ல, என்னுடைய இலட்சியக் குடும்ப வாழ்க்கையையும் புகழ்ந்திருக்கிறார்கள் பாராட்டுப் பத்திரத்தில்!

எத்தகைய இலட்சியம்! பத்து வருடங்களாகிவிட்டன குடும்ப வாழ்க்கை என்பதை அனுபவிக்காமல். பத்து வருடங்களாகி விட்டன குடும்பம் என்கிற நாடகத்தை நடத்தத் தொடங்கி.

இருந்தாலும் இன்றையக் கூட்டத்திற்கு என்னோடு வரக் குமுதா சம்மதித்திருக்கிறாளே! ஆச்சரியம்! முன்பொருமுறை இதேபோல ஆச்சரியப்படும்படி சம்மதித்திருந்தாள். மோகனைப் பிரசவித்த பிறகு வீட்டிற்கு வந்து தன்னோடு இருந்து வந்தாள்-ஹாங்... இப்போது நினைவுக்கு வந்தது. புடவை விஷயம் நடந்தது அதன்பிறகுதான், மோகனின் முதல் பிறந்த நாள் விழாவின் போது. அன்றைக்கும் புறப்பட்டுப் போயிருந்தாளே? தன்னுடன் இருக்க அவள் சம்மதித்திருந்த போதிலும், ஒப்பந்தப்படி தான் பிரம்மச்சாரியாக வாழ்ந்து வந்திருந்த போதிலும், அவள் புறப்பட்டுப் போயிருந்தாள். இன்றைக்கும் அப்படியே செய்து விட்டால்? பாராட்டுக் கூட்ட நிர்வாகிகள் அழைப்பதற்கு வருவதற்கு முன்னால் புறப்பட்டுப் போய் விட்டால்?

ராமண்ணாவுக்குப் பயம் தோன்றினாற்போல இருந்தது. மெதுவாகக் கீழே இறங்கும் படிகளின் அருகில் சென்று நின்று

கொண்டான். கீழே குமுதா இருக்கிறாள் என்று அறிவிக்கும் சப்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன!

சே! எவ்வளவு உறுதியில்லாத மனம் தன்னுடையது!- ஓ- இன்னொரு விஷயம். மோகன் வீட்டில் இல்லை. அவனை விட்டுவிட்டு அவள் போகமாட்டாள்.

மோகனை விட்டு விட்டுத் தானும் இருக்கமாட்டான், மோகனை விட்டுவிட்டுக் குமுதாவும் இருக்கமாட்டாள். ஆகவே குமுதாவும் தானும் ஒருவரைவிட்டு ஒருவர் இருக்க மாட்டோம்.

பலே! இது நல்ல கணக்கு- என்று கூறி மறுபடியும் மேலே நடந்தான்.

ஒரே பொருளுக்குச் சமமான இரண்டு வஸ்துக்கள் பரஸ்பரம் தங்களுக்குள் சமமானவை.

ஒரே உயிரோடு ஒட்டிக் கொண்ட இரண்டு உயிர்கள், பரஸ்பரம் தங்களுக்குள் ஒட்டிக்கொண்டுதானே இருக்கவேண்டும்?

பவபூதியும் சொல்லியிருக்கிறான் "ஆனந்தக்ரந்திரேகோயம் அபத்யமிதி பத்யதே" என்று. கணவன் - மனைவியரை ஒன்றாகப் பிணைக்கும் முடிச்சு, குழந்தை என்பது.

மோகனை அழைத்துக் கொண்டு, அத்தையின் வீட்டிலிருந்து முதல் தடவை குமுதா திரும்பி வந்தபோது, தானும் அப்படித்தான் நினைத்திருந்தான். அவனைப் பற்றித் தன்னோடு பேசுவாள், அத்தையின் வீட்டில் அவன் விளையாடிய விளையாட்டுக்களை வர்ணிப்பாள், தான் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டிக் கொண் டிருந்தால், பெருமையோடும் சந்தோஷத்தோடும் தன்னைப் பார்ப்பாள். நாளடைவில், தனக்குத் தோன்றிற்று தங்களுக்குள் இருந்த மனஸ்தாபம் விலகி தானும் குமுதாவும்- தானும் குமுதாவும்- என்ன?

காதல் நிறைந்த குடும்ப வாழ்க்கையை நடத்தலாமென்றா? இல்லை- அப்படிப்பட்ட எண்ணமே தனக்கு வரவில்லை. தானும் குமுதாவும் முன்பு போல இருக்கலாம் என்கிற ஆசை தோன்றி யிருந்தது. முன்புபோல ஏன் இருக்கக்கூடாது என்று ஒருமுறை துணிச்சலை வரவழைத்துக் கொண்டு அவளைக் கேட்டே விட்டான்!

"முன்பு போல என்றால்?" என்று குமுதா மறுகேள்வி கேட்டாள்.

"இல்லை- அதாவது- சும்மா இப்படி இருப்பதை விட்டுவிட்டு- அதுக்காகச் சொன்னேன்."

"இப்படி இருப்பது என்றால்?"

"இல்லை ஒண்ணும் இது இல்லாமல்- அதாவது-"

"இப்போது உங்களுக்கு என்ன குறை வந்துவிட்டது?"

"குறை என்று இல்லை. அதாவது உண்மையில் என்னவென்றால் ஒரே வீட்டில் இருந்து கொண்டு- ஏன்-"

"வேண்டுமானால் ஒரே வீட்டில் இருக்கவேண்டாம்."

"சே! சே! அப்படிச் சொல்லவில்லை நான்."

"பின்னே எப்படிச் சொன்னீர்கள்?"

எப்படிச் சொல்ல விருந்தானோ, என்ன சொல்லவிருந்தானோ! அதற்கு வாய்ப்பே எழவில்லை. இந்தப் பேச்சு நடந்து கொண்டிருந்த பொழுது, அருகில் இருந்த குழந்தை மோகன் ஒரே பிடிவாதமாகத் தன்னிடம் வருவதற்கு முயன்று கொண்டிருந்தான். குமுதா பழக்கம் காரணமாகவோ என்னவோ, குழந்தையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உட்காரவைக்க முயன்று கொண்டிருந்தாள். குழந்தையின் பிடிவாதம் அதிகரித்தது. குமுதா சிறிது பலமாகவே குழந்தையை அடக்கிப் பிடித்தாளோ என்னவோ குழந்தை கையை முன்னால் நீட்டியபடி அழத்தொடங்கும் போல இருந்தது. ராமண்ணாவுக்கு உயிர் வந்தது போலாயிற்று. இது வரையில் நடந்த சம்பாஷணை, விவாதம் எந்த விதத்திலும் தான் விரும்பியபடி நடந்திருக்கவில்லை. சொல்லவேண்டுமென்று பிடிவாதத்துடன் நினைத்து வைத்திருந்த வார்த்தைகளெல்லாம் வாயில் எழவே இல்லை. மேற்கொண்டு விவாதத்தை எப்படிக் கொண்டு போவது என்றே அவனுக்குத் தெரியவில்லை. இப்படி யிருக்கும் போது தன்னை நோக்கிக் கை நீட்டியபடி தன்னிடம் வரவேண்டுமென்று பிடிவாதம் செய்து கொண்டிருந்த குழந்தை தன்னை ஆபத்திலிருந்து காப்பாற்ற வந்த கடவுளாகவே தோன்றியது. சிரத்தையுள்ள பக்தனைப் போலத் தானும் கைகளை முன்னால் நீட்டினான், குழந்தையை வாங்கிக் கொள்வதற்காக. குழந்தைகளுக்கு எங்கிருந்து தான் குறும்புத்தனம் வருகிறதோ! இதுவரையில் தன்னிடம் வரவேண்டுமென்று பிடிவாதம் செய்து கொண்டிருந்த குழந்தை, தான் கையை நீட்டியதும் உட்கார்ந்திருந்த இடத்திலேயே திரும்பி, இரண்டு கைகளாலும் தாயைக் கெட்டியாக அணைத்துக் கொண்டது. அது அவ்வாறு செய்யும் என்று எதிர்பாராதிருந்ததனால் அதை வாங்கிக் கொள்ள நீண்ட தன் கைகள் குழந்தையைத் தாயினிட மிருந்து விடுவிக்க முயன்ற போது-

அந்த நினைவாலேயே அவன் உடல் இப்போது நடுங்கியது. அது போன்ற மின்னல் பாய்ந்தது போன்ற சுகத்தை ராமண்ணா, என்றுமே அனுபவித்திருக்கவில்லை. ஒரு கணம், அல்ல அதில் பத்தில் ஒரு பாகம்- அல்ல நூறில் ஒரு பாகம்- கண் இமைக்கும் அந்தச் சிறுபோதில் தன் உடலில், குமுதாவின் உடலில், தன்னால் அவளுக்கும், அவளால் தனக்கும், வெறும் மின்னல் பாய்ந்தது போன்ற உணர்ச்சி மட்டுமே அல்ல, அந்த அனுபவத்தைப்பற்றி ஒருவருக்கொருவர் அனுப்பிக் கொண்ட செய்தி, அந்தச் செய்திக்கு ஒருவரிடமிருந்து மற்றவருக்குக் கிடைத்த பதில், அந்த பதிலுக்கு ஒருவருக்கு மற்றவர் கொடுத்த சம்மதம்- இவ்வளவும் அல்லாமல் இன்னும் என்னென்னவோ நடந்து போயிருக்க வேண்டும். அதுவரையில் தாங்கள் இருவரும் பொம்மைகளைப் போல நின்று கொண்டிருந்ததாகத் தோன்றியது.

எவ்வளவு யுகங்களின், எவ்வளவு ஜன்மங்களின் அனுபவம் அந்த கணப்பகுதி நேரத்தில் மின்னிப் போய்விட்டிருந்ததோ! இரண்டு உயிர்கள் இயற்கை தங்களிடம் ஒப்படைத்திருந்த கடமையின் சுமையை, ஆழத்தை, அறிவை அந்த கணப்பகுதி நேரத்தில் அனுபவித்திருந்தன. இரண்டு உடல்கள் அகஸ்மாத்தாக ஒன்றையொன்று தொட்டு, இரண்டும் இல்லாமல் போய்விட்டாற் போன்றிருந்தன.

ராமண்ணா சிரித்தான், மிகுந்த ஏமாற்றத்துடன் அன்றைய நினைவினால், அதைப்பற்றிய இன்றைய தன்னுடைய எண்ணங்களால், இரண்டு உடல்கள் இல்லாமற்போயிற்றென்று தன்னுடைய இலக்கிய சக்தி கற்பனை செய்து சொல்லட்டும் உண்மையில் நடந்தது ஒரே உடல் இல்லாமற்போனது போல் ஆகியிருந்தது. தனக்கு விழிப்பு வந்தது என்பதற்குள்ளாக குமுதா, அங்கே நின்றிருக்கவில்லை.

இருந்தாலும் ராமண்ணாவுக்கு ஆனந்தமாகத்தான் இருந்தது. அந்த ஒரு கணத்தின் அநுபவத்தில் சென்ற பல மாதங்களின் மனவேதனையை மறந்து விட்டிருந்தான்- இல்லை இழந்து விட்டிருந்தான். அப்பொழுது இன்னொரு எண்ணமும் தோன்றியிருந்தது. இவ்வளவு மாதங்களாகக் குமுதா அவ்வாறு ஒத்துழையாமையைக் காட்டி, கடைசியில் ஒத்துழைக்காமல் தன்னுடன் வந்து இருக்க ஏன் சம்மதித்தாள் என்கிற எண்ணமும் அப்பொழுது அவனுக்குப் பளிச்சிட்டது.

முன்பு போல அன்றும் குமுதா தன்னை நேசித்திருந்தாள்! அதுபற்றி ராமண்ணாவுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. அவளுடைய உடலைத் தொட்ட அவனுடைய கை, அந்த நம்பிக்கையைக் கொடுத்திருந்தது. படைப்பிலேதான் எவ்வளவு அற்புதம்! உடலை ஜடம் என்று நினைக்கிறோம்! ஆனால் அதே உடல் ஒரு மிக சூட்சுமமான, மிக ஆழமான, அனுபவத்தை எவ்வளவு சீக்கிரமாக, சுலபமாகத் தெரியவைக்கிறதென்பதை நினைத்தால், உடலைப் பற்றிய நமது தவறான எண்ணம் விலகிப் போக வேண்டும். உடல் அழியக் கூடிய தென்னவோ உண்மை, ஆனால் அது ஜடமல்ல.

அன்று தன்னுடைய கையின் ஸ்பரிசத்திற்கு, குமுதாவின் உடல் எப்படி உடனே பதிலை அளித்திருந்தது? செயல்-பிரதிச் செயல் நியாயத்தைப் போல தன் கைபட்டவுடனே, அவளது உடல் முரட்டுத்தனமா விரைத்துக் கொள்ளாமல் எவ்வளவு மிருதுவாகி விட்டது! அவள் உடல் முழுவதுமே தன் கைப்பிடிக்குள் வந்து விடுமோ என்று தோன்றியது. குளிரின் சுகத்தை அனுபவிப்பவன் கைகால்களை முடக்கி முடக்கிப் போர்வைக்குள் அடங்கிக் கொள்வது போலக் குமுதாவின் உடல் முழுவதும் தன்னுடைய முஷ்டிக்குள் அடங்கிக் கொண்டு விடுமோ என்று தோன்றியது.

அன்றைய நம்பிக்கை ராமண்ணாவுக்கு இன்னும் இருக்கிறது. அவள் தன்னிடமிருந்து எவ்வளவு விலகியிருக்கிறாளோ, அவ்வளவு அருகில் இருக்கிறாள் என்பது அவனது நம்பிக்கை. ஓரிரு தடவைகள் எதிர்த்து இன்னும் விலகிப் போக விரும்பியிருந் தாலும், ரப்பர் நூலில் கட்டப்பட்ட பந்தைப் போல மறுபடியும் நெருங்கியே வந்திருந்தாள்.

குமுதா தன்னை நேசிக்கிறாள்.!

இன்று அவள் பாராட்டுக் கூட்டத்திற்கு வரச் சம்மதித்தது அதனால் தான்.

யார் கண்டார்கள்? இன்றையப் பாராட்டுக் கூட்டத்தின் விமரிசையைக் கண்டு, அவள் இதயம் கரைந்தாலும் கரையக்கூடும்.

அந்த ஆசையுடன் ராமண்ணா கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். தூ! இன்னும் என்ன இல்லாவிட்டாலும் அரைமணி! சீக்கிரம் வந்துவிடக் கூடாதா? தூ! நமது ஜனங்களுக்குக் காலத்தைப் பற்றிய அறிவே கிடையாது, என்று முணுமுணுத்தபடி ஜன்னலருகே சென்றான், ஏதாவது காணலாம் என்கிற ஆசையுடன்.

## 9

மோகனின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த குமுதாவுக்குத் திடீரென்று பயம் தோன்றினாற் போலிருந்தது. தெருவில் ஜனநடமாட்டமே அதிகமாக இருக்கவில்லை. மாலை வேளை. பிரதியொரு பிராணியும் வீட்டின் ஆசிரயத்தை நாடிச் செல்லும் நேரம். மனிதன் மட்டும் மற்ற எல்லாப் பிராணி களிலிருந்தும் வேறுபட்ட பிராணி என்கிற எண்ணம் தோன்றி, அவள் முகத்தில் முறுவல் படர்ந்தது. மனிதனின் நாகரீக வாழ்க்கை என்றால், படைப்பின் நியதிகளுக்கு எதிரான வாழ்க்கை மற்ற ஒவ்வொரு பிராணியும் வீட்டின் ஆசிரயத்தைத் தேடி வரும் இந்த மாலை வேளையில், நாகரீக மனிதன் வீட்டை விட்டு வெளியில் புறப்படுகிறான். விசித்திரப் பிராணி. தனது மோகன் இன்னும் விசித்திரமான பிராணி.

தகப்பனைப் போல மகன்! மனம் வந்தது போல நடப்பவன். நான் வா என்கிறபோது வருவானா? வருவான், கடைசியில் பசிக்கும்போது- என்று கூறிக் கொண்டு மறுபடியும் உள்ளே சென்றாள் குமுதா.

பசிக்கும் போது வருவான்- என்று நினைத்தபோது மற்றொரு எண்ணம் தோன்றிக் குமுதா தனக்குத் தானே உள்ளுக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள். தந்தையைப் போல மகன். மனத்திலே ஒரு எண்ணம் தோன்றிவிட்டால், மற்றவர்களைப் பற்றிய கவலையே இல்லாமல் அதை நிறைவேற்றிக் கொள்ளுகிற பிடிவாதம். ராமண்ணா அப்படித்தான்.

எவ்வளவு சுகமான நினைவுகள தன்னுடையவை! இன்றைக்கும் தான் ராமண்ணாவின் நெருக்கத்தை விரும்புவது அதற்காகத் தான். எவ்வளவு தடவை தீர்மானம் செய்து கொண்டிருந்தாள். ராமண்ணாவுக்குத் தன் மீது காதல் இருக்கும் என்கிற நம்பிக்கை இல்லை; ராமண்ணாவுக்குத் தன்மீது காதல் இருக்கும் என்கிற நம்பிக்கை இல்லை; ராமண்ணாவுக்குத் தன் பேரில் மரியாதை இருக்கும் என்கிற நம்பிக்கை இல்லை; ராமண்ணாவின் மனத்தில் தன் பேரில் ஒரு மதிப்பு இருந்தாற் போலும் தெரியவில்லை. தானென்றால் ராமண்ணாவின் திருஷ்டியில் பச்சாத்தாபப்படு வதற்கென்றே தோன்றியிருக்கும் பிராயச்சித்தம். இவைகளை யெல்லாம் அறிந்து கொண்டும் தான் இங்கேயே இருந்து விட்டிருக் கிறாள். அதொரு கடுமையான தவம் போல ஆகிவிட்டிருக்கிறது.

ராமண்ணாவுடன் இருந்தும் அவனிடமிருந்து விலகி வாழ்வது. இருந்தாலும் தான் அங்கேயே நிலைத்திருக்கிறாள்.

ராமண்ணாவின் அவதாரமே தான் மோகன்! இல்லை- ராமண்ணாவுடன் தான் கழித்த இன்பமான தருணங்களின் அடையாளம் மோகன். அதனால்தான் மோகனின் பேரில் தனக்கு இவ்வளவு பாசம் இருக்கிறதோ? தாயின் பாசம் சுயநலமற்றது என்று சொல்லுகிறார்கள். தன் விஷயம் அப்படி இல்லை என்று பல முறை குமுதாவுக்குத் தொன்றியிருந்தது. மோகனைத் தான் நேசிப்பது மோகனுக்காக அல்ல, மோகனில் காணப்படும் ராமண்ணாவின் சாயலுக்காக. அதனால்தான் முதலிலெல்லாம் மோகனைக் கண்டால் சில சமயங்களில் இல்லாத கோபம் வந்து கொண்டிருந்தது தனக்கு பாவம்! வேறொருவர் மேல் உள்ள கோபத்திற்காக எவ்வளவு தடவை மோகனை அடித்திருந்தாள் தான்!

ஒருமுறை. அதை எப்பொழுதுமே மறக்கமுடியாது குமுதாவால். இப்பொழுதும் அந்தக் காட்சி அவள் கண்களில் நிறைந்திருக் கிறது. மோகனை வைத்துக் கொண்டுதான் நின்றிருக்கிறாள். எதிரில் ராமண்ணா எதை எதையோ பேசிக் கொண்டிருக்கிறான். ஆணின் சுபாவத்திற்குத் தக்கபடி தன்னை வசப்படுத்திக் கொள்ள முயன்று கொண்டிருக்கிறான். அவன் கண்களில் இருந்த ஏக்கத்திலிருந்தே தனக்குத் தெரிந்திருந்தது அவனது இதயம் தனக்காப் பசித்திருக்கிறது என்று, விழிப்புடன் இருக்கவேண்டும், இவனுக்கு நான் வெறும் போகப் பொருளாக இருக்கிறேன், பழைய காலத்தில் மனைவிமார்கள் உபயோகித்து வந்த எச்சில் இலையாக இருக்கிறேன். எனக்கும் உரிமை இருக்கிறது என்பதை இவன் மறந்திருக்கிறான்- விழிப்புடன் இருக்கவேண்டும் என்றுதான் அதிகம் பேசாமல் அவன் வீசிக் கொண்டிருந்த பேச்சு வலையி லிருந்து தப்பித்துக் கொண்டிருக்கிறாள். அப்பொழுதுதான் மோகன் குறும்பு செய்தான். அவனை வாங்கி வைத்துக் கொள்கிற சாக்கில் ராமண்ணவின் குறும்புத்தனம்.

அன்று தான் மோகனை எவ்வளவு தண்டித்தாள்! ஏன்? பின்னால் தெரிந்தது தனக்கு. ஏன் என்பது. மோகனைத் தண்டித்தது எதற்காக? தனது சஞ்சல சுபாவத்தை அவன் சந்திக்கு இழுத்துவிட்டான் என்பதனால், ராமண்ணாவின் கை தன் மார்பகத்தின் மீது பட்டதுமே, அந்தக் கணமே தனது அறிவு தீர்மானம் எல்லாம் மண்ணாகிவிட்டன. தொட்ட கையைக்

கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும், மார்பு புண்ணாகும் படி இறுக்கமாக அவனைத் தழுவிக் கொள்ளவேண்டும் என்று தோன்றியது. மோகன் ரொம்பவும் அழுதுவிட்டான், பாவம்! தன்னுடைய அடியின் வேகத்தை அவனால் தாங்க முடிந்திருக்காது. ராமண்ணாவின் பேரில் தான் இதுவரை தெரிந்தே வளர்த்துக் கொண்டிருந்த வெறுப்பெல்லாம் ஒரு கணத்தில் மாயமாகிவிட்டதே! பசித்த உடல் சக்தியில்லாதது போல நடுங்கியது; உதடுகள் நனைந்திருந்தன; இதயத்துள் எங்கோ ஜூம் மென்றாற் போல இருந்தது. தான் பிரக்ஞை இழந்து விடுவாளோ என்று தோன்றியது. அதற்குள்ளாக மோகனின் அழுகைக் குரல் கேட்டு விழிப்படைந்தாற்போல ஆகி, தான் சட்டென்று உள்ளே போனாள்.

பாவம்! இதிலெல்லாம் மோகனுடைய தவறென்ன? இருந்தாலும் அந்தக் கணத்தில் அழுகிற மோகனின் கவனம் வந்தவுடன், பலமாக ஒரு அடி கொடுத்தாள். அவன் அழுகை அதிகரித்தது போலவே, தன் ஆவேசமும் அதிகரித்தது. உள்ளே பதுங்கிக் கொண்டிருந்த வெறுப்பு அவ்வளவும் வெளிப்பட்டதோ என்னமோ! என் முட்டாள் தனத்தின் புறச்சின்னம், என் விபசார வாழ்க்கையின் வடிவம், என்னை அவமானகரமான வாழ்க்கையில் நிலை பெறச் செய்த காரணம்- என்று என்னென்னவோ மனத்தில் தோன்றி, தான் அந்த எண்ணங்களின் ஆவேசத்தின் தாளத்திற்குச் சரியாக என்னும்படி மோகனை அடித்துவிட்டாளே?

அந்த நினைவினால் இன்று குமுதா ஒருகணம் கடகடவென்று நடுங்கினாள்.

எப்படி அடித்து விட்டாள்! அடிக்க அடிக்க ஆவேசம் அதிகமாகி- உடம்பின் மீது பிரக்ஞையே தவறிவிட்டிருந்ததோ என்னவோ தனக்கு! ராமண்ணா அங்கே வந்தது தெரியவில்லை, தன்னைத் தடுத்ததும் தெரியவில்லை; கடைசியில் ஒரு அடி ராமண் ணாவின் தோள்மீது விழுந்த பிறகுதான் தனக்கு விழிப்பேற் பட்டது. ராமண்ணா ஒரு கையால் குழந்தையை எடுத்து வைத்துக் கொண்டு, மற்றொரு கையால் ஓங்கியிருந்த தனது கையைக் கோபத்தோடு இல்லாவிட்டாலும், பலமாகப் பிடித்துக் கொண்டிருந்தான்.

அன்று ராமண்ணா கோபித்துக் கொண்டிருந்தால்? தன்னுடன் சண்டை போட்டிருந்தால்? ஆனால் ராமண்ணா ஒன்றையும் செய்யவில்லை. அவன் கோபித்துக் கொண்டிருந்திருந்தால் தானும்

கோபித்துக் கொண்டிருந்திருப்பாள்; சண்டை போட்டிருந்தால் தானும் ஆவேசமாகச் சண்டை போட்டிருப்பாள்; அவள் தன்னை நன்றாக அடித்திருந்தாலும் கூடச் சரி என்றிருந்திருப்பாள். ஆனால் அவன் இவை ஒன்றையுமே செய்திருக்கவில்லை. குழந்தையை எடுத்து வைத்துக் கொண்டு, தன்னைத் தடுத்தபடி, தானே ஏதோ தவறு செய்து விட்டவனைப் போல, கருணை தோற்றுவிக்கும் முகபாவத்துடன் தன்னைப் பார்த்தபடி நின்று விட்டான். ஒரு சமயம் தோன்றியது அவ்வாறு அவன் நின்றிருந்ததற்காக அவனையே அடிக்க வேண்டுமென்று. அவன் பேசாமல் நின்றிருந்ததால் தனக்குத் தாங்கமுடியாத வெட்கம் தோன்றியது.

"வேண்டாம் என்றிருந்தால் நானே வெளியில் போய் விடுகிறேன்" என்றான்

முதலில் தனக்கு அவன் எதைக் குறித்து அப்படிச் சொல்கிறான் என்றே புரிந்திருக்கவில்லை.

"என்னால் உனக்கு இவ்வளவு கஷ்டம் என்றால், நான் வீட்டை விட்டுப் போய்விடுகிறேன்" என்றான்.

பேசினான். பேச்சுக்குப் பேச்சு பேசி மனத்தை லேசாக்கிக் கொள்ள அவகாசம் கிடைத்தது.

"நீங்கள் ஏன் போகவேண்டும்? வீட்டு எஜமானர் நீங்கள்!" என்றாள் தான்.

"வீடு என்னுடையது மட்டுமல்ல, உன்னுடையதும் கூட, குமுதா"

"என்வீடு எப்படி ஆகும்? கதியில்லாமல் ஆதரவை நாடி வந்த பெண் நான்!"

"குமுதா, குமுதா, நீ இப்படியெல்லாம பேசக்கூடாது" என்று வேண்டினான்.

"பின் எப்படிப் பேசவேண்டும்? என் குழந்தையின் மேல் கை வைக்க எனக்கு அதிகாரம் இல்லை இந்த வீட்டில்!" இதைச் சொல்கிற போது தன்னால் அழுகையை அடக்கமுடியவில்லை.

"உனக்கு எந்த உரிமைக்கும் குறைவு கிடையாது குமுதா, இந்த வீட்டில்"

"எனக்கு உங்கள் வீடும் வேண்டாம், உரிமையும் வேண்டாம்" என்று அவன் பிடித்துக் கொண்டிருந்த தன் கையை விடுவித்துக் கொள்ள முயன்றிருந்தாள்.

"குமுதா–" ராமண்ணா கையை விட்டிருக்கவில்லை "எனக்குத் தெரியும், உனக்கு ஏதோ குறை இருக்கிறது என்று. சொல்,

என்னால் அதைப் போக்க முடியுமென்றால் நான் வேண்டியதைச் செய்யத் தயாராக இருக்கிறேன். என்னுடைய தவறே ஏதாவது இருந்தாலும் சொல்-"

"உங்கள் தவறு! அடாடாடா..! உங்களால் என்றைக்காவது தவறு நடக்குமா? புத்திசாலி, பிரபல எழுத்தாளர், நீங்கள் செய்வதைப் பாராட்ட எவ்வளவோ பேர் இருக்கும்போது-"

"குமுதா, நீ இப்படிப் பேசினால் நான் என்ன சொல்லட்டும்? வீட்டில் அதுவும் உன்னுடன் நான் என்றைக்காவது வறட்டுப் பெரியதனத்துடன் நடந்து கொண்டிருக்கிறேனா?"

"என்னோடு நீங்கள் எப்படி நடந்து கொண்டாலும் ஒன்றுதான், வழி தவறிய, கதிகெட்ட பெண்பிள்ளை-"

"குமுதா, குமுதா, இப்படிக் கடுமையாகப் பேசாதே. வழி தவறிய பேச்சைப் பேசாதே. வழி தவறியவன் நான். என்னைச் சரியான வழியில் அழைத்துச் செல்பவள் நீ, குமுதா-"

"நீங்களும் வேண்டாம், உங்கள் வழியும் வேண்டாம்" என்று கடைசியாகத் தான் கையை விடுவித்துக் கொண்டு விலகிச் சென்றிருந்தாள்.

அவ்வாறு கையை விடுவித்துக் கொண்டதனால் பீதியடைந்த குழந்தை மோகன், மறுபடியும் அழத் தொடங்கி யிருந்தான். குமுதாவிடம் போக ஆசைப்பட்டான். ராமண்ணா வுக்குப் பயமிருந்திருக்க வேண்டும்தான், குழந்தையை மறுபடியும் அடிப்பாள் என்று குழந்தையை வைத்துக் கொண்டு அவன் தயங்கினான். குழந்தை குமுதாவிடம் செல்ல அடம் பிடித்துக் கொண்டிருந்தது. கடைசியில் அழத் தொடங்கியது.

குமுதாவாலும் அடக்க முடியவில்லை. ஆவேசத்துடன் குழந்தையைப் பிடுங்கிக் கொண்டாள்.

"குமுதா, குமுதா, என் ஆணை" என்று ராமண்ணா குழந்தையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

தான் விடவில்லை.

"நான் வெளியே அழைத்துக் கொண்டு போய்க் காண்பித்து விட்டு வருகிறேன், குமுதா" என்றான்.

"நீங்கள் அழைத்துக் கொண்டு போகவும் வேண்டாம், வரவும் வேண்டாம். நானே வெளியில் அழைத்துப் போகிறேன், திரும்பி வரப் போவதில்லை. நீங்கள் ஆயிற்று, உங்கள் வீடு ஆயிற்று இருந்து கொள்ளுங்கள்" என்று அங்கிருந்து புறப்பட்டுத் தன்

அறைக்குச் சென்றாள். குழந்தையை உட்கார வைத்துவிட்டுத் தன்னுடைய சாமான்களை அணி செய்யத் தொடங்கினாள்.

ஹூம்.. என்று குமுதா நினைவு வெள்ளத்தில் முழுகி, மேலெழுந்தவளைப் போல நெடுமூச்செறிந்தாள்.

இன்றைக்கு அந்த விஷயம் நடந்திருந்தால் தான் அப்படி நடந்து கொண்டிருப்பாளா? குமுதாவுக்கு உட்கார்ந்த இடத்திலேயே இந்த எண்ணம் தோன்றியது. "திரும்பி வரப் போவதில்லை". என்று அன்று சொல்லியிருந்தாள். அதன் பிறகு என்னவெல்லாம் நடந்து விட்டனவோ! ஆனால் இன்றைய கணத்தில் இங்கேயே இருக்கிறாள், ராமண்ணாவின் வீட்டில்; இல்லை, தன் வீட்டில்; ஊஹூம் அதுவும் இல்லை, மோகனில் வீட்டில். பைத்தியம் தான்! தன்னுடைய வெறுப்பைக் காட்ட அவ்வாறு சொல்லிக் கொள்கிறாள். இது ராமண்ணாவின் வீடும் தான், தன்னுடைய வீடும்தான்; அதனால் இது மோகனின் வீடு. தங்கள் இருவருடைய தவத்தின் பலன் மோகன், இல்லாவிட்டால் மோகன் யார்.

இன்று தான் அவ்வாறு நடந்துகொள்ள மாட்டாள். அதற்கு உண்மையான காரணம் வேறு என்பதை அவள் மனம் வேறு வழி இல்லாமல் ஒப்புக் கொள்கிறது. இன்று எந்தக் காரணத்திற்காக தான் அவ்வாறு நடந்து கொள்ள மாட்டாளோ, அதே காரணத் திற்காகத்தான் அன்று அவ்வாறு நடந்து கொண்டாள் என்பதையும் தான் அறிவாள்.

அந்தக் காரணம் - ராமண்ணாவின் மீது தனக்கிருந்த மனோபாவம்.

குமுதா எப்பொழுதும் தோல்வியடைவதற்கு அந்த மன நிலையே காரணம். இன்று வரையிலும் ஒவ்வொரு சந்தர்ப்பத் திலும் கடைசியில் தோல்வியடைந்தவள் தானே என்பது அவளுடைய பிடிவாதம்.

ஒன்பது வருடங்களுக்கு முன்பு நடந்த அந்த நிகழ்ச்சி, தனது முதல் தோல்வி என்று அவள் தெரிந்து கொண்டிருந்தாள். "நானே வெளியில் அழைத்துக் கொண்டு போகிறேன், திரும்பி வரப் போவதே இல்லை" என்று அவள் ஆர்ப்பாட்டம் செய்ததே தோல்வியின் முதல் கோஷமாக இருந்தது.

ஏன்? தான் ஏன் அப்படிக் கூறினாள்? நன்றாக ஆலோசித்த பிறகா? இல்லை. ஒரு முடிவுக்கு வந்தா? அதுவும் இல்லை. மனத்தில்

இருந்ததைத் துணிவோடு சொல்லிக் காட்டவா? ஊஹூம் - அப்படிப்பட்ட எந்தக் காரணங்களுக்காகவும் அல்ல.

ஒரே ஒரு காரணம் - பயம். தன்னைப் பற்றிய பயம், ராமண்ணாவைப் பற்றிய பயம்.

ராமண்ணாவின் கை தன் உடலின்மீது பட்டதுமே அவளுக்குத் தெளிவாகிவிட்டது. இது ஜன்ம ஜன்மாந்திரங்களின் உறவு. ஒரு பேச்சால் துண்டித்து விடக்கூடியதல்ல, என்று.

ஒருமுறை ராமண்ணா சொல்லியிருக்கவில்லையா - துஷ்யந்தன் சகுந்தலை கதையை?

"நான் சகுந்தலையாக இருந்திருந்தால், துஷ்யந்தனை அருகில் வரவிட்டிருக்க மாட்டேன்" என்று சொல்லியிருந்தாள் தான்.

"ஏன் எப்படி அவன் என்ன செய்து விட்டான்?" என்று ராமண்ணா கேட்டது வியப்பாக இருந்தது.

என்ன சொன்னீர்கள்? அப்படி என்ன செய்து விட்டாள் ஏன்கிறீர்களா? இனியும் என்ன செய்யவேண்டும்? யாரும் அறியாமல் கல்யாணத்தைச் செய்து கொண்டு, அவள் கர்ப்பமாக இருந்தபோது உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டது ஒன்றும் எனக்கு நினைவில்லை என்று சொன்னது?"

"பாவம்! அவனுடையதென்ன தவறு? சாபத்தின் விளைவில் அவன் அகப்பட்டுக் கொண்டிருந்தான்."

"ஐய்யய்யய்ய...! யாரிடம் சொல்லுகிறீர்கள் இந்த காக்காய்-குருவி கதையை? காளிதாஸனும் ஆண். துஷ்யந்தனும் ஆண்--"

"ஆனால் இத்தக் கதையை முதலில் எழுதியது காளிதாஸன் அல்ல. மகாபாரதத்தில் இருக்கிறது அந்தக் கதை."

"இருந்தால் என்ன? எல்லாவற்றையும் விட்டு இந்த மட்டமான கதையை ஏன் பொறுக்கிக் கொண்டான்? யாராவது சிரிக்க மாட்டார்கள்?"

"ஏனாம்?"

"ஐய்யே! ஏனாம் என்றால் என்ன? கல்யாணம் செய்து கொண்டதே நினைவில்லை என்கிற பிராணி எப்பேர்ப்பட்டவன் அவன்!"

"பெரிய மனிதன் அவன்"

"போதும். பேசாதீர்கள்."

"அதேன் குமுதா? நாளைக்கு நான் அப்படிச் சொல்கிறேன் என்று வைத்துக் கொள், உன்னைக் கல்யாணம் செய்து கொண்டது

நினைவில்லை என்று. அப்பொழுது என்னைப் பைத்தியக்காரன் என்று ஜனங்கள் சொல்வார்களா, இல்லையா?"

"அதை விட மட்டமாக ஏதாவது சொல்லாமலிருந்தால் உங்கள் அதிர்ஷ்டம்."

"அப்படித்தானே? நான் செய்தால் பைத்தியக்காரத்தனம் என்பார்கள், கோர்ட்டில் வழக்கும் போடுவார்கள். அதையே துஷ்யந்தன் செய்தான்; அவனைப் பெரிய மனிதன் என்றார்கள், நாடகம் எழுதினார்கள்.

"போதும் உங்கள் பேச்சோ நீங்களோ"

"இல்லை, நீ சகுந்தலையாக இருந்தால் இப்படிச் செய்வேன் என்று சொன்னாய்--"

"ஆமாம், கண்டிப்பாக அவனை அவன் வந்த வழியிலேயே திருப்பி அனுப்பியிருப்பேன்."

"நீ அப்படிச் செய்திருக்க மாட்டாய் என்பதைக் காட்டுவதற்காகத்தான், காளிதாஸன் அந்த நாடகத்தை எழுதினான்."

"நான் செய்திருக்க மாட்டேன் என்பதைக் காட்டுவதற்கா?"

"அதாவது நீயே சகுந்தலையாக இருந்தால்–என்றேன்."

"நீங்கள் சொல்வது உங்களுக்குத்தான் புரியும்!"

"அப்படியல்ல. இங்கே பார், துஷ்யந்தன் சகுந்தலை விவாகம் எப்படி நடந்தது? துஷ்யந்தனுக்கு அரண்மனையில் வேண்டிய பேரழகிகள் இருந்தார்கள்; சகுந்தலைக்கோ காதல் - கல்யாணம் என்கிற எண்ணங்களே தெரிந்திருக்கவில்லை. அதுவுமல்லாமல் துஷ்யந்தன் அங்கே வந்தது வேட்டைக்காக. கண்வ முனிவரின் குடிசை பக்கத்திலே இருக்கிறது என்று தெரிந்ததும் வணங்கிவிட்டு போவோம் என்று--

"அந்தக் கதையெல்லாம் எனக்குத் தெரியும்"

"இல்லை, அந்தக் கதையிலுள்ள வேடிக்கையை உனக்கு எடுத்துச் சொல்லுகிறேன். அதாவது, யாருக்கும் எந்த விதமான யோசனையும் இல்லாமல், அகஸ்மாத்துமாகச் சந்திப்பு ஏற்பட்டது. சந்திப்பு பரிசயம் ஆயிற்று, பரிசயத்திலிருந்து கவர்ச்சி தோன்றியது, கவர்ச்சி நட்பாக மலர்ந்தது, நட்பு காதலாக பரிணமித்தது--"

"கடைசியில் கல்யாணம் ஆயிற்று."

"ஹூம், இவ்வளவும் சில நாட்களுக்குள் நடந்தவை"

"ஆமாம், அதற்கும் நான் சொல்வதற்கும்--"

"சம்பந்தம் இருக்கிறது. பரிசயமில்லாமல், முன்பாக எண்ணிப் பார்க்காமல், தேவை இல்லாமல், பெரியவர்களின் உதவி இல்லாமல் கல்யாணம் நடந்தது.ஏன்?"

"துஷ்யந்தன் பாக்கியசாலி என்பதனால்."

"ஹஹ்ஹ! சகுந்தலாவுக்கு என்ன குறைச்சல்? இருவருக்கும் பொறுப்பு உண்டு. இருவருடைய காதலும் ஆழமானதும் பரஸ்பர மானதுமாக இருந்தது. உலகில் அவர்கள் எங்கே இருந்தாலும் ஒரு நாளில்லாவிட்டாலும் ஒரு நாள் சேரத்தான் சேருவார்கள் என்பதைக் காட்டவே, காளிதாஸன் அந்த நாடகத்தை எழுதினான். அதனால்தான் பின்னால் மாரீசனின் ஆசிரமத்தில் துஷ்யந்தனைப் பார்த்ததும், முதல் முறை கண்வரின் ஆசிரமத்தில் அவனைப் பார்த்தபோது எப்படி இருந்ததோ, அப்படியே ஆயிற்று அவள் நிலைமை."

"கதையில் எப்படி வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளலாம். எனக்கு நம்பிக்கை இல்லை" என்றிருந்தாள் அப்போது. அந்த விஷயத்தின் நம்பிக்கையைப் பெறும் சிட்சையையே தனக்கு அளித்திருந்ததோ என்று தோன்றியது இப்போது. சகுந்தலை அவ்வாறு நடந்து கொண்டது இயற்கைதான் என்று இப்போது தான் எப்போதும் ஒத்துக் கொள்ளத் தயாராக இருந்தாள்.

ராமண்ணா தன்னை மணந்து கொண்ட முறையை நினைத்துக் கொண்டால், தான் என்றென்றைக்கும் அவனுடன் குடும்பம் நடத்தக் கூடாது. தானாகவே விரும்பி வந்தவன், மேலும் சரளக்கா விடாப் பிடியாக அந்தப் பேச்சையே சொல்லிக் கொண்டிருந்தாள், தனக்கும் கல்யணத்தில் சம்பந்தம் இருந்தது; இருந்தாலும் சரளக்கா பிழைத்திருந்த வரையில் ராமண்ணா பகிரங்கமாக அந்தப் பேச்சைப் பற்றிய பிரஸ்தாபத்தையே எடுக்கவில்லை. ஆனால் தன்னுடைய சகவாசத்தை மட்டும் விரும்பியிருந்தான். சரளக்கா இறந்த பிறகும், அவனாக அந்தப் பேச்சை எடுத்திருக்க வில்லை. கடைசியில் தான் இதன் பொருள் என்ன. ராமண்ணா தன்னை விரும்பவில்லை என்று தானே? தெரிந்தே தன்னை மோசம் செய்தான் என்றுதானே? இப்படிப்பட்டவனுடன் குடும்பம் நடத்துவது எந்த மனத்துடன்? கல்யாணம் என்கிற உதவியை வேறு தன் மீது சுமத்தியிருந்தான். கல்யாணம் ஆகாவிட்டால் தான் சுதந்திர மனுஷியாக இருந்திருக்கலாம். கல்யாணம் ஆகாமலிருந்திருந்தால் அவன்மீது தன் அதிகாரம் இருந்திருக்கும். இப்போது போல அல்ல. இப்போழுது தான்

விவாகம் செய்து கொள்ளப்பட்ட மனைவி. அதிகாரத்திற்குட் பட்ட போகப் பொருள். கல்யாணம் செய்து கொள்ளாமலிருந் திருந்தால்? போகப் பொருளை அடைவதற்காக பிச்சை எடுக்க வேண்டும் அவன்!

ஹூம்...அதெல்லாம் சரி, தன்னை யாரும் வற்புறுத்தியிருக்க வில்லையே? தான் கல்யாணத்திற்குச் சம்மதித்திருக்க வேண்டிய கட்டாயம் இல்லையே? தான் சம்மதித்து விட்டு இப்போது ராமண்ணாவைத் தூற்றினால்--?

தூற்றல் எங்கிருந்து வந்தது. பெண்ணின் தலைவிதி. சகுந்தலையின் கதை - என்று பெருமூச்சு விட்டாள். ஏதோ ஒரு சக்தி தன்னை ராமண்ணாவிடம் ஒப்படைத்து விட்டிருந்தது. தான் செய்த முயற்சிகளெல்லாம் வீணாகப் போய்க் கொண் டிருந்தன. அறிவு ஒருபுறம் இழுத்ததால், இதயம் மற்றொரு புறம் இழுத்துக் கொண்டிருந்தது. தான் எவ்வளவுக்கெவ்வளவு விலகி இருக்க முயற்சித்தாளோ, அவ்வளவுக்கவ்வளவு அதிக வேகத் துடன் தன்னை அந்த சக்தி அருகில் இழுத்துக் கொண்டிருந்தது.

அதனால் எப்போதுமே தனக்குப் பயம் இருந்தது. ராமண் ணாவின் போகப் பொருளாக இருப்பதில் தனக்கு மகிழ்ச்சியே இருந்ததென்றாலும், அவன் தன்னை வெறும் பொருளாகக் காணும் போது தனக்கு வெறுப்பு ஏற்பட்டது.

தான் அவனை நேசித்து வந்ததைப் போல அவனும் தன்னை--

இல்லை, அந்த நம்பிக்கை அவளுக்கு இருக்கவில்லை. அதனால் தான் அவனுக்குப் பயம், தான் எங்கே மறுபடியும் அவன் வசம் அகப்பட்டுப் கொண்டு விடுவாளோ என்று.

ராமண்ணாவின் எதிரில் இருந்தால் அந்த பயம் அதிகமாகி கொண்டிருந்தது. அவனுடைய ஸ்பர்ஸமோ - அதனால்தான் அன்று சொல்லியிருந்தாள், "திரும்பி வரவே போவதில்லை" என்று.

ஹூம்...ஆனாலும் வந்துவிட்டேனே? வந்தேன், வீட்டைப் பார்த்துக் கொண்டேன், வீட்டுக் குழந்தையை வளர்த்தேன்--

சட்டென்று தன் பகற்கனவைத் தடுத்தாள் குமுதா. கைக்கடி யாரத்தைப் பார்த்துக் கொண்டாள். "இதென்ன இது? எவ்வளவு சொல்லியும் இன்னும் வரவில்லை இந்த மோகன்? அதற்குள்ளாக நிர்வாகிகள் கூட்டத்திற்கு அழைக்க வந்துவிட்டால்? சே! என்ன பையன் இவன்! எங்கே போனானோ ஊர் சுற்றுவதற்கு?" என்று கூறியபடி எழுந்து மறுபடியும் கதவருகே வந்தாள்.

## 10

"இதென்ன? ஒன்றுமே தெரியவில்லையே?" என்று ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தான் ராமண்ணா. மறு கணம் அவனுக்கே ஆச்சரியம் ஏற்பட்டது.

தெரு நெடுகிலும் மாடுகளும் கன்றுகளும் சென்று கொண்டிருக்கின்றன, அவைகளின் பின்னால் மாட்டுக்காரப் பையன்கள் கூச்சல் போட்டபடி சென்று கொண்டிருக்கிறார்கள், அதோ அங்கே இரண்டு பேர் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் - ஒருவர் நின்று சிரித்துக் கொண்டிருக்கிறார், தெருவின் இந்தப் பக்கம் ஒன்று சேர்ந்த காக்கைகள் திடீரென்று இறக்கையைப் படபடத்துக் கொண்டு கூட்டமாக தெருவின் அந்தப் பக்கத்தை நோக்கிப் பறந்து கொண்டிருக்கின்றன, அந்த நாய் அவைகளைப் பிடிப்பதற்காக முயன்று, குரைத்துக் கொண்டிருக்கிறது–இவ்வளவும் காணப்பட்ட போதிலும் நான் "ஒன்றும் தெரியவில்லை"என்றேனே!

மனிதனின் உலகம் என்றாலே இப்படித்தான். தனக்கு வேண்டுமென்றால் பார்ப்பது. இல்லாவிட்டால் உலகமே இல்லை என்று சொல்வது...ஹும்...என்று எதையோ முணுமுணுத்தக் கொண்டு அடியெடுத்து வைக்கத் தொடங்கினான். அறை நெடுகிலும் நடந்து அப்படியே முணுமுணுத்தபடியே மறபடியும் ஜன்னலருகில் வத்து வெளியே பார்த்தான்..."கண்டூயமானம்...." முணுமுணுப்பதை நிறுத்திவிட்டுத் தனக்குத்தானே சிரித்துக் கொண்டான். தன்னுடைய தந்திரம் தனக்கே தெரிந்துவிட்டது என்று சிரித்தான். அதொரு பழக்கம் அவனுக்கு. மனத்திலுள்ள எண்ணங்களை மறக்க வேண்டுமென்கிறபோது ஒரு வட மொழி சுலோகத்தை முணுமுணுப்பது. அதிலும் உள்ளிலுள்ள எண்ணங்களை ஒதுக்கி வைத்துவிட்டு முன்னே போகவேண்டுமென்று தோன்றும்போது காளிதாஸனின் ஒரு சுலோகத்தை - அது ஒன்றையே மேலும் மேலும் முணுமுணுப்பது. இப்பொழுது அதே சுலோகத்தை அவன் வாய் சொல்லிக் கொண்டிருந்தது—

"கார்யா ஸைகத-லீன்-ஹம்ஸ-மிதுனா ஸ்ரோதோஹா மாலினீ
பாதாஸ்தாமபிதோ நீஷண்ணஹரிணா கௌரீகுரோ: பாவனா:
சாகாலம்பித வல்கலஸ்ய ச தரோரர் நிர்மாது மிச்சாம்யத:
பார்ஸ்வே க்ருஷ்ணம்ருகஸ்ய வாமநயனாம் கண்டூயமானாம் ம்ருகீம்

அந்த சுலோகத்தின் சூழ்நிலையே அமைதியானது என்று. என்றைக்குமே அவனுடைய எண்ணம். மாலினி நதியின் கரை

யிலுள்ள மணல். ஆண்-பெண் அன்னப் பறவைகள்; ஈஸ்வரனின் பாதங்கள் படித்திருக்கின்றன; பக்கத்தில் ஒரு மரம்; அதன் மீது மரவுரிகள் உலரப் போட்டிருக்கின்றன; அந்த மரத்தின் அடியில் ஒரு கறுப்பு மான்; அதை நாக்கால் தடவிக் கொடுத்துக் கொண்டிருக்கும் பெண் மான்.

பலே! சகுந்தலையின் நினைவால் வாடிக் கொண்டிருந்த துஷ்யந்தன், சரியான சித்திரத்தைத் தீட்டிக் கொண்டிருந்தான். அந்த சுலோகத்தின் சூழ்நிலையைப் போல அதன் பொருள், பத ஜோடனை, எல்லாமே சாந்தமாக, அமைதியைக் குறிப்பதாக இருக்கின்றன. ஏன்? தெரியவில்லை. அதுதான் கவியின் திறமை. சட்டென்று மனத்தில் ஒரு முத்திரையைப் பதிப்பது.

தனக்கு இந்த சுலோகத்தை முணுமுணுக்கிற பழக்கம் ஏற்பட்ட சந்தர்ப்பமும் அது போன்றதே. அதைத் தான் என்றுமே மறக்க இயலாது.

அன்று-எப்பொழுது? - 7-8 வருடங்களுக்கு முன்பு இருக்கலாம். அப்பொழுது ஒரு நாள் - தான் இப்படியே ஜன்னலருகில் நின்று கொண்டிருந்தான் எதிர்பார்த்துக் கொண்டு. முதல் நாளோ அதற்கும் முதல் நாளோ - இப்பொழுது ஞாபகம் இல்லை, அப்போது அது ஒரு வருடம் போல நீண்டு தோன்றியிருந்தது - குமுதா மோகனை அழைத்துக் கொண்டு, வீட்டைவிட்டு வெளியில் சென்றிருந்தாள். அவள் வெளியே சென்றபோது தான் அதே ஜன்னலினருகில் நின்றிருந்தான். அதன் பிறகு அப்படியே எவ்வளவு மணி நேரம் - அல்லது எவ்வளவு நாட்கள் நின்றிருந் தானோ, அவள் வருவாள் என்று எதிர் பார்த்துக் கொண்டு. அவள் வரவேயில்லை. எவ்வளவோ தடவை தோன்றியது தான் போய்ப்பார்த்து வரவேண்டும்மென்று. ஆனால் தான் அவளைத் தேடிப் போயிருக்கும் போது அவள் வந்துவிட்டால் என்கிற சந்தேகத்தினால் நின்ற இடத்திலேயே நின்று விட்டான். அவள் வரவில்லை. மறுபடியும் தன் அத்தை வீட்டிற்க்குப் போயிருக்கக் கூடும் என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டான். ஓர் இரவு வீட்டில் விளக்கு இருக்கவில்லை. இரண்டு நாட்களாகத் தான் சாப்பிட்டிருக்கவில்லை. ஒரு சமயம் தோன்றும்-போய் அவளிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டு அவளை அழைத்து வரவேண்டுமென்று. மற்றொடு சமயம் தோன்றும் - இந்த தடவை என்ன செய்தாலும் அவள் வருவது சாத்தியமில்லை என்று.

தவறு தன்னுடையதுதான் என்று அவனுக்கு இப்போது தோன்றியிருந்தது. எந்த நிபந்தனையின் பேரில் அவள் திரும்பி

வரச் சம்மதித்ததிருந்தாளோ. அந்த நிபந்தனையை மீறத் தான் முயன்றது தவறு என்று தோன்றியது. அவள் புறப்பட்டுச் சென்ற பிறகு. ஆனால் அதற்கு முன்னால் எவ்வளவு தன்னம்பிக்கையோடு தான் அந்த நிபந்தனையை மீறத் தயாராகப் புறப்பட்டிருந்தான்!

அன்றைய நினைவினால் இன்று ராமண்ணாவுக்கு மறுபடியும் சிரிப்பு வந்தது. இன்று தன் வயது 45. என்றால் அன்று தனக்கு 37 - 8. இருந்தாலும். ஒரு புத்தியில்லாத இளைஞனைப் போல அன்று தான் நடந்து கொண்டு விட்டானே!

காமீ ஸ்தாவம் பஸ்யதி! இத்தகைய விவேகமற்ற இளைஞர் களைப் பார்த்துதான் காளிதாஸன் அந்த வாக்கியங்களை எழுதியிருப்பானோ! என்று மோகனை வாங்கிக் கொள்வதற்காகக் கையை நீட்டிய போது. அது குமுதாவின் உடலில் பட்டபோது. அவளுடைய கண்களில் தோன்றிய நிறைவின் சிரிப்பைக் கண்டு தான் உற்சாகம் அடைந்திருந்தான். உடனே அவள் எதிர்த்தாள். ஆர்ப்பாட்டம் செய்தாள். அறைக்குச் சென்று தன்னுடைய சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டாள்; இன்னும் என்ன செய்வாளோ என்று பயந்து தான் மெதுவாக நடந்து சென்று. பாதி திறந்திருந்த கதவின் இடுக்கு வழியாகப் பார்த்தான். குமுதா தன்னுடைய படத்தின் முன்னால் நின்றிருப்பது தெரிந்தது. யார் கண்டார்கள். அவள் அதை எடுத்து கீழே எறிந்து. காலால் மிதிக்கவும் கூடும் என்ற பயத்துடன். தான் பார்த்துக் கொண் டிருக்கும் போதே அவள் சட்டென்று அதை எடுத்து நெற்றியில் வைத்துக் கொண்டாள் - வணக்கம் செய்கிற பாவனையில். பிறகு - பிறகு - அதை முத்தமிட்டாள்! தான் கண்ணால் கண்ட காட்சி அது. கற்பனை செய்து கொண்டதல்ல. அந்தக் காட்சியைக் கண்டதும் தனக்குப் புதிய சக்தியே வந்தாற் போலிருந்தது. குமுதா உண்மையிலேயே தன்னை நேசிக்கிறாள். ஏதோ தவறான எண்ணத்தினால் தன்மேல் கோபித்துக் கொண்டிருக்கிறாள். அந்தத் தவறான எண்ணத்தைப் போக்க வேண்டும் - என்று நினைத்துக் கொண்டான்.

எப்படிப்பட்ட பைத்தியக்காரனாக இருந்தான் தான் அப்போது! தவறான எண்ணம் என்னவாக இருக்கமுடியும் என்கிற யோசனையில் தொடங்கி. கடைசியில் அதைத் தேடி - கண்டு பிடித்து விட்டேன் - என்று தான் பிரகஸ்பதியின் அவதாரம் என்கிறாற் போல பெருமையால் பூரித்தான்.

காமீ ஸ்தாவம் பஸ்யதி!

சரி, அதற்குத் தகுந்தபடிதான் முடிவுக்கு வந்திருந்தான். குமுதாவின் கோபம் தான் நிபந்தனையை அப்படியே எழுத்து தவறாமல் கடைப்பிடித்தனால் தான் என்று! தன்னை அவள் இவ்வளவு நேசிக்கும் போதுதான் மட்டும் அவள் எப்பொழுதோ கோபத்தில் சொன்ன வார்த்தையை நம்பிக் கொண்டு உட்கார்ந் திருக்கிறானே! "தாம்பத்ய" வாழ்க்கை வயதை அநுசரித்தது. அதற்காக விழைவது பாவமும் அல்ல, கெடுதலும் அல்ல. ஆண், பெண் என்கிற வேற்றுமை படைப்பின் நியமத்திலிருக்கும் ஒரு அநுகூலம். வயதின் இயற்கைக்கு இந்த வேற்றுமை கிடையாது என்று எல்லாம் வல்லவனைப் போல, தான் மற்றொரு வாத்ஸ்யாயனர் என்ற நினைப்பில் வாதம் செய்து, முடிவை எய்தித் தயாராக இருந்தாள்.

இப்போது 7-8 வருடங்களுக்குப் பிறகு தோன்றுகிறது, அன்றைய தன் எண்ணம், நடத்தை இரண்டும் வெட்கம் கெட்ட தனத்தின் எல்லையாக இருந்தன என்று. அத்தகைய வெட்கமில்லா மைக்குத் தகுந்த தண்டனை கிடைத்தது. விடியும் வரையிலும் குமுதா தன் அறையின் கதவைத் திறந்து கொண்டே படுத்திருந்தபோதிலும் அந்தப் பக்கம் கண்ணெடுத்துப் பார்க்கக் கூடத் தனக்குத் தைரியம் இருக்கவில்லை. அத்தகைய தண்டனை கிடைத்திருந்தது அன்று தனக்கு. அவள் அப்படிச் சொல்வாள் என்று தான் கனவில் கூட நினைத்திருக்கவில்லை. அது தெரிந்திருந்தால் தான் அவளோடு பேசுவதற்கே போயிருக்க மாட்டான்.

இருந்தாலும்! காமீ ஸ்வதாம் பஸ்யதி! காமத்தால் கண்களை இழந்திருந்த தான், சௌகரியமான கடலை நீந்திச் சென்றிருந் தான். அதே வெறியில் அவளைக் கூப்பிட்டான்.

"குமுதா"

திடுக்கிட்டுத் தன்னைப் பார்த்து அவள் சட்டென்று ஒரு புன்முறுவலைத் தோற்றுவித்தாள். அப்பொழுதே தான் புரிந்து கொண்டிருக்கவேண்டும். ஏனெனில் அவளுடைய அந்தப் புன்முறு வலோடு கூடிய முகத்தில் அமைதி இருக்கவில்லை.

"குமுதா"

"உள்ளே வாருங்கள்."

"குமுதா, நடந்ததை நீ மறந்து விடுவாய் என்று எனக்குத் தோன்றியிருந்தது. பார்க்கப் போனால் தவறு என்னுடையது தான். நான் ஒத்துக் கொள்கிறேன்."

"உங்களைப் போன்ற முற்போக்குவாதிகள் இதைத் தவறு என்று எடுத்துக் கொள்ளவேண்டுமா?"

"அங்? என்ன சொன்னாய்"

"இல்லை, பழைய சம்பிரதாயத்துக் கட்டுப்பெட்டிகள அப்படிச் சொல்லலாம். ஆனால் நீங்கள்--"

"ஏது? என்ன? எதைப்பற்றி நீ சொல்கிறாய்?"

"தேவடியாட்களைக் கல்யாணம் செய்து கொள்வது."

"குமுதா!" சாட்டையடி கொண்டவனைப் போல அவன் கத்தினான்.

"நேசிக்காத பேண்ணோடு கொள்ளும் தொடர்பு தேவடியாளோடு கொள்ளும் தொடர்பு என்று நீங்கள்தான்--"

"குமுதா, குமுதா, ஏன் என்னை தண்டிக்கிறாய் இப்படி எல்லாம் பேசி? உன்னை நேசித்திருக்காவிட்டால் கல்யாணம் செய்து கொண்டிருப்பேனா? ஏன் இல்லாத எண்ணங்களையெல்லாம் மண்டையிலே போட்டுக் கொண்டு—"

"எனக்கே குழந்தை வேண்டியிருந்தது. அதற்கு நீங்கள் ஜவாப்தாரி என்று நான் பிடித்துக் கொள்ளவில்லை. இப்பொழுதாவது திருப்தி தானே".

"குமுதா, குமுதா, ஏதோ தவறான எண்ணத்தினால் நீ ஏதேதோ நினைத்துக் கொண்டு விட்டிருக்கிறாய்-"

"என் எண்ணம் தவறாது. இப்போது நீங்கள் எதற்காக இங்கே வந்திருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். அந்த என்னுடைய எண்ணம் தவறு என்கிறீர்களா? ஆனால் ஒரு வார்த்தை உங்கள் திருப்திக்கு நான் தடையாக இருக்கமாட்டேன். அதற்கு முதலில் ஒரு விஷயத்தை எனக்குத் தெளிவு படுத்திவிடுங்கள். இப்போது நீங்கள் இங்கே வந்திருப்பது நான் உங்களுடைய தாலி கட்டிய மனைவி என்கிற உரிமையினாலா, அல்லது உங்களிடம் மோகம் கொண்டிருக்கும் மனம் போனபடி நடக்கும் பெண் என்பதனாலா? நீங்கள் எப்படிச் சொல்கிறீர்களோ, அந்தப் பாத்திரத்தை ஏற்று நடிக்க நான் தயாராக இருக்கிறேன்"

இதைச் சொன்னதுமே விளக்கை அணைத்துவிட்டாள். இருட்டு என்பது எவ்வளவு பயங்கரமானது என்று அப்போது தெரிந்தது தனக்கு. நிற்கவும் பயம், ஓடிப் போகவும் பயம். தன்னை விட்டுத்தான் ஓடிப் போவதென்பது இயலாது என்கிற ஏமாற்றத்தின் பயம்.

பின்னர் குமுதா வீட்டைவிட்டு வெளியேறும் வரையில், தான் அவளுக்குத் தன் முகத்தைக் காட்டவில்லை.

நான் தன்னை நேசிக்கவில்லை என்று சொல்லியிருந்தாளே! அதற்கு தான் என்ன பதிலைத் தரவேண்டும்? "இல்லை குமுதா, உன்னை நான் நேசிக்கிறேன்" என்று சொல்ல வேண்டும்? அவை வெறும் வார்த்தைகள். அவள் அப்போதிருந்த மனநிலையில் அந்த வார்த்தைகளை நம்பியே இருக்கமாட்டாள். அவள் நம்பட்டும், விடட்டும். தன்னுடைய நிலை என்ன?

குமுதாவை அன்று தான் நேசித்திருந்தானா?

இன்று குமுதாவை நேசிக்கிறானா?

ராமண்ணா பெருமூச்சு விட்டான். மறுபடியும் ஜன்னலுக்கு வெளியே பார்த்தான். முகத்தில் துளிர்த்திருக்காத வியர்வையைத் துடைத்துக் கொண்டான். மெதுவாக அடியெடுத்து வைத்துச் சென்று, நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, எதிரேயிருந்த சுவரைப் பார்த்தான். "இருவரை ஒரே சமயத்தில் உண்மையாக நேசிக்க முடியும் என்பதை நீ ஒப்புக் கொண்டால், நான் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுகிறேன், சரளா" என்று சுவற்றில் மாட்டப்பட்டிருந்த சரளாவின் படத்தைப் பார்த்துச் சொன்னான்.

படத்தை உற்றுப் பார்த்தான். ஏமாற்றத்துடன் தலையை ஆட்டினான்.

"நீயும் பதில் சொல்ல மாட்டாய்."

ஹூம் என்று பெருமூச்சுவிட்டு, யோசனையில் முழுகியவனைப் போல மௌனமாக உட்கார்ந்து விட்டான்.

"முடியுமோ இல்லையோ நீ சொல். உண்மையானதா இல்லையா என்று நான் சொல்லுகிறேன்." என்றான் மறுபடியும் படத்தைப் பார்த்து.

உண்மையைப் பற்றி இப்போது அவனுக்கு தைரியம் வந்திருந்தது. 7–8 வருடத்திய அனுபவம், அனுபவத்தோடு தைரியமும் வந்திருந்தது. ஒரே சமயத்தில் இருவரை "உண்மையாக" நேசிக்க முடியும் என்று இந்த அனுபவத்திலிருந்து கற்றுக் கொண்டிருந்தான் ராமண்ணா.

குமுதாவையும் தான் நேசிக்கிறான் என்பதைப்பற்றி இப்போது அவனுக்கு சந்தேகமே இருக்கவில்லை. ஆனால் அதை யார் முன்னிலையில் சொல்வது? "இப்பொழுது உன் பேரில் பிரியம் இருக்கிறது" என்றால், அவளுக்கு நம்பிக்கை உண்டாகும் என்கிற

நம்பிக்கை இருக்கவில்லை. இதுவல்லாமல், "உன்னையும் நேசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றால், அவளுக்குச் சமாதானம் உண்டாகும் என்கிற நம்பிக்கையும் இருக்கவில்லை. தன்னை ஒருத்தியையே நேசிக்க வேண்டும் என்கிற ஆசை பெண்ணுக்கு இயற்கையாகவே இருக்கும்போது, அவளுக்கு அந்த வார்த்தைகளால் எப்படி திருப்தி ஏற்படும்?

இருந்தாலும் குமுதாவின் பேரில் தனக்கு நேசம் இருக்கிறது என்பது, அவள் இரண்டாவது முறை வீட்டை விட்டுப் போகும் போதே அவனுக்குத் தெரிந்தாற்போலிருந்தது. அன்றுகூட ஜன்னல் வழியாக வெளியே பார்க்கும் போது இப்படித்தான் "ஒன்றுமே தெரியவில்லை" என்று தோன்றியிருந்தது. இப்பொழுது இன்னொரு தடவை பார்த்தால் ஏதேதோ தெரிந்தது. அப்போது எவ்வளவு முறை பார்த்தாலும் ஒன்றுமே காணப்பட்டிருக்கவில்லை. நிஜமான சூனியம் உள்ளேயும் வெளியிலும் வியாபித்துவிட்டிருந்தது. அது மட்டுமல்ல, உற்றுப்பார்த்தால் தொலைவில் குமுதாவே வந்து கொண்டிருப்பது போலத் தோன்றிக் கொண்டிருந்தது. பார்வையைக் குமுதாவே நிரப்பியது போல இருந்தது; பார்வையையல்ல, மனத்தை என்று சொல்லவேண்டும். ஏனென்றால் மனத்தில் இருந்தால்தான் கண்ணுக்குக் காணப்படும். அன்று அவ்வாறு அனுபவம் ஏற்பட்டதால்தான் குமுதாவை நேசிக்கிறான் என்று அவன் மனத்திற்குப் பட்டிருந்தது. சரளாவையும் நேசித்துக் கொண்டிருந்த தான் குமுதாவையும் நேசிக்கிறானே! இது ஆத்ம துரோகமில்லையா, என்கிற எண்ணமும் தோன்றியிருந்தது.

அது ஆத்ம துரோகமாக இருக்கவில்லை. ஒரு அனுபவத்திலிருந்து மட்டுமாவது அவனுக்கு அது மனத்தில் பட்டிருந்தது. குமுதாவின் பிரிவைப் பொறுத்துக் கொண்டிருந்த போது, என்ன காரணத்தினாலோ என்னமோ, புது நாவல் ஒன்றை எழுத ஆரம்பித்திருந்தான். எழுதும் போது சரளா, குமுதா இருவரும் தன் அருகில் உட்கார்ந்திருப்பது போல அவனுக்குத் தோன்றிக் கொண்டிருந்தது. அவர்களுடைய நெருக்கத்தின் லாபத்தை அடைவதற்காக என்கிறாற்போல மணிக்கணக்காக எழுதிக் கொண்டிருந்தான். அவ்வாறாக ஒரு நாள் அந்த நாவல் எழுதி முடிந்தது இரண்டொருவருக்கும் படித்துக் காண்பித்தான். அவர்களுடைய பாராட்டுதலாலும், பிடிவாதத்தாலும் சில நாட்களுக்குள்ளாக அது அச்சாகிவிட்டது. அடேயப்பா! விமர்ச

கர்கள்தான் அதை எவ்வளவு புகழ்ந்திருந்தார்கள்! அன்று பத்திரிகைகளில் வெளியாகியிருந்த விமரிசனங்களைப் படித்து விட்டு (வாசகசாலையில்) வீட்டிற்கு ஓடோடி வந்தான். வந்ததுமே,

"குமுதா, குமுதா, என் நாவலைப் பற்றி-"

என்று ஆரம்பித்துச் சட்டென்று பேயறைந்தவனைப் போல நின்று விட்டான்.

குமுதா எங்கே இருக்கிறாள்? அவள் தன் வீட்டைவிட்டுப் போய் விட்டிருக்கிறாள் என்பது மறந்து போய் விட்டிருந்தது. இருந்தாலும் தான் தன்னுடைய சந்தோஷத்தில் பங்கு கொள்ளக் குமுதாவையே ஏன் அழைத்திருந்தான்?

அந்தக் கேள்விக்குப் பதில், குமுதாவைத் தான் நேசிக்கிறான் என்பது.

ராமண்ணாவுக்கு அது குறித்துப் பின்னால் ஆச்சரியமும் ஏற்பட்டிருக்கவில்லை, மனைவியையும் மக்களையும் சுயநலமற்ற ஈடுபாட்டுடன் நேசிக்கக்கூடும் என்றாம் இரு மனைவியரை அதே போல ஏன் நேசிக்கக்கூடாது என்று தனக்குள்ளாகவே வாதம் செய்து கொண்டான்.

அந்த வாதத்தின் முடிவு, எவ்வளவோ நாட்கள் வரையில் கிடைக்கவில்லை. மனைவியுடன் இருக்கிற உடல் உறவு காரணமாக, விவாதத்தில் சிக்கல் தோன்றியிருந்தது. ஆனால் அது தவறு என்று சொல்லிக் கொண்டான். கணவன் - மனைவியின் நேசத்திற்குப் படுக்கை தான் எல்லை என்று நினைப்பதே தவறு என்று பிடிவாதமாகச் சொல்லிக் கொண்டான். நேசத்தின் லட்சணங்களே வேறு, மனத்தின் நேசத்திற்கும் சரீர சம்பந்தத் திற்கும் அவ்வளவு நெருங்கிய தொடர்பு இருக்குமானால், சமுதாயத்தில் விலைமாதரைக் குறித்து வெறுப்பும், ஏளனமும் இருந்திருக்காது என்று சொல்லிக் கொண்டான். கணவன், மனைவியின் உறவில் அது முக்கியமல்ல என்று சொல்லலாமா? அது முக்கியமில்லாவிட்டால், அநேக சமூகங்களில் 'அது' இல்லா ததன் காரணமாக அல்லது அது முடியாததன் காரணமாக, விவாகரத்துக்கள் ஏற்பட்டிருக்காது. அப்படியானால்-? ஒருநாள் இந்தச் சிக்கல் விடுபட்டது ராமண்ணாவுக்கு. உடல் உறவு ஆண் - பெண்களுக்கு இயற்கை ஒப்புவித்திருக்கும் ஒரு பொறுப்பு. ஒரு நோக்கத்திற்காகச் சுமத்தப்பட்ட பொறுப்பு. அந்த நோக்கத்தைப் பற்றிய உணர்வு இல்லாவிட்டால், அது கீழ்த்தரம். அந்த நோக்கத்தின் பொறுப்பை உணர்ந்தால், அது இயற்கை தர்மம்.

அந்த நோக்கம் வேறொன்றும் இல்லை, இயற்கையை நடத்துவது. படைப்பு என்பது நிரந்தர யுவதி. மூப்பும் இல்லை, சாவும் இல்லை. மூப்பின் சிறகுகள் உதிர்வதைப் போல, சாவின் சத்யத்தை மறுப்பது போல, பழையதில் புதியவை துளிர்க்கச் செய்வது. அந்தப் பொறுப்பு பிராணிகளிடையே ஆண்- பெண்களிடையே பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. ஆகவே காம இச்சையைத் தீர்த்துக் கொள்ள எந்தப் பெண்ணாக இருந்தாலும் போதும். ஆனால் இயற்கையின் திருப்திக்கு, நேசித்து மணந்து கொண்ட மனைவியே வேண்டும். அவ்வாறாக, நேசத்திற்கும் காம திருப்திக்கும் இயற்கையான சம்பந்தம் இல்லை–.

ஆனால்? தான் குமுதாவுடன் தொடர்பை வளர்த்துக் கொண்டதைப் பார்த்தால்-?

உண்மை, குமுதா தன்னை வசீகரித்தது காம இச்சையின் நோக்கில். குமுதாவைத் தான் மணந்து கொண்டது விவகாரத்தின் அநுகூலம் என்கிற நோக்கில்.

அதெல்லாம் உண்மையாக இருந்தாலும், இன்று குமுதா எதிரில் இல்லாவிட்டாலும் தன்னை வசீகரிக்கிறாளே? அவள் சகவாசம் இருந்தால் போதும் தன் மனம் அமைதியாக இருப்பதற்கு- இப்படி ஒரு வருடத்திற்கும் அதிகமாக இருந்ததே? அவளுடன் சகவாசம், அவள் சுற்றி முற்றி வளைய வருதல், அவளுடன் பேச்சு, சண்டை கூட அவளுடன் வேண்டியிருந்தது என்னும்போது பழையதை நினைத்து என்ன பயன் என்று நினைத்துக் கொண்டான்.

கடைசியாக விவாதத்தில் வெற்றி பெற்றிருந்தான்– எவ்வளவோ மாதங்களுக்குப் பிறகு.

அப்பொழுது குமுதா மறுபடியும் வீட்டுக்கு வந்திருந்தாள். ஏன்? என்ன எண்ணத்தினால்? அவளுடன் எப்படி நடந்து கொள்வது? மறுபடியும் தன் தைரியம் குலைந்து போயிருந்தது. இன்னும் தன் நிலைமை அதே போலத்தான் இருக்கிறது. ஒரு முறை அவளுடன் மனம் திறந்து பேசினால், ஒரு முறை அவள் மனத்தில் படும்படிச் செய்துவிட்டால், தான் சம்சாரத்தை வென்றாற்போல என்று நினைத்துக் கொண்டான். பேசுகிற தைரியமே வந்திருக்கவில்லை, மறுபடியும் வீட்டை விட்டுப் போய்விட்டால் என்கிற பயத்தினால்.

சீ! இப்பொழுது ஏன் அந்த எண்ணமெல்லாம்? இன்றையப் பாராட்டுக் கூட்டத்திற்கு வருவாளல்லவா? அங்கே நடக்கும் நிகழ்ச்சிகளையெல்லாம் பார்த்து அவள் மனம் மகிழ்ந்ததென்றால்.

கைக்கடியாரத்தைப் பார்த்தபடி நாற்காலியிருந்து எழுந்திருந்தான். இப்பொழுது விழாவுக்காக அவசரம். குமுதாவுடன் மோகனும் வந்தால் நல்லது. ஆனால் இன்னும் வீட்டிற்கே வந்ததாகத் தெரியவில்லை என்கிற சந்தேகத்துடன் மறுபடியும் ஜன்னல் பக்கம் சென்றான்.

## 11

வாசலில் நின்ற குமுதாவுக்கு மோகன் வரும் அறிகுறிகளே தென்படவில்லை. காலையிலிருந்தே ஒன்றுமே நல்ல லட்சணங்கள் இல்லை; ஆனால் கெட்டவையும் ஒன்றும் நேர்ந்திருக்கவில்லை. இருந்தாலும் மனத்தில் ஏதோ குறுகுறுப்பு. எங்கேயோ எப்பொழுதோ என்றைக்கோ ஏதோ கெட்டது நேர்ந்திருக்கிறது அல்லது நேரவிருக்கிறது என்கிற பயம் உள்ளே பதுங்கி இருந்து கொண்டு, அவ்வப்பொழுது வரட்டுமா வேண்டாமா என்று கூறுவதைப் போல மெதுவாகத் தலையைக் காட்டிக் கொண்டிருக்கிறது. மோகன் சீக்கிரம் வந்துவிட்டால் போதும்.

தானொரு பைத்தியம்! மோகன் நிச்சயம் வருவான். வெறுமே பயந்து போயிருக்கிறாள். பையன்களுடன் விளையாட்டில் மெய் மறந்து போயிருக்கிறானோ! இருந்தாலும் சீக்கிரம் வந்து விட்டால் நல்லது. துணிமணி, கைகால் எல்லாம் அழுக்காகிக் கொண்டு தாமதித்து வருவது, அப்புறம் "நானும் உங்களுடன் வருவேன்" என்று அடம்பிடிப்பது. போகட்டும், அப்படி என்ன வந்துவிட்டது? நேரத்திற்குச் சரியாகப் போகவேண்டுமென்கிற நிர்ப்பந்தம் என்ன? கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதே தங்கள் பொருட்டு, தங்களுக்காகவே தான் எல்லா நிகழ்ச்சிகளும்.

"தங்கள்"! "தங்களுக்காக"!

குமுதாவுக்கு வேடிக்கையாக இருந்தது, அன்றைய விழாவில் தன்னையும் சேர்த்துக் கொண்டதற்காக, பைத்தியக்காரி! தனக்கென்ன சம்பந்தம்? கூட்டம் கூடுவது ராமண்ணாவைப் பாராட்டுவதற்காக. தான் செல்வது ராமண்ணா தாலி கட்டிய மனைவி என்பதற்காக கணவனுக்குச் செய்யப்படுகிற கௌரவத்தைப் பார்த்து பொறாமை ஏற்படட்டும் என்றோ, ஆனந்தம் ஏற்படட்டும் என்றோ, கோபம் வரட்டும் என்றோ, மனைவியை அழைக்கும் பழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். இது போன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளக் குமுதாவுக்கு என்றுமே விருப்பம் இருந்ததில்லை. மனைவிமார்களுக்குத் தன்மானம்

இருந்தால் இது போன்ற அழைப்புக்களை அவர்கள் நிராகரிக்க வேண்டும் என்று அவள் சொல்லுவாள். கணவனைப் பாராட்டுகிற ஒவ்வொரு கணத்திலும் சபையோர் அவன் மனைவியை அவ்வப் போது பார்ப்பார்கள்; சில பேர் முறுவலிப்பார்கள். சிலபேர் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்களிடம் ஏதோ சொல்லுவார்கள் (மனைவியைப்பற்றி). பெண்களோ மனப்பூர்வமாக வெறுப்படை வார்கள்- மொத்தத்தில் விழாவுக்கு வந்திருக்கக்கூடாது என்று தோன்றும்படி ஆகிவிடும். தனக்கு இவையெல்லாம் தெரிந்திருந்தும் தான் இன்றைய கூட்டத்திற்குப் போகச் சம்மதித்திருந்தாள்! ஏன் என்று அவளுக்குத் தெரியும். நிர்வாகி நல்ல தந்திரத்தால் அவளைக் கவர்ந்திருந்தார். "உங்களிடம் எங்களுடைய ஒரு வேண்டுகோள்" "நீங்கள் எங்கள் கோரிக்கைக்கு இல்லை என்று சொல்லக்கூடாது" "உங்களுக்குப் பாராட்டு என்று சொல்வது எங்கள் திருப்திக்கு. உண்மையில் இதனால் எங்களையே நாங்கள் பாராட்டிக் கொண்ட மாதிரி" என்று "நீங்கள்" "தாங்கள்" என்று இது இருவருக்கும் சேர்ந்த பாராட்டுக் கூட்டம் என்கிற மாதிரி பேசியிருந்தார். இருவருக்கும் அல்ல என்பது தனக்கும் தெரியும், அவருக்கும் தெரியும். அதிகமாகப் போனால் தன்னைப் பற்றி அவர் ஒரு வார்த்தை சொல்லக்கூடும்- தான் ராமண்ணாவின் மனைவி என்று பாவம்! அவருக்கென்ன தெரியும்?

குமுதாவைச் சீண்டிவிட்டாற் போலாயிற்று. "அவருக்கென்ன தெரியும். ஒரு காலத்தில் ராமண்ணாவின் இலக்கியத்திற்குத் தானே முழுவதும் தூண்டுகிற சக்தியாக இருந்தாளென்பது அவருக்கென்ன தெரியும்?" என்று நினைத்துக் கொண்டாள். தாங்கள் வாழ்கிற மிருக ஜீவனத்தின் அனுபவத்தைக் கொண்டு, மற்றவர்களின் வாழ்க்கையும் அப்படியே என்று நினைத்தால் தப்பு அவர்களுடையதல்ல. குமுதாவுக்குத் தெரியும்- படித்தவர்களின், படிக்காதவர்களின், பண்பட்டவர்களின், முற்போக்குவாதிகளின் குடும்ப வாழ்க்கையின் நிலையை அவள் அறிவாள். நான் முழுவதும் கணவனுக்கு அலுவலக அவசரம், வேலையின் கவலை, சம்பள உயர்வைப் பற்றிய விவாதங்கள். சாப்பிடுவதற்கு வீடு. தின்று ஆனந்தப்படுவதற்கு ஹோட்டல், களைத்துப்போனபோது படுப்பதற்கு வீடு. களைத்துப்போய் உல்லாசப் பொழுதுபோக்கு வேண்டுமென்றால் சினிமா, காம இச்சையைத் தணித்துக் கொள்ள வீடு, காதல் ஆசை இருந்தால் பார்க்கில் இருக்கும் அந்நியப் பெண். இப்படிப்பட்ட கணவன், மனைவியரின் சம்பாஷணை என்றால்

சண்டையின் துவக்கம், சகவாசம் என்றால், படுக்கையில் எவ்வளவோ தடவை வீட்டிலேயே உழைப்பதனால், கணவனின் அலட்சியத்தினால், குழந்தைகளைப் பெறுவதனால், கல்யாணத்தில் கணவனுக்கெதிரில் சிறு பெண்ணாக இருந்த மனைவி, இப்பொழுது கணவனுக்கருகில் அவன் அக்காவைப் போலவோ, தாயைப் போலவோ காணப்படுவாள். படிக்கட்டும், படிக்காமலிருக்கட்டும், பெண்ணின் தலையெழுத்து இது. பார்க்கப் போனால் கல்வியறிவில்லாத பெண்களே சுகப்படுபவர்கள்; உழைப்பவர்கள், சொந்தமாக சம்பாதிப்பார்கள், தமக்கு இஷ்டப்பட்ட ஆணுடன் வாழ்வார்கள்.

குமுதாவுக்குச் சட்டென்று சிரிப்பு வந்தது ராமண்ணாவின் ஒரு பேச்சுக்காக. இதே விஷயத்தைப் பற்றி விவாதம் நடந்த பொழுது, ராமண்ணா ஆவேசத்துடன் சொல்லியிருந்தான்- "தங்களுடைய தனித்தன்மையைக் காட்டுகிற ஆண்மை பெண்களுக்கு இருக்க வேண்டும்" என்று. அதைக் கேட்டுத்தான் உரக்கச் சிரித்திருந்தாள். ஒரு நிமிடம் அவனுக்கும் புரியவில்லை. பிறகு புரிந்தது. இருவரும் வயிறு புண்ணாகும்படி சிரித்தார்கள்.

குமுதா பெருமூச்சு விட்டாள். ராமண்ணாவுடன் அவ்வளவு மனநெருக்கத்தோடு தான் நடந்து கொண்ட ஒரு காலம் இருந்தது- என்கிற எண்ணத்தினால் சமாதானம் அடைந்தவளாக நெடுமூச் செறிந்தாள்.

எவ்வளவு மனநெருக்கம்! உடல் இரண்டு என்கிற உணர்வே தங்களுக்கு இருந்திருக்கவில்லை. சில சமயங்களில் அந்த எண்ணத்தினால் பயம் தோன்றும். ஒருமுறை குமுதா இப்பொழுதும் நடுங்கினாள் அந்த நினைவினால்.

மோகன் இன்னும் வயிற்றிலேதான் இருந்தான். தனக்கு ஏற்பட்டுள்ளது ஒன்றும் புதியது அல்ல என்றாலும்; அவளுக்கு ஒருவிதமான அதைரியம் இருந்தது. பெண்ணுக்கு இது இயற்கை யானது, பெண்ணின் பயனே பிரசவத்தினால்தான் என்றெல்லாம் கூறி, ராமண்ணா தனக்கு தைரியத்தை அளித்து வந்தான். இருந்தாலும் பயம். ஏன் இருக்கக் கூடாது? ஒரு தூசியோ, ஒரு முள்ளோ சரீரத்தில் புகுந்து கொண்டு விட்டால் உடலுக்கு எவ்வளவு உபத்திரவம் ஏற்படுகிறது! இதுவோ இது என்னமோ ஏதோ! குமுதாவுக்கு முதலில் அந்த பயம். ஆணோ, பெண்ணோ என்கிற பயமல்ல, எதுவானாலும் குறையற்ற ஒரு உருவமாக இருக்குமா என்கிற பயம். அதற்கும் முன்னால் இன்னொரு பயம்.

தான் ஆபத்தில்லாமல் தப்புவாள் என்பது என்ன நிச்சயம்? ஏதாவது எக்கச்சக்கமாகப் போய், தன்னுடைய ஆயுளுக்கே ஆபத்து நேரிட்டால்? இந்த எண்ணத்தினால் முதன்முதலில் அவளுக்குத் தன்னுடைய கர்ப்பத்தைக் குறித்து மன அமைதியில்லாமலிருந்தது. இனமறியாத கோபம் இருந்தது. சில சமயங்களில் ராமண்ணாவைத் தூற்றுவாள். யாருடைய பொறுப்பை யார் அனுபவிப்பது? பெண்ணுக்கு இழைக்கப்படும் அநியாயம் இது என்று சொல்லிக் கொள்வாள். தனக்கு எப்பொழுதும் இதே யோசனையாக இருந்தபோது, ராமண்ணாவுக்குத் தப்பித் தவறிக்கூட அந்த எண்ணமே வந்திருக்கவில்லையே? ஒன்றுமே நடக்காதது போல, என்றைக்கும் போல நடந்து கொள்கிறானே என்று நினைத்துக்கொள்வாள். படுக்கும்பொழுது, இந்த எண்ணங்களினால் தூக்கம் வராமல் இருக்க, ராமண்ணாவின் மீது மனத்தில் இருந்த கோபத்தை வெளிக்காட்டுவதற்காகச் சட்டென்று அவனுக்கு முதுகைக் காட்டிய வண்ணம் திரும்பிப் படுத்துக் கொள்வாள். தான் எவ்வளவு நேரம் தூக்கம் வராமல் உருண்டு கொண்டிருந்தாலும், ராமண்ணா அமைதியாகப் படுத்திருப்பான். அப்பொழுது இன்னொரு பயம் தோன்றும். ராமண்ணாவுக்கு இப்போது தன்மீது பிரியம் இல்லையோ? மாறுதலடைந்து கொண்டிருக்கிற தன் சரீரத்தைக் கண்டு அவனுக்கு வெறுப்புத் தோன்றியிருக்குமோ? தனக்கும் ராமண்ணாவுக்கும் இடையில் நிகழ்ந்த காதல் கதை இத்தோடு முடிந்துவிட்டதா? சில சமயங்களில் இப்படி யோசித்துக் கொண்டிருக்கும் போது, தூக்கத்தில் ராமண்ணாவின் கை தன் பக்கவாட்டில் சரியும். தெரிந்தோ தெரியாமலோ தன் வயிற்றின் மீது அந்தக் கைபடும். அந்த சமயங்களில் குளிரில் நடுங்குவதைப் போல அவள் உடல் நடுங்கும். எல்லா யோசனைகளையும் விட்டுவிட்டு, மெதுவாகத் திரும்பி அவன் பக்கம் முகம் வைத்துக் கொண்டு படுப்பாள். அவன் முகத்தைத் தடவிக் கொடுத்தவாறே தூங்கிப் போய்விடுவாள்.

நினைவினால் இப்போதும் தொண்டையில் ஏதோ அடைத்துக் கொள்வது போல இருந்தது குமுதாவுக்கு. தம்மிருவரிடையேதான் எவ்வளவு ஒற்றுமை? யார் நம்புவார்கள். ஒரு காலத்தில் தம்மிடையே அத்தகைய ஒற்றுமை இருந்ததென்று. மோகன் வயிற்றில் வளர வளர தனக்கும் தைரியம் அதிகரித்தது. ராமண்ணாவின் சந்தோஷம் வளர்ந்திருந்தது. சில சமயங்களில்

ராமண்ணாவின் பேச்சைக் கேட்டு தனக்குச் சிரிப்பு வரும். தான் செய்த குறும்புத்தனத்தைப் பெருமையோடு பார்க்கிற சிறுவனைப் போல ஆகிவிட்டிருந்தான் அவன். "ஆ..ங்- எழுந்திருக்காதே!" "அடடே, அதைத் தூக்காதே!" "சும்மா சும்மா மெத்தைப் படி ஏறாதே!" என்று அவன் எச்சரிக்கும் போது, சிரிக்கத்தான் வேண்டியிருந்தது. கனம் வயிற்றினுள்ளேயே இருப்பது, வெளியிலிருந்து தூக்கிவைத்துக் கொண்டதல்ல, ஆகையால் தன் சரீரத்தின் ஒரு அவயத்தைப்போல அதுவும் இயற்கையாகி விட்டது என்பது அவனுக்கு எப்படித் தெரிய போகிறது? ஆண் என்றால் அனுபவமில்லாத குழந்தை என்று அவளுக்கு அப்போது தோன்றியது. ஓர் இரவு, ஏதோ காரணத்தினால் உடம்பில் சிறிது உபத்திரவம் ஏற்பட்டு தனக்குத் தூக்கம் வந்திருக்கவில்லை. விளக்கை ஏற்றிவிட்டுப் படுக்கையிலேயே எழுந்து உட்கார்ந்து கொண்டாள். அருகில் படுத்திருந்தான் ராமண்ணா. முகத்தில் ஓய்வின் குழந்தைத்தனமான களை. ஆழ்ந்த தூக்கத்தால் தேகம் பொம்மையைப் போல அசையாமல் இருந்தது. இடது புறங்கை தலைக்குக் கீழே இருந்தது. இடது பக்கமாகப் படுத்திருந்த அவனது வலது கை, இன்னும் தன் மேலேயே இருந்தது. தான் எழுந்து உட்கார்ந்து கொண்டு மெதுவாக அந்தக் கையை எடுத்துத் தன் தொடைமீது வைத்துக் கொண்டாள். இரண்டு கைகளாலும் அதைப்பிடித்துக் கொண்டாள். இளஞ்சூடாக இருந்த அந்தக் கையினால் தனக்கும் வெதுவெதுப்பாக இருந்தது. இரண்டு கைகளாலும் அந்தக் கையை எடுத்துத் தன் வயிற்றின் மீது வைத்துக் கொண்டாள். ஒரு கணத்தில் கண்களை இருட்டிக் கொண்டு வந்தாற் போலிருந்தது; ராமண்ணாவின் கை வயிற்றில் பட்டதுமே ஏதோ மின்னியதைப் போலிருந்தது. எதிரில் படுத்திருக்கும் ராமண்ணா தன் வயிற்றிற்குள் புகுந்து கொண்டு விட்டாற்போல் இருந்தது பயப்பட்டாள். உண்மை, உண்மை ராமண்ணாவே தன் வயிற்றினுள் மாயமாகி விட்டான். அதோ, அதோ முடங்கிக் கொள்ள முயன்று கொண்டிருக்கிறான் என்று பயந்தவாறு, கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தாள். ராமண்ணா சட்டென்று எழுந்திருந்து, "என்ன, என்ன ஆயிற்று, குமுதா" என்று எழுந்து உட்கார்ந்தான். அதற்குள் தனக்குத் தெரிந்து விட்டிருந்தது, என்ன ஆயிற்றென்பது அதனால் ஆனந்தம் பொங்கித் தன் முகத்தில் சிரிப்பு மலர்ந்தது. ஒரு கணம் தன்னை உற்றுப் பார்த்துவிட்டு, தன் வயிற்றின் மீது மற்றொரு

முறை கையை வைத்து, ராமண்ணாவும் புன்முறுவலுடன் முகம் மலர "ஓஹோ!" என்றிருந்தான்.

அன்று முதல் தடவையாக வயிற்றிற்குள்ளிருந்த உயிர் புரண்டு கொடுத்திருந்தது!

அதுதான் என் மோகன்! இல்லை, நம்மிரு வருடைய மோகன் என்று சொல்லிக் கொண்டாள் குமுதா. அன்றிலிருந்து மோகன், ராமண்ணா இருவரும் ஒரே ஆள் என்று தொன்றியிருந்தது குமுதாவிற்கு.

அந்த மோகனை ஒருநாள் அடித்திருந்தாளல்லவா? மோகன், ராமண்ணா இருவரும் தனக்கு ஒன்றே. ஆனால் தான் ராமண்ணாவை அடித்த மாதிரி அல்லவா? அதனால்தான் மோகனுக்கு விழுந்த அடிகள் ராமண்ணாவுக்கு நோவை உண்டாக்கியிருந்தனவோ?

குமுதா மிகுந்த ஏமாற்றத்துடன் பெருமூச்சு விட்டாள். பல வருடங்களின் எல்லாக் கசப்பான நினைவுகளையும் ஒரே தடவையில் வெளியேற்றிவிட வேண்டுமென்பது போல நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"திரும்பியே வரப்போவதில்லை" என்று சொல்லியிருந்தது அன்று தான். ஆனாலும் திரும்பி வந்து, இன்றைக்கு எவ்வளவோ வருடங்கள் அல்லது யுகங்களோ-? கழிந்து விட்டன.

அதுவும் ஒரு அனுபவம்தான்- என்று சொல்லிக் கொள்ளும் போது அவளுக்குச் சட்டென்று சிரிப்பு வந்தது. எப்படிப்பட்ட அநுபவம்! இப்பொழுது வேடிக்கையாகத் தோன்றுகிறது. தான் அவ்வளவு ஆக்ரோஷத்துடன், கோபத்துடன் மோகனை அழைத்துக் கொண்டு போயிருந்தாள். போவதெங்கே? மறுபடியும் அத்தையின் வீட்டுக்குத்தான்.

காலையில் அத்தையின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்திருந்தாள். ஒரு கையில் மோகன், இன்னொரு கையில் ஒரு சிறிய பை. ஏதோ சுலோகங்களை முணுமுணுத்தபடி, கிழவி முற்றத்திற்குத் தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்தாள். தான் வந்ததை அவள் இன்னும் கவனித்திருக்கவில்லை.

கடைசியாக "அத்தை" என்று கூப்பிட்டு, அவள் கவனத்தை இழுக்க வேண்டியதாயிற்று.

கிழவி சட்டென்று திரும்பித் தன்னைப் பார்த்து நம்பிக்கையில்லாததனாலோ, சரியாகத் தெரியாததாலோ படபடவென்று இமைகளை அடித்தவாறு, மற்றொருமுறை உற்றுப் பார்த்து, "யாரு? குமுதா?" என்று கேட்டாள்.

"இதென்னடீ குமுதா? சொல்லாம கொள்ளாம வந்திருக்கே? ஒண்டியாவா வந்திருக்கே?"

பேசிக் கொண்டே இருவரும் உள்ளே போனார்கள். அப்பொழுது தான் விழித்துக் கொண்ட மோகன், எங்கே வந்திருக் கிறேன் என்பது தெரியாமல் தன்னையும் கிழவியையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். பேசிக் கொண்டிருந்த போதே தான் அவனைக் கீழே இறக்கி விடவேண்டுமென்றிருந் தாளோ என்னவோ, அவன் தன்னைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். தான் பிடிவாதமாக அவனைக் கீழே இறக்கிவிட முனையவும், அவன் சட்டென்று அழத் தொடங்கினான்.

"ஏன்? மறுபடியும் உண்டாயிருக்கியா என்ன?"

அந்தக் கணத்தில் குமுதாவுக்கு அத்தையின் கேள்வியே புரிந்திருக்கவில்லை. என்ன கேட்கிறாள்? எதைப்பற்றி?

"என்ன கேட்டே, அத்தை?" என்று திடுக்கிட்டபடி கேட்டாள்.

"இல்லே, பையன் அழறான். அதுக்காகக் கேட்டேன்" என்றாள் அத்தை.

அதற்குள்ளாக மோகனை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு, தான் அங்கேயே உட்கார்ந்து கொண்டுவிட்டிருந்தாள். மோகன் அழுகையை நிறுத்திவிட்டிருந்தான்.

"குழந்தை அழுகுதுன்னா நீ வேற என்னமோ கேட்ட மாதிரி இருந்தது" என்றாள் தான்.

"வேறொண்ணுமில்லை. மறுபடியும் உண்டாயிருக்கியான்னு கேட்டேன்".

"ஷ்ஷ்- எனக்கென்ன பைத்தியம் பிடிச்சிருக்கா, அத்தை?"

"வயசானதுக்கப்பறம் கல்யாணம் பண்ணிக்கறது. பின்னே பைத்தியம் பிடிச்சாப்பலதான்."

"குழந்தை அழறதுக்கும் அதுக்கும் என்ன சம்பந்தம்?"

"முதக் குழந்தை இன்னும் முலைப்பால் குடிச்சுகிட்டிருக்கப்ப, மறுபடியும் வயித்துலெ ரெண்டாவது குழந்தை வந்திட்டுதுன்னா குழந்தை இப்படித் தான் அழும்."

இதென்ன தத்துவமா, அனுபவமா, சாஸ்திரமா? குமுதாவுக்கு விளங்கவில்லை. அவளும் சிரித்து விட்டாள்.

"ஏன் சிரிக்கிறே?"

"நீ சொன்னதுக்கு சிரிப்பு வந்தது, அத்தை"

"சிரிக்கறதுக்கு என்ன இருக்கு? முந்தா நாள்தான் புருஷன் வீட்டுக்குப் போனே. இப்ப திரும்பி வந்திருக்கியே, அதுக்காகக் கேட்டேன்."

"அப்படின்னா எனக்கு இதை விட்டா வேற வேலை இல்லியா?" தானும் சிரித்தபடியே கேட்டாள்.

"கல்யாணம் பண்ணிக்கிட்டு குழந்தையைப் பெத்துக்கறது முதல் வேலை, கல்யாணம் பண்ணிக்காமலெ குழந்தையைப் பெத்துக் கறது ரெண்டாவது வேலை, இப்பத்துப் பெண்ணுங்களுக்கு!"

ஹூம்! கிழவி எவ்வளவு வெறுப்போடு அந்த வார்த்தையைச் சொல்லியிருந்தாள்.

"எல்லோரும் அப்படி இருப்பதில்லை அத்தை. கெட்டவங்க இந்தக் காலத்துலெ இருப்பதைப் போல, அந்தக் காலத்திலும் இருக்கத்தான் இருந்தாங்க."

"அந்தக் காலத்துலெ வெட்கம், மானம் இருந்தது. கிணத்துலெ விழுந்து உயிரை விட்டுடுவாங்க. இந்தக் காலத்துலெ தைரியம் இல்லை. பயப்படாட்டுகிட்டு கல்யாணம் கட்டிக்கிடுதுங்க."

"அப்படின்னா என்ன அத்தை, நான் அவ்வளவு கெட்டவள்-"

"அடி பைத்தியமே! ஒரு பேச்சுக்கு சொன்னேன். அதை நீ பெரிசா மனசுலெ வாங்கிக்காதே."

அத்தை இதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, தனக்கு என்னவாயிற்றோ என்னமோ திடீரென்று அடக்கமுடியாமல் அழுகை மேலிட விம்மினாள்.

இப்பொழுது நினைத்துக் கொண்டால் சிரிப்பு வருகிறது. அப்போது தான் விம்மியழுவதைக் கண்டு கிழவி கலவரம் அடைந்தாள்.

"ஐயையோ! குமுதா! போகட்டும் விடு. என் நாக்கு பொல்லாதது. கிழவி பேச்சுக்கு ஏன் இவ்வளவு வருத்தப்படறே? என்னமோ சொல்லுவாங்களே, தன்னோட நெத்தியிலெ குங்குமம் இல்லாதவ இன்னொருத்தியோட நெத்திக் குங்குமத்தைப் பாத்து, நெத்தியிலே என்ன புண்ணுன்னு கேட்டாளாம். குமுதா, நான் பாட்டுக்கு நான் உக்காந்துகிட்டு இப்படியெல்லாம் பேசக் கத்துக்கிட்டேன். அய்யே பைத்தியமே! உன் புருசன் தீர்க்காயுஸா இருக்கட்டும், நீ இன்னும் நாலு குழந்தையைப் பெத்துக்க. நா இருக்கற வரையிலும் பிள்ளைப் பேறுக்கு இங்கேயே வா"

கிழவியின் பேச்சைக் கேட்டு, அழுகை போய் சிரிப்பு அடக்க முடியாததாகி விட்டது. கிழவி கோபித்துக் கொண்டாள்.

"என்னடீது, நினைச்சா சிரிக்கிறே, நினைச்சா அழுவறே? உன்னோட எப்படிடீ பேசறது?"

"இல்லை அத்தை, அதுக்கல்ல, நான் கர்ப்பமில்லைன்னு சொன்னாலும் கூட" கண்களைத் துடைத்தபடி சிரிப்பினால் பேச்சு வராமல் தான் சொல்லத் தொடங்கியிருந்தாள்.

"இப்ப இல்லாட்டா வேண்டாம். பின்னாடி ஆயிட்டுப் போறது. இன்னும் சின்னப் பொண்ணு நீ. ஏன் அத்தினி கவலைப்படறே?"

"இல்லை அத்தை, நான் கவலைப்படவுமில்லை. எனக்கு அதெல்லாம் ஒண்ணும் ஆகறாப்போலயும் இல்லை"

"அதெல்லாம் சும்மா வெறும் பேச்சு-"

"இல்லை அத்தை. நிஜமாகத்தான் சொல்லுகிறேன். இனி மேல் என்னிக்குமே கிடையாது.-"

"அப்படின்னா என்னடி?"

"அப்படின்னா என்ன?" என்று தனக்கும் தெரிந்திருக்கவில்லை. தான் அதைப்பற்றி நினைத்திருக்கவும் இல்லை. இருந்தாலும் மனத்திலிருந்ததையெல்லாம், இன்னொருவர் முன்னால் சொல்லுவது அதுவே முதல் சந்தர்ப்பம். ஆகையால், ஒரே மூச்சாகச் சொல்லியிருந்தாள். சொல்லிக் கொண்டிருக்கும்போதே தனக்கே அதில் நம்பிக்கையில்லாதது போலிருந்தது. மேற்கொண்டு பேச்சில் குழப்பம் தோன்றியது. முதலில் சொன்னதையே மறந்து போய் மறுபடியும் சொன்னாள். முதலில் சொன்னது நினைவுக்கு வந்ததும் மேற்கொண்டு சொல்லவேண்டியதை மறந்தாள். கடைசியாக தான் இது ஒன்றையும் சொல்லியே இருக்கக்கூடாதோ என்று தோன்றியது. நாக்கு புரள மறுத்தது-

"ஐய்யே, என்ன சொல்லப்போறியோன்னு நினைச்சேன்! புருஷன் பெண்டாட்டி சண்டை போட்டுகிட்டிங்கன்னு சொல்லு" என்று நீண்ட பெருமூச்சுடன் அத்தை கூறினாள்.

தான் கூறியது எதுவுமே கிழவிக்குப் புரியவில்லை என்பதில் தனக்கு சந்தோஷம், மனத்தில் இருந்த எண்ணங்களையெல்லாம் வெளியில் எடுத்துச் சொல்லிவிட்டதனால் மனது லேசாகி விட்டிருந்தது.

அல்லது அவளுக்கு எல்லாம் புரிந்து விட்டிருந்ததோ!

அல்லது தனக்குத் தெரிந்திருக்கிறது என்பதே கிழவிக்குத் தெரிந்திருக்கவில்லையோ?

எப்படியோ தன்னை மறுபடியும் ராமண்ணாவிடம் செல்லத் தூண்டியவள் அந்தக் கிழவியே!

நினைவு தன்னை எங்கெங்கோ இழுத்துச் செல்கிறதே? இன்று ஏன் அன்றைய நினைவு?

ஏனோ? அன்று கிழவி சொன்ன பேச்சு, மறுபடியும் மறுபடியும் நினைவுக்கு வருகிறது இன்று!

என்னமோ சொல்லியிருந்தாளே? முதலில் தான் அதை ஒரு வேடிக்கையாக நினைத்துச் சிரித்திருந்தாள். பிறகு அந்தப் பேச்சு தன்னைப் பிடித்து எழுப்பி நிற்க வைத்தது போலாயிற்று. என்ன சொல்லியிருந்தாள்? ஹாங் நினைவுக்கு வந்தது. அந்தப் பேச்சு, இந்தப் பேச்சுப்பேசி, கடைசியில் கிழவி சட்டென்று,

"உன் புருஷன் என்ன செய்யிறான்?" என்று கேட்டாள்.

"புத்தகம் எழுதுகிறார்."

"அதையல்ல நான் கேட்டது. சாப்பாட்டுக்கு என்ன பண்றான்னு கேட்டேன்."

குமுதாவுக்குச் சிரிப்பு வந்திருந்தது. "ஏன் அத்தை புத்தகம் எழுதினால் சாப்பாட்டுக்குக் கிடைக்காதா?" என்று சிரித்தபடியே கேட்டாள்.

"என்னமோடியம்மா! எனக்கென்ன தெரியும்? வயல்தோப்பு பாத்துக்கறது, வட்டி வியாபாரம் பண்றது, இல்லை ஏதாவது உத்தியோகம் செய்யறது- எங்க காலத்துலெ ஆம்பளைங்க இந்த மாதிரி வேலை செய்தாங்க. இப்ப என்னென்னமோ செய்யறாங்க."

"புத்தகம் எழுதறவங்களுக்கு நாலுபேருக்கு மத்தியில் மதிப்பு மரியாதை இருக்கு, அத்தை"

"அதுக்கென்ன? மனுஷனோட நடத்தை நல்லாயிருந்தா, அவன் என்ன செய்தாலும் மானம் மரியாதை இருக்கத்தான் இருக்கும். ஹூம் அப்படியானா புஸ்தகம் எழுதறானா? மாசத்துக்கு எவ்வளவு கொடுக்கறாங்க, புஸ்தகம் எழுதறதுக்கு?"

"அப்படி மாசாமாசம் பண்ற வேலை இல்லை அத்தை அது. எப்போ எழுதணும்னு தோணுதோ அப்ப எழுதுவார்"

"பின்னே? மத்த நாள்ளெ சாப்பாட்டுக்கு வழி?"

"வீடு, வாசல், நிலம் அதுவும் இருக்கு அத்தை, பரம்பரைச் சொத்து".

"அடி பைத்தியக்காரி! அதைச் சொல்லக் கூடாதோ முதல்லே? அது இருந்தா போறுமே? வீட்டுலெ ஜனங்க ரொம்பப் பேரு இருக்காங்களா?"

"யாரும் இல்லை. இவ்வளவு நாளும் நாங்க ரெண்டே பேர் தான்"

"அப்படின்னா? இப்ப அவனை ஒண்டியா விட்டுட்டு வந்துட்டியா?"

நான் அதைப்பற்றி நினைத்திருக்கவே இல்லை. இப்பொழுது பதிலையும் தரவில்லை. பேசிக் கொண்டே இருக்கும்போது கிழவி திடீரென்று சிரித்தாள்.

"ஏன் அத்தை? ஏன்"

"என்னமோ நினைச்சுகிட்டேன்"

"என்ன?"

"என்ன என்ன? கிழவிக்கு வேற வேலை என்ன? பழசை நினைச்சுகிட்டு அசை போடறது, காலங் கழிக்கறது."

"இருந்தாலும் சிரிச்சியே அத்தை?"

கடைசியில் வற்புறுத்தி, அத்தையின் நினைவின் கதையைக் கேட்டுக் கொண்டாள்.

"இல்லே, நாலும் உன்னைப் போல ஒரு தடவை கோபிச்சு கிட்டேன், அந்த வேடிக்கை கியாபகம் வந்தது-"

"அப்படின்னா- என்னைப்போல?"

"பாரு குமுதா. ஆம்பளையோட கோபம் வேற, பொம்பளை யோட கோபம் வேற."

"ஏன்? பொம்பளையும் ஒரு மனுஷ ஜீவன் இல்லையா?"

"ஆம் அதுக்காக பொம்பளை மனுஷிங்கறததுக்காக மீசை முளைக்கிறதில்லை, ஆம்பளை மனுஷன்கறதுக்காக குழந்தையைப் பெத்துக்கறதில்லை. ஆண்டவன் மனசுலெ என்ன இருக்குதோ? ஒருத்தொருத்தருக்கு ஒவ்வொரு சுபாவத்தைக் கொடுத்திருக்கான். வெளியிலெ நாலுபேரோட பழகற ஆம்பளை கோபிச்சுக்கறான். சண்டை போடறான், மறுபடியும் மறுநாள் அவங்க கூடவே விவகாரம் பண்ணறான். ஆனால் நமக்கு அப்படிப்பட்ட விவ காரமே இல்லை. நமக்குக் கோபம் வந்தா, எத்தினி நாளானாலும் அதை மனசுலெயே வைச்சுக்கிட்டு உக்காந்துடறோம்."

"என்ன இருந்தாலும் நீ ரொம்பப் பிடிவாதக்காரி, அத்தை"

"ஆம்பளையோட கோபம் மூக்கு நுனியிலே, பொம்பளையோட கோபம் உலை வாயிலே."

"அப்படின்னா? நீ சமையலே செய்யலியா?"

"அய்யே! நானென்ன உன்னைப் போல ஒண்டிக் கட்டையா வீட்டுலெ? நான் சமையல் செய்யலைன்னா யாராலெயும் வீட்டுலெ பசியைப் பொறுத்துக்க முடியாது."

அப்போ, கோபம் வந்தா என்ன பண்ணுவே?"

"பொம்பளை வேற என்ன செய்வா? வேற படுக்கையப் போட்டுகிட்டு படுத்துக்குவேன். எவ்வளவு பேச்சுக் குடுத்தாலும் பதில் குடுக்கமாட்டேன்" கிழவி சிரித்தாள்.

"என்ன தமாஷ் நினைச்சுகிட்டே, அத்தை?"

"தமாஷல்ல; அதுதான், உன்னைப் போலன்னு சொன்னேனே? பாரு குமுதா, ஒவ்வொரு ஆம்பளையோட சுபாவம் ஒவ்வொரு மாதிரி. ஆனால் பொம்பளையோடது அப்படியல்ல. வீட்டுலெ உழைப்புன்னா உழைப்பு. தன்னோட வீட்டுலெ தான் உழைச்சாலும், 'வேலை ஜாஸ்தியாருக்கா?' 'தலைவலிக்குதா?' 'போறும் வேலை செஞ்சது, இனி கொஞ்சம் ஒய்வெடுத்துக்க' இப்படி ஆம்பளை எதையாவது தன்னோட பேசணும்னு நமக்குத் தோணுது. அவங்க ஒய்வெடுத்துக்கன்னு சொன்னாலும் நாம ஒண்ணும் அப்படிச் செய்யப் போறதில்லே. நம்மைப் பத்திக் கவலைப்படற ஆளிருக்காங்களேங்கற சமாதானம் மனசுக்கு. சில சமயங்கள்ள, கௌரிப் பண்டிகை, நவராத்திரி, பூஜைன்னு புடவையும் அலங்காரமும் பண்ணிக்கிறா. அப்ப ஆம்பளையும் அதைப் பார்க்கட்டும், சந்தோஷப்படட்டும்னு அவளுக்கு ஆசை. ஆனா ஆதான் சொன்னேனே, ஒவ்வொரு ஆம்பளை ஒவ்வொரு மாதிரின்னு. எங்க வீட்டுக்காரருக்கு இது ஒண்ணும் இல்லை. பெண்டாட்டின்னு ஒருத்தி வீட்டுலெ இருக்காளா இல்லியாங்கற மாதிரி நடந்துக்குவாரு. ஒருவாட்டி, ஏதோ பேச்சுக்கு பேச்சு வளர்ந்து, எங்க ரெண்டு பேருக்கும் சண்டை வந்திட்டுது. எனக்கும் ரொம்பக் கோபம் வந்துட்டுது. கடைசியிலெ நான் சொன்னேன் 'நாலுநாள் எங்கம்மா வூட்டுக்குப் போயிட்டு வர்றேன்'னு 'போகணும்னிருந்தா போ'ன்னாரு. நான் அவருக்கு இவ்வளவு வேண்டாமப் போயிட்டேனேன்னு எனக்கும் கோபம் வந்தது. ராத்திரி வண்டிக்குப் போறதுக்கு தயார் பண்ணிக்கிட்டேன்"

"ஏன் நிறுத்திட்டே, சொல் அத்தை"

கிழவி பலமாகச் சிரித்தாள். சிரித்துக் கொண்டே சொன்னாள். "என் கோபத்தின் கதை அதோட முடிஞ்சது."

"அப்படின்னா?"

"அப்படின்னா, அதுக்காகத்தான் சொன்னேன் உனக்கு. பொம்பளையோட கோபம் வேறேன்னு."

"இல்லை, அப்புறம் என்ன ஆச்சு? சண்டை தீர்ந்து போச்சா? உங்க வீட்டுக்காரர் மன்னிப்பு கேட்டுகிட்டாரா?"

"என்னது? மன்னிப்பு கேக்கறதா? அட பைத்தியமே! அதனாலே பொம்பளைக்கு மனசு சமாதானமாப் போயிடும்னா, ஆம்பளை பேச்சுக்குப் பேச்சு மன்னிப்பு கேட்டுக்குவானே. தங்களுக்குள்ளே போட்டுகிட்ட சண்டையை முடிக்கறதுக்கு மன்னிப்பு கேட்டுக்கற ஆம்பளைக்கு அதன் மகத்துவமே தெரியலைன்னு அர்த்தம்."

"அப்படியானா நீ ஏன் போகலை?"

"நான் எப்படிப் போவேன் குமுதா? அதுதான் சொன்னேனே. அதுக்கு வேண்டிய தயார் பண்ணிக்கிட்டேன். அப்ப அவரும் கோபிச்சிகிட்டு வெளியே புறப்பட்டாரு. அந்தப் பெட்டியை எடுத்தாரு. இந்தப் பெட்டியை எடுத்தாரு. படுக்கையைத் தூக்கிப் போட்டாரு. சரி தானும் புறப்பட்டுப் போற பயங்காட்டறாரு. இருக்கட்டும்னு நினைச்சுகிட்டேன். ஆனால் எல்லாத்தையும் தூக்கி இறைச்சிட்டு 'தூ! எங்கே போச்சோ என் ஷர்ட்டு?' என்று அலைஞ்சாரு. நான் பேசாம சுவத்துலெ முளையிலெ மாட்டியிருந்த ஷர்ட்டை எடுத்து அவர் கையிலெ குடுத்திட்டு, என் வேலையைக் கவனிச்சேன். ஆசாமி சட்டையை போட்டுகிட்டு ஒவ்வொரு பாக்கெட்டாத் துழாவிப் பார்த்து, நெத்தியைச் சுளிச்சுகிட்டு, சுத்துமுத்தும் பார்த்து, 'நாசம், ஒரு சாமானும் அதது இடத்துலெ இருக்கறதில்லெ. என்னோட பர்ஸூ'ன்னு கத்தினாரு. நான் சட்டுனு போய், தலகாணிக் கடியிலிருந்து அவரோட பர்ஸை எடுத்துக் கொடுத்திட்டு வந்து என் வேலையைக் கவனிச்சேன். கொஞ்ச நேரத்துக்கப்புறம் வெளியே சத்தம் கேட்டது. கதவு வழியாப் பார்த்தேன். இவரும் அலையறாரு. இன்னும் ரெண்டு மூணு பேரும் அலையறாங்க. என்ன சமாசாரம்னு போய் கேட்டா, வீட்டிலெ இருக்கறவங்க அவ்வளவு பேரும் இவரோட செருப்பைத் தேடிகிட்டிருக்காங்க! எனக்குப் பொறுக்கலை. விருவிருன்னு புழக்கடைக்குப் போயி, அங்கே இருந்த அவரோட செருப்பைக் கொணாந்து தொடப்புனு அவர் முன்னாலே வீசி எறிஞ்சிட்டு, காலைத் தேய்ச்சுகிட்டு நடந்து போய் என் ரூம் கதவைச் சாத்திகிட்டு, தாப்பாள் போட்டுட்டு, கட்டி வெச்சிருந்த என் படுக்கையை விரிச்சு 'ஓ'ன்னு அழுதுகிட்டு படுத்துட்டேன். அழுதேன், அழுதேன் அழுதேன் குமுதா அப்படி அழுதேன்."

"யார் உன்னைப் போக வேண்டாம்னாங்க? எதுக்காகச் சின்ன புள்ளையெப் போல அழுதியாம்?"

"அய்யே வேண்டான்னு யார் சொல்லணும்?" கிழவி சிரிப்பை அடக்கிக் கொண்டே, கண்ணைத் துடைத்தபடி சொன்னாள். "என்னை யார் வேண்டான்னு சொல்றவங்க? நான் அழுதது எனக்காக அல்ல, அவருக்காக–"

"அவருக்காக?"

"பின்னே என்ன? நான் இன்னும் புறப்பட்டுப் போகலை. அதுக்குள்ளாறவே அவரோட அவஸ்தை இப்படி! இனி நான் போயிட்டேன்னா, இவரைக் கவனிச்சிக்கிறவங்க யாரு? இவரோட

சட்டை வேட்டியைத் தேடி எடுத்துக் கொடுக்கறது யாரு? அதையெல்லாம் துவைச்சு கிவைச்சு சுத்தமா யாரு வைப்பாங்க? இப்படியெல்லாம் நினைச்சுகிட்டு அழுதுட்டேன் குமுதா."

குமுதாவுக்கு எங்கோ ஒரு வகை வேதனையானாற் போலிருந்தது. அத்தை தன் கதையைச் சொல்லவில்லை. ஆனால் தனக்கு- குமுதாவுக்கு- புத்தி சொல்லுகிறாள் என்று தோன்றியது. தானில்லாதபோது ராமண்ணா சாப்பிடாமல் வாடிப்போயிருக்கும். சித்திரம் அவள் கண்ணெதிரில் நின்றது. உற்சாகத்துடன் எழுதவேண்டுமென்று தொடங்கிய ராமண்ணா தன் பேனாவைத் தேடுகிறான்; அவன் அணித்திருக்கும் ஆடைகள் அழுக்கடைந்திருக்கின்றன- இப்படி ஏதேதோ சித்திரங்கள் கண்முன்னால் சண்டித்தனமாக வந்து நிற்கின்றன. அத்தை என்னமோ சொல்லிக்கொண்டிருக்கிறாள். அவள் கவனம் அதில் இல்லை. அத்தை மேற்கொண்டு சொல்லுகிறாள் "தெரிஞ்சதா குமுதா? வெளியில் என்ன ஆனாலும் வீட்டுக்குள் ஆம்பளை பச்சைக் குழந்தையைப் போல! வளர்ந்த பசங்களுக்கு வீட்டைவிட்டு வெளியிலே போய் விளையாடற பழக்கம் ஜாஸ்தி ஆச்சுன்னா, முதல்லெ தாயாருக்கு மனசுலெ பயம். நமக்குத் தோணுது நாம பசங்க மேலே அன்பா இருக்கறோம். அதுங்களுக்கு நம்ப மேலே பிரியம் இல்லைன்னு. அதுங்க வாய்விட்டு சொல்றதில்லை. ஆனால் கால்லெ ஒரு முள்ளு குத்திச்சுன்னா ஓடி வர்றது நம்மகிட்டத்தான்.. அதுக்குதான் சொல்றேனே- ஆம்பளை தன்னோட பிரியத்தைக் காட்டற முறையே வேறே.. ஏன்? நான் சொல்றதிலெ உனக்கு கவனம் இல்லியா? இருக்குதா? இதென்ன குமுதா? என் கதையைக் கேட்டு நீ ஏன் அழுவுறே?"

தான் அழுதாள். அடக்க முடியாமல் நிதானமாக அழுகை நீரோட்டம் போல வந்து கொண்டிருந்தது. அடுத்த ஒரு வாரத்திற்குள்ளாக தான் வீட்டுக்குத் திரும்பிச் சென்றிருந்தாள்.

வீட்டிற்குச் சென்றதும், ராமண்ணா மோகனை எடுத்துக் கொண்டு கொஞ்சி முத்தமிட்டதைக் கண்டு, தன்னுடைய உடல் ஜூம் மென்றாயிற்று.

சட்டென்று கடியாரத்தைப் பார்த்துக் கொண்டாள். அட, அழைத்துக் கொண்டு போக வரும் நேரமாகிவிட்டது. யாருக்குத் தெரியும்? "மோகன், நீயும் வா" என்று ராமண்ணா சொல்லக்கூடும் புறப்படும்போது. இந்தப் பையன் இன்னும் வரவில்லை. அவனுடைய துணிகளையாவது எடுத்து வைக்கிறேன் என்று, குமுதா அந்த வேலையில் ஈடுபட்டாள்.

## 12

ராமண்ணா ஜன்னலின் மூலமாகப் பார்த்துக் கொண்டிருந்த போதே பகல் மறைந்து கொண்டிருந்தது. வரவிருக்கும் இரவின் நிழலைப் போலச் சிறிது சிறிதாக இருள் பரவிக் கொண்டிருந்தது. பகல் - இரவு, கணவன் மனைவி இது கவிகளின் பாஷையல்லவா என்று நினைத்துக் கொண்டான். பகல் - இரவுகளின் சம்பந்தம் தன்னுடையவும், குமுதாவுடையவும் சம்பந்தத்தைப் போல இருக்கிறதல்லவா? இடையில் பனி மூடியிருக்கிறதல்லவா? ராமண்ணா ஜன்னல் மூலமாக வெளியே பார்த்தான். மோகன் வரக்கூடும் என்று. வந்தால் நல்லது என்று சொல்லிக் கொண்டான். அவனையும் பாராட்டுக் கூட்டத்திற்கு அழைத்துக் கொண்டு போனால் போயிற்று என்று, இன்னொரு முறை சொல்லிக் கொண்டான்.

ஜன்னல் வழியாகப் பார்த்தால், மோகன் வருவதற்கான அறிகுறிகளே இருக்கவில்லை. வரக்கூடும் - என்று மறுபடியும் நாற்காலியின் அருகில் சென்றான். மோகன் வெளியிலிருந்து வருகிறான் என்றால், ராமண்ணாவின் கண் முன்னால் எப்போதும் ஒரு சித்திரம் நிற்கும். நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, ஜன்னல் பக்கம் பார்த்தபோது மறுபடியும் அதே சித்திரம் அவன் கண் முன்னால் வந்து நின்றது. முகத்தில் ஆனந்தத்தின் களை தோன்றியது.

எவ்வளவு வருடங்களுக்கு முந்திய சித்திரம்! அப்போதைக்கு இப்போது மோகன் எவ்வளவு வளர்ந்திருக்கிறான்! ஆனாலும் அந்தச் சித்திரம் மறைவதே இல்லை. ஏழோ எட்டோ வருடங்களுக்கு முந்திய பேச்சு. குமுதா இரண்டாவது முறையாகத் தன் மீது கோபித்துக் கொண்டு தன்னை விட்டுப் போயிருந்தாள். அந்த நாட்களைத் தான் எப்படிக் கழித்திருந்தானோ! ஆனால் ஒரு நாள் காலையில் அகஸ்மாத்தாகத் திரும்பி வந்தாள். அவளை எப்படி வரவேற்கவேண்டுமென்கிற குழப்பத்தில் தான் இருந்தபோது, அவள் எடுத்து வைத்துக் கொண்டிருந்த மோகன் சட்டென்று தன்னைப் பார்த்ததும் மிகுந்த ஆர்வத்துடன் கூச்சலிட்டபடி, இரண்டு கைகளையும் முன்னால் நீட்டினான். தானும் அவளை எடுத்துக் கொள்வதற்காக முன்னால் அடியெடுத்து வைத்தவன் சட்டென்று நின்றான். அதற்குள்ளாகக் குமுதாவே இரண்டொரு அடிகள் முன்னால் வந்து, குனிந்து,

மோகனைக் கீழே இறக்கிவிட்டாள். சட்டென்று அவனை வாரி எடுத்து கொண்டு இடைவிடாமல் முத்தமிட்டான். மோகன் இரண்டு கைகளாலும் தன்னுடைய - ராமண்ணாவுடைய - கழுத்தைக் கட்டிக் கொண்டிருந்தான். அப்பொழுது மிக்க மகிழ்ச்சியுடன் குமுதாவைப் பார்த்தான்.

அது தான் எத்தகைய சித்திரம்! வார்த்தைகளில் அடக்க முடியாது. திறமை வாய்ந்த ஓவியனே வேண்டும். அதை வர்ணிப்பதற்கு மோகனின் முகத்தில் தான் எப்பேர்பட்ட ஆனந்தக் களை! அதைத்தான் ஆனந்த ரசம் என்று சொல்வார்களோ? ஏனென்றால் அந்த ஆனந்தம் பொங்கும் முகத்தைப் பார்க்கிறவர்களுக்கும் ஆனந்தம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அந்தக் குழந்தையின் முகத்திலிருந்து ஆனந்தக் கிரணங்கள் வீசி, வீடு முழுவதும் ஆனந்த மயமாக்கியிருக்கிறதோ என்று தோன்றியது.

இனி குமுதாவின் முகம்! அந்த ஒரே தடவைதான் ராமண்ணாவுக்குக் குமுதாவைப் பார்த்ததும் வேறொரு எண்ணம் தோன்றியது. எவ்வளவு முறை அவளைப் பார்த்திருந்தானோ, அவ்வளவு தடவையும் அவள் தன் இதயத்தைச் சுண்டி இழுக்கும் மோகனப் பெண்ணாகவே காட்சியளித்திருந்தாள். தனக்காக அவள்; தான் இன்பம் துய்ப்பவன், அவள் அந்த இன்பப் பொருள் என்கிற எண்ணமே முக்கியமாக இருக்கும். ஆனால் குமுதாவைப் பார்த்தபோது அவள் தன்னுடைய போகப் பொருள் என்கிற எண்ணமே ஏற்பட்டிருக்கவில்லை. அவ்வளவேன்? அவள் பெண் என்கிற எண்ணமே வந்திருக்கவில்லை. எல்லையற்ற திருப்தியின் பாவனை அவள் முகத்தில்; மற்றவர்களின் ஆனந்தத்தைப் பார்த்து தான் ஆனந்தப்படும் சாத்துவீக பாவனை இருந்தது அவளது முகத்தின் மீது; தன்னைத்தான் முழுவதும் ஒதுக்கி வைத்து, மறந்து, மற்றொருவரின் சுகத்திற்காகவே வாழும் சுயநலமற்ற பாவம் இருந்தது அவளுடைய முகத்தின் மீது.

தாய்மையின் வடிவமாக அன்று காணப்பட்டாள் குமுதா. அதற்குப் பொருள் உண்டா? அவளைப் பார்த்த மாத்திரத்தில், தான் ஏதுமறியாத சிறுவன் என்கிற பாவனை தோன்றினாற் போலிருந்தது. ஆச்சரியம் என்னவென்றால், தம்மிருவருக்குள்ளும் எந்தவிதமான மனஸ்தாபமும் ஏற்படவில்லையோ என்கிறார் போலச் சிரித்த முகத்துடன் தன்னோடு பேசினாள்!

"ஒரு சின்னப் பையன், ஒரு பெரிய பையன்" என்றாள் சிரித்தவாறே.

"ஆங்?"

"இல்லை, உங்கள் இரண்டு பேரையும் பார்த்தால் யார் பையன் என்று சொல்வதே கஷ்டம் என்றேன்."

மோகன், அந்தப் பேச்சின் பொருளைப் புரிந்து கொண்டவன் போல, கண்களை மலர்த்தித் தன்னைப் பார்த்தான். மோகனின் அந்த மலர்ந்த கண்களைப் பார்த்த உடனே, இதயத்தில் குண்டடி ஏற்பட்டவன் போல, நாடகத்தில் மாறுவது போல கணத்தில் காட்சி மாறிவிட்டது.

ராமண்ணா ஏமாற்றத்துடன் கூடிய நகை முகத்துடன் பெருமூச்சு விட்டான். நாடகம் உண்மை என்று சொல்லவேண்டும். எப்பொழுதும் அத்தகைய சந்தர்ப்பங்கள் தனக்கும் குமுதாவுக்கும் இடையே, செயற்கையான சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டிருந்தன.

மோகனின் கண்களைப் பற்றி, ராமண்ணாவுக்கு இப்போதும் ஆச்சரியம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது; அவைகளைப் பார்த்த உடனே அதைரியம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

அந்தக் கண்கள் மோகனின் கண்களல்ல, சரளாவின் கண்கள்!

ராமண்ணாவுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. மோகன் சிரிக்கும்போது, சரளாவே மலர்ந்த முகத்துடன் பேசிக் கொண் டிருக்கிறாளோ என்று ஒரு கணம் அவனுக்குப் பிரமை ஏற்படும்; எவ்வளவோ முறை திடுக்கிட்டிருக்கிறான்.

மோகனுக்கு சரளாவின் கண்கள் எப்படி? அவன் தனக்கும் குமுதாவுக்கும் பிறந்தவன்.

அல்லது அந்தக் கண்கள், சரளாவின் கண்கள் என்பது தன்னுடைய பிரமையோ?

அல்லது சரளாவே அந்தக் கண்களின் உருவில் வாழ்ந்து கொண் டிருக்கிறாளோ? தான் தாயாக முடியவில்லை என்கிற எண்ணம் அவளை எப்போதும் வருத்திக் கொண்டிருந்தது; வீட்டில் குழந்தைகள் இருக்கவேண்டும் என்று அவள் எப்போதும் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள். தான் எவ்வளவோ முறை கேலி செய்திருக்கிறான்—

"கடையிலிருந்து வாங்கிக் கொண்டு வந்தால் போயிற்று. இந்தக் காலத்தில் காசு கொடுத்தால் கிடைக்காதது எது?" என்று சொல்வான்.

"கடையில் கறிகாய் கிடைக்கிறது என்பதற்காக, வீட்டில் கறிகாய்ச் செடிகள் பயிரிடாமல் இருப்பதில்லை யாரும்" என்றாள் ஒரு முறை.

"அது அநாவசியத் தோந்தரவு."

"அதனால்தான் அதற்கு ருசி ஜாஸ்தி."

"போகட்டும் விடு சரளா. நான் சொன்னது, அவ்வளவு அவசியம் என்று தோன்றும்போது சுவீகாரம் எடுத்துக் கொண்டால் போயிற்று என்று."

"நான் சொல்வது வீட்டிலேயே பிறந்து வளருகின்ற குழந்தை--"

"நானும் வேண்டாம் என்று சொல்லவில்லை, நீயும் வேண்டாம் என்று சொல்லவில்லை. இருந்தாலும்—"

"போறும். நான் என்ன இன்னும் வயசுப் பெண் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? என்னால் உங்களுக்குக் குழந்தை சுகம் இல்லை என்பது எனக்கும் தெரிந்திருக்கிறது."

"நீ இருந்தால் எனக்குச் சுகம். அதற்குமேல் வேறு ஒன்றும் வேண்டும் என்று தோன்றுவதில்லை."

"நீங்கள் பேசாமல் என் பேச்சைக் கேளுங்கள்—"

"உத்தரவாகட்டும்"

"இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள்ளுங்கள்." "

என்ன சொன்னே?"

"நான் இருக்கும்போதே நீங்கள் பண்ணிக்கொண்டால் இந்த வீட்டிலேயே குழந்தைகள் பிறந்து வளர்வதைப் பார்ப்பேன்"

"ஆனால்? இன்னாரைப் பண்ணிக் கொண்டால் குழந்தைகள் கண்டிப்பாக பிறக்கும் என்கிற நம்பிக்கையாவது வேணுமே? இல்லாவிட்டால், மறுபடியும் ஏமாறவேண்டாம் என்பதற்காக, குழந்தை இருக்கிற ஸ்திரீயையே பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளட்டுமா? ஆங்? ஹஹ-"

"போதும்! ஏதாவது ஒன்று பேசாதீர்கள்!"

ராமண்ணா இப்போது மிகுந்த வேதனையுடன் நினைத்துக் கொண்டான், அன்றைக்குத் தான் 'ஏதாவது ஒன்று' பேசவில்லை என்று. தன்னுடைய வாக்கே தனக்குச் சாபமானாற்போல, குழந்தையை வயிற்றில் ஏந்திக் கொண்டிருந்த குமுதாவைத் தான் கல்யாணம் செய்து கொண்டானல்லவா? உண்மை, அந்தக் குழந்தை என்னவோ தன்னுடையது உண்மை, ஆனாலும்—

ராமண்ணா தன்னுடைய இந்த எண்ணத்தினாலேயே திடுக்கிட்டு நடுங்குவான். தான் கண்ணாரக் காண்பேன் என்கிற பிடிவாதத்தினால், சரளா மோகனின் கண்களாக வாழ்கிறாளா?

தன்னுடைய முட்டாள் தனத்திற்காகச் சிரித்துக் கொண்டிருக்கிறாளா?

அல்லது–?

ராமண்ணாவுக்கு இன்னொரு சந்தேகமும் வந்து கொண்டிருந்தது. குமுதாவை மெச்சிய போதும், சரளாவையே நேசித்துக் கொண்டிருந்தானோ?

மகாபாரதத்தில் கதை இருக்கிறதல்லவா? வியாச முனிவரின் தேஜஸைப் பார்க்காமல் கண்ணை மூடிக் கொண்டதற்காக, திருதராஷ்டிரனின் தாய் குருட்டுப் பிள்ளையைப் பெற்றாள் என்று. காதலர்களின் உள்ளங்களில் பதுங்கியிருந்த எண்ணங்களின் பிரபாவம் இவ்வாறு அந்தக் காதல் விளையாட்டின் பலனின் மீது படியுமோ? குமுதாவைக் கூடியபோது தான் சரளாவின் உருவத்தை நினைத்துக் கொண்டிருந்தேனோ?

சீ! என்ன பைத்தியக்கார யோசனை! முழுவதும் மெய் மறக்கச் செய்யும், மன நெருக்கம் பரிபூரணமாக இருந்த அந்த ரதி விளையாட்டின் போது மற்றொரு, எண்ணம் மனத்திற்குள் வருவது சாத்தியமா?

அப்படியானால் குடியானவன் வயலில் விதையை நடும்பொழுது "அமோகமாக விளையட்டும்" என்று, மனத்தில் நினைத்துக் கொண்டு அதையே சாதித்துக் கொள்ளலாமே?

ஊஹூம். அப்படி நடக்காது. அது இயற்கைக்கு விரோதம். விதையின் குணதோஷங்கள்தான் பயிரில் காணப்படுமேயல்லாது, வேறு வெளியிலிருந்து வருபவையல்ல. தன் மகன் தன்னைப் போல - ஆனால்–? இது தன் ஒருவனுடையதே குழந்தை அல்லவே? தன்னுடையவும் குமுதாவுடையதும். இல்லை, இல்லை. குழந்தை தன்னுடையதுதான். பயிர் விதையினுடையதுதான். ஆனால் சுற்றிலுமுள்ள காற்று, நிலம், நீர் இவைகளின் ஆதிக்கமும் இருக்கும். ஆனால் இந்த ஆதிக்கத்தினால் பயிரின் குணதோஷங்கள் மாறுவதில்லை. குணதோஷங்கள் வருவது விதையிலிருந்து தான். அப்படி வந்த குணதோஷங்களின் மீது இந்த வெளிச்சக்திகளின் பிரபாவம். பெண், நிலம், நீர், காற்றுப்போல. பிறவிக்குணம், உடலமைப்பு இவைகள் நிர்ணயிக்கப்படுவது விதையினாலேதான் - ஆணினால் -

ராமண்ணா சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்திருந்தான். என்ன இது? ஏன் இப்படி எண்ணக் குழப்பங்களில் சிக்கிக்

கொண்டேன், வேறு வேலையாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போது, என்று கைக் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். இன்னும் இருபது நிமிடங்கள்! ஜன்னலருகில் வந்தான், மோகன் இன்னும் வந்தானா இல்லையா என்று நினைத்த வண்ணம்.

ஓ! என்று சிரித்தான். மோகன் விஷயமாக அல்லவா தான் எதையெதையோ எண்ணியபடி இளம் இலக்கிய கர்த்தாவைப் போல எல்லாம் அறிவேன் என்று குறுக்குவழியில் சென்றது? குறுக்கு வழி அல்ல என்று தோன்றியது அடுத்த கணம். தன்னுடைய தர்க்கம் குறுக்கு வழியில் சென்றிருக்கலாம், ஆனால் அனுபவம் கண்ணெதிரில் இருக்கிறதே! நின்ற இடத்திலேயே திரும்பி நின்று கொண்டு, சுவரில் மாட்டியிருந்த சரளாவின் படத்தைப் பார்த்தான்.

சந்தேகமே இல்லை, என்றான்.

அருகில் நடந்து வந்து படத்தைக் கூர்ந்து உற்றுப்பார்த்து, "அதே கண்கள்" என்றான்.

குமுதாவும் ஒரு தடவை இதே அபிப்ராயத்தை வெளியிட்டிருந்தாளல்லவா?

ஒரு தட வை? எப்போது? ஓ அந்தத் தடவை அத்தை வீட்டுக்குப் போனவள், திடீரென்று திரும்பி வந்தாள்; தான் மோகனை எடுத்து வைத்துக் கொண்டு முத்தமிட்டான்; அப்பொழுது அவள் தங்களிருவரையும் குறித்து ஏதோ சொல்லியிருந்தாள்; அதைக் கேட்டு மோகன் சிரித்தான்; கண்களால் தன்னை ஒரு தடவை, குமுதாவை ஒரு தடவை பார்த்தான். அப்போது--

ராமண்ணா வைராக்கியப் பெருமூச்சு விட்டபடி, நாற்காலியில் அமர்ந்து கொண்டான். அன்று, அந்த ஒரு கணம் தன் வாழ்வே சுகமயமானது என்று தோன்றியிருந்தது!

ஆம், அப்பொழுது குமுதா சொல்லியிருந்தாள்,

"இந்தப் பையன் கண், யார் கண்ணைப் போல இருக்கிறது சொல்லுங்கள்?" என்று.

தான் சட்டென்று திடுக்கிட்டவனைப் போல. "யாரைப் போல" என்று கூறிக்கொண்டு, மோகனை மற்றொரு முறை பார்த்தான்.

அப்பொழுது அவனுக்குப் பளிச்சென்று தெரிந்தது. யாரைப் போல? தனக்குத் தெரியும். ஆனால் அதைச் சொன்னால்? எதிர்பாராதவிதமாக சந்தோஷத்துடன் ஆரம்பித்த அவளுடைய கிருகப்பிரவேசம் விரசமாகி விடக்கூடுமே?

"யாரைப் போல?" என்று தெரியாதவனைப் போலக் கேட்டான்.

"மோகனின் கண்கள் யாரைப் போல இருக்கிறது என்று கேட்டேன். அதற்குள்ளாக மறந்துவிட்டீர்களா என்ன?"

மறந்து விடுவது? ஓஹோ! இவளுக்கும் தெரிந்திருக்கிறது குழந்தையின் கண்கள் யாரைப்போல இருக்கின்றன என்று. தான் குமுதாவை மறந்து விட்டான் என்று குறிப்பிடுகிறாளே? அந்தக் குறிப்பே அவளுக்கு ஒரு வழிகாட்டி போலத் தோன்றியது.

"யாரைப் போல என்ன? உன்னுடைய கண்களைப் போலவே தான்" என்று கூறியிருந்தான்.

ஊஹூம், என்று தன்னுடைய சம்மதமின்மையைக் காட்டுவது போல மலர்ந்த முகத்துடன் தலையை ஆட்டினாள் குமுதா.

"அப்படியானால்? என்னுடையவை போல இருக்கின்றன என்கிறாயா? சே!" என்றான்.

குமுதா சட்டென்று பெருமூச்சு விட்டு மௌனமானாள்.

அவள் வாயிலிருந்தே அந்த வார்த்தை வரட்டும் என்று எதிர்பார்த்துக்க கொண்டிருந்த தனக்கு ஏமாற்றமாகி விட்டது. அவள் சிறிது தாமதித்தாவது சொல்லுவாளோ என்கிற ஆசையை வைத்துக் கொண்டிருந்தான். ஆனால் அவளுடைய பார்வை எங்கோ தொலைவில் சென்றாற்போலிருந்தது. அவளுடைய முகத்தில் ஏமாற்றத்தின் களை படிந்திருந்தது. வந்தது வரட்டும் என்று சொல்வதுபோல மறுபடியும் பெருமூச்செறிந்தாள். தன்னைப் பார்த்தாள்; இப்பொழுதாவது சொல்வாளோ என்று நினைப்பதற்குள், மோகன் மறுபடியும் அவளிடம் ஓடிச் சென்றான்; அவள் அவனைத் தூக்கிக் கொண்டு உள்ளே சென்றுவிட்டாள்.

ஒரு சமயம் அப்பொழுது தான் சொல்லியிருந்தால்?—என்கிற எண்ணம் ராமண்ணாவுக்கு அதன் பிறகு பலமுறை தோன்றிற்று. "நீ சொல்வது நிஜம்; பையனின் கண்கள் சரளாவின் கண்களைப் போலவே தான் இருக்கின்றன." என்று தான் சொல்லியிருந்தால், அவளுக்குத் திருப்தியாக இருந்திருக்குமோ? ஆனால் - மனிதனின் சுபாவமே விசித்திரமாக இருக்கிறது-! அன்று தான், குமுதா, மோகன் மூன்று பேரும் எதிர்பாராதவிதத்தில் ஒரு சொர்க்க சுகத்தின் நிமிடங்களைக் கண்டிருந்தார்கள். அந்த நிமிடங்களைக் கூடுமானவரையில் அப்படியே நிறுத்தி வைக்க வேண்டுமென்பது ராமண்ணாவின் உத்தேசம். எந்த உத்தேசத்துடன் தான் அப்படி நடந்து கொண்டானோ, அதற்கு நேர் விரோதமான முடிவு அவனுடைய நடத்தையினால் ஏற்பட்டது! சரளாவின் நினைவு, தான் சரளாவை நினைப்பது, அதிலும் குமுதாவின் வயிற்றில்

பிறந்த குழந்தை சரளாவைக் கொண்டிருக்கிறது என்று தான் சொல்வது. அவளைச் சீண்டிவிடக்கூடும் என்பது தன்னுடைய பயம்; அவளை சீண்டக்கூடாது என்கிற நல்லெண்ணம் தனக்கு! நல்லெண்ணத்தின் முடிவு கெடுதலாகிவிட்டது!

இதனால்தான் தெய்வம் என்று ஒன்று இருப்பதாக, மக்கள் கருதுகிறார்களோ என்னவோ! உண்மையில் மக்கள் நம்புகிற தெய்வ சக்தி என்பது ஒன்று இருந்தால் மனிதனைப் போன்ற அற்பமான, பரிதாபகரமான பிராணி வேறொன்றில்லை என்று சொல்லவேண்டும். யாருக்குத் தெரியும்? தன்னுடைய விதியும் விபரீதமானதாக இருக்கிறதோ என்னவோ?

அல்லது-?ராமண்ணாவுக்கு ஒரு எண்ணம் பளிச்சிட்டிருந்தது இது விஷயமாக. விதி என்பது இல்லை; ஆனால் மனிதனுக்கு எப்போது தன்னுடைய பொறுப்பு தெரிவதில்லையோ அல்லது எப்போது மனிதன் தன்னுடைய பொறுப்பைத் தட்டிக் கழிக்க முயல்கிறானோ, அப்போது 'விதி' என்று சொல்லும்போது தன் தவறையே ஒப்புக் கொண்டது போல.

உண்மை. இப்போது தன்னுடைய தவறை ஒப்புக் கொள்ள, ராமண்ணா தயாராக இருக்கிறான். அன்று நடந்தது விதியின் விபரீதம் அல்ல; தனது தவறுக்குத் தக்க பிராயச்சித்தம். "பையனின் கண்கள் யாரைப் போல இருக்கின்றன சொல்லுங்கள்" என்று குமுதா கேட்ட முறை, கேட்ட முறை, கேட்ட போதின் அவளுடைய சிரித்த முகம் இவைகளினால், அந்தக் கேள்வியின் பதில் இருவருக்கும் தெரிந்திருந்தது என்பது தெளிவானாற் போலிருந்தது. மோகனின் கண்களைப் போன்ற கண்கள் உள்ள, தனக்கும் குமுதாவுக்கும் இருவருக்கும் தெரிந்திருந்த நபர்கள் எவ்வளவு பேர் இருக்க முடியும்? "யாருடைய கண்கள்" என்றால் "சரளாவின் கண்கள்" என்ற நேரடியான பதிலைக் குமுதா எதிர்பார்த்திருந்தாளோ என்னவோ?

ஆனால்தான் செய்தது என்ன? நேரடியான பதிலைக் கொடுத்திருக்கவில்லை. "உன்னைப் போல" என்கிற பொய்யான பதிலையளித்தான். அது இல்லை என்றபோது, "என்னைப் போல என்கிறாயா?," என்று வாய்க்கு வந்த பதிலைச் சொல்லியிருந்தான். அவள் எவ்வளவு உற்சாகத்தோடு கேட்டாள் என்பதைப் பற்றிய முக்கியமே தனக்கு இல்லாததைப் போல நடந்து கொண்டான்.

ஏன்? குமுதா தன்னை மெச்ச வேண்டுமென்பதற்காக!

அதற்காக தனக்குத் தண்டனை கிடைத்தது. கணவனுடன் தான் நடத்தப்போகும் குடும்ப வாழ்க்கையைப் பற்றிய கற்பனையில்

துர்வாச முனிவரை மறந்த சகுந்தலைக்குக் கிடைத்த தண்டனையைப் போலத் தனக்கும்.

உண்மையில் இது ஒரு முக்கியமான விஷயம். கேவலம் தன்னுடைய சுயநலத்திற்காக, தன்னுடைய பொறுப்பைப் புறக்கணிக்கும் மனிதனுக்குப் பிராயச்சித்தம் செய்தே தீர வேண்டிவரும்.

ராமண்ணாவின் முகத்தில் சிரிப்பு தோன்றியது. "உண்மையிலேயே முக்கியமான விஷயம்" என்று தன்னைத் தானே கேலி செய்து கொண்டான். முக்கியமான விஷயமாம்! அப்படியானால் இதுபோன்ற விஷயங்களை பொதுக் கூட்டங்களில் தான் பேசத் தயாரா? ஜனங்கள் கேட்கட்டும், கேட்காமற் போகட்டும்- தன்னைப் பொறுத்தவரையில் தான் தயாராக இருக்கிறானா?

ஊம் என்று ராமண்ணு மோவாயைச் சொரிந்து கொண்டான். சொல்லவேண்டும், தைரியமாக. தெளிவாகச் சொல்லவேண்டும். ஜனங்கள் கேட்காவிட்டால், அவர்கள் கேட்கும்படி ரஞ்சகமாக எடுத்துச் சொல்லவேண்டும். தான் எழுத்தாளனல்லவா? ஜனங்களுக்கு வேண்டுமென்பதற்காக, தெரு நாய்களின் சம்போகத்தைக் குறித்துக் கதை எழுதத் தான் தயார். ஆனால் தன்னுடைய வாழ்க்கையில் பரஸ்பரம் ஒருவரையொருவர் விரும்பும் இரண்டு இதயங்கள் துயரத்தால் வாடி மடிந்து கொண்டிருக்கின்றன. அந்தக் கதையைத் தான் ஏன் சொல்லக்கூடாது?

சொல்வோம்- என்று நினைத்துக் கொண்டான். இன்றைக்கு என்னுடைய இலக்கிய வாழ்க்கையின் ஒரு யுகம் முடிந்தாற்போல; பொதுமக்களின் மரியாதையை உரிமையோடு பெற்றுக் கொண்டாற் போலாகும் இன்றிலிருந்து. பிறகு தன்னுடைய உண்மையான எண்ணங்களை ரஞ்சகமாகச் சொல்லலாம், சொல்லக்கூடும், சொல்லத்தடையில்லை - என்று மோவாயைத் தடவியபடியே முணுமுணுத்துக் கொண்டு எழுந்து ஜன்னலருகே நடந்தான்.

வெளியே பார்த்தான். பிறகு மெத்தைப் படிகளின் அருகில் வந்து நின்று கொண்டு, கீழிருந்து வரும் ஓசைகளைக் கவனத்தோடு கேட்டான். கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். "குறித்த நேரத்தில் கூட்டம் ஆரம்பிப்பதானால் இன்னும் சரியாக 18 நிமிடங்கள்" என்று சொல்லிக்கொண்டான். அல்லது, தாமதமாக ஆரம்பிப்பது நிச்சயம்; நல்லதாயிற்று. மோகனை அழைத்துக் கொண்டு போக சௌகரிமாயிருக்கும் – என்று சொல்லிக் கொண்டு களைத்துப் போனவனைப் போல 'உஸ்' என்று இரண்டு புறங்கைகளையும் தலைக்குப் பின்னால் வைத்துக் கொண்டு, முகத்தை உயர்த்தியபடி உட்கார்ந்து கொண்டான்.

## 13

குமுதா தயங்கினாள். ஏதோ ஓசைப்பட்டாற் போலிருக்கிறது. மோகன் வந்தானா? நல்லதே ஆயிற்று. நானும் அவனுக்காக எல்லா ஏற்பாடுகளையும் முடித்துக் கொண்டு - இல்லை. கதவின் ஓசை அல்ல! குமுதா தலையை நிமிர்த்திப் பார்த்தாள். ஓ! மகனின் வரவைத் தந்தை எதிர்பார்க்கிறாற் போலிருக்கிறது! ஒரு நிமிடம் படிகளின் மேல் கேட்ட ஓசையைக் கவனித்தாள். சிறிது சிறிதாக அவள் முகம் புன்முறுவலால் மலர்ந்தது. சூனியப் பார்வையுடன் எதிரில், தொலைவில் எதையோ கண்டவன் போலப் பார்த்துக் கொண்டு நின்றான். சமாதானப் பெருமூச்சு விட்டபடி, மறு படியும் கண்ணாடிக்கெதிரிலுள்ள நாற்காலியை நோக்கி நடந்தாள். உட்கார்ந்து கொண்டு கண்ணாடியில் தன் பிரதி பிம்பத்தை இடைவிடாது உற்று நோக்கினாள்.

"உனக்கு ரொம்பச் சந்தோஷம், இல்லையாடி? ராமண்ணா மோகனை நேசிக்கிறான் என்று. ஆங்?" என்று தன் பிரதிபிம்பத்தைக் கேட்டாள். பிரதிபிம்பம் சிரித்தது.

ரொம்ம்ம்ப சந்தோஷம் - என்று மற்றொரு முறை தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். யாரோ யாரையோ நேசிக்கிறார்களென்றால் தனக்கு ஏன் சந்தோஷமாக வேண்டும்?

தான் ஒரு பைத்தியம்! முதலில் தான் என்னமோ நினைத்துக் கொண்டிருந்தாள். அந்தத் தடவை தான் மோகனோடு திரும்பி வந்த போது, ராமண்ணா மோகனை எடுத்து வைத்துக் கொண்டு முத்தமிட்டுக் கொஞ்சினானே! அப்போது? தான் எவ்வளவு சந்தோஷமடைந்தாள். மோகன் இடத்தில் தானே இருப்பதாகப் பிரமை ஏற்பட்டு, உடல் ஜூம்மென்றாகி வியர்த்து விட்டிருந்தது. ராமண்ணாவின் முகத்தையும் உல்லாசத்தையும் பார்த்தபோது ராமண்ணா தன் பேரில் - குமுதாவின் பேரில் - இருந்த அன்பைத்தான் மோகன் பேரில் பொழிகிறான் என்கிற ஸ்பஷ்டமான எண்ணம் தோன்றியிருந்தது தன் இதயத்தில். அன்றைய அந்தக் காட்சியை சரளக்கா பார்த்திருந்தால்-? என்கிற எண்ணம் எங்கிருந்தோ தன்னில் எட்டிப் பார்த்தது. வீட்டில் குழந்தைகள் வேண்டும் என்று எவ்வளவு தடவைகள் சொல்லியிருந்தாள்? ராமண்ணா தன்னை - குமுதாவை - விவாகம் செய்து கொள்ள வேண்டும், அவர்களிவருக்கும் குழந்தைகள் பிறக்கவேண்டும், அதைத் தான் கண்ணாரப் பார்த்து விட்டுச் சாகவேண்டும் என்று,

அக்கா அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். இன்றைக்கு அவள் உயிரோடு இருந்தால்? தனக்கும் ராமண்ணாவுக்கும் பிறந்த குழந்தை - ராமண்ணா அந்தச் செல்லக் குழந்தையோடு தானும் ஒரு குழந்தையாக விளையாடிக் கொண்டிருந்ததைப் பார்த்திருந் தால்? குமுதா மிகுந்த அன்பு நிறைந்த பார்வையோடு மகனைப் பார்த்தாள். இதயம் பக்கென்றது. அக்கா! - இல்லை, அக்காவின் கண்கள்! இல்லை மோகனின் கண்கள்! அப்படியே அக்காவின் கண்களைப் போலவே இருக்கின்றனவே! இதுவரையில் எப்படித் தன் கவனத்திற்கு வரவில்லை? மகனை உற்றுப் பார்த்தாள்; கொஞ்சம் கூடச் சந்தேகமில்லை. அக்காவின் கண்களேதான்! இன்றைய இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்! பாக்கியசாலி சரளக்கா—

அதற்குள்ளாக ராமண்ணாவும் தன்னை சிரித்த முகத்துடன் பார்த்தான். தனக்கு என்ன தோன்றியதோ என்னமோ? மோகனின் கண்கள் யாரைப் போல இருக்கின்றன என்று கேட்டுவிட்டாள்!

எவ்வளவு உற்சாகத்தோடு அந்தக் கேள்வியைக் கேட்டிருந்தாள்? தான் பார்த்தது ராமண்ணாவுக்கும் தெரியட்டும், தனக்கேற்பட்ட சந்தோஷம் அவனுக்கும் ஏற்படட்டும், தாங்களி ருவரும் அன்று சரளக்காவை நினைத்து மன மகிழ்ச்சி பெறுவோம் - என்று பிடிவாதமாக மற்றொரு முறை அதே கேள்வியைக் கேட்டிருந்தாள்.

ராமண்ணாவுக்குத் தன் கேள்வியே விளக்கவில்லையோ என்னவோ? இரண்டாவது முறை கேட்டபோதும், மோகனைப் பார்ப்பது போலப் பார்த்து, "உன்னைப் போல இருக்கின்றன" என்றிருந்தான். சீ! என்ன பொருத்தமில்லாத பேச்சு! இவ்வளவு ஸ்பஷ்டமாகத் தெரிவதை சரியாகப் பார்க்கக்கூடாதா? ராமண்ணா அப்படி எதையும் செய்யவில்லை. "என்னைப் போல இருக்கின்றன என்கிறாயா?" என்றான்.

தனக்கு மிக்க ஏமாற்றம். மேற்கொண்டு அங்கே நின்று பேசவேண்டுமென்றே தோன்றவில்லை. தன்னிடம் வந்த மோகனை எடுத்து வைத்துக் கொண்டு விடுவிடுவென்று உள்ளே போய் விட்டாள்.

ஆண்களின் சுபாவம் இவ்வளவு நன்றியில்லாததாக இருக்குமா என்கிற சந்தேகத்தினால், எவ்வளவோ நாட்கள் அவள் குழம்பிக் கொண்டிருந்தாள். சரளக்காவின் கண்கள் எப்படியிருந்தன

என்பதை ராமண்ணா அறவே மறந்து விட்டிருப்பானா? அப்படியிருந்தால் தான் என்ன ஆசையை வைத்துக் கொண்டு வாழ்க்கையை ஓட்டவேண்டும்? தனக்கு இல்லக்கிழத்தியாக இருக்கிறவரையில் தான் மனைவி இருப்பதையே உணர்வது ஆணின் சுபாவமானால் பெண்ணின் கதி என்ன?

ஆம், ஆணின் சுபாவமே அப்படித்தான். தான் கேட்க வில்லையா தன் அத்தையின் கதையை? பாவம்! பழைய காலத்து எண்ணங்களைக் கொண்ட கிழவி! இருந்தாலும் இன்னும் பெருமையுடன் சொல்லிக் கொள்கிறாள் - கணவனுடன் தான் நடத்திய வாழ்க்கையைப்பற்றி. ஒரு தடவை அதென்னமோ சொல்லியிருந்தாளே. ஹூம்-வெளியில் இவ்வளவு மனம்போன போக்கில் நடந்து கொள்ளும் கணவனை அருகில் நெருங்க விடக்கூடாது என்று தான் சொன்னதற்கு அத்தை பதில் சொல்லியிருந்தாள்.

"ஐய! குமுதா, ஆம்பளை வெளியில் என்னென்ன செய்கிறான் என்பதை கவனிக்க ஆரம்பிச்சா, பொம்பளை வாழறதே கஷ்டம் ஆயிடும்."

"அப்படின்னா என்ன அத்தை! தினமும் ராத்திரி முழுக்க இன்னொருத்தி பக்கத்துலெ இருந்துட்டு வந்தா, மனசுக்கு அசுத்தமாகத் தோணாதா?" என்று தான் ரோஷத்துடன் கேட்டிருந்தாள்.

"அப்பப்ப! அப்படின்னா சுத்தம் - அசுத்தம்ங்கறதெல்லாம் இந்தக் காலத்துப் பொண்ணுங்களுக்கும் இருக்குன்னு சொல்லு. ஆங்?"

"நான் கேட்டதுக்கு என்ன பதில் சொல்றே?" என்று தான் விடாப்பிடியாகக் கேட்டிருந்தாள்.

"இத பார் குமுதா. தட்டறதுக்கு இரண்டு கையும் வேணும், உண்டா இல்லையா? என் மேலேயும் தப்பு இருந்தது. நான் எப்படி அவரைக் கோபித்துக் கொள்ள முடியும்?"

"உன் தப்பு இருந்ததா?"

"இருந்ததுன்னா, வேற வழி இல்லே, குமுதா. பெரிய வீடு. பெரிய குடும்பம். பத்து ஜோடியோட எங்களது பதினோராவது ஜோடி. அவர் வீட்டுக்கு வந்தால், நாம வீட்டுக்குள்ளேயே மறவா நடமாடறது. அவர் என்னோட பேசினா எங்க மாமியார் பதில் கொடுக்கறது. சுகம்-துக்கம், சிரிப்பு-வேதனை, என்னத்தையாவது

சொல்லணும்னா நான் எல்லா வேலையையும் முடிச்சுகிட்டு போறதுக்குள்ளே, அவருக்கு துக்கம் வந்திட்டிருக்கும். விடியற்காலை அவருக்கு விழிப்பு வர்றதுக்கு முன்னாடியே நான் எழுந்.து சத்தமில்லாம வேலைக்குப் போயிடறது. அவருக்கு ஏன் வெறுத்துப் போகாது சொல்லு? வெளி சகவாசம் சேர்ந்துகிட்டுது - வீட்டுலெ சகவாசம் இல்லாததுனாலெ—அய்யே! கேக்கறியா இல்லே சும்மா என்னைப் பாத்துகிட்டிருக்கியா?"

"அத்தை! நீ எழுதப் படிக்கத் கத்துகிட்டிருந்தா?"

"எங்க காலத்துல என் கல்யாணமே ஆயிருக்காது." என்று சிரித்து விட்டாள் கிழவி.

ஆனால் அவள் பேச்சு நிஜமா? வீட்டில் சகவாசம் இல்லை யென்பதற்காக வெளியில் போவதானால் ஆணுக்கு மாத்திரம் ஏன் அந்த சாக்கு? பகல் முழுவதும் காரியாலயத்தில் உழைத்துவிட்டு இரவு களைத்துப் போய் வீட்டுக்கு வரும் கணவனின் சகவாசம் மனைவிக்கு எவ்வளவு கிடைக்கப் போகிறது? அவளும் அவனைப் போலவே செய்தால், சமூகம் அதைப் பொறுத்துக் கொள்ளுமா?

போகட்டும் - ராமண்ணா சரளக்காவை மறப்பதற்கு எந்தச் சாக்கும் இருக்கவில்லையே?

அல்லது--?

குமுதாவுக்கு முன்பு ஒருமுறை தோன்றிய எண்ணம், இன்று மறுபடியும் தலைதூக்கியது. ராமண்ணா சரளக்காவை மறந்திருக்கவில்லை. ஆனால் தனக்காக அப்படி ஒரு பொய்யைச் சொல்லியிருக்கவேண்டும்.

என்ன அநியாயம்! சரளக்காவை நினைத்தால், தானும் அசூயைப் படுவாள் என்கிற எண்ணம் ராமண்ணாவுக்கு எப்படித் தான் வந்தது?

குமுதா மறுபடியும் கண்ணாடியில் தன் முகத்தின் பிரதிபிம்பத்தைப் பார்த்தாள்.

அந்தப் பிரதிபிம்பத்தின் களையைக் கண்டவுடன் அவளுக்கு முள் தைத்தாற்போலிருந்தது.

ராமண்ணாவுக்கு அந்த எண்ணம் எப்படித்தான் வந்தது என்கிறாயே? எவ்வளவு அழுக்கல்காரிடி நீ? ராமண்ணா உன்னை நேசிப்பதில்லை, இன்னும் சரளக்காவையே பிரியத்துடன் நினைத்துக் கொண்டிருக்கிறான் என்று எவ்வளவு முறை நீ எரிச்சலுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டதில்லை? நீ-நீ—

"எதிரேயிருந்தது பிரதிபிம்பம் என்று அறிந்து குமுதாவின் ஆவேசம் இறங்கியது.

இதுவரையில் கண்ணெதிரே இருந்த ஒரு பருமனான கறுப்புத் திரை சர்ரென்று விலகினாற் போலிருந்தது.

குமுதா நீண்ட யோசனையில் இறங்கினாள். அவளுடைய கண்கள் என்றைக்கோ நடந்தவைகளைப் பார்க்க, அடம் பிடிப்பது போல உள்ளுக்குள் திரும்பின. ஓரிரண்டு நிமிடங்களுக்குப் பிறகு கிணற்றில் இறக்கிவிடப்பட்ட குடம் நிறைந்து மேலே வருவது போல உள்ளுக்குள் பதிந்திருந்த அவள் கண்கள் நீர் நிறைத்துக் கொண்டு தற்காலத்திற்கு ஏறி வந்தன.

குமுதாவுக்கு இப்போது பளிச்சிட்டது. தன்னுடைய மண வாழ்க்கை தானும் ராமண்ணாவுக்கு மட்டுமே சம்பந்தப்பட்ட தாக இருக்கவில்லை என்பது. தான் இந்த விஷயத்தை அறிந்திருக்கவே இல்லை.

அன்றைக்கு அத்தை சொல்லியிருக்க வில்லையா? வீட்டில் மற்றவர்கள் இருந்ததனால் கணவன்-மனைவி சகவாசம் இருவருக்குமே திருப்திகரமாக இருக்கவில்லை என்று? அதை அத்தை தெரிந்து கொண்டிருந்தாள். அதனால் அவள் கணவனின் மீது கோபமம கொள்ளவில்லை. அது மட்டுமல்ல, கிடைக்கும் சொற்ப அவகாசத்தில் தன் இதயத்தையே திறந்து வைத்தாற் போலக் காதலை வெளிக்காட்டினாள். அந்தக் காதலின் ருசியை அனுபவித்து விட்டு, வேறு எங்கும் மனம் சுலபமாகச் செல்லக் கூடாது என்பதற்காக. உண்மையில் அன்று அத்தை தனக்கு வழிகாட்டியாக இருந்தாள். ஆனால் தான்தான் குருடியாக இருந்துவிட்டாள்.

தன் நிலைமை அத்தையின் நிலைமையை விட, முற்றிலும் மாறுபட்டது என்பதைக் குமுதா அறிவாள். அதனாலேயே அது அதிகக் கடினமானதாகவும் ஆகிவிட்டிருந்தது.

ராமண்ணா தன்னைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு, வீட்டில் தானும் ராமண்ணாவும் இரண்டே பேர்தான் என்று நினைத்துக் கொண்டிருந்தானல்லவா?

தானெவ்வளவு அறிவு கெட்டவள்!

வீட்டில் மூன்றாவது மனிதர் இருக்காவிட்டாலும் மனத்தில் மூன்றாவது நபர் இருந்தாரே? சரளக்காவின் நினைவு வீட்டில் மூன்றாவது ஆளாகவே இருந்து வந்தது. தாங்கள் செய்தது என்ன? அந்த நபரின் கண்களிலிருந்து தப்ப முயற்சித்தது! எவ்வளவு

மடத்தனம்! ஏன்? சரளக்காவே தம்மிருவருடைய கல்யாணத்தை விரும்பியிருக்கவில்லையா? அதைத் தாங்கள் பகிரங்கரமாக ஒத்துக் கொண்டிருந்தால்? அதுவுமல்லாமல் ராமண்ணா எவ்வளவோ வருடங்கள் அன்பான குடும்ப வாழ்க்கையை நடத்தி யவன். அவன் மனத்தில் சரளக்கா நிலைத்திருப்பது ஆச்சரியமில் லையே? தெளிவானதை, இயற்கையானதை, கண்ணிலிருந்து அகற்றி மறக்க முயற்சித்த தங்கள் நிலைமை காலில் அடிபட்டுக் கொண்டவன் இடறாமல் விழிப்புடன் இருக்க முயற்சித்தது போலாயிற்று. அடிபட்ட இடத்திலேயே மறுபடியும் இடறியிருந் தார்கள்.

ராமண்ணா இன்னும் சரளக்காவை விரும்புகிறான் என்று தான்–

சரளக்காவின் நினைவு தனக்கு, குமுதாவுக்கு, பொறுக்காது என்று ராமண்ணா–

இருவரும் இதுவரையில் இருபுறமும் கூர்மையான வாளை நடுவில் வைத்துக் கொண்டு, ஒருவருக்கருகில் மற்றவர் வர முயன்றிருக்கிறார்கள்!

குமுதா திடுக்கிட்டவள் போலச் சட்டென்று தன் எண்ண ஓட்டத்தை நிறுத்தினாள். என்ன இது? தன்னுடைய நினைவுப் பாதை சரியாக இருக்கிறதா? அல்லது தாகத்தினால் சோர்வுற் றவன் கானல் நீரை ஓடை என்று வாதிப்பது போலத் தான் செய்து கொண்டிருக்கிறாளா? ராமண்ணா உண்மையிலேயே தன்னை நேசிக்கிறானோ? தாங்கள் இருவரும் குற்றவாளிகளைப் போலச் சரளக்காவைத் தவிர்க்க முயலாமல், அவளையும் தங்கள் தோழி யாகச் செய்து கொண்டிருந்தால் நன்றாக இருந்திருக்குமோ?

குமுதாவின் கண்முன்னால் பழைய நினைவு ஒன்று, ஒளிவிடும் வண்ணச் சித்திரம் போல நின்றது. கல்யாணமான புதிதில் ராமண்ணா இடைவிடாமல் சரளாவைப் பற்றிப் பேசி வந்தான். அது தனக்குப் பிடித்திருக்கவில்லை. ஆனால் அதை விட்டால் ராமண்ணாவுக்குப் பேச நாவெழாது.

பாவம்! ராமண்ணாதான் என்ன செய்திருக்க முடியும்? அவ்வளவு வருடங்களாக அன்பு நிறைந்த குடும்ப வாழ்க்கையை நல்கிய சரளக்காவை, அவன் எப்படி மறக்கமுடியும்? அப்பொழுது தான் தொடர்பும் சிநேகமும் ஏற்பட்டிருந்த தன்னுடன் அவன் என்ன பேசுவான்? ஆனால் அப்போது தனக்குத் தெரிந்திருக்கவில் லையோ? சரளக்காவைப் பற்றிப் பேசுகிறானென்றால்

அவளையே நேசிக்கிறான் என்றுதான் நினைத்துக் கொண்டாள். அது தவறா? மோகனை நேசிக்கும் தான், ராமண்ணாவையும் நேசிக்கவில்லையா? அவ்வாறு சரளக்காவின் நினைவை நேசித்துக் கொண்டே, தன்னையும் நேசிக்கக் கூடும் அல்லவா?

குமுதாவின் முகத்தில் மென்முறுவல் பூத்தது. லட்சியக்காதல் என்று சொன்னால் தன் அத்தையுடையது. எத்தகைய பெண் உள்ளம்! கணவன் வெளியே எங்கே போகிறான். என்ன செய்கிறான் என்பதை அறிந்திருந்தும், அவன் அருகில் சுகம் அனுபவித்து வந்தாளே! தூ! அந்த எண்ணத்தினால் அசிங்கம் தோன்றவில்லையா என்று தான் கேட்டபோது, கிழவி மிக்க பெருமையோடு பதில் அளித்திருந்தாள்.

"இல்லையடி குமுதா. நான் கேட்கிறேன். வெளியே போய்ட்டு வர்ற புருஷன் சட்டை மேலே, காக்காய் எச்சமிட்டுட்டுதுன்னு வெச்சுக்கோ. அதுக்காக அந்த சட்டையையே கழட்டி எறிஞ்சு டணுமா, இல்லை, அதை சோப்புப் போட்டு தோய்க்கணுமா?

"அப்படியானால், அத்தை, குளிச்சிட்டு வந்தாத்தான் புருஷனை உள்ளே சேத்துகிட்டிருந்தியா என்ன?"

"அவர் மனசு சுத்தமா இருந்தால் குளிச்சாப்பலெதான். நம்ம மனசு சுத்தமா இருந்தா அதுவே சோப்பு." கிழவி தெரிந்துதான் சொன்னாளோ அல்லது பேச்சுக்குப் பேச்சு ஏதாவது பேசவேண்டு மென்று பேசினாளோ எப்படியோ ஒரு தத்துவத்தின் சாரம் போன்ற பேச்சைப் பேசியிருந்தாள்.

குமுதா சட்டென்று நாற்காலியை விட்டு எழுந்திருந்தாள். உள்ளத்தின் எண்ணங்கள் அவளை ஒரு இடத்தில் உட்கார விடவில்லை. அந்த எண்ணங்களின் பிடியிலிருந்து தப்பித்துக் கொள்வதுபோலக் குறுக்கும் நெடுக்கும் நடக்கத் தொடங்கினாள்.

உண்மையா? உண்மையா? உண்மையா?

யோசனை அவளைப் பின்தொடர்கிறது. விடமாட்டே னென்கிறது. சட்டென்று பிடித்துக் கொள்ளும், உடனே நழுவிக் கொள்ளும்.

ராமண்ணா தன்னை நேசிப்பது- உண்மையா? உண்மையா? உண்மையா?

வேறு யாரை வேண்டுமானாலும் நம்பலாம். ஆனால் தன்னைத் தானே நம்புவது சாத்தியமில்லை என்கிற நிலையாயிற்று குமுதா வுக்கு. பத்து வருடங்களாக அடக்கி வைத்துக் கொண்டிருந்த எண்ணம், தனக்குப் பிடித்தமான எண்ணம், இப்பொழுது தன்

இதயத்தையே பிளந்து கொண்டு வெளிவருகிறாற் போல வேதனையை உண்டாக்கி கொண்டிருக்கிறது! தனக்குப் பிடித்தமான எண்ணம் என்பதனால், தன் அறிவு அதை இல்லாத-பொல்லாத காரணங்களைத் தேடி ஆதரிக்கிறது.

தான் முதல் முறை அத்தை வீட்டிற்குச் சென்றபோது, ராமண்ணா தன்னைத்தேடிக் கொண்டு வந்தது.

தான் வீட்டுக்குத் திரும்பி, வந்ததும் ராமண்ணா மோகனை முத்தமிட்டுக் கொஞ்சியது.

தனக்கு ஒரு தடவை ஜுரம் என்கிற சந்தேகம் இருந்தபோது, ராமண்ணா தன்னைத் தொட்டுப் பார்க்கப் பயந்து கொண்டு, ஓடிப் போய் டாக்டரைக் கூட்டிக் கொண்டு வந்தது.

தன்னுடன் "குடும்பவாழ்க்கை" நடத்தாவிட்டாலும், வேறெங்கும் மனத்தைச் செலுத்தாமல் இருந்தது.

அன்று தனக்காகப் புதுப்புடவை எடுத்து வந்தது-

ஒன்றா, இரண்டா- சந்தேக மலையின் சிகரம் உருண்டதால் பாறையின் மீது பாறை உருண்டாற்போலப் பழைய நினைவுகள் ஒன்றன் பின் ஒன்றாக நுழைந்து, தன்னை மூச்சுவிட முடியாமல் செய்து விட்டிருக்கின்றன!

உண்மை, தான் ராமண்ணாவுக்கு முதலில் காமக் கிழத்தி, பிறகுதான் விவாகம் செய்து கொண்ட மனைவி; சமூகத்தில் அத்தகைய நடத்தைக்கு ஒப்புதல் கிடையாது. கல்யாணம் செய்து கொள்ளாமலிருந்திருந்தால், தான் சமூகத்தினால் புறக்கணிக்கப் பட்டிருப்பாள். ஆனால் ராமண்ணா தன்னைக் கல்யாணம் செய்து கொண்டானே? தான் அவனை வற்புறுத்தவில்லையே? தன்னை நேசித்ததால் தான் அவன் தன்னை மணம் செய்து கொண்டான் என்று ஏன் நினைக்கக்கூடாது? தன் மேல் கருணை காட்டுவதற்காகக் கல்யாணனம் செய்து கொண்டான் என்றுதான் ஏன் பிடிவாதமாக நினைக்கவேண்டும்? அப்படியிருந்தால் தனக்காகவே ஏங்க வேண்டிய காரணம் இல்லையே? அவன் வாழ்க்கையில் இன்னொரு பெண்ணின் சகவாசம் இல்லவே இல்லை என்பது, தனக்கு நிச்சயமாகத் தெரியும். உண்மை, முதலில்தான் காமக்கிழத்தி ஆனாள்.

-ஆனால், ஆனால் அதில் என்ன தவறு?

மற்றொருவருடன் வாதம் செய்யத் தயாரானவள் போல, மறுபடியும் வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

அதில் என்ன தவறு? என்று கேட்டுக் கொண்டாள் மற்றொரு முறை.

இன்றைய சமூக விதிகள் மாறிக் கொண்டிருக்கின்றன. இன்று ஆணும் பெண்ணும் கல்யாணத்திற்கு முன்னால் சுதந்திரமாக வாழ்கிறார்கள், சமூகத்தில் ஒருவரையொருவர் சந்திக்கிறார்கள், நட்பை வளர்த்துக் கொள்கிறார்கள், ஒருவரோடொருவருக்குப் பழக்கம் அதிகரித்தால், ஒன்றோடொன்று இதயங்கள் ஒன்றினால், ஒருவரையொருவர் மணந்து கொள்கிறார்கள். கல்யாணச் சடங்குகள் நடைபெறுவதற்கு முன், சில சமயங்களில் காம இச்சையைத் தணித்துக் கொண்டால் தவறென்ன?

குமுதா நடுங்கினாள், தூக்கமுடியாத கனத்தை எப்படியோ தூக்கிக் கொண்டு நிற்பவள் போல, அவளுடைய உடல் முழுவதும் நடுங்கியது. தன் எண்ணம் சரியானதா? எந்த சம்பந்தத்தால் சமூகத்தில் ஸ்தானமும் பொறுப்பும் நிர்ணயிக்கப்படுகின்றனவோ, அந்த சம்பந்தத்தைக் குறித்து இவ்வாறு துச்சமாக எண்ணுவது சரியா?

உண்மையான காதல் இருக்குமானால், காம வாழ்க்கை ஒரு பொருட்டல்ல என்று தோன்றியது குமுதாவுக்கு. தன்னுடையவும் ராமண்ணாவுடையவும் அனுபவங்களை நினைத்துக் கொண்டாள். தாங்கள் ஒருவரோடொருவர் உறவு கொண்டது எப்படி? காமத் திருப்திக்காக அல்ல. ஒருவர் எதிரே இருக்காவிட்டால் மற்றவருக்குச் சமாதானம் இருக்கவில்லை. ஒருவரைக் கண்டால் மற்றவர் தன்னையே மறந்துவிடும் நிலை. ஒருவருக்காக எதையும் ஏற்றுக் கொள்ள மற்றவர் தயார். ஒருவரின் சுகத்தைத் தன் சுகமாகவும், ஒருவரின் துக்கத்தைத் தன் துக்கமாகவும் மற்றவர் கருதினர். பரஸ்பரம் இதயங்கள் ஒன்றானபோது, பரஸ்பரம் உடல்கள் ஒன்றானதை அறிந்திருக்கவில்லை. ஒன்றாக வேண்டும் என்கிற இச்சை இல்லை. ஆனால் ஒன்றாகாமல் வேறுவழி இல்லை! இதயங்கள் ஒன்றிய பிறகு முடிந்தது. சமூகம் பெரிய தவறைச் செய்கிறது.

இதயங்கள் ஒட்டாமல், உடல்கள் ஒன்று சேர்வது உண்மையான விபசாரம். விவாகமாகியிருந்தாலும் கூட இந்த விபசாரம் காணப்படலாம்.

குமுதா மறுபடியும் எழுந்திருந்தாள். தன் எண்ணங்களை நினைத்துப் பயப்பட்டாள். என்ன இது? பத்து வருடங்களாகக் கணவனின் அருகாமை இல்லாததனால், இப்படியெல்லாம் நினைக்கத் தோன்றுகிறதோ என்று பயந்தாள்.

பயத்தோடு கூடவே ஆனந்தமும் எங்கிருந்தோ தோன்றியது.

ஆம், மோகனையும் கூட்டிக் கொண்டுதான் கூட்டத்திற்குப் போகவேண்டும். ஏன் இன்னும் வரவில்லை மோகன்? வரும் நேர மென்னமோ ஆகிவிட்டது. போகட்டும் கூட்டத்திற்கு அவ்வளவு அவசரம் என்ன? அவன் வந்த பிறகு அவனையும் கூட்டிக் கொண்டே போனால் போயிற்று.

ஆனால்–

குமுதா உடனே பரபரத்தாள். இப்பேர்ப்பட்ட கூட்டத்திற்கு, இவ்வளவு பேர் வரக்கூடிய கூட்டத்திற்கு ராமண்ணா சரியானபடி உடுத்துக் கொண்டு வருவானா? அவன் அப்படிச் செய்திருக்க மாட்டான் என்று நிச்சயமாகத் தெரிந்திருந்தது. ஹூம் ஆணின் சுபாவமே அப்படி. ஊஹீம் இன்றைக்காவது ராமண்ணா நல்ல மாதிரி உடைகளை அணிந்து வரவேண்டும் என்று, அவனுடைய துணிமணிகளை சோதித்தாள். அப்பொழுது அவள் தன் கைகால்கள் நடுங்குவதையும், மூச்சு விடுவது கஷ்டமாக இருப்ப தையும் உணர்ந்தாள்.

ஆனால் அதைப் பொருட்படுத்தாமல் பிடிவாதமாக, டிராயர் களை சத்தம் போட்டு இழுத்தாள், மூடினாள் – துணிமணிகளை ஆராய வேண்டுமென்று.

## 14

என்ன இது சத்தம்? ராமண்ணா சட்டென்று எழுந்திருந்தான். ஓ–கீழே! ஆனால் இப்படி அறைவானேன்? படிகளை நோக்கி நடந்த ராமண்ணா தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டு தயங்கி னான். பெருமூச்செறிந்தான். யாருக்குத் தெரியும்? குமுதாவுக்குக் கோபம் வந்திருந்தாலும் வந்திருக்கலாம். தன்னுடன் கூட்டத்திற்கு வரவேண்டியதாயிற்றே என்பதற்காக--

ஏன்?–ராமண்ணா தனக்குள்ளாகவே புன்னகை புரிந்து கொண்டான்–கோபித்துக் கொண்டால் தான் நாற்காலி மேஜை–டிராயர்களை இழுத்துச் சப்தமுண்டாக்க வேண்டுமென்று நியதி இருக்கிறதா என்ன? உற்சாகத்தினாலும் அப்படிச் செய்யலாம், அடக்கமுடியாத ஆவலினாலும் அப்படிச் செய்யலாம். இன்னும் எவ்வளவோ காரணங்களினால் அப்படிச் செய்யலாம்.

குமுதா கோபித்துக் கொள்ளவில்லை என்று நினைத்துக் கொண்டு, அமைதியாக உட்கார்ந்து கொண்டால் ஆயிற்று என்று கூறிக் கொண்டான். அதோ! சத்தமும் நின்று விட்டது.

ராமண்ணா உட்காரவேண்டுமென்று நினைத்தபோது மற்றொரு முறை ஜன்னலுக்கு வெளியே பார்த்தபடி நின்று கொண்டான்.. ஹூம்...இந்த வரவேற்புக் கமிட்டி சீக்கிரம் வந்தால் நல்லது. ஏனோ இதயத்திற்குள் ஒரு குறுகுறுப்பு தோன்றியிருக்கிறது. ஏதோ எதிர்பாராதது சம்பவிக்கப் போகிறது என்று சில சமயம் மகிழ்ச்சி, சில சமயம் பயம்.

மனிதனின் மனமே விசித்திரமாக இருக்கிறதே? உலகின் நாசத்தை ஒரு அடியால் செய்யக்கூடிய அணுகுண்டைக் கண்டு பிடித்த மனிதன், மனதைக் குறித்து சோதனை செய்யக்கூடாதா? அல்லது - அதைச் செய்யாமல் மனம் அணுகுண்டின் சோதனை யையே விரும்புகிறது என்று பவபூதி சொல்லுவது போல "கிமபி கிமபி" - அது ஏதோ ஒரு ரகசியம் என்று சொல்லவேண்டுமா?

இப்போதுதான் பயப்பட்டானே? என்ன வேடிக்கை! குமுதா கோபித்துக் கொண்டாள் என்று நினைத்தான். ஏன்? தான் குமுதாவுக்குப் பயப்படுவதால். தான் குமுதாவுடன் முன் போலவே இருந்திருந்தால், அவள் செய்கிற அதே டிராயர்களின் சப்தத்தைக் கேட்டு "குமுதா உற்சாகமாக இருக்கிறாள்" என்று நினைத்திருப் பான். நடக்கவேண்டிய சம்பவங்கள் நடந்தே தீரும். அவைகளின் பொருள் தன் மன நிலையைப் பொறுத்திருக்கிறது!

அப்படியென்றால்?

ராமண்ணா ஆழ்ந்து யோசிப்பவன் போல, இடதுகைப் பெரு விரலாலும் நடுவிரலாலும் நெற்றிப் பொட்டுக்களை அழுத்திப் பிடித்துக் கொண்டு கண்களை மூடினான்.

சம்பவத்தின் பொருள் மனநிலையைப் பொறுத்திருக்கிறது.

அப்படியானால்--?

மனநிலையைக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டால் சம்பவம் அனுகூலமானதாகத் தோன்றக்கூடும்?

குமுதாவைச் சரியாகப் புரிந்து கொண்டால் அவளும்--?

ஊஹூம்...இது ஏதோ சிந்தனைக் குழப்பம் - என்று சொல்லிக் கொண்டான்.

இருந்தாலும் இன்றையச் சூழ்நிலையில் ஏதோ எதிர்பாராத சம்பவம் நடக்கலாம் - என்று தோன்றியது. ஏன்? ஏன் என்ன? தோன்றுகிறது. சொல்ல வரவில்லை போலிருக்கிறது. காரணம் தெரியவில்லை. காரியத்தைப் பற்றிய கற்பனை இருக்கிறது.

அப்படி உண்மையாகவே நடந்தால்? குமுதா தன்னைச் சரியாகப் புரிந்து கொண்டால்? ஹூம்...அப்படியும் பொறுப்பை

இன்னொருவர் மீதே போட்டுக் கொண்டிருக்கிறேனே? என்னுடையதாகவே தவறு இருக்கக்கூடாதா? குமுதாவை நான் உண்மையிலேயே நேசிப்பதானால் இந்த அதைரியம் ஏன்? தன்னுடைய காதலைப் பற்றி அவளுக்கு நம்பிக்கையூட்டலாமே?

குமுதாவுக்குத் தான் உயிர் என்பது பற்றி ராமண்ணாவுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. அன்று, விவாகத்திற்கு முன்னால், அவள் தன்னுடையவள் ஆனதிலிருந்து, தனக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. இருந்தாலும் இன்று தன்னோடு-வருடக்கணக்கில் ஒத்துழைக்காமல் குடும்பத்தை நடத்தி வந்திருக்கிறாள்.

எத்தகைய தியாகம் அவளுடையது! ஆனால் அந்தத் தியாகத்தில் அவளுக்குச் சுகம் உண்டா? தனக்கும் அவளுக்கும் வயதில் 14-15 வருடங்கள் வித்தியாசம்...சீ! மறுபடியும் தன் மனம் அதே வழியில் செல்லுகிறது. மணவாழ்க்கையில் சுகம் என்றால், காம இச்சையின் திருப்தி என்றே தன்னுடைய எண்ணம்-- எண்ணம் தன்னுடையதல்ல. அயிரக்கணக்கான வருடங்களாக நடந்துவந்திருக்கும் சம்பிரதாயத்தின் எண்ணம் தன்னில் நிலை கொண்டிருக்கிறது. அல்லது இயற்கையில் ஒவ்வொரு ஆண் பிராணியின் எண்ணமும் இதே தானோ? இருந்தாலும் இருக்கலாம். காம வாழ்க்கை ஆணுக்குக் கேவலம் ஒரு திருப்தி. அத்துடன் சேர்ந்த பொறுப்பு ஒன்றும் அவனுக்கு இல்லை. பெண்ணின் விஷயம் வேறு. காமவாழ்க்கை புதியதொரு பொறுப்பையே கொண்டு வந்து தருகிறது. ஆணின் காம வாழ்க்கை இருட்டில் நடப்பது. செய்ததை மூடிவைக்க முடியும். பெண்ணின் காமவாழ்க்கை பகலில் நடப்பது. செய்ததை மூடிவைக்கவே முடியாது. காம வாழ்க்கையைப் பற்றி ஆண், பெண்களின் எண்ணமே வேறு வேறாக இருந்தால்? ஒன்றுக்கொன்று நேர் மாறாக இருந்தால்....

இந்த யோசனை இப்பொழுது ஏன்?- என்று நினைத்துக் கொண்டான். பத்து வருடங்களாகிவிட்டன, தனது காம வாழ்க்கை நின்று போய்.

ஓ! ராமண்ணாவுக்குச் சட்டென்று புதியதொரு எண்ணம் தோன்றியது. தன் முதுகைத் தானே தட்டிக் கொடுத்துக் கொண்டான். உடனே சுற்றிலும் பார்த்துக் கொண்டான், வெட்கப்பட்டவன் போல. யாராவது பார்த்திருந்தால் என்னைப் பைத்தியம் என்று சொல்லியிருப்பார்கள் - என்று நினைத்துக் கொண்டான்.

இருந்தாலும், இது முதுகைத் தட்டிக் கொடுக்கிற விஷயம்தான் - என்று மற்றொரு முறை கூறிக் கொண்டான்.

பத்து வருடங்களாகிவிட்டன தன்னுடைய பிரம்மசரிய வாழ்க்கைக்கு.

இருந்தாலும் இந்த நீண்ட வாழ்க்கையில் குமுதாவை விட்டு வேறொரு பெண்ணைத் தன் மனம் நாடவில்லையே!

தான் குமுதாவை நேசிக்கிறான் என்பதற்கு வேறு காரணமும் தேவையா?

ராமண்ணாவுக்கு ஒரு கணம் மண்டையில் சிந்தனைக் குழப்பம் ஏற்பட்டாற் போலிருக்கிறது. உண்மையா? இவ்வளவு சுலபமாகத் தான் குமுதாவின் கேள்விக்கு பதிலளிக்க முடியுமா? இந்த ஒரு காரணத்தினால் குமுதாவின் மனம் சமாதானம் அடையுமா?

ராமண்ணா ஏமாற்றத்துடன் பெருமூச்சு விட்டான்.. தான் ஒரு பைத்தியம், பைத்தியம். அல்லது அவ்வளவு அப்பாவியா? இந்த விஷயத்தில் குமுதா இருக்கட்டும், வேறெந்தப் பெண்தான் சமாதானம் அடைவாள். கடைசியில் தன்னைப் பிடிவாதக்காரன் என்று சொல்லலாமே? உண்மை, இந்தத் திண்பண்டம்தான் வேண்டுமென்று அடம்பிடிக்கும் பையனுக்கு வேறு எதன் மேலும் ஆசை இல்லை என்று ஆகும்? தான் விரும்பியது கிடைக்காததால் அவன் அன்றைக்கு முழுவதும் வேறு எதையும் சாப்பிடாமல் பட்டினி கிடக்கக்கூடும். அதனால் அந்த திண்பண்டத்தின் மீதுதான் பிரியம் என்று யாராவது சொல்வார்களா?

தான் பிடிவாதக்கார சிறுவன் - இல்லையில்லை, குமுதா அப்படிச் சொல்லக்கூடும் தான் அவளுடன் வாதாடப் புறப் பட்டால். இருந்தாலும் இப்போது தன்னைப் பொறுத்தமட்டில் நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறதல்லவா? குமுதாவைத் தான் இதயபூர்வமாக நேசிக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. அப்படி யானால்? இதற்கு முன்னால் தனக்குச் சந்தேகம் இருந்ததா? சே! தனக்குச் சந்தேகமே இருக்கவில்லை. என்றால்--?

ராமண்ணா கோபத்துடன் தலையைக் குலுக்கினான். உள்ளே பரவிக் கொண்டிருந்த குழப்பம், வெளியே வந்துவிடும் என்று நம்பினவனைப் போல. குமுதாவைத் தான் நேசிப்பது பற்றித் தனக்கு என்றுமே சந்தேகம் இருந்ததில்லை என்று பிடிவாதமாகச் சொல்லிக் கொண்டான். அப்படியானால் தன் முதுகைத் தானே தட்டிக் கொடுத்துக் கொண்டது எதற்காக?

ஹூம்...தெரிந்தது. குமுதாவுக்கு இப்போது தான் மனத்தில் படும்படி சொல்லலாம் என்பதற்காகத் தட்டி கொடுத்துக் கொண்டான். ஆம், அந்த எண்ணத்தினால் தனக்குத் தைரியம் வந்தது என்று சொல்லிக் கொண்டான். குமுதாவைத் தவிர வேறொருத்தியைத் தான் கனவிலோ நினைவிலோ விரும்பியிருக்கவில்லை என்று சொல்லிவிட்டால்..

-என்று சொல்லிவிட்டால், தானென்னவோ தன்னுடைய கடமையைச் செய்துவிட்டதாகச் சொல்லித் திருப்திபட்டுக் கொள்ளலாம். ஆனால் குமுதாவுக்கு அதில் நம்பிக்கை ஏற்படும் எனறு எப்படிச் சொல்வது? தான் புதியதாக என்ன சொல்லி விட்டான் என்பதற்காக அவள் தன்னிடம் நம்பிக்கை வைக்கவேண்டும்? குமுதாவுக்குத் தெரியாதா தன் நடத்தை? தான் வேறு எந்தப் பெண்ணையும் விரும்பவில்லை என்பதைக் கண்டும் அறிந்தும் கூட, குமுதா தன்னிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்கிறாள். இதுவும் துஷ்யந்தன்-சகுந்தலையின் கதைதான். வித்தியாசம், நாடகத்தில் சகுந்தலைக்கு ஏற்பட்ட நிலைமை, இங்கே துஷ்ய்ந்தனுக்கு-தன்க்கு-ஏற்பட்டிருக்கிறது. பாவம்! அவள் நிலைமை என்னவாயிற்று? கூட வந்த பெரியவர்கள், உறவினர்கள் எல்லோரும் துஷ்யந்தனிடம் சொன்னார்கள், "இவள் நீ மணந்து கொண்ட மனைவி, உன் மகவை வயிற்றில் ஏந்திக் கொண்டிருக்கிறாள். அவளை உன்னிடம் ஒப்படைக்கிறோம். எவ்வளவு காலம் தான் அவள் தாய் வீட்டில் இருப்பாள்? ஆகையால் அவளை ஏற்றுக்கொள்" என்று. பெண் என்னமோ ஏற்றுக்கொள்ளத் தகுந்தவளாகவே இருக்கிறாள் என்றான் துஷ்யந்தன். ஆனால் அவளை மணந்து கொண்டதே அவன் நினைவில் இல்லை. "நான் அவளை மணந்து கொண்டதாகவே எனக்கு நினைவில்லை. ஆகையால் அவளை ஏற்றுக்கொள்ள மாட்டேன்" என்றான். அப்பொழுது, "நீயே அவனுக்கு நம்பிக்கையுண்டாகுமாறு சொல்" என்றார்கள் உறவினர்கள் சகுந்தலையிடம். அவள் ஆரம்பித்தாள்--"ஒரு நாள் நவமாலிகை மண்டபத்தில் நீ தாமரை இலையில் தண்ணீரை வைத்துக் கொண்டு தீர்க்காபாங்கா என்ற மான்குட்டிக்குக் குடிப்பிக்க முயன்றாய். நீ எவ்வளவு முயன்றும் அது குடிக்கவில்லை. அப்பொழுது நான் உன் கையிலிருந்த நீரின் தொன்னையை என் கையில் எடுத்து வைத்துக் கொண்டேன். மான்குட்டி உடனே பாய்ந்து வந்து தண்ணீரைக் குடித்தது. அப்பொழுது நீ

'எல்லோரும் தத்தம் மனிதர்களிடம்தான் நம்பிக்கை வைக்கிறார்கள்' என்று கூறிச் சிரித்தாய்." பாவம்! அந்தக் கதையினால் துஷ்யந்தனுக்கு நம்பிக்கை ஏற்படக்கூடுமென்கிற ஆசையால் அதைச் சொல்லி முடிக்கும்போது சகுந்தலையும் சிரித்தாளோ என்னவோ! "கதை நன்றாக இருக்கிறது, பெண்கள் பொய்யையும் இனிமையாகச் சொல்ல வல்லவர்கள் என்பதைக் காட்டுகிறது" என்றான் துஷ்யந்தன்!

சரி - என் நிலைமையும் அதேபோல ஆகலாமே? "வேறு பெண்ணை விரும்பாதது பிரம்மசரியத்தினாலா, வயதாகிவிட்ட கோளாறினாலா?" என்று கேட்டுவிட்டால்? ராமண்ணா பெரும் குழப்பத்தில் மூழ்கினான். சத்தியத்தில் நம்பிக்கை உண்டாகச் செய்வது சுலபம் அல்ல என்றால் - அதைவிட வேறு tragedy என்ன? tragedy என்கிற வார்த்தை நமது சம்பிரதாயத்தில் இல்லை. எனவே "துரதிர்ஷ்டம்" என்று சொல்லிக் கொள்வோம் - என்று பெருமூச்சு விட்டான்.

இல்லை - இப்போது ஏதோ ஒரு எண்ணம் வந்திருந்ததே விதியைப் பற்றி? என்ன - என்ன - எண்ணம் எதுவாகவேனும் இருக்கட்டும், விதி என்பது பொறுப்பைத் தட்டிக்கழிப்பதாகும். என்னுடைய பொறுப்பு என்ன? நான் குமுதாவை நேசிக்கிறேன். ஆனால் அவளுக்கு அதில் நம்பிக்கை இல்லை. இதில் என் பொறுப்பு என்ன? அவளுக்கு நம்பிக்கை வருமாறு என்ன சொல்லவேண்டும்? ஊஹூம்—அது என் பொறுப்பு அல்ல. குமுதாவை நான் நேசிக்கிறேன் என்கிற என் இதயத்தின் நம்பிக்கையை நம்பிக்கொண்டு அசைந்து கொடுக்காமல் இருப்பதே என் பொறுப்பு.

பலே! கையைக் கட்டிக் கொண்டு சும்மா இருப்பதே என் பொறுப்பு என்கிற "பெரிய தத்துவ முடிவுக்கு வந்து விட்டேனே--" என்று தன்னைத்தானே ஏளனம் செய்து கொண்டான் ராமண்ணா. கைகட்டிக் கொண்டு உட்காராமல், நான் என்ன செய்யமுடியுமென்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

அந்த விஷயமே அப்படிப்பட்டது. "உன்மேல் எனக்கு, பிரியம் இருக்கிறது" என்றால், அதை யார் நம்புவார்கள்?" பிரியம் இருக்கிறது" என்கிற நம்பிக்கை அனுபவத்தால் வரவேண்டுமே யல்லாது, வாய் வார்த்தையால் சொல்லி வரக்கூடியதல்ல. கதை-நாவல்-நாடகங்களில் எழுதுகிறார்கள். "அன்பே, உன்னை நேசிக்கிறேன்" என்று நாயகனும் "சுவாமி, உங்களுக்காக என்

இதயம் மோக வசப்பட்டுவிட்டது" என்று நாயகியும் கூறுகிறார்கள். நடைமுறையிலும் இவ்வளவு சுலபமாக இருக்குமானால் கணத்திற்கொரு காதல் மணம், வேறு வேறு சமயங்களில் வெவ்வேறு பெண்களுடன் காதல் விவாகம் நடக்கலாம். தானும் எழுத்தாளன். தனக்கும் மனித சுபாவம் அவ்வளவுக்குத் தெரியும் என்று நினைத்துக் கொண்டான் ராமண்ணா. தான் விரும்பிய பெண்ணை அந்தச் சமயத்திற்கு "நேசிப்பது" ஆண் பிராணியின் இயற்கை சுபாவம். தாய்மை அடைந்ததும் "நேசித்த" ஆணை முழுமையாக மறந்து விடுவது பெண் ஜீவனின் இயற்கை சுபாவம். மனித ஜீவன்களிலும் இந்த சுபாவம் சாமானியமாக இருக்கிறது. ஆனால் குடும்ப ஜீவியான மனிதப் பிராணிக்கு எப்பொழுதும் தனக்குப் பிரியமான ஜோடி வேண்டும் என்கிற எண்ணம் இருக்கிறது. இது விஷயத்தில் இன்னொரு வகையான "நேச"த்தின் கற்பனை தோன்றுகிறது. அது--

ராமண்ணா சட்டென்று கைக்கடியாரத்தைப் பார்த்தபடி எழுந்து கொண்டான். என்னமோ, இன்று எண்ணங்களின் பண்டிகையாக இருக்கிறதே! பண்டிகை என்ன கேடு. ஹோலி! மனம் போனாற்போல குதித்துக் கொண்டிருக்கின்றன - என்று நினைத்துக் கொண்டான். சிடுசிடு வென்று முகத்தை வைத்துக் கொண்டபடி.

இந்தப் பாழும் கூட்டம் சீக்கிரம் ஆரம்பிக்கக்கூடாதா?

ஹும்-பார்த்தாயா? எந்த கோபத்தை எதன் மேல் திருப்பிக் கொண்டிருக்கிறாயா?

ராமண்ணா களைத்துப் போனவன் போல மெதுவாகச் சிரித்துவிட்டான். இவ்வளவு ஆனாலும் மனத்தில் ஏதோ ஒரு எதிர்பாராத உற்சாகம் இருக்கிறது என்கிற எண்ணம் அவனை விடவில்லை. என்ன அப்படிப்பட்ட உற்சாகம்? பத்து வருடத் தவத்தின் பயனாக மோட்சம்- இல்லையில்லை, தவத்திலிருந்து மோட்சம் கிடைக்குமா? குமுதாவைத் தவிர எனக்குப் பிரியமானது வேறொன்றுமில்லை அவள் சுகமாக இருந்தால் போதும், அவள் "என்னவன்" ஆகட்டும் என்கிற பிடிவாதம் கூட எனக்கில்லை--

ஹும்-ஹும்--இரு! இதென்ன வைராக்கியமா? வயதாகிவிட்டதன் லட்சணமா?

ஊஹூம்--இரண்டும் அல்ல. இதயத்தின் மீது ஆணையாக இது உண்மை. அவள் சுகமாகவும் சந்தோஷமாகவும் என் முன்னால் நடமாடிக் கொண்டிருந்தால் போதும். அதுவே எனக்கு, பரமசுகம்.

அவள், மோகன்-இல்லை, இருவர் இல்லை-மோகன் அவளுடைய அம்சம். அவளை நேசிப்பதைப் போலவே, நேசிக்கும் அளவே மோகனை நேசிக்கிறேன். ஒருவருடைய அம்சம் மற்றவர். இரண்டு பேர் அல்ல. குமுதா என்னை நேசிக்கிறாள். அதை நான் அறிவேன். என் சுகத்தில் அவள் தன் சுகத்தைக் காண்கிறாள். அதையும் நான் அறிவேன். அதற்காகவே தான் இன்றையக் கூட்டத்திறகு அவள் வரவேண்டுமென்று நான் விரும்பினேன். எனக்கு அளிக்கப்படும் மரியாதையைக் கண்டு அவளுக்கு மகிழ்ச்சி ஏற்படும். அவள் மகிழ்ச்சியைக் கண்டு நான் ஆனந்திப்பேன். நாங்கள் இருவரும் மகிழ்ச்சி நிறைந்த கண்களால் ஒருவரையொருவர் பார்த்த பிறகு இருவரின் பார்வையும் ஓரிடத்தில் லயிக்கும் - மோகன் மீது.

"மோகனும் வரட்டும் கூட்டத்திற்கு" என்று உரக்கச் சொன்னான் ராமண்ணா. தன் கண்களில் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த நீர்த்துளிகளை அடக்க முயற்சித்துக் கொண்டு. "மோகனும் வரட்டும்" என்று ஜன்னலருகில் சென்று சொன்னான். "மோகனும் வரட்டும்" என்று படிகளின் அருகில் சென்று நின்று கொண்டு சொன்னான்.

## 15

வேலை செய்யத் தொடங்கிய குமுதா சட்டென்று தயங்கினாள். என்னமோ சத்தம் கேட்டதே? யாரோ பேசினார்களே? சிலை யைப் போல அப்படியே நின்று விட்டாள். இல்லை, சிலை இல்லை. சிலைக்கு நிற்பதற்குப் பலமான இரண்டு கால்கள் இருக்கும். தனக்குக் கால்களே இல்லை, இல்லையில்லை. தன்னுடைய கால்களில் சக்தியே இல்லை. கைகளைத் துடைகளின் மீது வைத்தபடி, குமுதா நின்ற இடத்திலேயே நின்றுவிட்டாள்.

"மோகனும் கூட்டத்திற்கு வரட்டும்."

ராமண்ணாவின் குரல். மெத்தைப் படிகளின் வழியாக இறங்கி வந்திருக்கிறது குரல். அந்தக் குரல் அவளுக்கு ஒரு கயிறாக இருந்ததோ என்னவோ? அதைப் பிடித்துக் கொண்டு மெதுவாக எழுந்திருந்தாள். கண்ணாடிக்கு எதிரே வந்து நின்றாள். நெற்றியின் மீது புரண்டு கொண்டிருந்த குழற் கற்றைகளைச் சரிப்படுத்திக் கொண்டாள். இதென்ன, கை ஈரமாக இருக்கிறது! நெற்றியில் வியர்வை!

ஏன்?-ஏன்?-ஏன்?- இதயம் படபடவென அடித்துக் கொள்ள அரம்பித்தது. துக்கம்-ஆனந்தம் இரண்டின் லட்சணங்களும் ஒன்றே. பயம், வியர்வை, பலவீனம்,....ஆனால் இதன் பயனாகத் தன் உடம்பில் பலம் வந்தது போல ஆகியிருக்கிறது. இதுதான்

வித்தியாசமோ-துக்கத்திற்கும் ஆனந்தத்திற்கும்? இப்போது தனக்கு ஆனந்தம் ஏற்பட்டிருக்கிறது. மோகன் கூட்டத்திற்கு வரவேண்டுமென்று தானும் விரும்பியிருந்தாள். இப்பொழுது ராமண்ணாவும் அதையே சொல்லுகிறான், தனக்கு ஆனந்தமாக இருக்கிறது. எப்பொழுதும் இப்படியேதான் தனக்கு தன் எண்ணமும் ராமண்ணாவின் எண்ணமும் ஒன்றாகும் போது ராமண்ணாவின் ஸ்பரிசமே தனக்கு ஏற்பட்டதுபோலத் தோன்றும். ஸ்பரிஸம் ஏற்பட்டதும் உடனே உடல் நடுங்கும், வியர்க்கும், கால்களில் சக்தி இல்லாமற்போகும். ஏன்?-ஏன்?-ஏன்?

சந்தோஷத்தின் பூரிப்பினால் இந்தக் கேள்வியைத் தனக்குத்தானே கேட்டுக் கொண்டாள்.

எவ்வளவு யுகங்களுக்கு முந்திய அனுபவம்! எவ்வளவு வருடங்களுக்கு முந்திய ஆனந்தம்! அன்றைய நிகரிலா அனுபவத்தை, அன்றைய சொர்க்க ஆனந்தத்தை, உடல் மறுபடியும் மறுபடியும் நினைத்துக் கொள்ளுகிறதோ என்று அவளுக்குத் தோன்றும். முன்பு நேரடியாகக் கிட்டிய அநுபவம் இன்று மறைமுகமாகக் கிடைக்கிறது. முதல்முறை இந்த அனுபவத்தை அடைந்த பொழுது, தான் பெண்ணாகப் பிறந்தது பயனுடையதாயிற்று என்று அவளுக்குத் தோன்றியது. தான் தன்னுடையது, தன்னுடையவர் என்று எல்லா உணர்வுகளும் இருந்தும் ஒன்றுமே இல்லாதது போலவும், துக்கம் என்று தோன்றிய போதும் சுகத்தைக் கொடுத்த, கணப்பொழுதேயானாலும் சிரஞ்சீவித்துவம் உடையதாகத் தோன்றிய, மற்றவருடைய ஸ்பரிசம் இருந்தபோதிலும் எல்லாம் ஒருவருடையதே என்று தோன்றிய--

இவைகளையெல்லாம் நினைத்துக் கொண்டால் நடுங்குகிற குமுதாவின் உடல், இப்போது நடுங்கியது. கால்கள் உறுதியாக நிற்க முடியவில்லை என்பதனால், மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். தன்னைத் தானே மறந்து விட்டாளோ என்ற பயத்துடன், கண்ணாடியில் தன் பிரதிபிம்பத்தைப் பார்த்துக் கொண்டாள். உடல் சுடவில்லை. ஆனாலும் மூச்சு சுடுகிறதே? கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்தாள். வீடு, பாராட்டுக் கூட்டம் எல்லாம் மறந்து போயிற்று. இப்பொழுது தான் மற்றொரு உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறாள்.

அன்று-என்று? - என்று என்ன? - தன்னுடைய வாழ்க்கையில் அது ஒரே நாள் - சிரஞ்சீவியான ஆனந்தத்தைத் தனக்களித்த அந்த நாள், ராமண்ணா ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அவன்

மேஜையின் மீது கண்ணாடி இருந்தது. தான் தொலைவிலிருந்து சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்றாள். அகன்ற முதுகு, வலது புறம் எழுதுவதனால் அசைந்து கொண்டிருக்கிறது. தலைமயிர் கலைந்திருக்கிறது. இடது கையால் அவ்வப்போது காதைச் சொரிந்து கொண்டிருந்தாள். மெதுவாக நடத்து சென்று தான் நாற்காலியின் அருகில் பின்னால் நின்று கொண்டாள். பக்கத்தில் நிற்கலாமென்றால் நாற்காலிகளுக்குக் கைகள் இருக்கவில்லை. எவ்வளவு நேரம் நின்றிருந்தாளோ! கண்ணாடியில் தன் உருவம் தெரிந்து கொண்டிருந்த போதிலும், அவன் கவனம் அதில் திரும்பவே இல்லை. அவ்வளவு ஆழ்ந்து போயிருந்தான் சிந்த னையில்! அவன் தலைக்கூந்தலை மெதுவாக வருடினாள்; அவன் சிந்தை கலைந்து விடுமோ என்று பயந்தாள். ஊஹூம். புற உலகின் நினைவே இருக்கவில்லை அவனுக்கு. தனக்கும் சீண்டினாற்போலாயிற்று. இதென்ன சிந்தனையா அல்லது அலட்சியமா? இப்படியா தன்னை அலட்சியப்படுத்துவது? சிறிது பிடிவாதத்துடன் அவனது இடப்பக்கம் நகர்ந்து சென்று நின்று கொண்டாள். ஒரு நிமிடம். வலது கை எழுதிக் கொண்டிருக்கிறது. இடது கை மெதுவாக நகர்ந்து தன் இடுப்பைச் சுற்றி வளத்துக் கொண்டது. எவ்வளவு பிரியம் அந்தக் கையில்! எவ்வளவு மிருதுவாக இருந்தது அந்த ஸ்பரிசம்! சுற்றி வளைத்த கை தன்னை இழுத்துக் கொள்கிறது. தான் இப்போது ராமண்ணாவின் தொடை மீது உட்கார்ந்திருக்கிறாள். ஆனால் ராமண்ணாவுக்கு அது தெரிந்ததாக தோன்றவில்லை.அவ்வளவு ஏன்? தனக்கே அது தெரிந்திருக்கவில்லை. சில நிமிடங்களுக்குள்ளாக அவள் தான் எங்கே உட்கார்ந்திருக்கிறாள் என்பதை மறந்து விட்டாள். எவ்வளவு நேரமாக அப்படி உட்கார்ந்திருக்கிறாள் என்பதும் அவளுக்குத் தெரியவில்லை. ஒருவருடன் ஒருவர் பேசவில்லை. உட்கார்ந்திருநத இரண்டு இதயங்களும் ஒன்றாகி விட்டனவோ என்பது போல இருவரும் நிசப்தமாக இருந்தார்கள். எழுதுவதைப் பார்ப்பதில் தான் லயித்திருக்கிறாள். தன்னை வருடிக்கொண்டே எழுதுவதில் லயித்திருக்கிறான். ராமண்ணா. தோளோடு தோள், கன்னத்தோடு கன்னம், இடுப்பில் கை; இரண்டு உடல்களையும் பிளந்து கொண்டு இரண்டு இதயங்களும் ஒன்றோடொன்று சேர்ந்து கொண்டு விட்டனவோ என்கிறாற் போல. பேச்சில் லாமல் கண்களை மூடிக் கொண்டு தான் எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தாளோ!

அந்த மௌனமான லயிப்பினால் தனக்கேற்பட்ட ஆனந்தத்தை தான் என்றைக்கும் மறக்கமுடியாது என்று குமுதா நினைத்துக் கொண்டாள்.

மறுபடியும் கண்களை மூடிக்கொண்டாள். அந்த ஆனந்தத்தை நினைத்து ருசிப்பது போல.

குமுதா இப்போது உற்சாகமாக இருக்கிறாள். ராமண்ணாவுக்காக நல் உடுப்புகளை எடுத்து வைத்திருக்கிறாள். மோகனுக்கு வேண்டியவைகளையும் எடுத்து வைத்திருக்கிறாள். தான்-ஹூம்-தனக்கு எல்லாம் சரியாக இருக்கிறதா? ராமண்ணாவின் பாராட்டு விழாவில் தனக்கு எதற்காக ஆடம்பரமும் அலங்காரமும்? ராமண்ணா எழுத்தாளன். இருந்தால் என்ன? தான் எழுத்தாளனின் வாழ்க்கைத் துணைவி. அன்று ராமண்ணாவின் தொடை மீது உட்கார்ந்திருந்த பொழுது தானே எழுதுவதாக அவளுக்குத் தோன்றியிருந்தது.

"உங்கள் சிந்தனைக்கு பங்கம் ஏற்பட்டு, நீங்கள் கோபித்துக் கொள்வீர்களோ என்று நினைத்திருந்தேன்" என்றாள் பிறகு.

"என்ன சிந்தனை?"

"எழுதுவதில்தான்."

"பலே! நல்ல கேள்வியைக் கேட்டாய் குமுதா? எழுதும் போது சிந்தனையே வந்து வாசல் கதவைத் தட்டினால், எழுத்தாளனுக்குச் சிந்தனை பங்கம் எப்படி ஏற்படும்?

"சிந்தனை உதிக்கவேண்டுமென்றுதான் நெற்றியை வருடிக் கொண்டிருந்தீர்களா?

"இல்லை, வந்த சிந்தனையை விட்டுவிடக்கூடாது என்பதற்காக, நெற்றியைத் தேய்த்துக் கொண்டிருந்தேன்."

"அதென்ன சிந்தனையோ, கற்பனையோ! நாமிருவரே இருக்கும் போது இன்னொரு முறைவந்தால்--"

"வருவது மட்டுமல்ல, வந்து தொடை மேலேயே உட்கார்ந்து விட்டது" என்று கூறிப் பலமாகச் சிரித்தான்.

தானே சிந்தனை! தன்னால் தொந்தரவு இல்லை. பதிலாக, எழுதுவதற்கு உற்சாகம்! தனக்கு எவ்வளவு பெருமையாக இருந்தது! ராமண்ணாவின் எழுத்துக்கு தான் தேவை! அப்படியானால் தான் ரொம்பவும் கெட்டிக்காரியாக இருக்கவேண்டும். ஒரு தாய் தன் குழந்தையைப் பாராட்டி வளர்ப்பது போல, தான் ராமண்ணாவின் எழுத்தைப் போற்றி வளர்க்கவேண்டும். இந்த யோசனையினால் அன்று இரவு தூக்கம் வந்திருக்கவில்லை.

எழுந்திருந்து சுகமாகப் படுத்திருந்த ராமண்ணாவைப் பார்த்தாள். உண்மையிலேயே குழந்தை! விளையாடி விளையாடிக் களைத்துப் போயிருக்கிறது. எவ்வளவு விசாலமான நெற்றி! சட்டென்று அதை முத்தமிட்டாள். ராமண்ணா கண்களைத் திறந்தான். ஐயோ - மோசம்! அவன் தூங்கியிருக்கவே இல்லை. முத்தமிடப் போன தன்னுடைய முகத்தை மறுபடியும் மேலே உயர்த்தவே இல்லை! தான் கற்பனை, தான் ராமண்ணாவின் சரசுவதி, காளிதாசனின் முகத்தில் தன் முகத்தை வைத்து, கல்வி வரத்தை அளித்திருந்தாளல்லவா சரசுவதி! தான் கற்பனை, எழுத்தாளனான ராமண்ணாவிலிருந்து தான் வேறுபட்ட ஒரு ஆள் அல்ல. எழுத்தாளனும் அவனுடைய கற்பனையும் ஒன்றே தான். ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்க முடியாது. அவைகளின் சேர்க்கையிலிருந்தே பிறக்கிறது கலைப் படைப்பு.

மோகன் என்னும் கலைப் படைப்பு உருக்கொண்டது அன்று தான். அதை தான் எப்படி மறப்பாள்? ராமண்ணா மோகனைக் கூப்பிடும்போது, ராமண்ணாவின் வாயிலிருந்து "மோகன்" என்கிற பெயர் வெளிப்படும்போது அன்றைய அனுபவத்தின் சித்திரம் கண்முன்னால் நிற்கிறது.

மெதுவாக எழுந்திருந்தாள் குமுதா; தான் இன்னும் ராமண்ணாவின் தொடை மீதே உட்கார்ந்திருப்பதாக பிரமை அவளுக்கு. நாற்காலியில் மீதிருந்த மெத்தையை எடுத்துத் தன் தொடை மீது வைத்துக் கொண்டு மறுபடியும் உட்கார்ந்தாள்.

நான் எவ்வளவு சுகமாக இருக்கிறேன்!-நான் எவ்வளவு துரதிர்ஷ்டக்காரி - என்று சொல்லிக் கொண்டாள்.

துரதிர்ஷ்டக்காரி அல்லாமல் வேறு என்ன? எவ்வளவு மனம் ஈடுபட்டு எழுதிக் கொண்டிருந்தானோ அதே போல மனம் ஈடுபட்டுத் தன்னையும் நேசித்திருக்கலாமல்லவா? லாம் ஏன்? அதைப்பற்றி சந்தேகம் இருக்கக்கூடாது. அவன் எழுதிய புத்தகங்களில் வரும் பெண் பாத்திரங்களோடு அல்லாமல் வேறு எந்தப் பெண்களைப் பற்றிய எண்ணமுமே அவனுக்கு இருந்திருக்க வில்லை. இருந்தாலும் தான் துரதிர்ஷடக்காரி!

சீ! இதென்ன யோசனை! மனத்தில் ஏதோ ஒரு வகை உற்சாகம் இருக்கும்போது, ஏதோ ஒரு எதிர்பாராத சம்பவம் நடக்கப் போகிறது என்று நினைக்கும் போது, பழைய தவறுகளின் எச்சிலில் கையை விட்டு அசுத்தப் படுத்திக் கொள்வானேன்? ராமண்

ணாவின் நேசத்தை இன்றுதான் முதல் முறையாகக் கண்டு பிடித்தாற் போலிருக்கிறது! இன்றுதான் புதுமணப்பெண் என்பது போலத் தோன்றிக் கொண்டிருந்தது. ராமண்ணாவின் குரலைக் கேட்டு உற்சாகம், வெட்கம், புளகம். தான் மணப்பெண், ஊஹூம்...இந்த அலங்ககாரம் சரியா இல்லை. சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு செய்து கொள்ளவேண்டும். தான் சிங்காரித்துக் கொண்டு கூட்டத்திற்குச் சென்றால், ராமண்ணாவுக்குச் சந்தோஷம். ராமண்ணாவுக்கு சந்தோஷமானால் தனக்கு சந்தோஷம். இருவரும் ஆனந்தம் நிறைந்த உள்ளங்களோடு, மகனை, கண் நிறையப் பார்க்கவேண்டும். நம்மிருவருடைய பார்வையும் மோகனில் கலந்து, ஒன்றையொன்று முத்தமிட்டுக் கொள்ளவேண்டும்--

குமுதா சட்டென்று தயங்கினாள். யோசனையின் சம்பிரமத்தில் தனக்காகப் புதியதான வேறொரு புடவையைக் கையில் பிடித்துக் கொண்டு நின்றிருக்கிறாள். திடீரென்று திகிலடைந்தவன் போலப் படிகளின் பக்கம் நோக்கினாள். இந்தப் புடவையை உடுக்கும் போது அல்லவா ராமண்ணா தன்னைச் சீண்டியது. அன்று கடைசியில் தான் கோபம் கொண்டு "இப்படிப்பட்ட சுபாவத்தை வைத்துக்கொண்டு நீங்கள் புத்தகங்கள் எழுதினால், பண்புள்ள வர்கள் அதைப் படிக்கமாட்டார்கள். கையால் கூடத் தொட மாட்டார்கள்" என்று சொன்னாள். அழுகை வத்துவிடுகிற அளவுக்குத் தனக்குக் கோபம் வந்திருந்தது. ராமண்ணா இறுகப்பிடித்து இழுத்துக் கொண்டு தன்னை விடவே இல்லை! அவன் அப்படி இழுத்துக் கொண்டதனால் புடவையும் தன் கைக்கு எட்டவில்லை.

குமுதா புன்முறுவல் பூத்தபடியே பெருமூச்சு விட்டாள். மோகன் இன்னும் பிறந்திருக்கவில்லை அப்போது. அதுவும் ஒரு நல்லதுக்குத்தான் என்று சொல்லலாம் என்று நினைத்துக் கொண் டாள். மோகன் பிறந்த பிறகும் அவ்வளவுதான். ராமண்ணாவின் விளையாட்டுச் சுபாவம் போகவில்லை. அந்த இன்னொரு நாள், தான் அத்தையின் வீட்டுக்கு முதல் முறை போய்விட்டு வந்தாளே அன்று, மோகனை எடுத்துக் கொள்ளும் சாக்கில் குரங்குத்தனம் பண்ணினாரே? ஆனால் தான் அறிவில்லாதவள், துரதிர்ஷ் டக்காரி!

ஐயே! ஏன் மறுபடியும் துரதிர்ஷ்டத்தைப் பற்றிய பேச்சை எடுக்கிறேன்? இன்று மோகன் வந்தவுடன் இருவருமாக

அவனுடைய ஒவ்வொரு கையைப் பிடித்துக் கொண்டு, பாராட்டுக் கூட்டத்திற்கு அழைத்துக் கொண்டு போனால்? வேண்டாம். மோகனுக்குப் பதில் இவர் என்னுடைய கையையே பிடித்துக் கொண்டாலும் பிடித்துக் கொள்ளலாம். இல்லை, மோகனிடமே சொல்கிறேன். அந்தப் பையன் கொஞ்சம் சீக்கிரமாக வந்தால் தேவலை--

கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். புடவை தனக்கு நன்றாக இருக்கிறதல்லவா? மோகன் சீக்கிரம் வந்துவிட்டால் நன்றாக இருக்கும். மோகனுக்கும் கூட்டத்திற்கு வரட்டும் என்று சொல்லியிருக்கிறார் - ஐய்யய்ய! "மோகன் கூட்டத்திற்கு வரட்டும்" என்று இப்பொழுதுதானே சொன்னார். அதை என்னிடம் தான் சொல்லியிருக்கிறார் போலிருக்கிறது. நான் பைத்தியக்காரிபோல எனக்குள்ளாகவே யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன். நான் பதிலே சொல்லவில்லை என்று ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார்.

மெத்தைப் படிகளின் அடிவரையில் சென்றாள். எவ்வளவு நேரமாயிற்று, அவனைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறேன். இந்தப் பையன் வருகிற வழியாகக் காணோம்.

"மோகனைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்று உரக்கச் சொன்னாள். உடனே தவறு செய்துவிட்ட பையனைப் போல நாக்கைக் கடித்துக் கொண்டு குமுதா அங்கிருந்து விலகிச் சென்றாள்.

## 16

"மோகனும் வரட்டும்" என்று கூறியபடி படிகளின் மேல் நின்றிருந்த ராமண்ணா கலவரமடைந்து சுற்றுமுற்றும் பார்த்தான்.

"மோகனைத்தான் எதிர்பார்த்துக் கெண்டிருக்கிறேன்"

குமுதாவின் குரல்! அந்தக் குரலையே கண்ணால் காண வேண்டும் என்று விரும்பியவன் போலக் கண்களை விரித்தபோது, இருள் சூழ்ந்தது போல இருந்தது. மெத்தைப் படிகளின் அருகில் இருந்த தூணைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான், உறுதியாக நிற்கவேண்டுமென்பதற்காக. ஒரு கணம் மட்டும். பிறகு வருடக்கணக்காக அப்பிக் கொண்டிருந்த மைக்கூட்டைப் போன்ற கனத்த இருள் சட்டென்று கரைந்தாற்போலிருந்தது. பார்வை தெளிவாயிற்று. கால-தேச வரம்புகளை மீறிப் பார்க்கிற அளவுக்குக் கூர்மையாயிற்று. உடல் ஜூம்மென்றது.

மனிதனின் உள்ளம் என்பது அதிசயமான படைப்பு!- என்று சொல்லிக் கொண்டு மெதுவாக அடியெடுத்து வைத்து உலாவத் தொடங்கினான். மனிதனின் ஞானமும் அதிசயமானதே- என்று சொல்லலாம். எதுவுமே தன் மட்டுக்கும் தான் பொருள் கொள்ளுவதில்லை. மனிதனுக்கு மிகவும் பிடித்தமான சுகம் என்பது எது? இன்னதுதான் என்று சொல்ல முடியுமா? என்றோ ஒரு நாள் துக்கம் என்று தெரிந்து கொண்ட ஒன்றின் எதிராக இருப்பதை, சுகம் என்று நினைத்துக் கொள்கிறோம். ஹூம் நம்முடைய ஒவ்வொரு ஞானமும் இப்படித்தான். அதனால்தான் மனிதனில் நினைவு என்பது, ஒரு அதிசய சக்தியாக இருக்கிறது. ஒன்று இன்றையது – ஒன்று பழையது. பழையதுடன் ஒப்பிட்டுப் பார்த்து இன்றைய அனுபவத்தை ஞானம் என்று தெரிந்துகொள்கிறோம்! குமுதாவின் குரலைக் கேட்டுத் தன் உடல் ஜூம்மென்றது- ஆனந்தமாயிற்று. அதே குரலை இதற்கு முன்பு கேட்டபோது- துயரம் ஏற்பட்டுக்கொண்டிருந்தது. இதுதானே ஞானானுபவத்தின் அதிசயம்? இந்தக் குரலைக் கேட்கும்போது பழைய சுகமான நாட்களை நினைத்துக் கொள்வேன்; அவைகளோடு ஒப்பிட்டுப் பார்த்துத் துயரடைவேன். ஆனால் இப்போது? இன்று? அதே குரலைக் கேட்டுப் பழைய துயரத்தை நினைத்துக் கொண்டேன். இன்றைய அனுபவத்தோடு ஒப்பிட்டேன். அனந்தமடைந்தேன். இல்லையா?

ராமண்ணாவுக்கு பயம். குமுதாவின் குரலைக் கேட்டதும் தன் உடல் ஜூம் மென்றதென்னவோ நிஜம். ஆனால் அது ஆனந்தமா? கண்ணில் இருள் சூழ்ந்தது போலாயிற்றே ஒரு கணம்? அது ஆனந்தத்தின் அறிகுறியா?

ராமண்ணா நீண்ட பெருமூச்சு விட்டு, நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டான். இந்த உள்ளத்தின் நிலைமை அறிந்து கொள்வது கஷ்டம், என்று நினைத்துக் கொண்டான். சாட்சாத் பரமாத்மாவுக்குத் தெரியாத ரகசியம், கேவலம் மனிதர்களாகிய நமக்கு விளங்குவது எப்படி? என்று சிரித்தபடியே சொல்லிக் கொண்டான். பாவம்! பரமாத்மாவின் அவதாரமான சாட்சாத் ஸ்ரீராமச்சந்திரனின் நிலைமை என்னவாயிற்று. பவபூதியின் உத்தரராம சரிதத்தில்? "உன் கைகள் என் கழுத்தைச் சரணடையட்டும்" என்கிறான் ராமச்சந்திரன் சீதாதேவியிடம். தேவி வெட்கத்தினால் பேசாமலிருக்கிறாள். அப்பொழுது தானே தன் கைகளால் அவ்வாறு செய்கிறான் ராமச்சந்திரன். உடனே

திடுக்கிட்டவனாக, "ப்ரியே, கிமேதத்- இதென்ன?" என்று பிரமை பிடித்தவன்போலக் கேட்கிறான். அவளுடைய தோள்களின் ஸ்பரிசத்தினால் தனக்கு ஏற்பட்டது என்ன, ஒன்றும் தெரியாது-என்று வாய் நிறையச் சொல்லுகிறன்.

விநிஸசேதும் சக்யோன சுகமிதி-வா துக்கமிதி-வா
ப்ரமோஹோ நித்ராவா கிமு விஷவிஸர்ப்ப: கிமு மக
தவஸ்பரசே ஸ்பர்சே மமஹி பரிமூடேந்திரியகுணோ
விகாரஸ்சைதன்யம் ப்ரமயதி-ச சம்மீலயதி - ச

என்ன சிந்தனை! இதன் பொருள் என்ன? எவனோ அறிவில்லாதவன் இதன் பொருள் இவ்வாறு கூறியிருக்கிறான்: "சர்வமிதும் சீதாயா போக்யதாப்ரகர்ஷே தாத்பர்ய மாவிஷ்கரோதி" என்று! எவ்வளவு பண்பற்ற அபிப்ராயத்தை வெளியிட்டிருக்கிறான் விமர்சகன்! பெண்ணின் ஸ்பரிசம், மெய்மறக்கச் செய்வதாக இருந்தால், அவள் மிகவும் விரும்பி போகிக்கத் தகுந்தவள்! எவனோ உணவு-உறக்கம்-அச்சம்-சம்போகம் என்று வாழ்ந்து கொழுத்துப் போன மனிதமிருகம் அப்படி நினைத்துக் கொள்ளட்டும். ஆனால் பவபூதி சொல்லுவது அப்படியல்ல. ஸ்பரிஸத்தினால் அத்வைத ஆனந்தம் உண்டாகிறது என்று சொல்லுகிறான். சுகம்-துக்கம், விழிப்பு-நித்திரை, விஷம்-அமிர்தம் இவைகளின் வித்தியாசத்தை அறிய முடியாத மன நிலையை உண்டாக்கிற்று அந்த ஸ்பரிசம்.

பவபூதி சொல்லுவது உண்மை. ஒரு கணம் கண்களில் இருள் சூழ்ந்தாற்போன்று ஆன போதுதான் அனுபவித்தது அத்தகைய அத்வைத ஆனந்தம்தான். அத்தகைய இரண்டற்ற ஆனந்தத்தில் போகி யார், போகிக்கப்படுபவன் யார்?

தன் உடலில் பலம் வந்தாற்போன்றிருந்தது ராமண்ணாவுக்கு. குமுதாவின் குரல், குமுதாவின் ஸ்பரிசம், குமுதாவின் நினைவு இவைகளினால் எப்போதும் தன் உடலில் மின்சாரம் பாய்ந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டு சக்தி அதிகரித்தாற்போலாகும். உண்மையிலேயே தான் பாக்கியசாலி. இத்தகைய காதல் வாழ்க்கையை அனுபவித்த தான்--

ராமண்ணா, தனது எண்ணங்களின் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தினான். ஹூம். நல்ல அதிருஷ்டம் - என்று நினைத்துக் கொண்டான். பத்து வருடங்களாக அனுபவித்த வேதனையை நினைத்துக் கொண்டால்--

இல்லை - இது வேதனை இல்லையோ? ராமண்ணாவுக்கு ஒரு எண்ணம் தோன்றியது. மனிதன் சுகம் அனுபவிக்குவேண்டுமென்

றால் தன்னுடைய கஷ்டங்கள் மாயமாகிவிடவேண்டும் என்று அடம் பிடித்தால், என்றைக்குமே சுகத்தை அனுபவிக்கமாட்டான் என்று தோன்றியது. வாடகை வீடு ஒழுகினால் பொறுப்பு யாருடையது? அதைத் தவிர்ப்பது குடியிருப்பவன் கையிலா இருக்கிறது? வாழ்க்கையில் நம்மை மீறிய பல சக்திகள் இருக் கின்றன, பல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. அவைகளினால் நமக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களின் எதிரே, நாம் எவ்வளவு முனகினால் தான் என்ன? எல்லாச் சக்திகளையும் வென்றாலும் கூட மனிதன் சாவை வெல்ல முடியாது. அப்படி ஒருக்கால் அவன் சாவை வென்றுவிட்டால் அப்போது வாழ்க்கையைக் கண்டு அவன் பயப்படக்கூடும். கஷ்டங்கள் மறைய்ட்டும் என்று விரும்புவது தவறு, அறியாமை. கஷ்டங்களை ஒரு அனுபவம் என்று நினைத்துக் கொண்டால்- அதொரு அவசியமான படிப்பு என்று நினைத்துக் கொண்டால்-கஷ்டங்களின் கஷ்டத் தன்மை மறைந்துவிட்டது என்று கொள்ளலாம். ராமண்ணாவால் சிரிப்பை அடக்கமுடியவில்லை. "கஷ்டங்களின் கஷ்டத்தன்மை" இதை வேறு எப்படிச் சொல்வது? ... போகட்டும், என் மனத்தி லிருப்பது எனக்காவது புரிந்திருக்கிறதே - என்று சமாதான மடைந்தான்... சமாதானமடைவது மிகவும் சுலபம் என்று தோன்றியது. துஷ்யந்தன், சகுந்தலை, யக்ஷன் அவன் மனைவி, ராமன்-சீதை இவர்களின் பரஸ்பரக் காதலை அவர்களுடைய பிரிவுத் துயரிலிருந்தே கவிகள் காண்பித்திருக்கிறார்கள்.

யக்ஷன் தன் மனைவியை நேசித்து வந்தான், ஒரு வருடத்தில் பிரிவுத் துயரை அனுபவித்தான்.

துஷ்யந்தன் சகுந்தலையை நேசித்து வந்தான், 8 - 10 வருடங்கள் வரை அவளிடமிருந்து விலகியிருந்தான்.

ராமன்-சீதை இவர்களின் காதலுக்கு உவமையே இல்லை. குழந்தைகள் பிறக்கும் நேரத்திலிருந்து கடைசி வரையில் விலகியே இருந்தார்கள். தான் பத்து வருடங்களாகக் குமுதாவிடமிருந்து விலகியிருக்கிறான்.

ஆகவே தானும் குமுதாவை நேசிக்கிறான்!

பலே! தர்க்கம் சரியாக இருக்கிறதல்லவா?

தர்க்கம் சரியாக இருக்கிறது. முடிவும் சரியாக இருக்கிறது. குமுதா ஒப்புக் கொள்ள வேண்டியது ஒன்றுதான் பாக்கி.

இல்லை- அதுவும் பாக்கி இல்லை. குமுதாவும் ஒப்புக் கொண்டாற் போலத்தான் - "மோகனும் கூட்டத்திற்கு வரட்டும்"

என்று நான் சொன்ன உடனே, "மோகனுக்குக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொன்னாளே?

சே! என்ன பைத்தியகாரத்தனம்! ஒரு சாதாரணப் பேச்சுக்கு தான் என்னவெல்லாம் அர்த்தம் கற்பிக்கிறான்? அப்படியானால்? அர்த்தம் வார்த்தைகளில் இருக்கிறதா? தன் கற்பனையில் இருக்கிறதா?

"மோகனுக்காத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்பதன் அர்த்தம், "நானும் தயாராக இருக்கிறேன்" என்பது தானே?... தனக்கே ஆச்சரியமாயிற்று தான் அவ்வாறு சொன்னதற்காக. உண்மை, எந்த வார்த்தைகளுக்கு என்ன அர்த்தத்தை நான் சாட்டுகிறேன் - என்று நினைத்துக் கொண்டான். மோகனுக்காகத் தான் காத்துக் கொண்டிருக்கிறேன் என்பது எங்கே? நானும் தயாராக இருக்கிறேன் என்கிற பொருள் எங்கே? தனக்கு இந்தக் கற்பனை எப்படித்தான் உதித்ததோ?

இருந்தாலும் தனக்குத் தோன்றிய அர்த்தமே தான் உண்மை என்று ராமண்ணா உறுதியாக நம்பினான். ஏன்? ஆதாரம் என்ன? காரணங்கள் என்ன?

அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆதாரமில்லை. காரணம் - காரணமே வேண்டுமென்றால் இதயத்தின் பாஷையின் பொருளை இதயம் தான் அறியும். புத்தியல்ல. இலக்கண விதிகள் அல்ல- என்று பிரதிவாதியை எதிர்ப்பவன் போலப் பிடிவாதமாகச் சொல்லிக் கொண்டான்.

தான் தயாராக இருப்பதை, குமுதா தனக்கு தெரியப்படுத்தினாள் என்கிற ஆனந்த வெறியில், ராமண்ணாவுக்கு என்ன செய்யவேண்டும், என்ன பேசவேண்டும் என்று ஒன்றும் விளங்கவில்லை. நான் எப்பொழுதிலிருந்தோ தயாராக இருக்கிறேன் என்று சொல்லட்டுமா? சொல், சொல், பைத்தியமே, எதையாவது சொல். இவ்வளவு மனம் ஒன்றி உன்னோடு பேச, இவ்வளவு வருடங்களுக்குப் பிறகு முதல் முதலாகத் தானாகவே தயாராக இருக்கிறாள். எதையாவது பொருத்தமாகப் பேசித் தொலை என்று தன்னைத்தானே தூண்டிக் கொண்டான். பின்னடைந்து கொண்டிருக்கும் தன்னைத் தானே முன்னால் தள்ளிவிடுகிறானோ என்பது போலப் படிகளின் அருகே சென்றான்.

"வரவேற்புக் கமிட்டியாட்களும் வருகிற நேரமாகிவிட்டது" என்றான்.

சட்டென்று ஜன்னலருகில் சென்றான். ஜன்னலருகில் நின்று கொண்டு படிகளையே பார்த்துக்கொண்டு, "வரவேற்புக் கமிட்டியாட்களும் வருகிற நேரமாகிவிட்டது" என்றான் இரண்டாவது முறையாக.

## 17

குமுதா குழம்பினாள். "வரவேற்புக் கமிட்டியாட்களும் வருகிற நேரமாகிவிட்டது" என்றானே ராமண்ணா? அந்த வார்த்தைகளின் பொருள் அவளுக்குப் புரிந்தது. "வரவேற்புக் கமிட்டியாட்களும் வருகிற நேரமாகிவிட்டது" என்றால், "நான் தயாராக இருக்கிறேன். நீ தயாராக இருக்கிறாயா?" என்று ராமண்ணா தன்னைக் கேட்டிருக்கிறான்.

குமுதாவுக்குச் சிரிப்பு வந்தது.

ராமண்ணா தயாராக இருக்கிறான்! தனக்குத் தெரியாதா ராமண்ணா தயாராக இருப்பது? கோட் போட்டுக் கொள்ளா ததை மறந்து, தொப்பியைப் போட்டுக் கொள்ளும் சுபாவம் ராமண்ணாவுடையது. குமுதாவுக்கு பயம் தோன்றியது. தன்னு டைய சிரிப்பை அடக்கமுடியாமற்போனால் ராமண்ணாவுக்குக் கேட்கக் கூடுமே? அப்படியும் அவளால் சிரிப்பை அடக்க முடியவில்ல. ஒரு நாள் ஏதோ பேச்சுக்காகக் கோபித்துக் கொண்டு வெளியே புறப்பட்ட போது, வெற்றுடம்பில் இருப்பதை மறந்து தலைக்குக் கோட்டைச் சுற்றிக் கொண்டு வெளியே புறப்பட்டு விட்டார் ஆசாமி! ராமண்ணா தயாராக இருக்கிறான் என்று சொன்னால், யாராவது ஒருவர் எல்லாவற்றையும் சரியாகப் பார்த்துக் கொள்ளவேண்டும். இன்றைக்கு முக்கியமான கூட்டம் வேறு. ராமண்ணாவுக்காகத் தான் எடுத்து வைத்த துணிமணிகளே சரியானவை. இப்பொழுது எதைப் போட்டுக் கொண்டிருக்கி றாரோ என்னவோ? தான் தயாராக இருப்பது அப்படி. அதன்மேல் மற்றவர்களைப் பற்றி அவசரம்! தான் தயாராக இருக்கிறாளா இல்லையா என்கிற சந்தேகம்!

குமுதா கண்ணாடியின் எதிரில் நின்று பார்த்துக் கொண்டாள். தான் தயாராக இருக்கிறாள். பொதுமக்களின் பாராட்டுக்கு உரியவனான ராமண்ணாவின் மனைவி என்பதற்குத் தக்கபடி, தான் தயாராக இருக்கிறாள்.!

"வரவேற்புக் கமிட்டியாட்களும் வருகிற நேரமாகிவிட்டது."

இரண்டாவது முறையாக ராமண்ணாவின் இந்த வார்த்தைகள் கேட்டன. நான் சொல்லவில்லையா, மற்றவர்களைப் பற்றிய

அவசரம் என்று? இருந்தாலும்- தான் தயாராக வேண்டியதைப் பற்றி ராமண்ணா மறக்கவில்லை. அதொரு நல்ல சகுனம் என்று சொல்ல வேண்டும்! எல்லா ஆண்களும் ஒன்றேதான். வெளியே புறப்பட வேண்டுமென்றால் புறப்பட்டுவிட வேண்டும்! எங்கே போக வேண்டுமோ அதைத் தெரிந்து கொண்டு அதற்குத் தகுந்த படி வேஷம், ஆபரணங்கள் போட்டுக் கொண்டு, பகலெல்லாம் சமையலறையிலும், குளியல் அறையிலும் பாடுபடும் பெண்ணுக்குத் தெரியும் வெளியே போகும் போது அலங்காரத்தை அணி செய்து கொள்ள வேண்டிய முறை.

குமுதா மறுபடியும் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். என்ன அவசரமோ? நானென்னமோ தயாராக இருக்கிறேன். ஆனால் - ? குமுதா திகிலடைந்தாள். ராமண்ணாவுக்காகத் தான் சரியான துணிமணிகளை எடுத்து வைத்திருக்கிறாள். கூப்பிட வருபவர்கள் வருவதற்கு முன்னால் ராமண்ணா உடுப்பை மாற்றிக் கொள்ளவேண்டும். நானே கொண்டு போய்க் கொடுத்தால்? குமுதா நடுங்கினாள். தான் போவதா? அதிலும் 'அந்தப் புதுப் புடவையை உடுத்துக் கொண்டு? அவளுக்குப் பயமாக இருந்தது. ஆனால்-ராமண்ணா உடுப்பை மாற்றிக் கொண்டே ஆகவேண்டும். இல்லாவிட்டால் பார்ப்பவர்கள் தன்னை என்ன சொல்வார்கள்? வீட்டில் இரண்டு ஆண்கள் இருந்தால், இரண்டு குழந்தைகள் இருப்பது போலத்தான் - என்று நினைத்துக் கொண்டாள் குமுதா. மோகன் போட்டுக்கொள்ள வேண்டிய உடையைப் பற்றியும் தானே கவலைப்படவேண்டும். ராமண்ணாவின் உடையைப் பற்றியும் தானே கவனம் செலுத்த வேண்டும். இருவருக்கும் எடுத்து வைத்து ஒழுங்கு செய்திருக்கிறாள்.

"ஆச்சு மோகனின் துணிமணிகளை எடுத்து வைத்திருக்கிறேன்" என்றாள், கண்ணாடியிலிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டு. வெட்கப்பட்டுக் கொண்டே மெதுவாக மெத்தைப் படிகளின் அருகில் வந்து.

"ஆச்சு, மோகனின் துணிமணிகளை எடுத்து வைத்திருக்கிறேன்" என்றாள் மற்றொரு முறை.

## 18

ஜன்னலுக்கருகில் நின்றிருந்த ராமண்ணா மகிழ்ச்சியுடன் முகம் மலர ஜன்னலிலிருந்து முகத்தைத் திருப்பினான்.

"ஆச்சு, மோகனின் துணிமணிகளை எடுத்து வைத்திருக்கிறேன்"- குமுதாவின் குரல்.

புன்னகையால் முகம் இன்னும் மலர்ந்தது.

பெண்களின் சுபாவம்! வீடு தீப்பிடித்துக் கொண்டு எரிந்தாலும், வீட்டை விட்டு வெளியேறும் போது கண்ணாடியின் முன் நின்று கொண்டு கூந்தலைச் சரிப்படுத்திக் கொள்ளும் சுபாவம்!

என் துணிமணிகள் சரியாக இல்லை என்கிறாளே! ராமண்ணாவுக்கு மகிழ்ச்சியால் உடல் பூரித்தாற்போலிருந்தது. இன்று தான் நன்றாக உடையணிய வேண்டுமென்கிற பிடிவாதம் அவளுக்கு பாவம்! அந்த ஆசை ஏன் இருக்கக்கூடாது? தனக்காக இவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்பவர்கள் வேறு யார் இருக்கிறார்கள்?

"மோகனின் உடுப்பை எடுத்து வைத்திருக்கிறேன்."

இரண்டாவது முறை குமுதாவின் குரலைக் கேட்டு ராமண்ணா மெத்தைப் படிகளின் அருகில் வந்தான்; இல்லை. அவளுடைய குரல் ஒரு கயிற்றைப் போல அவனை இழுத்து வந்தது. அவ்வளவு வேகமாகப் படிகளின் அருகில் வந்தான். ஓகோ! நான் கீழே வரவேண்டுமென்பது அவளுடைய விருப்பம்! எனக்காகத் துணிமணிகளை எடுத்தும் வைத்திருக்கிறாள்! தனக்கு மேலே வர வெட்கம். ஏன்? ஹூம் இன்று அவளுடைய அலங்காரம் அழகாக இருக்கவேண்டும். அதனால்தான் மேலே வர வெட்கம். அதைப் பார்க்கத் தானே கீழே போக வேண்டும். தானும் அதற்குத் தக்கபடி தயாராக வேண்டும். ராமண்ணா நாடக பாணியில் ராகம் இழுத்தான். "யத்ர நார்யஸ்து ஹௌந்தே சும் அந்தே தத்ர மனுஷா:" பெண்கள் சொல்லும்போது ஆண்கள் சும்மா இருந்துவிடவேண்டியதுதான்.

எத்தகைய பைத்தியம் தான்! தான் கீழே வரவேண்டுமென்று குமுதா தன் வாயாலேயே சொல்லும்போது, தான் ஏதேதோ உளறிக் கொண்டு நின்றிருக்கிறானே!

ராமண்ணா கைகடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். ஐந்தே நிமிடங்கள் இருந்தன குறிப்பிட்ட மணிக்கு.

"அட, ஐந்தே நிமிடங்கள்தான் இருக்கின்றன" என்று உரக்கச் சொன்னான். ஜன்னலுக்கு வெளியே பார்த்தான்.

## 19

"ஐந்தே நிமிடங்கள் தானே இருக்கின்றன?"

ராமண்ணாவின் குரலைக் கேட்டுக் குமுதா தன் கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டாள்.

ஆம், மோகன் வரவே இல்லையே? ஐந்தே நிமிடங்கள் இருக்கின்றன. இன்னும் மோகன் வரவில்லை. ஏன்?- என்று ராமண்ணா தன்னையே கேட்டிருக்கிறான் என்று குமுதாவுக்குத்

தெளிவாகப் புரிந்தது. அவசரவசரமாகச் சுற்றிலும் ஒருமுறை பார்த்துவிட்டு, வாசல் கதவண்டை புறப்பட்டாள். படிகளிலிருந்து சிறிது தூரத்தில் ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்த ராமண்ணாவின் முதுகு தெரிந்தது. எழுத்தாளனுக்கு முதுகிலும் கண்களில்லாமலிருப்பது நல்ல வேளை என்று நினைத்துக் கொண்டு, மெதுவாக முன்னால் அடியெடுத்து வைத்தாள், ராமண்ணாவைப் பார்த்தபடியே. அதற்குள்ளாக ராமண்ணாவும் முகத்தைத்திருப்பி "மோகன் வந்துவிட்டான்" என்றான். மோகனைப் பார்த்த ராமண்ணாவின் கண்களில் தானும் மோகனைப் பார்க்க விரும்பியவள்போல ராமண்ணாவை உற்றுப் பார்த்தபடி நின்றுவிட்டாள். மகிழ்ச்சியால் மலர்ந்திருந்த அவன் முகத்தைப் பார்த்துத் தானும் புன்முறுவல் பூத்தாள். ராமண்ணா பரபரவென்று கீழே இறங்குகிறான். அவனைப் பார்த்துக் கொண்டே தான் வலது கையால் கதவைத்திறக்க முயன்றாள் தாழ்ப்பாள் கிடைக்கவில்லை.

## 20

வெளியே பாய்ந்து வருகிற காரின் ஓசை.

"மோகன் வந்துவிட்டான்" என்றான் ராமண்ணா.

"அழைப்பதற்கும் வந்துவிட்டார்கள் போலிருக்கிறது" என்றாள் குமுதா.

காரின் ஓசை நெருங்கியது. ஹார்ன் ஒலிகேட்டது. யாரோ கதறினார்கள். சட்டென்று ப்ரேக் போட்ட சத்தத்தைக் கேட்டு மயிர்க்கூச்செறிந்தது. கார் நின்றது. குமுதா கதவைத் திறந்தாள்.

எதிரே ஜனங்கள் கும்பல் கூடியிருக்கிறார்கள். சப்தம் ஒன்றும் இல்லை. எல்லாம் அமைதி. சட்டென்று கும்பல் விலகி வழிவிட்டது. யாரோ ஒருவன் இரண்டு கைகளிலும் எதையோ ஏந்திக் கொண்டு வந்து கொண்டிருக்கிறான்.

"மோகன் வந்துவிட்டானா?" என்று கேட்டான் ராமண்ணா, உயிரற்ற குரலில்.

குமுதா வீல் என்று அலறினாள்.

வீட்டுக்கு வந்த மோகனின் உடலை, உள்ளே கொண்டு வரலாமா என்கிற சந்தேகத்தினால், அதைத் தூக்கிக் கொண்டு வந்தவன் வாசலிலேயே நின்று விட்டான்.



